உ

புதுச்சேரி. கதிர்காமம்

# அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி தேவஸ்தானம்



# திருக்குடமுழுக்கு நன்னீராட்டு விழா மலர்

அருள்மிகு கெங்கையம்மன் ஆலயம்
அருள்மிகு முத்துமாரியம்மன் ஆலயம்
அருள்மிகு கதிர்வேல்சுவாமி ஆலயம்



# திருக்குடமுழுக்கு நன்னீராட்டு விழா மலர்

**தி. வ. ஆண்டு 2041 வைகாசித் திங்கள் 9 மற்றும் 10**
**23 - 05 - 2010 & 24 - 05 - 2010.**

**ஆக்கம்**

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யு மாறே

## மலர்க்குழு



**வெளியீடு : 24-05-2010**

**ஸ்ரீ கதிர்வேல் சுவாமி தேவஸ்தானம்**
கதிர்காமம், புதுச்சேரி - 605 009.

## பொருளடக்கம்



### வாழ்த்துரை



### கருத்துப் புதையல் (கட்டுரைகள்)

## இறைவணக்கப் பாமாலைகள்




## நன்றியுடன் - பன்மணித்திரள்

# பதிப்புரை

"சேவலம் கொடியோன் காப்ப
ஏமவைகல் எய்தின்றால் உலகே"

என்ற சங்கத்தமிழ் பாட்டிற்கிணங்க, தாமரை புரையும் காமர் சேவடியையும் பவழத்து அன்ன மேனியையும் கொண்டு சுடர்நெடு வேலோடு விளங்குபவனும், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் பதிகம் பாடச் சிறப்பு சேர்த்தவனும் அகத்தியர்க்கு அருள்நலம் கூட்டியவனுமான அருள்மிகு கதிர்வேல் சுவாமி வள்ளி தேவயானையொடு எழுந்தருளி ஆன்மாக்களுக்கு அருள்பாலித்து வருகின்ற ஊர் வேதபுரி என்று புகழப்படுகின்ற ஜீவசித்தர்களின் அருள்நலம்கொழிக்கும் புதுச்சேரியின் கண் உள்ள கதிர்காமம் என்னும் சீரூராகும்.

தொன்றுதொட்டு, திருப்பணிகளை விருப்பொடு ஆற்றிவரும் இவ்வூர்மக்கள், இறை அருள் கூட்ட அருள்மிகு கெங்கையம்மன், அருள்மிகு முத்துமாரியம்மன், அருள்மிகு கதிர்வேல் சுவாமி கோயில்களுக்குப் பெரும்பொருட் செலவில் திருப்பணி செய்தும் முன்மண்டபம் எழுப்பியும் தம் பக்தியைப் பரவசத்தோடு வெளிப்படுத்தி, வருவது நாம் எல்லோரும் அறிந்த ஒன்று. அதன் தொடர்ச்சியாக எதிர்வரும் திருவள்ளுவராண்டு 2041 (விக்ருதி ஆண்டு) வைகாசித் திங்கள் 9 மற்றும் 10ஆம் நாட்களில் கடவுள் மங்கலத் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா இறைவனின் திருவருள் குறிப்புடனும் ஊர்மக்கள் விருப்புடனும் நிகழ்த்த உறுதி செய்யப்பட்டது.

அவ்வண்ணம் நடைபெறும் இப்பெருஞ்சாந்திப் பெருவிழா நினைவின் பொருட்டு இறைவன் பெருமையினையும் அருமையினையும் எடுத்துக்காட்டுவதோடு கதிர்காம வரலாற்றில் ஒரு பதிவையும் நிலைப்படுத்துகின்ற வகையில் தெய்வத்தமிழ் சிறப்பு மலர் வெளியிட முடிவு செய்ததற்கும் அதற்கு எங்களை ஆட்படுத்தியதற்கும் இறைவனின் கருணையை வணங்கி அறங்காவலர் குழுவினர்க்கும் ஆன்றோர் அனைவர்க்கும் நன்றியைக் கூறி மகிழ்கிறோம்.

இம்மலர் மணம் பெருக்கி வாசம் கொள்ள வாழ்த்துரை வழங்கிய அனைத்து சீர்வளர்சீர் குருமகா சன்னிதானங்களின் தாள்மலர் வணங்கி நன்றியினைப் படைக்கின்றோம்.

இறைவன் திருப்பணியில் பெரும்பங்குகொண்டு ஒவ்வோர் பணியிலும் தனிக்கண்ணோட்டம் செலுத்தி அரும்பணியாற்றி வரும் மக்கள் முதல்வர் மாண்புமிகு. **ந. ரங்கசாமி** B.Com., B.L. அவர்கள் இம்மலரை வெளியிடுவது பொன்மலர் மணம் பெற்றாற் போல எங்களின் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கும் இனிய ஒன்றாகும். அவர்க்கு நனி நன்றி.

மலரின் மணத்தை மிகுவிக்கும் வகையில் வாழ்த்துரை வழங்கிய நல்லிதயங்கள் அனைவர்க்கும் எம் நன்றி.

எம் வேண்டுதலுக்கிணங்கத் தத்தம் சிந்தையில் உதித்த சீர்மிகு எண்ணங்களையும்

கருத்துப் பேழைகளையும் எல்லோர்க்கும் பொதுவாக்கும் வகையில் வழங்கிச் சிறப்பித்த பாவலர்க்கும் கட்டுரையாளர்களுக்கும் நன்றிப் பூக்களை நாங்கள் சூட்டி மகிழ்கிறோம்.

'சென்றிடுவீர் எட்டுத் திக்கும் – கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்'

என்ற பாரதியின் ஆணைக்கிணங்க ஆங்காங்கே பூத்திட்ட நறுமலர்களைக் கொய்வதுபோல, வேறு வேறு ஊர்களின் விழா மலர்களிலும் ஆய்வுத் தொகுப்புகளிலும் பொதிந்திருந்த செறிவு நிறை கட்டுரைகளை இம்மலரில் நன்றியோடு வெளியிட்டு எல்லார்க்கும் பொதுவாக்கியுள்ளோம். அந்த நல்லுள்ளங்களுக்கு வணக்கத்தையும் நன்றியையும் மீண்டும் மீண்டும் நவில்கின்றோம்.

எங்களின் எண்ண ஓட்டத்திற்கும் எட்டாத வகையில் எழிலுற இம்மலரை வடிவமைக்கத் துணை நின்றதோடு திருப்பணியின் எல்லாப் பக்கங்களிலும் இணைந்தும் முனைந்தும் செயலாற்றியும் வரும் இளைஞர் குழுவினர்க்கு நன்றியும் பாராட்டுகளும் உரியன.

விழுமிய கருத்துக்களுடன் மலர் வெளிவர விளம்பரங்கள் தந்துவிய அத்துணை பேருக்கும் எம் நன்றி. தாய் தந்த இனிப்பைச் சேய் தன் தாய்க்கும் ஊட்ட இருவரும் மகிழ்வதைப்போல இறையருளால் தாம் பெற்ற பொருளை இறைவனின் திருப்பணிக்கும் அளித்து மகிழ்ந்த அன்பர்கள் தம் வாழ்க்கையில் உறுதிப் பொருளை உயர்த்திக்கொண்டனர். அவர்களின் கைப்பொருள், மெய்ப்பொருளால் மேன்மை கொண்டது. அந்த வள்ளல்களுக்கு நன்றிமாலையை மகிழ்வோடு சூட்டுகின்றோம்.

விழா சிறப்புற நடந்தேற வரவேற்புக்குழு, அன்னதானக் குழு, யாகசாலைக் குழு பிரசாதக்குழு, கலை நிகழ்ச்சி மற்றும் விளம்பரக் குழு என்று குழுக்கள் பிரிக்கப்பட்டன செயல்களும் பகிர்ந்து அளிக்கப்பட்டன. அந்த வகையில் செவ்வனே தம் பங்கைச் சிறப்பாகச் செய்து முடித்த அந்த ஆற்றல் மறவர்க்கும் பிற அரும்பணியாற்றிய மற்றையோர்க்கும் எம் நன்றியும் வணக்கமும் உரியன.

ஆவணமாகிய இம்மலரைச் சீரிய முறையில் தட்டச்சு செய்து வடிவமைத்து அழகுபடுத்தித் தந்த சாரம் பகுதியிலுள்ள சிவா கிராபிக்ஸ் நிறுவனத்திற்கும், எண்ணியவண்ணம் பணிமுடித்து அழகுற அச்சிட்டுக் காலத்தொடு வெளியிட உதவிய புதுவை கதிர்காமத்திலுள்ள அருணாச்சலா பிரிண்டர்ஸ் நிறுவனத்தினர்க்கும் எம் நன்றியும் வணக்கமும் உரியன.

இந்தச் சீரிய பெருவிழாவில் பங்கேற்றுப் பல்லாற்றானும் திருத்தொண்டாற்றிய எல்லோர் பொன்னடிகளையும் நன்றியுடன் போற்றி வணங்குகிறோம்.

வாழ்க இறைப்பணி! வளர்க இறைத்தொண்டு!

இவண்
**மலர்க்குழு**

## திருப்பணிகள் ஒரு கண்ணோட்டம்.

**2005 முதல் 2010**

- அருள்மிகு முத்துமாரியம்மன் கோயிலுக்கு முன்பும் அருள்மிகு கதிர்வேல்சுவாமி ஆலயத்தின் முன்பும் மண்டபம் எழுப்ப ஊர் மக்களின் ஒன்றுபட்ட முடிவின்படி 22.08.2005 அன்று அறங்காவலர் குழு தலைவர் திரு. வ. விநாயகம் செங்குந்தர் முன்னிலையில் புதுவை முதல்வர் மாண்புமிகு **ந. ரங்கசாமி,** B.Com., B.L. அவர்களால் கால்கோள் செய்யப்பட்டது.

- புதுவை முதல்வர் மாண்புமிகு ந. ரங்கசாமி அவர்களின் தாயார் திருமதி. பாஞ்சாலி நடேசன் அம்மாள் தானமாகக் கொடுத்த இடத்தைக் கொண்டு கெங்கையம்மன் கோயில் மேலும் விரிவாக்கத்தோடு உள்மண்டபம் எழுப்பப்பட்டுள்ளது. தரை முழுமையும் கிரானைட் கற்கள் பதிக்கப்பட்டும் எழிலூட்டப்பட்டது.

- முத்து மாரியம்மன் கோயிலின் தரை கிரானைட் கற்கள் பதிக்கப்பட்டு அழகூட்டப்பட்டது.

- கதிர்வேல் சுவாமி கோயிலின் உட்புற வடக்குப் பகுதியில் சூரியன், சந்திரன் சன்னதிகளும் தெற்குப் பகுதியில் பைரவர் சன்னதியும் உருவாக்கப்பட்டுள்ளன.

- கதிர்வேல் சுவாமி கோயில் இராஜகோபுர வடக்குப் பகுதியில் இடும்பன் கோயில் புதிதாக எழுப்பப்பட்டுள்ளளது.

- கதிர்வேல் சுவாமி கோயிலில் ஸ்ரீ சண்டிகேஷ்வரர் உற்சவர் செப்புத்திருமேனி புதியதாக பதிக்கப்பட்டுள்ளது.

- அருள்மிகு கைலாச நாதர் சன்னதியின் வெளிப்புறச் சுவரில் லிங்கோத்பவர், பிரம்மா சோமசண்டர் வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. புதிதாக அதிகார நந்தியும் வைத்து அணிசெய்யப்பட்டுள்ளது.

- பழநியாண்டவர் சன்னதி புதுப்பிக்கப்பட்டு புதிய திருமேனியும் பதிக்கப்பட்டுள்ளது.

- நடராசர் சன்னதி கலைநயத்துடன் அழகுபடுத்தப்பட்டுள்ளது.

- கதிர்வேல்சுவாமியின் கருவறை மற்றும் அர்த்த மண்டப தரைப்பகுதிகள் கருங்கற்களைக் கொண்டு புதுமைப்படுத்தப்பட்டுள்ளது.

- கதிர்வேல்சுவாமி கோயிலின் உற்சவர் மண்டபம் முழுவதும் கிரானைட் கற்கள் பதிக்கப்பட்டுள்ளன.
- கதிர்வேல் சுவாமி கோயிலின் தரை முழுமையும் கிரானைட் கற்களால் எழிலூட்டப்பட்டுள்ளது.
- ஸ்ரீ கதிர்வேல் சுவாமி தேவஸ்தானத்திற்கு திருமண மண்டபம் கட்ட ஊர்மக்களின் ஒன்றுபட்ட முடிவின்படி புதுவை முதல்வர் **ந. ரங்கசாமி,** B.Com., B.L., அவர்களால் கால்கோல் செய்யப்பட்டு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி ஆலயத்திற்கு எதிர்புறம் உள்ள இடத்தில் கட்டுமான பணிகள் நடைபெற்று வருகிறது.

இஃதல்லாமல் கோயில்களின் எல்லாப் பகுதிகளும் கலைநயமும் அருள் வளமும் நிறையும்படித் திருப்பணிகள் செய்யப்பட்டுள்ளன.

இத்துணை திருப்பணிகளுக்கும் அதனைச் சார்ந்த குடமுழுக்கு விழாவிற்கும் மனமுவந்து பெரும்பொருள் கொடுத்தும் திருத்தொண்டாற்றியும் ஒத்துழைப்பு நல்கிய **கதிர்காமம் வாழ் மக்களுக்கும் இளைஞர்களுக்கும்** மிகு நிதியளித்து திருத்தொண்டில் மகிழ்வோடு பங்குகொண்ட சீர்வளர் **வள்ளல் பெருந்தகைகளுக்கும்** எம் நன்றியைத் தெரிவிப்பதில் பெருமகிழ்வு அடைகின்றோம்.

இத்துணைச் சிறப்பும் நிகழ்வதற்குக் காரணமாயிருந்தவரும் கால்கோளிட்டுத் திருப்பணியைத் தொடங்கியதோடு முன்னின்று வழிநடத்தி எங்களுக்கு எல்லா விதத்திலும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து இத்திருவிழாவைச் சிறப்புமிகு பெருவிழாவாக மாற்றிய வருமாகிய

மக்கள் முதல்வர். **ந. ரங்கசாமி,** B.Com., B.L.,

அவர்களுக்கு எங்களின் நெஞ்சார்ந்த வணக்கமும் நன்றியும் உரியன. மேலும் விழாக்குழுவின் சார்பிலும் ஊர்மக்கள் சார்பிலும் இளைஞர்கள் சார்பிலும் அப்பெருமகனார்க்கு நன்றியைத் தெரிவிப்பதில் பெரிதும் மகிழ்கின்றோம்.

23,24.05.2010<br>கதிர்காமம்.

**அறங்காவலர் குழு**<br>**திருப்பணிக்குழு**



வாழ்க செங்குந்தம் ! வெல்க செங்குந்தம் !!

# வாழ்த்துக்கள்



என்றும் இறைபணியில்....

## செங்குந்த மரபினர்கள்
## செங்குந்த இளைஞர்கள்

கதிர்காமம், புதுச்சேரி-9

உ



புதுச்சேரி, கதிர்காமம்

# அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி தேவஸ்தானம்

## அஷ்டபந்தன

## மகா கும்பாபிஷேகப் பத்திரிகை



நாள்

**23-05-2010, ஞாயிற்றுக்கிழமை**

அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் திருக்கோயில்

**24-05-2010, திங்கட்கிழமை**

அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் திருக்கோயில்

அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி திருக்கோயில்

## ஸ்ரீ விநாயகர் துதி

ஆரணம் பன்முகத் தால நாதியே
காரண னேயெனக் கழறி யேத்திடும்
பூரண மாஞ்சிவன் புதல்வ னாகிய
வாரண நந்தனை வணங்கி வாழ்த்துவாம்.

## ஸ்ரீ சிவபெருமான் துதி

ஆதியாய் நடுவுமாகி அளவிலா வளவுமாகிச்
சோதியாய் உணர்வுமாகி தோன்றிய பொருளுமாகிப்
பேதியா ஏகமாகிப் பெண்ணுமா யாணுமாகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி!போற்றி!!

-சேக்கிழார் பெருமான்

## ஸ்ரீ கதிர்வேல் சுவாமி துதி

பூவதியும் பிரமாவும் புணரியினிற் றுயில்மாலும்
சேவரைக்கே தனத்தானும் சேர்ந்தஅருட் சீரருள்வாய்
தேவரெலாம் அரமகளிர் சேனையொடு தினந்தோறும்
காவகத்தில் விளையாடுங் கதிர்காம முருகோனே.

எங்கும்தன் புகழ்காட்டும் எழில்நடுநாட் டிடைவாழும்
செங்குந்தர் கதிர்காமத் திருப்பதியின் முருகோனைப்
பொங்குந்தண் பம்பைநதி பொலிமாதைத் திருப்புகழோன்
அங்கும்பர் வியப்புறசொல் ஆறிருபாட் டருள்வசமே

– வண்ணச் சரபம் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள்.



உ



புதுச்சேரி, கதிர்காமம்

## அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி தேவஸ்தானம்

வள்ளி தெய்வானை உடனுறையும்
அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி மற்றும்
அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன்
அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆகிய

**திருக்கோயில்களின் ஜீரணோத்தாரண அஷ்டபந்தன**

# மகா கும்பாபிஷேகப் பத்திரிகை

உ
அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் துணை



## ஸ்ரீ முத்துமாரியம்மன் துதி

சக்தி யந்தவஞ் சார் கதிர்காமம் வாழ்
முத்து மாரியம்மன் முண்டகத் தாண்மலர்
நித்த மேத்துநர் நீள்வளச் செல்வமும்
பக்தியும் பெறுவார் வந்து பார்மினே.

உ

அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் துணை



## ஸ்ரீ கெங்கையம்மன் துதி

மூவர்க்கும் முதற்பொருளாய் முத்தொழிற்கும் வித்தாகி
நாவிற்கும் மனத்திற்கும் நாடறியப் பேரறிவாய்த்
தேவர்க்கும் முனிவர்க்கும் சித்தர்க்கும் நாகர்க்கும்
யாவற்கும் தாயாகும் எழில் பரையை வணங்குவோம்.

தெய்வத்திருவருள் நிறை பெரியீர்!

"வேதபுரி" என்றும், "அகத்தீஸ்வரம்" என்றும் போற்றப் பெற்றதும், சித்தர்கள் அருள் நிலை பெற்றதுமாகிய புதுச்சேரியின் மேற்பால் அன்பு "செங்குந்த" நல்லிதயங்கள் வாழும் ஆன்மீகம் தழைத்தோங்கும் பேரூர் கதிர்காமம். அக்காலத்தில் மிகுந்த வனமாக இருந்த இத்தலத்தின் வழியாக வாதாபியை வதம் செய்வதற்காக அகத்திய மாமுனி செல்லும் பொழுது இங்குத் தங்கி வழிபாடாற்றித் திருவருள் பெற்றதும், இன்றைக்குச்சுமார் '192' ஆண்டுகளுக்கு முற்பட்ட இத்திருக்கோயிலில் அருளும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமியை வண்ணச்சரபம் ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் போற்றி புகழ்ந்து பாடி திருவருள் பெற்றுய்ந்ததும் யாவரும் அறிந்ததே.

அழகிய இவ்வூரின் நடு நாயகமாய் அமர்ந்து சிறந்து தன்னை நாடிக் காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கும் அடியார்கள் எண்ணிய எண்ணியாங்கு செயல்கூட்டி அருளாட்சி செய்து வரும் வள்ளி, தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமியின் திருவருள் இன்றைக்கும் கண்கூடு. முற்காலத்தில் அருள்மிகு வரசித்தி விநாயகர், அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி சன்னதிகள் மட்டுமே அமையப்பெற்றிருந்தன. இரு சன்னிதிகளுக்கும் கருங்கல் மண்டபம் அமைத்து 1895-ஆம் ஆண்டு மகா கும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது.

அதன்பின் அருள்மிகு பழனியாண்டவர் அருள்மிகு சுமித்ர சண்டிகேஸ்வரர், நவக்ரஹம் சன்னிதிகள் அமைக்கப்பட்டு வடக்குச் சுற்றில் கருங்கல் மண்டபமும், உற்சவர் மூர்த்திகளின் அலங்கார மண்டபமும் அமைத்து 1935-ஆம் ஆண்டு மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டுள்ளது. பின்னர் காமாட்சி உடனாகிய அருள்மிகு கைலாஸநாதர் சன்னிதி அமைத்து 1970-ஆம் ஆண்டு மகாகும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது. பின் 1976-ல் அருள்மிகு காமாட்சிக்குத் தனி சன்னிதி அமைத்துச் சன்னிதியின் முன் மண்டபமும் அமைக்கப்பட்டு லகுகும்பாபிஷேகம் செய்யப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலைச் சார்ந்த, 1894-ஆம் ஆண்டு கட்டிமுடிக்கப்பட்டதாக அறியப்படும், அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் திருக்கோயில் மற்றும் அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் திருக்கோயில்களுக்குத் திருப்பணிகள் செய்து இரு திருக்கோயில்களுக்கும் 1987-ஆம் ஆண்டு மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டது.

பின்னர் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி திருக்கோயில் முன்முகப்பில் ஐந்து நிலைகளைக் கொண்ட இராஜகோபுரம், பழுதுற்ற கொடிமரம் அகற்றி புதியமரம் அமைத்து அதில் செப்புக்கவச மிட்ட அழகிய துவஜஸ்தம்பம், கதிர்வேல் சுவாமியின் கருவறை முகப்பில் பித்தளையால் வேயப் பெற்ற விமானம், இருபக்கலிலும் அகத்தியர், அருணகிரிநாதர் விழாத்திருமேனிகள் சிவகாமியன்னை உடனுறையும் ஆடல்வல்லான் செப்புத்திருமேனி அமைந்த திருச்சபை மற்றும் சமயக்குரவர்கள் ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஆகிய உற்சவ மூர்த்திகளும், திருச்சபையின் எதிரில் சமயக்குரவர்களின் சன்னிதியும், வண்ணச்சரபம் ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் சன்னிதி மற்றும் ஆனந்தவல்லி உடனாகிய சந்திர சேகரர் சன்னிதியும், கன்னிமூலை எனப்படும் தென்மேற்கில்

அருள்மிகு வலம்புரி விநாயகர், அருள்தரும் தட்சிணாமூர்த்தி, நாகர் மற்றும் வள்ளி தெய்வானை உடனாகிய ஷண்முகருக்கென்று தனிசன்னிதி, ப்ரதோஷ நாயகர், அருள்மிகு துர்க்கை சன்னிதி, சத்ரு ஸம்ஹார மூர்த்தி விழாத்திருமேனி, ஆகியவைகள் அமைத்து சிறப்புடன் 03-05-1993-ல் மகாகும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது. இதன் பின்னர் அருள்மிகு தண்டாயுதபாணி செப்புத் திருமேனி, அருள்மிகு கெஜலட்சுமி சன்னிதி அமைக்கப்பட்டது.

தற்காலம் மிகப்பெரிய அளவில் **அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன், அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி திருக்கோயில்களின் வாயில் முன்முகப்பில் முகப்பு மண்டபங்கள் எழுப்பப்பட்டுள்ளன.** மேலும், கதிர்வேல் சுவாமி திருக்கோயில் நுழைவுவாயில் இடப்புறம் இடும்பன் திருக்கோயில் புதியதாக அமைத்து அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமியின் திருச்சுற்றில் முறையே துவஜஸ்தம்பம் அடியில் த்வஜ கணபதி, சூரியன், கைலாஸநாதர் கோஷ்டத்தில் லிங்கோத்பவர், பிரம்மா, சோமசண்டர் ஆகிய புதிய சன்னிதிகளுடன், பைரவர், சந்திரன் சன்னிதிகளும் அருள்மிகு கைலாஸநாதருக்குப் புதிய நந்தியெம்பெருமான் மற்றும் பலிபீடமும் புதியதாக அமைக்கப்பட்டுள்ளன.

விரிவுபடுத்தப்பட்ட அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி சன்னிதி, திருச்சுற்றுக்களில் தளவரிசையாக "கிரணைட்" என்னும் மெருகூட்டிய கற்கள் பதிக்கப்பட்டுள்ளன. இத்திருக்கோயிலைச் சார்ந்த அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் திருக்கோயில் மிகச் சிறியதாக அமைந்திருந்தது. அதற்காகத் திருக்கோயிலின் பின்புறம் உள்ள இடத்தை தானமாக பெறப்பட்டு முற்றிலும் திருப்பணி ஆற்றி திருக்கோயிலை உயர்த்தி, கருவறை அமைத்து மிகச் சிறப்பாகக் காண்பவர் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் செப்பனிடப்பட்டுள்ளது.

மேலும், இத்திருக்கோயிலின் அங்கமான அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் திருக்கோயிலில் அருள்மிகு விநாயகர், நாகர் சன்னிதிகள் உயர்த்தப்பட்டு விரிவுபடுத்தப்பட்டுள்ளன. கருவறையின் சுதையம்மன் மிக நேர்த்தியாகவும், அழகாகவும் முற்றிலும் புதியதாக அமைக்கப்பட்டு, திருச்சுற்றுக்களில் "கிரணைட்" கற்கள் தளவரிசையாகப் பதிக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு அனைத்து நிலைகளிலும் முற்றிலும் மிகுந்த பொருட் செலவில் திருப்பணிகள் செய்விக்கப்பெற்றுச் சிறப்பாக அமைந்துள்ள **வள்ளி தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி, அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன், அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன்** ஆகிய திருக்கோயில்களுக்குக் கீழ்க்காணும் நிகழ்வுகளின் வண்ணம் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நடைபெறுகின்றது.

நிகழும் மங்களகரமான விக்ருதி ஆண்டு வைகாசித் திங்கள் **9-ஆம் நாள் (23-05-2010) ஞாயிற்றுக்கிழமை** சுக்லதசமி, உத்திர நட்சத்திரம், அமிர்தயோகம் கூடிய சுபதினம் **காலை 09.00 மணிக்குமேல் 10.30 மணிக்குள்** கடக லக்னத்தில் **அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன்** மற்றும் **பரிவார மூர்த்திகளுக்கு மகா கும்பாபிஷேகம்** நடைபெறுகின்றது.

நிகழும் மங்களகரமான விக்ருதி ஆண்டு வைகாசித் திங்கள் **10-ஆம் நாள் (24-05-2010) திங்கட்கிழமை** சுக்ல ஏகாதசி, ஹஸ்த நட்சத்திரம் சித்தயோகம் கூடிய சுபதினம் **அதிகாலை 04.30 மணிக்குமேல் 06.00 மணிக்குள்** மேஷ லக்னதில் **அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி திருக்கோயில் பரிவார மூர்த்திகளுக்கு மகா கும்பாபிஷேகம்** நடைபெறுகின்றது.

அதன்பின், **காலை 6.00 மணிக்குமேல் 07.30 மணிக்குள்** ரிஷப லக்னத்தில் **அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன்** மற்றும் **பரிவார மூர்த்திகளுக்கு மகாகும்பாபிஷேகம்** நடைபெறுகின்றது.

அதனைத் தொடர்ந்து **காலை 09.00 மணிக்குமேல் 10.30 மணிக்குள் கடக லக்னத்தில் வள்ளி தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி திருக்கோயில் "இராஜகோபுரம்", அருள்மிகு ஸ்ரீ வரசித்தி விநாயகர், வள்ளி தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி, அருள்மிகு கைலாஸநாதர், அருள்மிகு காமாட்சி, அருள்மிகு சுமித்ர சண்டேசர் ஆகிய சுவாமிகளின் விமானஸ்தூபிகளுக்கும் தொடர்ந்து சுவாமிகளுக்கும் மகாகும்பாபிஷேகம்**

### மாண்புமிகு மக்கள் முதல்வர்

# ந. ரங்கசாமி, B.Com., B.L.,

### அவர்களின் தலைமையில்

நடைபெறுகின்றபடியால் பக்த பெருமக்கள் அனைவரும் மகாகும்பாபிஷேக விழாவில் கலந்து கொண்டு சுவாமிகளின் திருவருள் பெற்றுய்வதுடன் மகாகும்பாபிஷேக விழாவினுக்கு இயன்றளவு பொருளுதவி புரிவதுடன் உடலாலும், உள்ளத்தாலும் உதவி புரிந்து அறப்பணியை நிறைவு செய்து கலியுகத்தின் கண் கண்ட கடவுளாம் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமியின் திருக்குடமுழுக்குப் பெருஞ்சாந்தி விழாவினை கண்டுகளித்து திருவருள்பெற்று ஆனந்தப் பெருவாழ்வுடன் நீடூழி வாழ அவன்தாள் வணங்கி வேண்டுகிறோம்.



புதுச்சேரி, கதிர்காமம்

# அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி தேவஸ்தானம்

## அறங்காவலர் குழு

தலைவர்

**சாமி சு. முத்தையன் செங்குந்தர்**

உபதலைவர்

**ஆ. பாஸ்கரன் (எ)**

**பன்னீர்செல்வம் செங்குந்தர்**

செயலாளர்

**ப. மாமல்லன் செங்குந்தர்**

பொருளாளர்

**சி. சுகுமாரன் செங்குந்தர்**

உறுப்பினர்

**கா.ச. முருகையன்**

நாட்டாண்மை :

திரு. **அ. லட்சுமணன் செங்குந்தர்**

"புருஷோகாரி" சிவபூஜாகோசரி

சிவத்திரு. **வை. சு. பாலசுப்ரமண்ய சிவாச்சாரியார்**

சிவத்திரு. **த. காளத்தி குருக்கள்**

அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி,

அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன்

அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் திருக்கோயில் அர்ச்சகர்கள்

கதிர்காமம், புதுவை – 9.

சர்வசாதகம் :

திருஇடையாறு :

சிவத்திரு. **சபா. ஞானசம்பந்த சிவாச்சாரியார், M.A.,**

கதிர்காமம், புதுவை – 9.

## திருப்பணிக்குழு கௌரவத்தலைவர்

திரு. **வ. விநாயகம் செங்குந்தர்**

## கும்பாபிஷேக விழாக் குழுத்தலைவர்

திரு. **சாமி. சு. விஸ்வநாதன் செங்குந்தர்**

## திருப்பணி மற்றும் கும்பாபிஷேக விழாக்குழு உறுப்பினர்கள்

திரு. **கோ. கல்யாணசுந்தரம்** செங்குந்தர்

திரு. **சோ. வேல்முருகன்** செங்குந்தர்

திரு. **த. வைத்தியநாதன்** செங்குந்தர்

திரு. **ப. சுகுமாரன்** செங்குந்தர்

திரு. **வெ. ஜெயக்குமார்** செங்குந்தர்

திரு. **ல. சண்முகம்** செங்குந்தர்

திரு. **இரா. மாணிக்கசாமி** செங்குந்தர்

திரு. **கு. பாலசுப்ரமணியன்** செங்குந்தர்

திரு. **சி. பாலசுப்ரமணியன்** செங்குந்தர்

திரு. **சி. பன்னீர்செல்வம்** செங்குந்தர்

திரு. **தெ. தண்டபாணி** செங்குந்தர்

திரு. **வை. பழனி** செங்குந்தர்

திரு. **வெ. மனோகர்** செங்குந்தர்

திரு. **சி. கண்ணன் (எ) ஆறுமுகம்** செங்குந்தர்

திரு. **இரா. புகழேந்தி** செங்குந்தர்

திரு. **பா. முருகப்பன்** செங்குந்தர்

திரு. **சொ. பாலமோகன்** செங்குந்தர்

திரு. **கி. இராமலிங்கம்** செங்குந்தர்

திரு. **கி. விநாயகம்** செங்குந்தர்

திரு. **மு. சந்திரசேகரன்** செங்குந்தர்

திருக்கோயில் ஓதுவார் : திரு. **வே. கணேசன் செங்குந்தர்**

புதுச்சேரி, கதிர்காமம்

# அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி தேவஸ்தானம்

## மகா கும்பாபிஷேக விழா மலர் வெளியீட்டுக் குழு

திரு. ஆ. சிவலிங்கனார் செங்குந்தர்
திரு. இரா. அருணாசலம் செங்குந்தர்
திரு. தெ. திருநாவுக்கரசு செங்குந்தர்
திரு. அ. சுந்தரலிங்கம் செங்குந்தர்
திரு. பூங்கா. சண்முகம் செங்குந்தர்
திரு. சிவ. கணபதி செங்குந்தர்
திரு. தெ. முருகசாமி செங்குந்தர்

**இளைஞர்கள்,**

மற்றும்

**ஊர்ப்பொதுமக்கள்,**

கதிர்காமம்,

புதுச்சேரி.

## நிகழ்ச்சி நிரல்

| | | | |
|---|---|---|---|
| 21-05-2010 முதல் 24-05-2010 வரை | வெள்ளி முதல் திங்கள் இரவு வரை | யாகசாலை மற்றும் ஸ்ரீ கதிர்வேல் சுவாமி வீதி உலா | கடலூர், கூத்தப்பாக்கம், காஞ்சி காமகோடி பீடம் "சேவாரத்னா" A. பழனிவேல் குழுவினரின் நாதஸ்வர கச்சேரி. |
| 24-05-2010 | திங்கள் இரவு | ஸ்ரீ முத்துமாரியம்மன் வீதி உலா | "சேவாரத்னா" வில்லியனூர் P. குமார் குழுவினரின் நாதஸ்வர கச்சேரி |
| 24-05-2010 | திங்கள் இரவு | ஸ்ரீ கெங்கையம்மன் வீதி உலா | "ராஜ் டிவி" புகழ் "சேவாரத்னா" புதுவை, கொசப்பாளையம் V.P. கணேசன் குழுவினரின் நாதஸ்வர கச்சேரி |



# மகா கும்பாபிஷேக விழா

## யாகசாலை பூஜைகள் நிகழ்வு நிரல்

நிகழும் மங்களகரமான விக்ருதி ஆண்டு வைகாசித் திங்கள்

| தமிழ்த் தேதி | ஆங்கிலத் தேதி | கிழமை | காலமும் நேரமும் | நிகழ்வு விபரம் |
|---|---|---|---|---|
| 3-ஆம் நாள் | 17-05-2010 | திங்கள் | காலை 6.00 மணிக்கு மேல் | அனுக்ஞை - ஸ்ரீ விக்னேஸ்வர பூஜை, ஸ்ரீ மகாகணபதி ஹோமம், கஜ பூஜை |
| 4-ஆம் நாள் | 18-05-2010 | செவ்வாய் | காலை 6.00 மணிக்கு மேல் | கோ பூஜை, ஸ்ரீ லக்ஷ்மி பூஜை, தனபூஜை, ஸ்ரீ மகாலக்ஷ்மி ஹோமம் |
| 5-ஆம் நாள் | 19-05-2010 | புதன் | காலை 8.00 மணிக்கு மேல் | நவக்ரஹ ஹோமம் |
| 6-ஆம் நாள் | 20-05-2010 | வியாழன் | மாலை 6.00 மணிக்கு மேல் | வாஸ்து சாந்தி - பிரவேச பலி<br>ரக்ஷோக்ண ஹோமம்<br>மிருத்ஸங்கிரஹணம்<br>அங்குரார்ப்பணம் - ரக்ஷாபந்தனம். |
| 7-ஆம் நாள் | 21-05-2010 | வெள்ளி | காலை 8.00 மணிக்கு மேல் | ஆச்சார்ய வர்ணம்,<br>யாகசாலை அலங்காரம்,<br>பரிவார மூர்த்திகள் கும்பஸ்தாபனம். |
| | | | மாலை 5.00 மணிக்கு மேல் | பாலாலயத்தில் அருள் செய்யும் வள்ளி தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி, அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் மற்றும் அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் ஆகிய சுவாமிகள் கலாகர்ஷணம் செய்து யாத்ரா ஹோமம் செய்து ஸகல விதமான உபசாரங்களுடன் சுவாமிகள் யாகசாலைக்கு எழுந்தருளல் முதற்கால யாகபூஜை தொடக்கம் பூர்ணாஹுதி தீபாராதனை. |
| 8-ஆம் நாள் | 22-05-2010 | சனி | காலை 8.00 மணிக்கு மேல் | 2-ம் கால யாக பூஜை தொடக்கம்<br>பூர்ணாஹுதி - தீபாராதனை. |
| | | | மாலை 5.00 மணிக்கு மேல் | விசேஷ சாந்தி<br>3-ம் கால யாகபூஜை தொடக்கம்<br>பூர்ணாஹுதி தீபாராதனை. |

## நிகழும் மங்களகரமான விக்ருதி ஆண்டு வைகாசித் திங்கள்

| தமிழ்த் தேதி | ஆங்கிலத் தேதி | கிழமை | காலமும் நேரமும் | நிகழ்வு விபரம் |
|---|---|---|---|---|
| 9-ஆம் நாள் | 23-05-2010 | ஞாயிறு | காலை 7.00 மணிக்கு மேல் | 4-ம் காலயாக பூஜை தொடக்கம் |
| | | | காலை 9.00 மணிக்கு | அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் யாகசாலை மகாபூர்ணாஹுதி |
| | | | காலை 9.10 மணிக்கு | தீபாராதனை "யாத்ராதானம்" |
| | | | காலை 9.20 மணிக்கு | அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் **திருக்கோயில் கலசங்கள் புறப்பாடு** |
| | | | காலை 9.50 மணிக்கு | அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் விமான **ஸ்தூபி கும்பாபிஷேகம்** |
| | | | **காலை 10.05 மணிக்குமேல் 10.30 மணிக்குள்** | **அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் மற்றும் பரிவார மூர்த்திகள் "மகா கும்பாபிஷேகம்".** |
| | | | காலை 10.30 மணிக்குமேல் | அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி மற்றும் பரிவாரம், அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் மற்றும் பரிவாரம் பூர்ணாஹுதி தீபாராதனை |
| | | | மாலை 6.00 மணிக்குமேல் | அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் **திருக்கோயில் மகாபிஷேகம்** |
| | | | மாலை 6.00 மணிக்குமேல் | 5-ம் கால **யாகபூஜை தொடக்கம்** பூர்ணாஹுதி தீபாராதனை |
| 10-ஆம் நாள் | 24-05-2010 | திங்கள் | அதிகாலை 3.00 மணிக்கு | அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி திருக்கோயில் **பரிவார மூர்த்திகளின் யாகசாலைகளில்** 6-ம் கால யாகபூஜை தொடக்கம். |
| | | | அதிகாலை 4.15 மணிக்கு | பரிவார **மூர்த்திகள் யாகசாலைகளில் பூர்ணாஹுதி தீபாராதனை** |
| | | | அதிகாலை 4.30 மணிக்குமேல் | "யாத்ராதானம்" செய்து கலசங்கள் புறப்பாடு. |
| | | | **அதிகாலை 5.00 மணிக்குமேல் 6.00 மணிக்குள்** | **அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி திருக்கோயில் பரிவார விமானங்கள், மூர்த்திகளுக்கு "கும்பாபிஷேகம்".** |
| | | | காலை 6.30 மணிக்கு | அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் யாகசாலையில் மகா பூர்ணாஹுதி தீபாராதனை |
| | | | காலை 6.45 மணிக்கு | "யாத்ராதானம்" செய்து கலசங்கள் புறப்பாடு. |

## நிகழும் மங்களகரமான விக்ருதி ஆண்டு வைகாசித் திங்கள்

| தமிழ்த் தேதி | ஆங்கிலத் தேதி | கிழமை | காலமும் நேரமும் | நிகழ்வு விபரம் |
|---|---|---|---|---|
| 10-ஆம் நாள் | 24-05-2010 | திங்கள் | காலை 7.00 மணிக்கு | அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் இராஜகோபுரம் விமானம், முன்முகப்பு மண்டப ஸ்தூபிகள் கும்பாபிஷேகம். |
| | | | காலை 7.05 மணிக்குமேல் 7.30 மணிக்குள் | அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் மற்றும் பரிவார மூர்த்திகளுக்கு "மகா கும்பாபிஷேகம்". |
| | | | காலை 9.00 மணிக்குமேல் | வள்ளி தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி யாகசாலையில் மகா பூர்ணாஹுதி |
| | | | காலை 9.10 மணிக்கு | "யாத்ராதானம்" செய்து கலசங்கள் புறப்பாடு. |
| | | | காலை 9.40 மணிக்கு | இராஜகோபுரம்,அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி அருள்மிகு விநாயகர் விமானம், அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி விமானஸ்தூபி மற்றும் அருள்மிகு கைலாஸ நாதர், அருள்மிகு காமாட்சி விமானஸ்தூபிகள், முன் முகப்பு மண்டப ஸ்தூபிகள் "கும்பாபிஷேகம்". |
| | | | காலை 10.00 மணிக்குமேல் 10.30 மணிக்குள் | அருள்மிகு விநாயகர், வள்ளி தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி, அருள்மிகு கைலாஸநாதர், அருள்மிகு காமாட்சி, அருள்மிகு சுமித்ர சண்டேசர் ஆகிய சுவாமிகளுக்கு "மகா கும்பாபிஷேகம்". |
| | | | பிற்பகல் 03.00 மணிக்குமேல் | மகாபிஷேகம். |
| | | | இரவு 07.00 மணிக்குமேல் | வள்ளி தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி திருக்கல்யாண வைபவம். |
| | | | இரவு 10.00 மணிக்குமேல் | வள்ளி தெய்வானை உடனுறையும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி, அருள்மிகு ஸ்ரீ முத்து மாரியம்மன், அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன், சுவாமிகள் திருவீதி உலா. |
| 11-ஆம் நாள் | 25-05-2010 | செவ்வாய் | மாலை 5.00 மணிக்குமேல் | அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி, அருள்மிகு ஸ்ரீ முத்து மாரியம்மன், அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் ஆகிய திருக்கோயில்களில் 'திரை பக்ஷிக சாந்தி' எனும் மண்டலாபிஷேகம் தொடக்கம். |

# மகா கும்பாபிஷேக விழா கலை நிகழ்ச்சி நிகழ்வு நிரல்



17-05-2010 திங்கள் — மாலை 6.00 மணியளவில் — **மங்கள இசை**

இரவு 7.00 மணியளவில் — புதுவை திருமுறை இசைமாமணி சம்பந்த குருக்களின் **"தேவாரம்"** பக்தி பாமாலை

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி



18-05-2010 செவ்வாய் — இரவு 7.00 மணியளவில் — "இறை இசை தென்றல்" கலைமாமணி சென்னை **வீரமணி ராஜு குழுவினரின்** மாபெரும் பக்தி இன்னிசை

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி



19-05-2010 புதன் — இரவு 7.00 மணியளவில் — புதுவை ஸ்ரீ நீலா நிருத்தியாலயா பள்ளி பரதக் கலைஞர்கள் வழங்கும் **'நாட்டியாஞ்சலி'**

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி

20-05-2010 வியாழன் — இரவு 7.00 மணியளவில் — புதுவை தவில் லய இளவரசு **K.L. பாலமுரளி கிருஷ்ணா**-வின் **'சாங்கீத சாரல்'** 20 இசைக் கலைஞர்களுடன் பங்கேற்கும் கதம்ப இசைத் தொகுப்பு

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி



21-05-2010 வெள்ளி — இரவு 7.00 மணியளவில் — சினிமா உதவி இசையமைப்பாளர் **"ட்ரம்ஸ் கோபால்"** மற்றும் **"விஜய் டி.வி. புகழ்"** ஜூனியர் சிங்கர் குழுவினரின் **இசை மொட்டுக்கள்** (சின்னஞ்சிறு வண்டுகளின் தேனிசை ரீங்காரம்)

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி



22-05-2010 சனி — மாலை 6.00 மணியளவில் — கேரளா மாநிலம் பாலக்காடு மணி வழங்கும் கேரள பாரம்பரிய **'சிங்காரி மேள வாத்தியம்'**

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி

22-05-2010 சனி

இரவு 7.30 மணியளவில்

தூத்துக்குடி "நாவுக்கரசி"
**"இளம்பிறை மணிமாறன்"**
வழங்கும் ஆன்மிக சொற்பொழிவு

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி





23-05-2010 ஞாயிறு

இரவு 7.00 மணியளவில்

திரைப்பட இசையமைப்பாளர்
**'தேனிசைத் தென்றல்' தேவா**
அவர்களின் மாபெரும்
**திரை இசை விருந்து**

இடம் :
இந்திரா காந்தி அரசு கலைக் கல்லூரி வளாகம்,
கதிர்காமம்.

23-05-2010 ஞாயிறு

இரவு 7.00 மணியளவில்

**"கலைமகள் இயல் இசைப் பட்டறை"**
**மாணவர்கள் வழங்கும்**
**வீணை சங்கமம்.**
இது நோணாங்குப்பம்,
உதவிக்கரங்களின் ஓர் அங்கம்.

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி





24-05-2010 திங்கள்

மாலை 6.00 மணியளவில்

மகா கும்பாபிஷேக
**"விழா மலர்"**
வெளியீட்டு விழா

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி

மலர் வெளியிடுபவர் :
மாண்புமிகு மக்கள் முதல்வர் **ந. ரங்கசாமி**, B.Com., B.L.,
முதற்படி பெறுபவர் : **அறங்காவலர் குழு**

24-05-2010 திங்கள்

இரவு 7.00 மணியளவில்

"பத்மஸ்ரீ" கலைமாமணி
டாக்டர். சீர்காழி **G. சிவசிதம்பரம், M.D.,**
**குழுவினரின் பக்தி பாமாலை**

( இடம் : விழா மேடை )
சுப்ரமணியர் கோயில் வீதி





உ

புதுச்சேரி, கதிர்காமம்,

அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி தேவஸ்தான

# மஹா கும்பாபிஷேக விழா

# புகைப்படத் தொகுப்பு

நாள் : 23, 24 மே 2010





ஸ்ரீ கதிர்வேல்சுவாமி திருக்கல்யாண உற்சவம்



ஸ்ரீ கதிர்வேல்சுவாமி ஆலய உற்சவ மூர்த்திகள்



ஸ்ரீ கதிர்வேல்சுவாமி ஆலய புதிய கோபுர கலசங்கள்



ஸ்ரீ கதிர்வேல்சுவாமி ஆலய புதிய திருமேனிகள்



கஜ பூஜை



ரட்சோக்ன ஹோமம்



பிரவேச பலி பூஜை



கதிர்வேல் சுவாமி யாகசாலை உட்புறத் தோற்றம்



யாசாலை பொருட்கள் ஊர்வலமாய் கொண்டு செல்லுதல்



ரட்சா பந்தனம்



வஸ்த்ராஹூதி



வேள்வித் தீ ஹோம குண்டம்



புதிய திருமேனிகளும் ஆலய கலசங்களும் ஊர்வலம்



பீடங்கள் தூய்மைப்படுத்துதல்



மாரியம்மன் பீடம்



அஷ்டபந்தனம் இடித்தல்



ரட்சா பந்தனம்



கோ பூஜை



மஹா பூர்ணாஹுதி




யாகசாலை முகப்புத்தோற்றம்



ஸ்ரீ கெங்கையம்மன் உற்சவ மூர்த்தி



ஸ்ரீ முத்துமாரியம்மன் உற்சவ மூர்த்தி



ஸ்ரீ முத்துமாரியம்மன், ஸ்ரீ கெங்கையம்மன் புதிய சூளங்கள்



ஸ்ரீ சண்டிகேஸ்வரர் புதிய உற்சவ மூர்த்தி




அருள்மிகு கெங்கையம்மன் யாகசாலை முகப்பு



புதுப்பொலிவுடன் கொடிமரம்




அருள்மிகு பரிவார மூர்த்திகள் யாகசாலை முகப்பு



நவக்ரஹ ஹோமம்


கலை நிகழ்ச்சி அரங்கின் முகப்பு


ஸ்ரீ கதிர்வேல்சுவாமி கருவறை அர்த்த மண்டபம்


ஸ்ரீ கதிர்வேல்சுவாமி மூலவர் விமான நன்னீராட்டல்


ஸ்ரீ கதிர்வேல்சுவாமி ஆலய கலசங்கள் புறப்பாடு



ஷோடஷ உபகாரம்



கெங்கையம்மன் ஆலயத்திற்கு கலசங்கள் புறப்பாடு



ஸ்ரீ கெங்கையம்மன் மூலவர் விமான நன்னீராட்டல்



லட்சுமி ஹோமம் - பூர்ணாஹுதி



கதிர்வேல்சுவாமி ஆலயத்திற்கு கலசங்கள் புறப்பாடு




கெஜலட்சுமி சன்னதி குடமுழுக்கு நன்னீராட்டல்



இடும்பன் சன்னதி குடமுழுக்கு நன்னீராட்டல்



ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலய சூலத்திற்கு நன்னீராட்டல்



இளம்பிறையின் ஆன்மீக வெளிச்சம்



சம்பந்த குருக்களின் தேவாரத் தேனருவி




தேனிசை தென்றலின் திரை விருந்து



ஸ்ரீநிலா நிருதியாலயாவின் நடன விருந்து

உ

புதுவை, கதிர்காமம்

# வள்ளி தெய்வயானை உடனுறையும் அருள்மிகு கதிர்வேல் சுவாமி திருக்கோயில் தல வரலாறு

பரந்து விரிந்த இப்புவியில் சேரநாடு, சோழநாடு, பாண்டிநாடு என்ற முப்பெரும் பிரிவுகளில் அரசியலுக்கே இலக்கணம் வகுத்திட்ட மாமன்னர்களின் பேராட்சிக் காலத்தில் " நடு நாடு" என்று ஒரு சிறியநாடு, தென்பெண்ணை நதி, கெடிலநதி, மணிமுத்தா நதி, நீவாநதித் சங்கராபரணி நதி ஆகிய நதிகளை, தன்னகத்தே கொண்டு நீர் வளமும் நிலவளமும் பெற்று, முப்பதிரண்டு அருங்காட்சி கொடுத்தருளிய, பாடல் பெற்ற திருக்கோயில்களைக் கொண்டு திருநாடாக விளங்கியது. அந்நடு நாட்டின்கண் "வில்வவனம்" என்று அழைக்கப்பட்ட இக்கதிர்காமம் உள்ளடங்கியது, அடர்ந்த வில்வ மரங்கள் சூழ்ந்து இற்றைக்கு 'வில்லியனூர்' என வழக்கில் உள்ள பேரூரினையும் தாண்டி மிகப் பெருவனமாகத் திகழ்ந்தது.

அவ்வில்வ வனத்தில் அசுரர்களின் இழி செயலும் தொல்லைகளும் அப்பகுதி வாழ் மக்களை மிகவும் துன்புறுத்தின. அவ்வசுரர்கள் வனத்தின் வழி பயணம் மேற்கொள்ளும் மனிதர்களைக் கொன்று தம் பசியாறி வந்தனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் வில்வலன் – வாதாபி என்னும் அசுர சகோதரர்கள். இவர்கள் முனிவர்களாக உருமாறி வழிப்பயணம் மேற்கொள்ளும் மனிதர்களையும் முனிவர்களையும் தமது தவக்குடிலுக்கு அழைத்துச் செல்வர் உணவிட்டு பசியாற்றிட. அதற்கிடையில் இளையோன் "வாதாபி" என்ற அசுரன் ஆடாகமாறி உண்ணுவதற்குப் பக்குவமான கறியாக இருப்பான். இக்கறியை வில்வலன் அவர்களுக்குப் பரிமார அவர்களும் உண்டு இளைப்பாறும் நேரம் வில்வன் "வாதாபி" என அழைக்க ஆட்டுக்கறி உணவாகச் சென்ற வாதாபி வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளிவருவான். பின் இருவரும் உடலைத் தின்பார்கள். வில்வலன், வாதாபி அசுர சகோதரர்களை அழிக்கும்முகத்தான் இவ்வழியாக அகத்திய மாமுனிவர் பயணம் கொண்டபொழுது இக்கதிர்காமம் உற்ற வனப்பகுதியில் தங்கி சிவபூசையாற்றித் தமிழவேள் முருகனையும் வணங்கி அவனருள் பெற்று பின் வாதாபியை வதம் செய்ததாகக் கர்ண பரம்பரைச் செய்தி செப்புகிறது.

கர்ண பரம்பரைச் செய்திக்கிணங்க அருள்மிகு கதிர்வேல் சுவாமி திருக்கோயில் கொண்டு படிப்படியாக வளர்ச்சியுற்று விளங்குவதுடன் தமிழ்மாமுனிவன் அகத்தியன் திருவடிபட்டதன் காரணம் தரம் வாய்ந்த நற்றமிழறிஞர்களையும், தமிழாயும் சான்றோரையும் தன்னகத்தே கொண்டு தமிழ் பரப்பும் வனமாக இன்று கதிர்காமம் விளங்குகிறது.

இத்தகைய வரலாற்றில் புதுவை யூனியன் ஆட்சிப்பரப்பில் தலைநகர் புதுச்சேரியிலிருந்து மேற்குப்பகுதியில் சுமார் நான்கு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது இப்பழம் பெரும் சிற்றூர் கதிர்காமம்.

இன்றைக்கு சுமார் 192 ஆண்டுகட்கும் மேற்பட்ட இத்திருக்கோயில் திருவாமாத்தூர் கௌமார மடாலயம் வண்ணச்சரபம் திருப்புகழ் சுவாமிகள் என வழங்கும் சீர்வளர் சீர் தண்டபாணி சுவாமிகளால் போற்றிப் பாடல் பெற்றது.

இத்திருக்கோயிலுக்குச் சுமார் 80 ஆண்டுகட்கு முன் கும்பாபிகேம் நடந்த காலத்தில் இவ்வூர் செங்குந்த மரபினர் சிலர் திருவாமாத்தூரில் இருந்த வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளிடம் நேரில் சென்று கதிர்வேலனின் பதிகம்பாடியும் அரங்கேற்றியும் அருளுமாறு வேண்டினர். அக்கால சுவாமிகள் திருவாமாத்தூர் எல்லைதாண்டா நியமத்துடன் தவம்புரிந்த சமயமாதலால் பதிகம்பாடி அரங்கேற்ற இயலாதெனத் தெரிவித்தனர்.

எந்தை கதிர்வேல் இணையடிச் சீர் பாடப்பட வேண்டும் என்று கருதி அம்முயற்சியில் ஈடு பட்டவர்கள் தமதெண்ணம் முடிவடையாததால் தம்மூர் மீண்டு கதிர்வேல் சுவாமியிடம் வருத்தமுடன் முறையிட்டனர். அதன்பின் செந்தமிழால் வைதாரையும் நன்கு வாழவைக்கும் "ஸ்ரீ கதிர்வேலன் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகளது யோகில் தோன்றிப் பதிகம் பாடும்படி கட்டளையிட்டருளினரென்றும் பிறகே சுவாமிகள் பதிகத்தினைப்பாடி தக்கவர்மூலமாக அரங்கேற்றஞ் செய்தருளினார்கள் என்பதும் கர்ண பரம்பரை வழக்கு" தமது பதிகத்தின் காப்புச் செய்யுளில்

> "கதிர்காமத் தூரில் வளர்கந்தா நின் உள்ளத்
> ததிசூதை நன்றாய் அறிந்தேன் – மதிசூடி
> ஆமாத்தூரி ற்குலவி அண்டர் முதலோர் வியப்ப
> ஏமாற்றிப் பாடல் கொண்டாயே."

என வருவதனாலும் அறியலாம்.

இச்சிற்றூரின் மேல்புறம் நடுநாயகமாக விளங்கி கிழக்கு நோக்கி அருள்மிகு வள்ளி தெய்வயானை உடனுறையும் கதிர்வேல் சுவாமியின் திருக்கோயில் அமைந்து சிறந்துள்ளது. காலைக் கதிரவன் தினமும் கதிர்வேலனைத் தொழுது எழும் நிலை. அன்றாடம் சூரிய உதயத்தின்பொழுது அவனது ஒளிக்கதிர்கள் ஆலயத்தின் கருவறையில் உள்ள கதிர்வேல் சுவாமியின் ஆதார பீடக்கல்லில் படிந்து எழுவது இன்றைக்கும் கண் கூடு.

திருவிடைமருதூர் "தெருவழகு" என்று கூறுவார்கள். ஆனால் அதனையும் விஞ்சி நிற்பது கதிர்காமத்தில் கதிர்வேலன் திருக்கோயிலும் அதனைச்சுற்றி அழுகுற, பாங்குற திட்டமிட்டு அமைக்கப்பட்ட வீதிகளின் தெருவழகாகும். இவ்வாறு தெரு வழகுடன் கூடிய ஊர் இப்பகுதியில் தலைநகர் புதுச்சேரியைத்தவிர வேறு எங்கும் அமையப்பெறவில்லை.

இவ்வூர் ஆறு காணி பதினைந்து வீசங்கள் என்னும் அளவுடைய நிலப்பரப்பை ஊராக வரைந்து திருத்தி தெற்கு வடக்காக மூன்று வீதிகளும் கிழக்கு மேற்காக மூன்று தெருக்களையும் கொண்டு விளங்கி வந்தது. அருள்மிகு முத்துமாரியம்மன், அருள்மிகு கதிர்வேல்சுவாமி, அருள்மிகு கெங்கையம்மன் ஆகிய மூன்று திருக்கோயில்களை உருவாக்கி ஊன் உருக வழிபட்டு வணங்கி வாழ்ந்துவந்த இவ்வூர் கைக்கோள செங்குந்த மரபினர், ஆலய வழிபாட்டிற்கும், உற்சவ மூர்த்திகளின் திருவீதி உலா பவனிக்கும் இருக்கின்ற பரப்பளவு முறையாக அமையாதிருந்தமையினால் தற்பொழுது பாரதி வீதி என்றழைக்கும் புதுத்தெருவை உள்ளடக்கிக், கதிர்காமத்தின் மேற்கு எல்லையாக வரையறுத்துக் கடவுளரைப் பவனி வரச்செய்து கண்ணாரக் கண்டுகளி நடனம் புரிந்துள்ளார்கள்.

அருள்மிகு முத்துமாரியம்மன், அருள்மிகு கெங்கையம்மன் ஆகிய திருக்கோயில்களை உள்ளடக்கி அருள்மிகு கதிர்வேல் சுவாமி திருக்கோயில், உள்ளூர் செங்குந்தப் பெருமக்களின் நிருவாகத்தில் சிறந்த பரிபாலனத்தில் சிறந்த சிறப்புடன் திகழ்கின்றது.

மூலமூர்த்தி தலம் அமைந்துள்ள இன்றையப் பகுதியில், அன்று ஆரம்பத்தில் தென்னங்கீற்றால் வேய்ந்த ஓர் ஓலைக் கீற்றுக் கொட்டகையில் அருள்மிகு முத்துமாரியம்மனை வைத்து, வணங்கி, வழிபட்டு வந்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள்.

இடம் பெயர்த்தி, மாற்றி, தற்போது உள்ள அருள்மிகு முத்து மரியம்மன் ஆலயம் ஏற்படுத்தி, வணங்கி வரும்படி அம்மன் அருள்வாக்கு கூறியபடியால், இடப் பெயர்ச்சி செய்து அம்மனை நிறுவி, வழிபட்டு வந்திருக்கிறார்கள்.

அப்படி அம்மனை வழிபட்டு வந்தபோது, மரத்தால் செய்யப் பட்ட அருள்மிகு முத்துமாரியம்மன் திருவுருவை, காழ்ப்பு மனங் கொண்டு, கயமை மனத்தினர் சிலர், மேற்படி திருவுருவத்தை, எடுத்துச் சென்று, சூளையில் வைத்து, வேகவைத்து விட்டார்கள், ஆனால், மறுநாள், அதே இடத்தில், அதே அம்மனின் மரத்திருவுருவம் சாந்த சொருபியாகக் காட்சியளித்துள்ளாள். பக்திப்பெரு மக்களுக்கு, மேலும் இரண்டொரு நாட்களில் சிலர், "அம்மை" வார்த்து, "குளிர்ந்து" விட்டதாகக் கர்ணபரம்பரையான செய்தி ஒன்று செப்புகிறது.

ஆதியில் விநாயகர் சன்னதியும், கதிர்வேல் சுவாமி சன்னதியும் மட்டுமே அமையப் பெற்றிருந்தன. இதற்காகப் பாடுபட்டவர்களில் திரு. **நல்லத்தம்பி** முதலியார் குறிப்பிடத்தக்கவர். பின்னர் **செ. மாணிக்க** முதலியார் பெருமுயற்சியினாலும் ஊர் மக்கள் பொருளுதவியினாலும் இரு சந்திதிகளுக்கும் முன்புறம் கருங்கல் மண்டபம் அமைக்கப்பட்டு 1895-ம் ஆண்டு கும்பாபிகேம் செய்யப்பட்டது.

அருள்மிகு கெங்கையம்மனுக்கு திருக்கோயில் எழுப்பிடத் தேவையான மனையை அமரர். கு. வரதராசு முதலியார் அவர்கள் கொடுத்தருளியுள்ளார்கள். அவர்தம் குமரர் திரு. வ. **முத்தைய்ய** முதலியார் அவர்களும் தம் தந்தை வழி தொடர்ந்து நாகேந்திரன் கோயில் கட்டி திருப்பணி செய்துள்ளனர்.

சந்நிதிக்குக்கு வடபுறம் கருங்கல் மண்டபமும், உற்சவ மூர்த்திகளின் அலங்கார மண்டபமும் 1935-ம் ஆண்டு புதியதாக அமைத்து மகாகும்பாபிகேமும் சங்காபிகேமும் செய்து ஆண்டு தோறும் மாசி மாதத்தில் சூரசம்மார உற்சவத்தினை சீரும் சிறப்புமாக நடத்தி வந்தனர்.

கதிர்காமம் அருள்மிகு முத்துமாரியம்மன் ஆலயத்தின் அலங்கார மண்டபம் சாமி. சி. சுப்ரமணிய முதலியார் அவர்கள் சொந்தப் பொறுப்பில் 28-11-1965-ல் கட்டி மீண்டும் 1987-ம் ஆண்டு விரிவு படுத்திப் புதுப்பித்துள்ளார்.

இத்திருக்கோயிலின் முன் மண்டபத்தைத் திரு. **கோ. பழனி** முதலியார் அவர்கள் கட்டுவித்துள்ளார்.

பின் 10-07-1970-ல் திரு. வை. மு. பாலசுப்ரமணிய முதலியார். திரு. கா. மு. நடராஜ முதலியார், திரு. ந. சொக்கலிங்க முதலியார், திரு. அ. மு. பழனிசாமி முதலியார், திரு. மு.ர. சோமசுந்தர முதலியார் ஆகியோர் ஆலயத்தின் நிர்வாகப் பொறுப்பினை ஏற்று இவர்களின் பெருமுயற்சியால் சாதாரண ஆண்டு ஆனித்திங்கள் 26-ஆம் நாள் (10-07-1970) வெள்ளியன்று கும்பாபிகேம் செய்துள்ளனர்.

ஆரம்பகாலத்தில் ஸ்ரீ வரசித்திவிநாயகர், ஸ்ரீ கதிர்வேல் சுவாமி, ஸ்ரீ பழனியாண்டவர், நவக்ரஹம். சண்டிகேஸ்வரர் சன்னதிகளே இருந்தன. ஸ்ரீ பழனியாண்டவர் சன்னதி திரு. **வை. மு. பாலசுப்ரமணிய** முதலியார் அவர்களால் திருப்பணி செய்யப்பட்டு கும்பாபிகேம் செய்விக்கப்பெற்றுள்ளது.

திரு. சாமி சி. சுப்ரமணிய முதலியார் சாதாரண வருடம் ஆனி மாதம் 26-ஆம் நாள் (10-07-1970) வெள்ளியன்று கதிர்வேல் சுவாமியின் பின்புறம் ஸ்ரீ கைலாச

நாதருக்கென்று தனிசன்னதி அமைத்து அதில் கைலாசநாதரையும், காமாட்சியம்மனையும் பிரதிஷ்டை செய்து வைத்தனர். அவரே கைலாசநாத சுவாமிக்கு முன்மண்டமும் அதில் பாலகணபதி மற்றும் பாலமுருகன் ஆலயத்தினையும், காமாட்சியம்மனுக்குத் தனியாக ஓர் சன்னதியும் எழுப்பி ராக்ஷஸ ஆண்டு பங்குனி 23-ம் நாள் (5-4-1976) திங்கள் காலை கும்பாபிகேம் செய்து வைத்துள்ளார்.

பின்னர் அத்திருவருட்செல்வரே ஸ்ரீ காமாட்சியம்மனுக்கு முன்மண்டபம் அமைத்து சித்தார்த்தி வருடம் ஆனி 17 (1-7-1979) ஞாயிறு அன்று கும்பாபிகேம் செய்து வைத்துள்ளார்கள்.

திரு. சாமி சி. சுப்ரமணிய முதலியார், திரு. தெ. தண்டபாணி முதலியார், திரு. K.M. கந்தசாமி முதலியார், திரு. P.V. கிருஷ்ணராஜ் முதலியார், திரு. கா. சந்தானம் ஆகியோர் அறங்காவலர் பொறுப்பேற்று அவர்களது பெருமுயற்சியால் பிரபவ ஆண்டு ஆனித்திங்கள் 24-ம் நாள் (8-7-1987) புதன்கிழமை அன்று அருள்மிகு முத்து மாரியம்மன் திருக்கோயிலுக்கும், அருள்மிகு கெங்கையம்மன் திருக்கோயிலுக்கும் கும்பாபிகேம் செய்து வைத்துள்ளார்கள்.

ஆனித்திங்கள் 24-ம் நாள் (8-7-1987) புதன்கிழமை அன்று அருள்மிகு முத்து மாரியம்மன் திருக்கோயிலுக்கும், அருள்மிகு கெங்கையம்மன் திருக்கோயிலுக்கும் கும்பாபிகேம் செய்து வைத்துள்ளார்கள்.

பின்னர் திரு. சாமி. சி. சுப்ரமணிய முதலியார் சுக்கில வருடம் வைகாசி மாதம் 25 (7-6-1989) புதனன்று ஆடல்வல்லான் சன்னதிக்கு நேர் எதிரில் சமயக்குரவர்களின் சன்னதியை எழுப்பி கும்பாபிகேமும் செய்து கொடுத்துள்ளார்கள்.

14-9-1990-ல் இத்திருக்கோயில் அறங்காவலர் குழுத்தலைவர் திரு. **K.M. கந்தசாமி** முதலியார் அவர்கள் தம் சொந்தப் பொறுப்பில் "பிரதோநாயகர் செப்புத்திருமேனி செய்து வைத்துள்ளதுடன் தற்காலம் அதற்கான ரிப வாகனத்தையும் இழுப்பதற்கு எளிய வண்ணம் இழுவையும் தயாரித்துக் கொடுத்துள்ளார்.

திரு. மா. பழனிவேல் முதலியார் அவர்களின் பக்திப்பெருக்கினால் ஸ்ரீ சத்ருசம்ஹார மூர்த்தி செப்புச்சிலையும் அதற்கு வெள்ளியிலான கவசங்களும் செய்து கொடுக்கப்பட்டுள்ளன. அதன் கும்பாபிகேம் பிரமோதூத வருடம் தை மாதம் 8 (21-1-1991) திங்களன்று நடைபெற்றுள்ளது.

மீண்டும் திரு. சாமி. சி. சுப்ரமணிய முதலியார் அவர்கள் துந்துபி வருடம் ஆவணி மாதம் 21 (6-9-1992) திங்களன்று ஸ்ரீ நடராஜன் சிவகாமியம்மை மற்றும் மாணிக்கவாசகர் ஆகிய செப்புத்திருமேனிகளைச் செய்து கும்பாபிகேம் செய்ததோடு தெற்கு நுழைவுவாயிலும் அமைத்துள்ளார்.

03.05.1993 குடமுழுக்கு விழா காலத்தில் ஸ்ரீ சந்திரசேகர் + ஸ்ரீ அம்மனுக்கென்றுக் புதியதாக தனி சன்னதியும், கன்னிமூலையில் சிறிய வலஞ்சுழி விநாயகர் சன்னதியும், கைலாசநாதரின் கோஷ்டத்தில் ஸ்ரீ தட்சணாமூர்த்தியையும் முருகனடியார் சாமி சி. சுப்ரமணிய முதலியார் அவர்கள் தம்பொறுப்பில் கட்டியுள்ளார்கள்.

ஸ்ரீ கைலாசநாதரின் வடபுறம் புதியதாக வள்ளி தெய்வயானை உடனுறையும் சண்முகருக்கென்று தனி சன்னதி இத்திருக்கோயிலின் அறங்காவலர் குழு தலைவர் திரு. **க. மு. கந்தசாமி** முதலியார் அவர்களால் கட்டிக் கொடுக்கப்பட்டுள்ளது.

கதிர்வேல் சுவாமி திருக்கோயிலில் உள்ள ஸ்ரீ துர்க்கையம்மன் சன்னதியினை இத்திருக்கோயில் அர்ச்சகர் சிவத்திரு. **வை. சு. பாலசுப்ரமண்ய சிவாச்சாரியார்** தம் பெருமுயற்சியில் கட்டி கும்பாபிகேம் செய்துள்ளார்.

பின்னர் அருள்மிகு கதிர்வேல்சுவாமி திருக்கோயிலுக்கு ஸ்ரீமுக ஆண்டு சித்திரைத்திங்கள் 20ஆம் நாள் (03.05.1993) திங்களன்று திருப்பணிக் கமிட்டி தலைவர் திரு. சாமி. சி. சுப்ரமணியமுதலியார் அறங்காவலர் குழுத் தலைவர் திரு. க.மு. கந்தசாமி முதலியார் மற்றும் திரு. தெ. தண்டபாணி முதலியார் திரு. சோ. வேல்முருகன் முதலியார், திரு. கிருஷ்ணராஜ் முதலியார், திரு கா. சந்தானம் ஆகியோரது பெரும் முயற்சியினால் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி திருக்கோயில் முன்முகப்பில் ஐந்து நிலைகளைக் கொண்ட இராஜகோபுரம், பழுதுற்ற கொடிமரம் அகற்றி புதியமரம் அமைத்து அதில் செப்புக்கவச மிட்ட அழகிய துவஜஸ்தம்பம், கதிர்வேல் சுவாமியின் கருவறை முகப்பில் பித்தளையால் வேயப் பெற்ற விமானம், இருபக்கலிலும் அகத்தியர், அருணகிரிநாதர் விழாத்திருமேனிகள் சிவகாமியன்னை உடனுறையும் ஆடல்வல்லான் செப்புத்திருமேனி அமைந்த திருச்சபை மற்றும் சமயக்குரவர்கள் ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஆகிய உற்சவ மூர்த்திகளும், திருச்சபையின் எதிரில் சமயக்குரவர்களின் சன்னிதியும், வண்ணச்சரபம் ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் சன்னிதி மற்றும் ஆனந்தவல்லி உடனாகிய சந்திர சேகரர் சன்னிதியும், கன்னிமூலை எனப்படும் தென்மேற்கில் அருள்மிகு வலம்புரி விநாயகர், அருள்தரும் தட்சிணாமூர்த்தி, நாகர் மற்றும் வள்ளி தெய்வானை உடனாகிய ண்முகருக்கென்று தனிசன்னிதி, ப்ரதோ நாயகர், அருள்மிகு துர்க்கை சன்னிதி, சத்ரு ஸம்ஹார மூர்த்தி விழாத்திருமேனி, ஆகியவைகள் அமைத்து சிறப்புடன் 03-05-1993-ல் மகாகும்பாபிே-கம் செய்விக்கப்பட்டது. இதன் பின்னர் அருள்மிகு தண்டாயுதபாணி செப்புத் திருமேனி, அருள்மிகு கெஜலட்சுமி சன்னிதி அமைக்கப்பட்டது.

03.02.2006 அன்று ஸ்ரீ கதிர்வேல்சுவாமி தேவஸ்தானத்திற்கு கதிர்காமம் வாழ் இளைஞர் குழுவினர் அதுகாணும் தாம் ஈட்டிய பெருநிதி **சுமார் 1.80 இலட்சத்திற்கான தங்க அணிகலன்களை ( சுமார் 180கிராம் )** அளித்துள்ளனர்.

தற்காலம் மிகப்பெரிய அளவில் **அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன், அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல்சுவாமி திருக்கோயில்களின் வாயில் முன்முகப்பில் முகப்பு மண்டபங்கள் எழுப்பப்பட்டுள்ளன.** மேலும், கதிர்வேல் சுவாமி திருக்கோயில் நுழைவுவாயில் வலப்புறம் இடும்பன் திருக்கோயில் கதிர்காமம் **கோ. முனுசாமி செங்குந்தர்** குடும்பத்தினராலும், சூரியன் திருக்கோயில் கதிர்காமம் **ம. பழனிவேல் செங்குந்தர்** குடும்பத்தினராலும், பைரவர் திருக்கோயில் கதிர்காமம் **தே.தண்டபாணி செங்குந்தர்** குடும்பத்தினராலும், சந்திரன் திருக்கோயில் கதிர்காமம் **அ. சுந்தரலிங்கம் செண்பகவள்ளி செங்குந்தர்** குடும்பத்தினராலும், கைலாஸநாதர் கோஷ்டத்தில் லிங்கோத்பவர், பிரம்மா, சோமசண்டர் ஆகிய புதிய சன்னிதிகளுடன், அருள்மிகு கைலாஸநாதருக்குப் புதிய நந்தியெம்பெருமான் மற்றும் பலிபீடம் **அறங்காவலர் குழு தலைவர் சாமி.சு. முத்தையன் செங்குந்தர்** குடும்பத்தினராலும், அருள்மிகு ஸ்ரீ சண்டிகேஷ்வரர் உற்சவர் செப்புத்திருமேனி கதிர்காமம் **மு. முத்தையன் சுந்தரமூர்த்தி செங்குந்தர்** குடும்பத்தினராலும், துவஜஸ்தம்பம் அடியில் த்வஜ கணபதியும் புதியதாக அமைக்கப்பட்டுள்ளன.

விரிவுபடுத்தப்பட்ட அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி சன்னிதி, திருச்சுற்றுக்களில் தளவரிசையாக "கிரணைட்" என்னும் மெருகூட்டிய கற்கள் பதிக்கப்பட்டுள்ளன. இத்திருக்கோயிலைச் சார்ந்த அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் திருக்கோயில் மிகச் சிறியதாக அமைந்திருந்தது. அதற்காகத் திருக்கோயிலின் பின்புறம் உள்ள இடம் மக்கள் முதல்வர் திரு. **ந. ரங்கசாமியின்** தாயார் **பாஞ்சாலி நடேசன் அம்மாள்** அவர்களிடம் இருந்து தானமாகப் பெறப்பட்டு முற்றிலும் திருப்பணியாற்றி திருக்கோயிலை உயர்த்தி, கருவறை அமைத்து மிகச் சிறப்பாகக் காண்பவர் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் செப்பனிடப்பட்டுள்ளது.

| ஆக்கியோன் | **ஸ்ரீ கதிர்வேல்சுவாமி தேவஸ்தானம்** |
|---|---|
| **சபா. ஞானசம்பந்த சிவாச்சாரியார்** | கதிர்காமம். |



உ

ஸ்ரீ முருகன் துணை

புதுவை கதிர்காமம் ஸ்ரீ கதிர்வேல் சுவாமி

# தோத்திரப்பாக்களும் ஸ்தல புராணமும்

**ஸ்ரீ முத்துமாரியம்மன் திருக்கோயில்வரலாறும் அடங்கியது**

வெளியிடுவோர் : சுவாமி ஸ்ரீ முத்துமாரியம்மன் திருப்பணிக் குழுவினர் 1970

---

**இந்நூல் ஸ்ரீ கதிர்வேல் சுவாமி ஸ்ரீ முத்துமாரியம்மன் கோயில் குடமுழுக்கு விழா (10-07-70) இல் நடைபெற்றபோது வெளியிடப்பெற்றது.**

சீரும் சிறப்பும் பெற்றுத் திகழும் புதுவையம்பதியின் குடபால் எந்தை குமரன்றன் அடிமறவாச் செங்குந்தர் வாழ் எழில் மிகு கதிர்காமத்தில் வேண்டுவோர் வேண்டுவன ஈயும் ஸ்ரீ கதிர்வேல்சுவாமி தோத்திரப்பாக்கள் மூன்றாம் பதிப்பாக வெளியிடுதல் கண்டு பெருமகிழ் வடைகிறேன்

கதிர்காமம் ஸ்ரீ கதிர்வேல்சுவாமி ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆலயக்குடமுழுக்கு விழா நடைபெறும் இன்று (10-07-70) ஆயிரக்கணக்கான மக்கள் இறைவன்பால் திளைத்துக் கண்ணீர்மல்கிக் கசிந்துருகுங் காட்சியை எஞ்ஞான்றும் மறக்க வியலாது.

நிற்க, இந்நூலின்கண் திருவாமாத்தூர் கௌமார மடாலயம் மகான் வண்ணச் சரபம் திருப்புகழ்ச் சுவாமிகள் என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் இயற்றிய தோத்திரப்பாக்களும் அவர் தம் பேரர் தி.தெ. முருகதாச சுவாமிகள் இயற்றிய சந்தக்கவிகளும் புதிதாகச் சேர்க்கப்பட்டுள்ள ஸ்தல வரலாறும் அடங்கியிருக்கின்றன.

கதிர்காம ஸ்தலவரலாற்றை மிக எழுதி அமைத்த ஆலயத்தின் அறங்காவலர் குழுவினர்க்கும் குடமுழுக்கு விழாக் குழுவினர்க்கும் எந்தை முருகன் அருள்பாலிப்பானாக.

09-10-70

புதுவை.

**மு.த. வேலாயுதம்**

தமிழணங்கு, கதிர்காமம்.



உ
குருவே துணை

# முகவுரை
## (இரண்டாம் பதிப்பில் எழுதப் பெற்றது)

கதிர்காமம் முருகக் கடவுள் தோத்திர திரட்டு என்னும் இப்புத்தகத்தில் இரண்டு பதிகங்கள் மூன்று சந்தக் கவிகள் உள்ளன.

முதலாகவுள்ள இரண்டு பதிகங்களும் (திருவாமாத்தூர் கௌமார மடலாயம் மஹான் வண்ணச் சரபம் திருப்புகழ் சுவாமிகள் என வழங்கும்.) ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் இயற்றியது.

சுமார் 50 ஆண்டுகளுக்குமுன் கதிர்காமம் ஸ்ரீ கதிர்வேற் பெருமானுக்கு கும்பாபிடே-கம் நடந்தகாலத்தில் க்ஷயூர் செங்குந்தப் பெரியார்களிற் சிலர், சுவாமிகளிடம் நேரில் சென்று பதிகம் பாடியும் அரங்கேற்றியும் அருளுமாறு வேண்டினர்.

அக்கால சுவாமிகள் திருவாமாத்தூர் எல்லை தாண்டா நியமத்துடன் தவம்புரிந்த சமயமானதால் பதிகம் பாடி அரங்கேற்ற இயலாதெனத் தெரிவித்தனர்.

சிந்தைக்கினியவாய் எந்தை குமரேசன் இணையடிச் சீர்பாடுவது என்று கருதி அம்முயற்சியிலீடுபட்டவர்கள் தமதெண்ணம் முடிவடையாததால் ஸ்ரீ கதிர்வேல் சுவாமியிடம் வந்து மிகவருந்திக் குறையிரந்தனரென்றும் அதன் பிறகு செந்தமிழால் வைதாரையும் நன்கு வாழவைக்கும் ஸ்ரீ முருகப்பெருமான் ஸ்ரீ தண்டாணி சுவாமிகளது யோகில் தோன்றிப் பதிகம் பாடும்படிக் கட்டளை யிட்டருளினரென்றும் பிறகே ஸ்ரீ சுவாமிகள் இதிலுள்ள இரண்டு பதிகங்களையும் பாடியுதவி தக்கார் மூலமாக அரங்கேற்றஞ் செய்தருளினார்கள் என்பதும் கர்ண பரம்பரை வழக்கு. இக் கருத்தை முதலாவதாகவுள்ள பதிகத்தின் காப்புச் செய்யுளில்.

கதிர்காமத் தூரில்வளர் கந்தா நின் உள்ளத்
ததிசூதை நன்றாய் அறிந்தேன் - மதிசூடி
ஆமாத்தூ ரிற்குலவி அண்டாமுத லோர்வியப்ப
ஏமாற்றிப் பாடல்கொண்டா யே

என வருவதனாலும் பிறவாற்றானும் நன்கறியலாம்.

பின்புள்ள சந்தக் கவிகள் மூன்றும் க்ஷ வாமிகள் குமாரர் ஸ்ரீ தி.மு.செந்தினாயக சுவாமிகளின் குமாரரும் மாணவருமான தி.செ.முருகாதசப்பிள்ளை பாடியவை.

உ

வேலுமயிலுந் துணை

# கொச்சகக் கலிப்பாக்கள்

## புதுவை கதிர்காமம் கதிர்வேல் சுவாமி தோத்திரப் பாக்கள்

**கணபதி துதி**

ஆரணம் பன்முகத் தால நாதியே
காரண னேயெனக் கழறி யேத்திடும்
பூரண மாஞ்சிவன் புதல்வ னாகிய
வாரணா நந்தனை வணங்கி வாழ்த்துவாம்.

### வெண்பா

கதிர்காமத் தூரில் வளர் கந்தா நின்னுள்ளத்
ததிசூதை நன்றா யறிந்தேன் – மதிசூடி
ஆமாத்து ரிற்குலவி அண்டர்முத லோரறிய
ஏமாற்றிப் பாடல்கொண்டா யே.

ஆரணத் தோடாகமும் அறைந்தபொது நிலைத்தேர்ந்தும்
பாரணங்குக் குதவிசெய்யும் பராக்கிரமம் பெற்றிலனே
நாரணன்றன் மருகோனே நானறிய வந்துமுக்கால்
காரணமென் றுரைத்திட்டாய் கதிர்காம முருகோனே – 1

அஞ்சலிரு சரத்தாலும் அளித்தது நீ யாமாகில்
நஞ்சனைய பொருள்வேட்டு நலங்குலைய விடலாமோ?
குஞ்சரிதன் மணவாளா குறமடந்தைக் கினியோனே
கஞ்சனைவன் சிறையிட்டாய் கதிர்காம முருகோனே – 2

மானமணு வளவுமிலா மனிதருட னுறவாடி
ஈனமுற்றவா றனைத்தும் என்றொழியப் பெறுவேனோ
தேனவிழும் நீபமொடு செச்சையும் பூத்தவிர் மார்பா
கானவரும் பெரிதேத்துங் கதிர்காம முருகோனே. – 3.

தண்மிழ்ப்பா மிகப்பாடுந் தமியேற்கும் விரும்பியசீர்
கொண்டளிசூழ்ந் திடும்பேறு கொடுத்தருளக் கூடாதோ?
மண்டலமும் விண்டலமும் மதித்தபெருஞ் சித்திநலம்
கண்டவருக் கெளியோனே கதிர்காம முருகோனே – 4.

அக்கினியிற் றண்ணீரில் அடியனேன் விடுத்தகவி
முக்கியமென் றுலகறிய முன்வருநாள் எந்நாளோ
செக்கினடிக் காவலுங்கொள் சிந்துரத்துக் கிளையோனே
கைக்கிளியொன் றணிந்துள்ளாய் கதிர்காம முருகோனே – 5.

மண்டலத்தில் இறந்தோரை வருவித்துங் காட்ட வல்லார்
அண்டரினும் பெரியோரென் றறிந்தும்மதி மருள்வேனோ
புண்டரிகப் பிரமாவைப் புடைத்தபெரும் புகழ்ச்சீலம்
கண்டனைத்தா மென்பவர் வாழ் கதிர்காம முருகோனே – 6

செங்கண் ணெடுமாலனைய திருவாழ்வு தருவேனென் (று)
அங்கணிலத் துதித்ததற்பின் அறைந்த தனை மறந்தாயோ
வங்கண மானிடர் பாலும் வலிதியற்று மாட்சிமைதோய்
கங்கணங் கட்டிய சிறுவா கதிர்காம முருகோனே – 7

பாட்டால் முன்சமணர் களைப் பருங்கழுவிட்டான் பெருமை
வேட்டாருள் ஒருவனென விளங்குவதும் வீணாமோ
மோட்டானை யொன்றழைத்து முருடமகள் முயக்குற்றாய்
காட்டரையன் வியந்தோதுங் கதிர்காம முருகோனே –8.

சூரனைக்கொன் றானெனுஞ்சொற் றுணையாகு நலந்தேறிக்
கீரனைக்காத் திட்டவிதங் கிளத்துமெனை வெறுப்பாயோ
ஊரனைத்து மிரந்துணற்கோர் ஒடுகொண்டாருயிர்போலுங்
காரனைதன் மடிப்பாலா கதிர்காம முருகோனே –9.

பூவதியும் பிரமாவும் புணரியி றுயில்மாலும்
சேவரைகே தனத்தானும் சேர்ந்த அருட்சீரருள்வாய்
தேவரெல்லம் அறமகளிர் சேனையொடு தினந்தோறும்
காவகத்தில் விளையாடுங் கதிர்காம முருகோனே – 10.

குரவரென உருக்கொண்ட கோலமெல்லாம் நீயென்னப்
பரவுமெனக் கருளாயேல் பலமதமும் பாழன்றோ
அரவின்மேல் நடமாடும் அணிகலப மயில்ஊர்வாய்
கரவிலார் தொழும்பாதா கதிர்காம முருகோனே –11.

எங்குந்தன் புகழ்காட்டும் எழில்நடுநாட் டிடைவாழும்
செங்குந்தர் கதிர்காமத் திருப்பதியின் முருகோனைப்
பொங்குந்தண் பம்பைநதி பொலிமாதைத் திருப்புகழோன்
அங்கும்பர் வியப்புறச் சொல் ஆறிருபாட்டருள்வசமே –12.

முருகக் கடவுள் துணை வேலுமயிலுந் துணை.
**கதிர்காமம்**

# முருகக்கடவுள்
# மகுட ஆசிரியப் பதிகம்

காப்பு

கண்கண்ட தெய்வம் கதிர்காம வேலனென

வண்கண்ட மாநிலத்து மானிடரும் – தண்கண்ட

வானவரும் போற்றுவதென் மட்டினுமெய் யாகாதோ

ஈனமில்வெண் டாமரையா ளே.

**ஆசிரிய விருத்தம்**

திருமருவு பங்கய மலர்ந்தனைய பேரழகு
திகழ்வரிசை வதனம் ஆறும்
செங்கதிர்க் குலமனைய குழைகிடந் தசை கின்ற
செவிகள் ஈராறும், உண்மைக்
குருமரபு புகழ்குமுத மலர்வாய்கள் ஆறும், மலர்
குமிழனைய நாசி ஆறும்,
குளிர்கருணை விழிகள் ஈராறுமன லென்றிலகு
கோலவிழி ஆறும்நீப
மருமலர்த் தோள்களீ ராறும்அறி வாரறிய
வைத்தபடையீராறும் நான்
மறையும்எழு நாலாக மங்களும் பரவமலை
வகையுணரும் இருதாள்களும்,
கருமயிற் றோகை நிழ லிற்குலவ வந்தருள்செய்
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அனுகூல
கதிர்காம வடிவேலனே. (1)

மழலையங் கனிவாயில் அன்னை தரு பாலமுதின்
மணமலிந் துற்றவெண்பல்
மாறிமறு பல்முளைத் திடுமுன்ன மேயென்னை
வலியவந் தாண்டுகொண்டு

பழமைபெறு புலமையுடை யார்களும் புகழ்சுவைப்
பைந்தமிழ்ச் சொற்பொருந்தப்
பலவகைப் பாடலும் பாடியுன தம்பொற்
பதத்தணியும் வாழ்வளித்து
விழவணி மலிந்திலகு திருமலைக் குவடதனில்
விளையாட லொன்றியற்றி
வேதாக மங்களும் விரித்துரைத் தற்கரிய
மெய்ப்பொருட் பயனனந்தம்

கழறியது பொய்யாத வண்ணமென் றருள்வையோ
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே. (2)

பொய்யே அளப்பரிய கனவில்வந் தென்னிடம்
புகல்கின்ற கொடுமையினிலும்
பூருவப் பிறவியீ தெனவுணர்த் தியுமனம்
புலரவரு மிடிநோயினும்

பையேறும் அல்குல்மட வாராதி யேடணைப்
பந்தப் பிணக்கத்தினும்
பாவமய மானசம த்தொடக் கினர் உவகை
பார்த்து மெலி வுறுதீதினும்

மெய்யேது முணராது பொருளுழைத் தெந்நாளும்
வீணாள் படத்திரிந்து
மேவினைக் கீழெனக் கீழதனை மேலென்ன
விளம்புமவர் மேவுமனைமுன்

கையேற்று நிற்பது பெருந்துயர மல்லவவோ
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே. (3)

செங்கைவர தமும்அபய மாகிடத் தந்ததொரு
சேவைபெற் றுக்களித்தும்

திருவருணை நகரிலுள சிகரிவட வருகினும்
செப்பரிய சொற்பகர்ந்து
தங்கை முதலாயவரு மெச்சிடத் தக்கமுத்
தமிழ்நலந் தரவுவந்தும்
சரணாயு தக்கொடிய தேசெயம் செயமெனச்
சத்தமிடும் ஆண்மையுற்றும்

கொங்கைநலம் இலகவரும் மங்கையர் மயற்கோட்டி
கொண்தடு மாறியுலகக்
கோரணிக் காளாகி மெத்தவு மெலிந்தறிவு
குன்றவிடல் நன்று கொல்லோ!

கங்கைதரு மைந்தனென வத்தகும ரேசனே
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே. (4)

தருணமிதெ னப்பெரிது முறையிடும் கீரனது
சஞ்சல மொழிக் கவிலையோ
தமறியம யூரம்நிகர் சாயலுடை யாள்கரம்
தறிபடுமுன் உதவவிலையோ

அருணகிரி நாதன் அன் றொருதூணில் வாவென் (று)
அழைத்தவுடன் வரவில்லையோ
அம்பொற்ப தக்கம்ஒரு பாவலன் பெறநல்கி
அரியதமிழ் வினவவிலையோ

பொருள்விழையும் ஒருபுலவன் வாழமலை நாடுடைப்
புரவலனை யாளவிலையோ
புகலரிய விளையாடல் இன்னமும் பலகோடி
புரியவிலையோ என்றன்மேற்

கருணையொரு சிறிதுசெய வொண்ணாது கொல்லோசொல்
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே. (5)

பற்பல விதத்தினும் நினைத்துணர்ந் தாலும் நின்
பாதார விந்தமன்றிப்
படியிலொரு தாரகம் எனக்குள்ள தோஇது
பகர்ந்திடலும் எனதுசெயலோ

நற்பனுவல் ஆயிரத் தால்வழுத் தியும்எனது
நல்குர வொழித்திலாயே
நானொன்று கருதில்உடன் நீயொன்று புரிகுவது
நடுவெனச் சொல்லலாமோ

சொற்பனமும் நின்னருட் கயலன் றெனக்கொண்டு
துன்புறுவ தறிகிலாயோ
சொன்னசொல் அத்தனையுள் ஒன்றேனும் நல்கிநின்
தொண்டரிற் கூட்டியருள் வாய்

கற்பகநி ழற்கடவுள் மகளொடு பொருந்திமகிழ்
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே. . (6)

ஆவிக்கு மோசம்வரும் நாளொன்றும் உளதென்று
அறிவினால் அறியுமுனிவோர்
அடிமலர்க் கடிமைத் தொழிற்புரிந் தவரோடும்
அசலங்கள் தோறும் உன்னைச்

சேவிக்கும் வாழ்வெய்தி ஆறெழுத் தோதித்
திருப்புகழ் மிகப்பொழிந்து
சேவலங் கோடிவாழி என ஆரவாரம்
செயும்தீர வீரர்குழுவில்

மேவிக்க ளித்திந்தி ராதியரும் நாடோறும்
மெச்சிடக் குலவும் நலமே
விழையுமெனை இவ்வண்ணம்ஊர்தொறும்பொருள்தேடி
மெலிவுறவும் விடலாகுமோ?

காவிக்க டம்பமலர் மாலையணி மார்பனே
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே. (7)

பலமலையும் வழிபடும் இமாசலத் தருகில்ஒரு
பதுமாச னப்பொகுட்டில்
பைங்குதலை மென்மொழிக் குழவியென அழுதுவளர்
பார்ப்பதி யளித்தபாலுண் (டு)

அலகில்அம ணத்திரளும் நலிவுறத் தமிழ்பாடி
அளவுறா உவகை பூத்த
அண்ணல்அனை யானொருவன் இன்னமும் வரற்
அலமரும் தமியனேனைத்

திலகமதி வாணுதற் சிறுமியர் குழா த்தினிடை
திகழ்வரும் புச்சிலைக்கைச்
சித்தசன் எனச்சொல்லு மாபாவி மலர்கொண்டு
செய்கின்ற தானதீராக்
கலகமுறு களமதில் விடுத்திடுதல் நீதியோ
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே. (8)

அரியமா தவமுனிவர் அனைவரும் பரவுபரன்
அன்றுகரு தியவண்ணமே
அவனழற் கண்ணிடை யுதித்திந்தி ராதியர்க் (கு)
ஆகமெய் யருள் பழுத்துப்

பெரியமா மரவுருவம் ஆம்சூர னாகியபல்
பிசிதர்களை வென்றாயெனப்
பேசியவ ருக்கும்அள வறுகோடி தொண்டர்தம்
பிரியமிகு நெஞ்சகத்தில்

உரியவடி வத்தனையும் உடையா யெனத்ததுணிந் (து)
ஓதுநர் தமக்கும் நடுநின் (று)
ஓராறெ முத்தையு மிகச் சொலு மெனக்கும்உன (து)
உண்மையருள் ஒளிர்வதென்றோ

கரியநிற மயிலெனப் பரண்மிசை யிருந்தொரு
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே. (9)

மலியுமண முறுகமல மலரில்வரும் நான்முகன்
வருத்தமெய் திடஇடித்து
மலையிடை யடைத்துச் சராசரம் அனைத்தையும்
வகுத்ததினும் மாயன்ஆழி

வலிமைபெறு தாருகன் களமதிற் பணியென்ன
மன்னியதை மீட்டவன்கை
வதிதரச் செய்ததினும் வேதாக மம்பகர
மாட்டாத மோன நிலையைப்

புலியுரித் தோலணியும் நம்பனொடு மேனாள்
புகன்றதினும், எனதுமிடிநோய்ப்
பொல்லாங் கொழிப்பதரி தென்னவோ ஊர்தோறும்
போயிரந் துழலவிட்டாய்

கலியுகத் தினும் அடியர் கண்கண்ட தெய்வமே
கானக்கு றத்திகணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவேலனே (10)

பொற்சிலை பிடித்துப் புவித்தேர் கடாவிய
புராந்தகன் றன்னிடத்தும்
புணரியைப் பருகிவிட் டரியதமிழ் வளம்நிலவு
பொதியமால் வரைமுகட்டில்

சொற்சிறப் பாதிய விரித்துக் குலாவுமொரு
தூயமுனி வோனிடத்தும்
சொன்ன மெய்ப் பொருளினைக் கிள்ளையொடும் ஒது மெய்த்
துணிவுன் னுளத்தில் உளதால்

எற்சிறுவ னென்றிகழ் வொண்ணாது முக்காலும்
யானும் உன் னடிமைகண்டாய்
எந்தவித மானாலும் என்னோடும் அதைச் சொல்லி
யீடேற்றி யருளவேண்டும்

கற்சிகரி தொறும் ஆடல் பயிலுமெய்க் குருபரா
கானக்கு றத்தி கணவா
கயிலாச பதிபால கவுமாரர் அநுகூல
கதிர்காம வடிவலேனே (11)

முற்றிற்று.

உ

முருகக் கடவுள் துணை

புதுவை கதிர்காமம் ஸ்ரீ கதிர்வேல் சுவாமி ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆலயங்களுக்கு 10-07-70ல் நடைபெற்ற குடமுழுக்கு விழாவில் போது வெளியிடப்பட்ட விழா மலர்.

# கதிர்காமம் ஸ்ரீ கதிர்வேல் சுவாமி ஸ்தல வரலாறு

தன்னை அடைந்தார்க்கு இன்பங்கள் தருவானாகிய இறைவன் அன்பர்களுக்கு அருள்பாவிக்கும் பொருட்டு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி என்னும் திருப்பெயருடன் திருமேனி தாங்கி எழுந்தருளியிருக்கும் திருத்தலம் கதிர்காமம் என்பதாகும். இது புதுவைக்கு மேற்கே வழுதாவூர் வீதியில் சுமார் இரண்டரைக் கல் தொலைவில் அமைந்துள்ளது.

ஊரின் மேற்புறத்தின் நடுநாயகமாக ஸ்ரீ கதிர்வேல் சுவாமி ஆலயம் கிழக்கு நோக்கி அழகுற அமைந்துள்ளது. ஆலயத்தின் மையத்தில் ஸ்ரீ கதிர்வேலன் சந்நிதியும்அதற்குத் தென்புறம் வரசித்தி விநாயகர் சுந்நிதியும் மேலண்டைச் சுற்றுப் பிரகாரத்தில் ஸ்ரீ கைலாசநாதர் ஸ்ரீ காமாட்சி அம்மன் சந்நிதியும் வடபுறத்தில் ஸ்ரீசண்டிகேஸ்வரர் பழனி ஆண்டவர் சந்நிதிகளும் வடபுறம் சுற்றுப்பிரகாரத்தில் பிரம்மோற்சவ பிரதான யாகசாலை நவக்கிரக சந்நிதி உற்சவமூர்த்திகள் அலங்காரமண்டபம் ஆகியவை அமைந்துள்ளன. அலங்கார மண்டபத்தில் ஸ்ரீ வரசித்திவிநாயகப் பெருமாள் ஸ்ரீ வள்ளி தேவசேனா சமேத ஸ்ரீ கதிர்வேல் சுவாமி, ஸ்ரீமுத்து மாரியம்மன், ஸ்ரீவீரபாகு ஆகிய உத்ஸவ மூர்த்திகள் உள்ளன.

இவ்வாலயம் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் உள்ளூர் செங்குந்த மரபினர்களின் பெருமுயற்சியினால் அமைக்கப்பட்டதாகும். இதற்காகப் பாடுபட்டவர்களில் திரு. நல்லதம்பி முதலியார் குறிப்பிடத்தக்கவர். ஆதியில் கதிர்வேல் சுவாமி சந்நிதியும் விநாயகர் சந்நிதியும் மட்டுமே அமையப் பெற்றிருந்தன. பின்னர் சொ. மாணிக்க முதலியார் பெருமுயற்சியினாலும் ஊர் மக்கள் பொருளுதவியாலும் இரு சந்நிதிகளுக்கும் எதிரே கல் தளத்தினால் மண்டபம் அமைக்கப்பட்டு 1895-ஆம் ஆண்டு கும்பாபிகேம் செய்து வைக்கப்பட்டது.

மு. அருணாசல முதலியார் வெ. நடேச முதலியார், வ.முருகப்ப முதலியார், அ. சின்னசாமி முதலியார், மா. பஞ்சாட்சரமுதலியார் ஆகிய ஐவரும் ஆலய நிர்வாகப் பொறுப்பேற்றனர். இவர்கள் தம் பெருமுயற்சியினால் சந்நிதிக்கு வடபுறம் கருங்கல் மண்டபமும் உத்ஸவமூர்த்திகள் அலங்கார மண்டபமும் புதிதாக அமைக்கப்பட்டன. 1985-ஆம் ஆண்டு மகா கும்பாபிகேம் செய்விக்கப் பட்டது.

வே.சுப்புரத்தின முதலியார், கு.சிங்கார முதலியார், கு. வரதராசு முதலியார், அ.முனிசாமி முதலியார் பா.சிங்கார முதலியார் ஆகியோர் ஆலய நிர்வாகப்

பொறுப்பேற்றனர். இவர்கள் காலத்தில் ஸ்ரீ கதிர்வேல் சுவாமிக்கு 1945-ஆம் ஆண்டு இலக்ஷார்ச்சனை நடத்தி அதன் பூர்த்தியாக 1008 சங்காபிகேமும் நடத்தி வைத்தனர். ஆண்டு தோறும் மாசி மாதத்தில் சூரசம்மார உற்சவத்தைச் சீரும் சிறப்பு மாக நடத்தி வந்தனர்.

பின்னர் மா.பஞ்சாட்சர முதலியார், ர.நடராஜ முதலியார், வை.மு. ண்முக வேலாயுத முதலியார், கோ. நாராயணசாமி முதலியார், சு.முருசேகச முதலியார் ஆகியோரிடம் நிர்வாகம் ஒப்படைக்கப்பட்டது. மேற்படி குழுவில் இருந்து வந்த வை.மு.ண்முக வேலாயுத முதலியார் காலமானதாலும் கோ.நாராயணசாமி முதலியார் ராஜினாமா செய்து விட்டதினாலும் அவர்கட்குப் பதிலாக வ.கலியாணசுந்தர முதலியாரும் வே.ரங்கசாமி முதலியாரும் நிர்வாகக்குழுவில் நியமிக்கப்பட்டனர்.

மேற்படி நிர்வாகக்குழுத் தலைவர் மா.பஞ்சாட்சர முதலியார் ராஜினாமா செய்து விட்டபடியால் 1969-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 26-ம் தேதியன்று நிர்வாகிகளான திரு. வை.மு. பாலசுப்புரமணி முதலியார் க.மு. நடராஜ முதலியார், ந.சொக்கலிங்க முதலியார், அ.மு. பழனிசாமி முதலியார், மு.ர. சோமசுந்தர முதலியார் ஆகியோர் ஆலயத்தின் நிர்வாகப் பொறுப்பேற்றுள்ளனர். இவர்களின் இடையறா உழைப்பினாலும் பெருமுயற்சியினாலும் ஸ்ரீ கதிர்வேல்சுவாமி ஆலயத்திற்கும், ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆலயத்திற்கும் ஜீர்ணோத்தாரணம் செய்யப்பட்டு நிகழும் சாதாரண ஆண்டு ஆனித்திங்கள் 26-ஆம் நன்னாள் (10-07-70) வெள்ளிக்கிழமை காலை 5-மணிக்கு மகாகும்பாபிகேம் செய்யப்பட்டது. இதற்கென அமைக்கப்பட்ட திருப்பணிக் குழுவில் கிழ்க்கண்ட 12 பேர்களும் பங்குகொண்டு கும்பாபிகேம் மிகச் சிறப்பாக நடைபெறப் பேருதவி புரிந்தனர்.

1. திரு. மா. பஞ்சாட்சர முதலியார்
2. திரு. ர. நடராஜ முதலியார்
3. திரு. வ. கலியாணசுந்தர முதலியார்
4. திரு. சு. முருகேச முதலியார்
5. திரு. சா. சி. சுப்ரமணிய முதலியார்
6. திரு. ம. தணிகாசல முதலியார்
7. திரு. மா. கிருஷ்ணசாமி கவுண்டர்
8. திரு. சி. அண்ணாமலை முதலியார்
9. திரு. கோ. வடிவேல் முதலியார்
10. திரு. ர. வைத்தியலிங்க முதலியார்
11. திரு. வை. கிருஷ்ணராசு முதலியார்
12. திரு. பா. ராமச்சந்திர முதலியார்

சமீபத்தில் நடைபெற்ற திருப்பணிகளில் குறிப்பிடத் தகுந்தது சாமி சி.சுப்புரமணி முதலியார் தர்மகைங்கரியமாக அமைக்கப்பட்ட ஸ்ரீ கைலாச காமாட்சியம்மன் சந்நிதி ஆகும். மேற்படி சந்நிதி சுமார் ரூ. 3000 செலவில் புதிதாக இப்போது அமைக்கப்பட்டது. மற்ற திருப்பணிகளும், கும்பாபிகேமும் பலஊர் பக்த கோடிகளிடம் சென்று வசூலித்த நிதியிலிருந்து செய்யப்பட்டன.

திருப்பணிக்கெனச்சுமார் 15000 ரூபாயும் கும்பாபிகேத்திற்காக 20000 ரூபாயும் செலவிடப்பட்டன. ஸ்ரீ முத்துமாரியம்மன் கோவிலில் முன் வாயிற்புற மண்டபமும் புதிதாக அமைக்கப் பெற்றன. ராஜோபசார அம்மன் விமானமும் கருவறையில் நிலையம்மனும் அமைக்கப் பெற்றன. சந்நிதி விமானங்கள் அனைத்தும் பழுதுபார்க்கப்பட்டு சிதம்பரம் கோவிந்தராஜ முதலியார் கைத்திறனால் வர்ணம் தீட்டப்பட்டன.

ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆலயம் 1894-ஆம் ஆண்டு கட்டப்பட்டது. இங்குக் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ முத்து மாரியம்மன் மிகச் சக்தி வாய்ந்த அம்மனாக விளங்கித் தன்னை வழிபடும் பக்தர்களின் துயர்துடைத்து வருகிறார். ஆண்டு தோறும் தை மாதம் நான்காம் வெள்ளிக்கிழமை யன்று பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் இங்குச் செடல் குத்திக் கொண்டு பிரார்த்தனை செலுத்துவது ஒன்றே இதற்குச் சான்று. ஒவ்வொரு ஆண்டும் பக்தர்கள் கூட்டம் பெருகிக் கொண்டே வருகிறது. புதுவை வட்டாரத்தில் நடைபெறும் திருவிழாக்களில் இங்கு நடைபெறும் செடல் உற்சவம் மிகவும் பிரசித்திப்பெற்றது. பிரதி வெள்ளிக்கிழமையும் ஏராளமான பக்தர்கள் இங்கு வந்து அம்மனை வழிபட்டுச் செல்கின்றனர்.



அருள்மிகு கதிர்வேல் சுவாமி ஆலயம்
அருள்மிகு முத்துமாரியம்மன் ஆலயம்
அருள்மிகு கெங்கையம்மன் ஆலயம்

# ஆலயப்பணி சிறக்க அரும்பணியாற்றிய அறங்காவலர் பெருமக்கள்

**1979 - முதல் 1982**

தனியதிகாரி.

சு.. சிதம்பரம் செங்குந்தர்.

**1982 முதல் 1986 திருவாளர்கள் :**

| | | |
|---|---|---|
| தலைவர் | : | **சாமி. சி. சுப்ரமணிய செங்குந்தர்** |
| உபதலைவர் | : | **அ.மு. பழநிசாமி செங்குந்தர்** |
| செயலாளர் | : | **அப்பர்சாமி செங்குந்தர்** |
| பொருளாளர் | : | **ந. சொக்கலிங்கம் செங்குந்தர்** |
| உறுப்பினர் | : | **க. சந்தானம்** |

தனியதிகாரி (1986)

**சு. சிதம்பரம் செங்குந்தர்.**

**1987 முதல் 1992**

| | | |
|---|---|---|
| தலைவர் | : | **சாமி. சி. சுப்ரமணிய செங்குந்தர்** |
| உபதலைவர் | : | **தெ. தண்டபாணி செங்குந்தர்** |
| செயலாளர் | : | **P.V. கிருஷ்ணராஜ் செங்குந்தர்** |
| பொருளாளர் | : | **சோ. வேல்முருகன் செங்குந்தர்** |
| உறுப்பினர் | : | **க. சந்தானம்** |

**1992 முதல் 1994 வரை**

| | | |
|---|---|---|
| தலைவர் | : | **கந்தசாமி செங்குந்தர்** |
| உபதலைவர் | : | **தெ. தண்டபாணி செங்குந்தர்** |
| செயலாளர் | : | **கிருஷ்ணராஜ் செங்குந்தர்** |
| பொருளாளர் | : | **சோ. வேல்முருகன் செங்குந்தர்** |
| உறுப்பினர் | : | **க. சந்தானம்** |

**1994 முதல் 1995 வரை**

தலைவர் : சாமி. சி. சுப்புரமணிய செங்குந்தர்

உபதலைவர் : வ.விநாயகம் செங்குந்தர்

செயலாளர் : ஆ. பாஸ்கரன் (எ) பன்னீர்செல்வம் செங்குந்தர்

பொருளாளர் : வ. முத்தையன் செங்குந்தர்

உறுப்பினர் : க. சந்தானம்

**1995 முதல் 1998 வரை**

**திருவாளர்கள்**

தலைவர் : சாமி சி. சுப்ரமணிய செங்குந்தர்

உபதலைவர் : வ. விநாயகம் செங்குந்தர்

செயலாளர் : ஆ. பாஸ்கரன் (எ) பன்னீர்செல்வம் செங்குந்தர்

பொருளாளர் : வெ. பழனி செங்குந்தர்

உறுப்பினர் : க. சந்தானம்

**1998 முதல் 1999 வரை**

**திருவாளர்கள்**

தலைவர் : வ. விநாயகம் செங்குந்தர்

உபதலைவர் : ஆ. பாஸ்கரன் (எ) பன்னீர்செல்வம் செங்குந்தர்

செயலாளர் : சி. கமலசேகரன் செங்குந்தர்

பொருளாளர் : சி. சுகுமார் செங்குந்தர்

உறுப்பினர் : க. சந்தானம்

**1999 முதல் 2002**

**திருவாளர்கள்**

தலைவர் : வ. விநாயகம் செங்குந்தர்

உபதலைவர் : ஆ. பாஸ்கரன் (எ) பன்னீர்செல்வம் செங்குந்தர்

செயலாளர் : சாமி. சி.சு. முத்தையன் செங்குந்தர்

பொருளாளர் : சி. சுகுமார் செங்குந்தர்

உறுப்பினர் : க. சந்தானம்

**2002 முதல் 2004**

**திருவாளர்கள்**

| | | |
|---|---|---|
| தலைவர் | : | **வ. விநாயகம் செங்குந்தர்** |
| உபதலைவர் | : | **ஆ. பாஸ்கரன் (எ) பன்னீர்செல்வம் செங்குந்தர்** |
| செயலாளர் | : | **சாமி. சு. முத்தையன் செங்குந்தர்** |
| பொருளாளர் | : | **ம. வைத்தியநாதன் செங்குந்தர்** |
| உறுப்பினர் | : | **க.சந்தானம்** |

**2004**

**திருவாளர்கள்**

| | | |
|---|---|---|
| தலைவர் | : | **வ. விநாயகம் செங்குந்தர்** |
| உபதலைவர் | : | **ஆ. பாஸ்கரன் (எ) பன்னீர்செல்வம் செங்குந்தர்** |
| செயலாளர் | : | **சாமி. சு. முத்தையன் செங்குந்தர்** |
| பொருளாளர் | : | **சி. சுகுமார் செங்குந்தர்** |
| உறுப்பினர் | : | **க.சந்தானம்** |

**2005 முதல் 2009**

**திருவாளர்கள்**

| | | |
|---|---|---|
| தலைவர் | : | **வ. விநாயகம் செங்குந்தர்** |
| உபதலைவர் | : | **ஆ. பாஸ்கரன் (எ) பன்னீர்செல்வம் செங்குந்தர்** |
| செயலாளர் | : | **சாமி. சு. முத்தையன் செங்குந்தர்** |
| பொருளாளர் | : | **சி. சுகுமார் செங்குந்தர்** |
| உறுப்பினர் | : | **க.சந்தானம்** |



## 2009 முதல் திருவாளர்கள்





தலைவர் :

**சாமி. சு. முத்தையன் செங்குந்தர்**



உபதலைவர் :

**ஆ. பாஸ்கரன் (எ) பன்னீர்செல்வம் செங்குந்தர்**



செயலாளர் :

**ப. மாமல்லன் செங்குந்தர்**



பொருளாளர் :

**சி. சுகுமார் செங்குந்தர்**



உறுப்பினர் :

**ச. முருகையன்**






**ந. ரங்கசாமி**
முன்னாள் முதலமைச்சர்
புதுச்சேரி.
தேதி : 24.05.2010

# வாழ்த்துரை

'உள்ளம் பெருங்கோயில்
ஊனுடம்பே ஆலயம்'

என்று திருமூலர் காட்டிய செவ்விய நிலையடைதலின் முதல் நிலையாக, அகத்தில் கண்டதைப்புறத்தில் காட்டி, வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி, எங்குமாகி நிற்கும் இறையை, எல்லோரும் வணங்குதற்கும், வாழ்வதற்கும் வழிகாட்டும் வகையில் – கோயில் எழுப்பி குடமுழுக்கும் செய்வித்த நம் முன்னோர்களின் திருவருள் ஈடுபாட்டை நன்றியோடு நினைவு கூர்வோம்.

அவரின் அருட்பணியைத் தொடர்கின்ற வகையில் வேதபுரி என்னும் நம் புதுவையின் மேற்பால் அன்பு செங்குந்த நல்இதயங்கள் உள்ள கதிர்காமப் பதியின்கண் நிலைகொண்டு அருள்பாலித்துவரும் அருள்மிகு கெங்கையம்மன், அருள்மிகு முத்துமாரியம்மன் மற்றும் அருள்மிகு கதிர்வேல்சுவாமிக்கு நன்னீராட்டு விழா எடுப்பது என்பது நன்மை உய்விக்க நாம் எடுக்கும் நற்பெருவிழாவாகும்.

'கதிர்காம மாநகர்க்குள் எதிரிலாத வேல் தந்த
கடவுளே கலாப சித்ர மயில் வீரா'

என அருணகிரிநாதர் பாடிப்பரவிய கதிர்காமப்பதிக் கந்தன், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளுக்கு வரம் தந்தருளிய பரமன், நம்மை வாழ்விக்க வந்த வள்ளல். அவனை,

'அவனருளாலே அவன்தாள் வணங்கி'

அவனுக்குத் தொண்டு செய்து, அரும்பணியாற்றி அனைத்துயிரும் மகிழ விழா எடுக்கும் இனிய நாளில் கருத்துக்கும் வளம் சேர்க்க 'விழா மலரும்' தொடுத்து அறிவு மணம் பெருக்க வழி வகுத்த அறங்காவல் குழுவினர்க்கும், விழா மலர் குழுவினர்க்கும் மற்றும் இளைஞர்களுக்கும் வாழ்த்தும், நன்றியும்.

**ந. ரங்கசாமி**



உ



**N.S.J. ஜெயபால்**
நகரமன்றத் தலைவர்,
உழவர்கரை நகராட்சி,
ஜவகர் நகர், புதுச்சேரி - 605 005.

## வாழ்த்துரை



புதுச்சேரி உழவர்கரை நகராட்சி எல்லைக்குட்பட்ட தட்டாஞ்சாவடி தொகுதி, கதிர்காமத்தில் அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் திருக்கோயில், அருள்மிகு முத்துமாரியம்மன் திருக்கோயில் மற்றும் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி திருக்கோயில்களில் திருப்பணி வேலைகள் முடிந்து 23-05-2010 ஞாயிற்றுக்கிழமையும் மற்றும் 24-05-2010 திங்கட்கிழமையும் நடைபெற இருக்கும் அஷ்டபந்தன மகா கும்பாபிகேம் விழா எமக்கு மிகவும் மகிழ்ச்சியை அளிக்கிறது. இத்திருப்பணி வேலைகளை மிகச் சிறப்பாகச் செயல்படுத்திய அறங்காவலர்குழு திருப்பணிக்குழு, கும்பாபிகே விழாக்குழு இளைஞர்கள் மற்றும் ஊர்ப் பொதுமக்களுக்கு எனது மனமார்ந்த பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் இத்திருப்பணியைத் தொடங்கி, கும்பாபிகே விழாவைத் தலைமையேற்று நடத்தவிருக்கும் மாண்புமிகு மக்கள் முதல்வர் ந. ரங்கசாமி B.Com., B.L. அவர்களுக்கு எனது மகிழ்ச்சியினை வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

அஷ்டபந்தன மகா கும்பாபிகேத்தை முன்னிட்டு விழா மலர் வெளியிடுவது எமக்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கிறது. மேலும் அனைவருடைய ஒத்துழைப்புடனும் ஆதரவுடனும் வெளியிட இருக்கும் விழா மலர் சிறப்படைய எனது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நன்றி !

N.S.J. ஜெயபால்



உ



நிறுவனர் : **வே. பெத்தபெருமாள்**
பெருந்தலைவர் காமராஜர் சமூக நீதி உரிமை பாதுகாப்பு இயக்கம்
பதிவு எண்: 1001/2007
349, வழுதாவூர் ரோடு, சொக்கநாதன்பேட்டை,
புதுச்சேரி - 605 009.

## வாழ்த்துரை

பாரெங்கும் புகழ் பெற்ற பாரத புண்ணிய பூமி இது. இந்தப் புனித நிலப்பரப்பில் பற்பல அதிசயங்கள், அற்புதங்கள் நிகழ்ந்துள்ளன. பல்வேறு இனத்தவர்களின் படையெடுப்பகள் கண்டோம். ஆனாலும் பழமை மாறவில்லை. புதுமை சிந்தனையாளர்கள் தோன்றினர். ஆனாலும் புதுவை நிலையிலும் பழமை மாறாதிருக்கக்கண்டோம். பல்வேறு மதங்களின் தாக்கத்தினாலும் பெருமை. சகிப்புத்தன்மை பெருந்தன்மை, ஆதரித்தல் வந்தவரை வாழ வைத்தல் ஆகிய நமது பாரம்பரிய குணங்கள் நம்மிடமிருந்து மாறவில்லை, மாறப்போவதும் இல்லை. ஏன் இப்படிப்பட்ட நம் நாட்டின் அந்நிய ஆதிக்கச் சிந்தனைகள் வேறூன்றி வளர்ந்த நிலையிலும் சற்றேனும் மாறுபடாமல் விளங்கக் காண்கின்றோம். இந்த நிலையில் பாரதம் பல மாநிலங்களாகப் பிரிந்து தத்தம் மொழி வளர்ச்சி பெற்று விளங்குவதைக் காண்கின்றோம். அதே நேரத்தில் பாரத தேசமெங்கும் பரந்து விரிந்த இந்து கலாச்சாரமும் சற்றும் மாறாமல் அதே நிலையில் மேம்பட்டும் பரவியுள்ளது குறிப்பிடத்தக்கது.

பெருமைகொள் பாரத பூமியிலே நம் புதுவையும் அணி செய்கிறது. பிரஞ்சு அரசு கோலோச்சிய நிலையிலும் நமது பழக்க வழக்கங்களுக்கு மதிப்பளித்து வந்ததை நாம் அறிவோம்.

இந்தியத் திருநாட்டில் புதுவை ஒரு புதுமைபெற்று விளங்கும் மாநிலமாக உள்ளது. எல்லாத்துறைகளிலும் ஏற்றம் கண்டு வருகிறது. பிரஞ்சு மக்களின் முக்கிய கொள்கையான சுதந்திரம் சமத்துவம், சகோதரத்துவம் இங்கு மிளிர்ந்து புதுவை பொலிவு பெற்று மக்களைப் பெருமை கொள்ள வைக்கிறது. மக்கள் வழிபாட்டில் எந்த கோட்பாடுகளைச் சேர்ந்தவரானாலும் அவர்களின் வழிபாட்டு முறைகளில் அரசு தலையிடாது தனித்தன்மை விளங்க ஊக்கமளிக்கிறது.



புகழ் பெற்ற புதுவைக்கு அணிகலனாக நமது கதிர்காமம் விளங்குகிறது. இலங்கையில் உள்ள கதிர்காமத்தில் நம் தமிழ்க் கடவுளான முருக வழிபாடு ஏற்றம் பெற்றுள்ளதைப் போன்று நம் கதிர்காமத்திலும் முருகன் புகழ்பாடும் திருக்கோயில் சிறந்து விளங்குகின்றது. கதிர்காமத்தில் கதிர்வேல் சுவாமி எனும் திருப்பெயரில் எழுந்தருளி நம்மையெல்லாம் இறையருள் பெற்று வாழ வழிசெய்யும் இறைவனின் திருக்கோயில் உள்ளது. அதே போன்று ஜெகமெல்லாம் காக்கும் முத்துமாரியம்மன் கெங்கையம்மன் ஆகிய சக்தி தெய்வக் கோயில்களும் புகழ் பெற்று விளங்குகின்றன. தெய்வசாந்நித்தியம் மிக்க திருக்கோயில்களுக்குப் புனரமைப்பு செய்து திருக்குட நன்னீராட்டிப் புனிதப்படுத்தி தெய்வ நிலை நீடித்து இருந்து அருளச் செய்தல் நம் மரபு. பெரியோர்களும் சான்றோர்களும் நல்வழி காட்டி அறிவுறுத்தியபடி நம் ஊரின் திருக்கோயில்களின் திருக்குட முழுக்கு நடப்பதும் மலர் வெளியிடுவதும் அறிந்து இந்த நல்ல நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து சிரமம் பாராமல் பாடுபட்டுவரும் நல்ல உள்ளங்களை நெஞ்சாரப் பாராட்டுகிறேன். அவர்கள் அனைவரும் அவர்தம் குடும்பத்தினரும் நல்வாழ்வு பெற்று கதிர்காமச் சிற்றூர் மேன்மை நிலையை அடைய எல்லாம் வல்ல எம்பெருமான் கதிர்வேல் சுவாமியையும் சக்தி தெய்வங்களான முத்து மாரியம்மன், கெங்கையம்மன் ஆகிய தெய்வங்களையும் மனம், மெய் மொழிகளால் வாழ்த்தி வணங்குகிறேன்.

விழாக்குழுவினர்களுக்கும் நல்வாழ்த்துக்கள்

**வே. பெத்தபெருமாள்**






வாழ்த்துக்கள்...
V. சபரிவாசன்
T. குருபிரியன்
S. உமேஷ்வர்
S. சங்கர்பாலாஜி
M. முகில்
S. சத்குரு சண்முகம்
D. செளபர்ணிகா
S.T அருட்பிரியா
S. மமதி
V. அதிதீ

உ

திருமுருகன் துணை

அருண்மிகு பாலசித்தர் பதமலர் போற்றி!

சீர்வளர்சீர் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க!

**திருக்கயிலாய பரம்பரை, மயிலம் பொம்மபுர ஆதீனம்,**

**ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருமடம்**

மயிலம் - 605 304 & பொம்மையபாளையம் - 605 104.

## ஆசியுரை

பழந்தமிழ்நாட்டில் நாநில மக்கள் தாம் வாழ்ந்த சூழலையொட்டி வெவ்றே தெய்வங்களை வழிபட்டனர். குறிஞ்சி நிலமாகிய மலையும், மலை சார்ந்த இடத்திலும் இருந்தவர்கள் சேயோனாகிய முருகப்பெருமானைத் தெய்வமாகப் போற்றிப் பரவினர்.

முருக வழிபாடு தமிழகத்தின் பல்வேறு மலைசார்ந்த பகுதிகளில் இன்றும் சிறப்புற்றிருப்பதைக் காண்கிறோம். பிற்றைநாளில் சமவெளிப்பகுதியினரும் முருகபக்தியில் ஈடுபட்டு ஆங்காங்கு திருக்கோயில்களை எழுப்பியுள்ளனர். இத்தகு கோயில்களை அவ்வக் காலங்களில் வாழும் அருளாளர்கள் பாடிப் பரவியதுடன் அக்கோயில்கள் பற்றிப் பாடல்களையும், பனுவல்களையும் இயற்றியும் உள்ளனர். அவ்வகையில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பதிகம் பெற்ற சிறப்புடையது புதுவையைச் சார்ந்த கதிர்காமத்தில் உள்ள அருண்மிகு கதிர்வேல் சுவாமி திருக்கோயில்.

இச்சிறப்புடைய திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள வள்ளி தெய்வயானை உடனுறை கதிர்வேல் சுவாமிக்கும், அருண்மிகு முத்துமாரியம்மன், கங்கையம்மன் திருக்கோயில்களுக்கும் திருவருள் கூட்டுவிக்கும் நிலையில் ஊர்மக்கள் ஒன்று சேர்ந்து திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடத்தவிருப்பது அறிந்து மகிழ்கிறோம்.

இவ்விழாத் தொடர்பாகத் தெய்வமணம் கமழும் மலர் ஒன்றும் வெளியிடுவது, மக்களிடையே இறையுணர்வையும், சமய நெறிப்பட்ட வாழ்வினையும் வளர்த்து நல்ல சமூகத்தை மேம்படுத்த உதவும். இத்தகுப் பணிகள் சிறப்புற அமைய மயிலம் முருகன் திருவருளும், அருண்மிகு பாலசித்தர், ஆதிசிவஞான பாலய சுவாமிகளின் குருவருளும் நிரம்புவதாகுக!

உ
சிவமயம்

© (04565) 436846



**KOVILOOR MADALAYAM**
KOVILUR - 630 307
(VIA) MANAGIRI
(NEAR KARAIKUDI)

**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307
மானகிரி (வழி)
காரைக்குடி (அருகில்)

DATE : 13.3.2010

## கோவிலூர் ஆதீனம் சீர்வளர் சீர் நாச்சியப்ப ஞானதேசிகரின் அருளாசியுரை

வரலாற்றுப் புகழும் ஆன்மீகப் பெருமையும் ஒருங்குடன் கொண்ட புதுச்சேரி, கதிர்காமம் என்ற சிற்றூரிலுள்ள, ஸ்ரீ வள்ளி தெய்வானையுடன் எழுந்தருளி நாளும் ஆன்மாக்களுக்கு அருள்பாலிக்கும் அருள்மிகு கதிர்வேல்சுவாமி திருக்கோயிலுக்கும் அதனைச் சார்ந்த அருள்மிகு முத்துமாரியம்மன் மற்றும் கங்கையம்மன் திருக்கோயில்களுக்கும் வைகாசித் திங்கள் 9,10 ஆகிய நாட்களில் கடவுள் மங்கலத் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெறவுள்ளது அறிந்து மிக்க மகிழ்ச்சி.

இப்பெருஞ்சாந்திப் பெருவிழா இனிதே நடந்தேற குருமுதல்வர் குருமகா சந்நிதானத்தின் திருவடியை வணங்கி வாழ்த்துகின்றோம்.

வேணும்

**ஸ்ரீ சற்குருநாதன் துணை.**



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

**திருக்கயிலாய பரம்பரைத்**
**திருவாவடுதுறை ஆதீனம்**
23-ஆவது குருமகா சன்னிதானம்
சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக
பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள்

திருவாவடுதுறை - 609 803
நாகை மாவட்டம்

தொலைபேசி எண்: 04364-232021
நாள் : 27.03.2010

---

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க

## அருள் வாழ்த்துரை

முன்னை யார்மயி லூர்தி முருகவேள்
தன்னை யாரெனில் தானோர் தலைமகன்
என்னை யாளுமி றையவன். எம்பிரான்
பின்னை யாரவர் பேரெயி லாளதே!
– அப்பரடிகள்

புதுச்சேரி, கதிர்காமம் ஸ்ரீகதிர்வேல் தேவஸ்தானம் ஸ்ரீவள்ளி தெய்வானையுடன் அருள்பாலிக்கும் ஸ்ரீகதிர்வேல் சுவாமி திருக்கோயிலுக்கும் அதனைச் சார்ந்த ஸ்ரீமுத்துமாரியம்மன் மற்றும் ஸ்ரீகங்கையம்மன் திருக்கோயில்களுக்கும் விக்ருதி ஆண்டு வைகாசித்திங்கள் 9 மற்றும் 10 ஆகிய நாட்களில் மகா கும்பாபிகேம் நடத்தப்பெறுவது மகிழ்ச்சிக்குரியது அதுபோழ்து கும்பாபிகே நினைவாக கும்பாபிகே மலர் வெளியிடயிருப்பது பாராட்டிற்குரியது.

கதிர்காமம் புதுச்சேரியில் முருகன் தலமாக அமைந்துள்ளது. இதுபோல இலங்கையிலும் கதிர்காமம் என்னும் தலம் முருகன் தலமாக அமைந்துள்ளது என்பன குறிப்பிடத்தக்கது.

எல்லாம்வல்ல சிவபெருமான் அருளால் அக்னிபூவாக மலர்ந்தவர்தான் அறுமுகன் முருகனுக்குப்பல பெயர்கள் உண்டு. தேவகுஞ்சரிவள்ளிபெருமான் குறிஞ்சி நிலக் கடவுளாகத் தமிழ்த்தெய்வமாகப் போற்றப்பெறுகிறார் ஔவையார். நக்கீரர் குமரகுருபரர் அருணகிரிநாதர் பாம்பன் சுவாமிகள் போன்ற அருளாளர்கள் முருகப் பெருமானைப் போற்றி அருள்பெற்றுள்ளனர். அவர்கள் வாழ்வில் முருகப்பெருமானைப் போற்றி அருள்பெற்றுள்ளனர். அவர்கள் வாழ்வில் முருகப்பெருமான் பல அற்புதங்களையும்

விளைவித்துள்ளனர். மாறுபடு சூரரை வதைத்து, வள்ளியை தேவகுஞ்சரியை மணந்து, நாடிவரும் அன்பர்களின் குறைகள் நீக்கி இன்பம் தந்து இன்னருள் தரும் எழிற்குமரனின் அருள்சிறப்பைப் புராணங்களும் சிற்றிலக்கியங்களும் மிகச் சிறப்பாக எடுத்துரைக்கின்றன.

குன்றங்கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரை குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் மரபிற் பெரும்பெயர் முருக

என்று திருமுருகாற்றுப்படையில் நக்கீர் முருகப்பெருமான் சிறப்புகளை எடுத்துரைத்துள்ளார். தன்னடைந்தார்க்கு இன்பம் அருளும் முருகப்பெருமானைப் போற்றி அப்பெருமானின் திருக்கோயில் திருப்பணியில் பங்குகொண்ட அன்பர்கள் நலம்யாவும், பெற்றுச் சிறக்கவும் மகா கும்பாபிகேம் சிறப்பாக நடைபெறவும் விழா மலர் திருநெறிய மணம் வீசவும் நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஞானப்பெருங்கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.





உ
சிவ சிவ

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

**தவத்திரு. குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**
குன்றக்குடி - 630 206, சிவகங்கை மாவட்டம்
✆ 04577 - 264227

---

நாள் : 16.02.2010

## வாழ்த்துரை



புதுச்சேரி மாநிலம் கதிர்காமம் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி அருள்பாலித்து வரும் அருள்தரு வள்ளி தெய்வானை உடனாய அருள்தரு கதிர்வேல் சுவாமி திருக்கோயிலுக்கும் அதனைச் சார்ந்த அருள்மிகு முத்துமாரியம்மன் திருக்கோயில், அருள்மிகு கங்கையம்மன் திருக்கோயில் ஆகியவற்றுக்கும் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெற இருப்பது அறிந்து மிக்க மகிழ்ச்சி. அருள்தரு கதிர்வேல் சுவாமி திருக்கோயில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் திருப்பதிகம் பெற்று அருளாற்றலுடன் விளங்கும் திருக்கோயில், வழிபடும் அடியவரின் துயரம் பொடிபடச் செய்யும் கதிர்வேல் சுவாமி கருணை பொழியும் திருக்கோயில்.

இத்திருக்கோயில்களின் திருப்பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்டு உழைத்த அன்பர்கள் அனைவரும் பாராட்டுக்குரியவர்கள்; இறையருளுக்குப் பாத்திரமானவர்கள். அவர்களுக்கு நமது உளமார்ந்த வாழ்த்துக்கள்.

திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா இனிதே நிறைவெய்தவும், இவ்விழாவை முன்னிட்டு வெளியிடப் பெறும் தெய்வத்தமிழ்ச் சிறப்பு மலர் அருள் மணம் கமழ வெளிவரவும் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு

**(பொன்னம்பல அடிகளார்)**





உ
சிவமயம்

**சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க,**
**திருக்கைலாய பரம்பரை, திருக்கோவலூராதீனம்,**
**ஸ்ரீ மத் ஞானியார் மடாலயம்**
சந்நிதி வீதி, திருப்பாதிரிப் புலியூர், கடலூர் – 2.

---

நாள் : 06.03.2010

சுபம்

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே – (திருமந்திரம்)

மெய்யன்புடையீர் !

திருவள்ளுவராண்டு 2041 விக்ருதி ஆண்டு வைகாசித் திங்கள் 9 மற்றும் 10 ஆகிய நாட்களில் திருமங்கலத் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சீரும் சிறப்பாக நடைபெற எங்கள் மடாலய குருமூர்த்திகளின்குருவருளும் முருகப் பெருமான் திருவருளும் உண்டாகும்படி பிரார்த்தித்து எழுதுவது. இதில் பங்கு கொண்டு உடல் உழைப்பும் மற்றும் பெரும்பொருள் அனைத்தும் வழங்கும் அன்பர்கள் யாவரும் எல்லா வளங்களும் நலங்களும் உண்டாகும்படியும் இறைவனை இறைஞ்சுகிறோம்.

கோவில் வாழ்பரம குருவினை யடுத்துக்
குவலயம் ஞானியா ரென்ன
ஏவரும் புகழ வினிது வீற்றிருப் போய்
எளியனேன் வாழநீ வாழ்க
மேவரும் நினது திருவடி வாழ்க
விரும்பும் நின்னடியார் வாழ்க
தாவரும் செல்வம் வாழ்ந்திடும் புலிசை
சண்முக ஞான தேசிகனே



இங்ஙனம்
**ஞானியார் சுவாமிகள்**

"Kailai Ma Munivar"
**THIRU VALAR THIRU KASIVASI**
Muthukumaraswami Tambiran
Swamigal

SIVA  SIVA

Head of Kasithiru Madam
Tirupanandal - 612 504.
Thanjavur District.

நாள் : 31.01.2010

## வாழ்த்துரை



நெஞ்சம் இறையவனுக்கு இடமாக வைத்து, 'இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்' என மணிவாசகர் மொழிந்தபடி. இடைவிடாது சிந்தித்து, மொழியும் பொருள்சேர் புகழே மொழிவதாய், திருக்கோயில், சமயம் சார்ந்த பணிகளை ஆற்றிவரும் அன்பர் கூட்டம் ஒருமித்த சிந்தையுடன் உவந்து வழிபட்டு வரும், புதுச்சேரி கதிர்காமம் ஸ்ரீ கதிர்வேல் சுவாமி கோயில் மற்றும் அதனைச் சார்ந்த கோயில்களின் குடமுழுக்குப் பெருவிழா 23,24-5-2010 ஆகிய நாட்களில் நிகழவுள்ளதும், விழாச் சிறப்பு மலர் வெளியிடப்பெறுவதும் அறிய மகிழ்ச்சி.

அற்புதமான அமுத தாரைகள் எற்புத் துளைதொறும் ஏற்றுதல், என்னும் படியான மெய்ப்பாட்டினையும் உளப்பாங்கினையும் பெற்றுப் பக்தர்கள் வழிபாடாற்ற ஏதுவாகச் சிறப்புடன் குடமுழுக்குவிழா நிகழவும், புதிய, இனிய, அரிய சொற்கோவைகளுடன் சுந்தரத்தமிழ் மலராய் 'மலர்' வெளிவரவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்
**சிவ சிவ**



உ

அருள்மிகு ஞான தண்டாயுதபாணி துணை

தவத்திரு சாதுசாமிகள் தாண்மலர் வாழ்க



## பழனி ஆதீனம்

## அருள்மிகு சண்முக விலாச அன்னதான சமாசம்

பழனி தவத்திரு. சாதுசாமிகள் திருமடம்

பழனி - 624 601. திண்டுக்கல் மாவட்டம்.

தொலைபேசி எண் : 04545 242440

---

## வாழ்த்துரை



புதுச்சேரி கதிர்காமம் ஸ்ரீ கதிர் வேல்சாமி தேவஸ்தானத்தில் உள்ள கதிர்வேல் சாமி கோயில் நிர்வாகத்திற்கு உட்பட்ட அருள்மிகு முத்துமாரியம்மன், கங்கையம்மன் ஆகிய திருக்கோயில்கள் திருப்பணி நிறைவுபெற்று மே 23, 24 2010ல் விக்குருதி ஆண்டு வைகாசி மாதம் 9-ஆம் தேதி மற்றும் 10ஆம் தேதி திருக்குட நன்னீராட்டு நடைபெற உள்ளது.

மேற்படி திருக்கோயிலை வண்ணச்சரபம் தண்டபாணி சாமிகள் பாடியிருப்பது ஒரு பெருஞ்சிறப்பு . மேற்படித் திருக்கோயிலுக்குத் திருப்பணி செய்யும் வாய்ப்பும் அதற்குத் தாங்கள் தேடிய புண்ணியப் பொருள் பயன்படும்படி அன்பர்கள் கொடுத்ததும் பெரும்பயனே. எனவே திருகோயில்கள் திருப்பணி சிறப்புற நிறைவுபெற்று திருக்குடநீராட்டு விழா நடைபெற நமது வழிபடும் கடவுளும் தண்டமிழ்க்கடவுளும் ஆன தண்டாயுதபாணி கடவுளின் திருவருளையும் தவத்திரு சாதுசாமிகள் தண்ணருளையும் வழுத்துகின்றோம்.



ஓ தவத்திரு. தயானந்த சந்திரசேகரன்
திலகவதியார் திருவருள் ஆதீனம்,
டாக்டர். அருள்மிகு சாயிமாதா சிவபிருந்தா தேவி நினைவு நூலகம்,
டாக்டர். அருள்மிகு சாயிமாதா சிவபிருந்தா தேவி
கல்வி, சமூக அறக்கட்டளை, 1120, மச்சுவாடி, புதுக்கோட்டை – 622 001.
தொலைபேசி: 04322-228024 அலைபேசி : 97891 82825

நாள் : 25.01.2010

## வாழ்த்துச்செய்தி

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழிநாசி யொடும் செவியாம்
ஐவாய் வழிசெல்லும் அவாவினையே. – கந்தரநுபூதி

வரலாற்றுப் புகழும், ஆன்மீகப் பெருமையும் இணைந்த புதுச்சேரி மாநிலத்தில் அமைந்து, கதிர்காமம் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி அருள்பாலித்து மக்களைக் காத்து வருகின்ற அருள்மிகு கதிர்வேல் சுவாமி திருக்கோயிலுக்கும் அதனைச் சார்ந்த அருள்மிகு முத்துமாரியம்மன், அருள்மிகு கங்கையம்மன் திருக்கோயிலுக்கும் எதிர்வரும் திருவள்ளுராண்டு, 2041 வைகாசித்திங்கள் 9 மற்றும் 10 ஆகிய நாட்களில் மங்கலத் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெறவிருப்பதை அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறோம்.

தமிழர்களின் தனிப்பெருங் கடவுளாக விளங்கும் முருகப்பெருமான், இங்கு கதிர்வேல் சுவாமிகளாக அருள்பாலித்து மக்களைக் காத்து வருகிறான், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பதிகம் பாடி, பெயர் பெற்ற திருத்தலம் என்பது சிறப்புக்குரியதாகும். நன்னீராட்டுப் பெருவிழாவினை முன்னிட்டு, அருள்மிகு கதிர்வேல் சுவாமியின் அருளுடன், ஆன்மீக மணம் கமழத் தெய்வத் தமிழ்ச் சிறப்பு மலரினை, தெய்வத்தமிழைப் போற்றி வளர்க்கும் தமிழறிஞர்கள் ஒருங்கிணைந்து வெளியிடயிருப்பது போற்றுதலுக்குரிய செயலாகும்.

மங்கல திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்புடன் நடைபெறவும், தெய்வத்தமிழ்ச்சிறப்பு மலர் வெளிவந்து பக்தி மணம் பரப்பவும் எல்லாம் வல்ல சிவபரம்பொருளை வணங்கி வாழ்த்துகிறோம், இத்திருப்பணியில் இணைந்து செயலாற்றும் மலர்க்குழுவினர், அறங்காவலர் குழுவினர், மற்றும் அடியார்களுக்கும் நமது உளம் நிறைந்த நல்வாழ்த்துக்களை வழங்கி மகிழ்கிறோம்.

என்றும் சமய, சமூக சேவையில்,
**ஆதீனம்**

உ

**ஸ்ரீ ஞானதண்டாயுதபாணி சுவாமி கவிச்சக்கரவர்த்தி**
**ஒட்டக்கூத்தர் மடாலயம் கல்யாணம்பூண்டி,**
விழுப்புரம் மாவட்டம்.

தவத்திரு. **சிவஞானயோகி முருகானந்த அடிகளார்**
ஸ்தாபிதமடம் 1897 தமிழ்ப்பேரவை மடம்,
கல்யாணம்பூண்டி விழுப்புரம் மாவட்டம்.

---

## திருக்குட நன்னீராட்டு விழா வாழ்த்துரை

சான்றோர் பலர், ஆன்றோர் ஆயிரமாயிரம் தினந்தோறும் நினைவில் நின்று, ஆறெழுத்து மந்திரத்தான் அருள் நெறியுடன் புதுச்சேரி கதிர்காமம் அருள்மிகு முத்து மாரியம்மன் மற்றும் கதிர்வேல் சுவாமி திருக்கோயில் முன் மண்டபத்திருப்பணி நிறைவு பெற்று திருக்குட நன்னீராட்டு விழாக்காணும் புதுவை கதிர்காமத்து சீர்அருளாளர்கள் சரவணத்தான் திருஅருள்பெற்று மேன்மேலும் சிறக்க வாழ்த்துகிறோம்.

**தி.நா. சுந்தரம்**
பரம்பரை



உ
குருவே துணை



**தி.மு. தண்டபாணி ஐயா**
திருவாமாத்தூர், விழுப்புரம். 605 402.

மகான். வண்ணச் சரபம்
**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**
திருமடம், 4ஆவது பட்டம்

நாள் : 12.03.2010

## வாழ்த்துரை

உலகில் விளங்கும் சமயங்களில் மேலானது நமது சைவ சமயம். உலக சமயங்கள் அனைத்தையும் படிமுறையாகக் கொண்டு மேம்பட்டு விளங்கும் நமது சைவ சமயத்தில் முருகவேளுக்குரிய கௌமார சிறப்புகளையும் அதன் முறைகளையும் பேணிப்போற்றி அதன் வழி ஒழுகுதல் கௌமார மெய்யன்பர்களின் தலையாய கடமையாகும்.

உலகில் கௌமாரத்தை நிலை நிறுத்த, கௌமார முறமை, கௌமார விளக்கம், கௌமார லகரி இன்னும் பல நூல்களை வண்ணச்சரபம் சுவாமிகள் செய்துள்ளார். புதுவை மாநிலம் கதிர்காமம் கதிர்வேல் சுவாமிக்கும் மற்றும் பல புதுவை கடவுள்களுக்கும் பாடி உள்ளார்கள். கௌமாரத்தின் சிறப்புகளையும் மக்கள் உணர்ந்து போற்றுதற்குத் தமிழ் மக்களுக்குப் பயன் பட்டு வருவன இஞ்ஞானநூல்கள்.

இவ்வகையில் பல்லாண்டுகளாகப் புதுவையில் பணி புரிந்து வரும் அறிஞர்கள் பலரும் பங்குபெற்று நடத்தும் கடவுள் மங்கலத் திருக்குட நன்னீராட்டு விழா சிறப்புற நடைபெறவும் உலகம் முழுவதும் மேன்மைகொள்ள கௌமார நன்நெறி பரவவும், இதில் பங்கு கொள்ளும் அன்பர்கள் பலரும் நலம் பல பெற்று நீடுவாழவும், எல்லாம் வல்ல பழனி எம்பெருமானையும் வண்ணச்சரபம் தாத்தா சுவாமிகள் திருவருளையும் குருவருளையும் சிந்திக்கின்றோம். எல்லா நலமும் பெற்று வாழ்க. நலம்.

**வேலும் மயிலும் துணை.**
**குரு பாதமே கதி**

உ
வேலும் மயிலும் துணை

# ஒரு நீ ஆகத் தோன்ற .......

சித்தாந்த சரபம், முனைவர் வை. இரத்தின சபாபதி
சென்னை – 28.

**முன்னுரை :**

சங்க இலக்கியங்கள் தொன்மைத் தமிழ் மக்களின் வாழ்வியற் செய்திகளை எடுத்துக்கூறி மக்களை நல்வழிப்படுத்தும் வாழ்வியற் குறிக்கோட் கருவூலங்களாகும். அவை மொத்தம் முப்பத்தாறு என நெறிப்படுத்தியுள்ளனர். அவற்றுள் மேற்கணக்கு நூல்கள் பதினெட்டு எனவும் கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டு எனவும் வகைப்படுத்தி உள்ளனர். மேற்கணக்கு நூல்கள் பதினெட்டையும் பத்தும் எட்டுமாகப் பகுத்தறிவுறுத்தியுள்ளனர். பத்தும் எட்டும் பாட்டேயாயினும் பத்தினை மட்டும் பத்துப்பாட்டு எனவும் எட்டினைத் தொகை நூல்கள் எனவும் தெளிவு படுத்தியுள்ளனர்.

பத்துப்பாட்டினுள் முதற்பாட்டு என நின்றது **திருமுருகாற்றுப்படை.** நக்கீரர் அருளியது. இது புலவராற்றுப்படை என்ற பெயரால் சுட்டப் பெறும். திருமுருகாற்றுப் படையினுள் ஆறாவது பிரிவாக நின்ற பழமுதிர் சோலை என்னும் படைவீட்டுப் பகுதியில் வரும் தொடரே

**“ ஒரு நீ ஆகத் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி”**

என்பது. 'ஒரு நீ ஆகித் தோன்ற' எனவும் பாடபேதம் உள்ளது. அத்தொடரின் பொருளை ஓரளவு அணுகி நின்று ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

மேலே குறிப்பிடப் பெற்ற திருமுருகாற்றுப்படை வரிகளுக்குச் சங்க நூல்களுக்கு உரைகண்ட உரையாசிரியர்களின் உரைகளையெல்லாம் ஒப்பிட்டுக் காட்டி விளக்கம் காண்பதும். அவற்றுள் எது சரி என்று கண்டு காட்டுவதும் இக்கட்டுரையின் நோக்கம் அன்று விரிவஞ்சியே விலக்கப் பெற்றது.

**அத்வைத வேதாந்த விளக்கம் :**

அத்வைத வேதாந்திகள் 'ஒரு நீ ஆதல்' என்ற தொடருக்கு மட்டும் தாம் எழுதும் உரைநடைகளில் எடுத்துக் காட்டிப் பொருள் கூறியுள்ளார்கள்.

பொருள் ஒன்றே என்ற அத்வைத வேதாந்தக் கருத்துப்படி, இறை வேறு, உயிர் வேறு என்று கொள்ளாமல் பொருளால் ஒன்றே என்று கருதும் வகையில் உன்னையாக்கி

அவ்வாறே உலகவர் காணும் வகையில் உன்னைத் தோற்றம் கொள்ளுமாறு நிறுத்தி, அத்தகு நிலையையே, ஒன்றாம் நிலையையே உனக்குரிய பெருமை தரும் பரிசிலாக உனக்குத் தருவன் என இத்தொடருக்கு விளக்கம் காண்கிறார்கள்.

**சைவ சித்தாந்த விளக்கம் :**

சைவ சித்தாந்திகள் 'ஒரு நீ ஆகித் தோன்ற' என்ற பாடத்தையே முதன்மைப் படுத்தியிருக்கிறார்கள். ஒப்பற்ற ஒருவன் நீயே என ஆகி நிற்குமாறு உன்னைச் சீவன் முத்த நிலையில் நிறுத்தி, உன்னை அனைவரும் சீவன் முத்திப் பெருநிலை அடைந்தவன் இவனே எனக் கருதி, உன்னை வழிபடும் நிலையில், உன்னை நிறுத்தி வைப்பான். அத்தகைய விழுமிய நிலையே உனக்கு அமைந்த பெறலரும் பரிசில் முருகனை அடைந்தவனுக்கு அவன் சீவன் முத்திப் பெருவாழ்வு நிலையை வழங்குவான் என்று கொள்வதே சைவ சித்தாந்த வழக்கு.

சீவன் முத்திப் பெருநிலை என்பது இருமையின் ஒன்று என நின்ற நிலை. உலகியல் நிலையில் சீவனாகவும் அனுபவநிலையில் அனைத்துப் பாசங்களிலிருந்தும் விடுதலை பெற்றவனாகவும் விளங்கிக் கொண்டிருக்கும் நிலை.

**அருணகிரிநாதர் நோக்கு**

அருணகிரிநாதர் கந்தரநுபூதி, கந்தர் அலங்காரம் முதலிய பல நூல்களை முருகப் பெருமான் மேற் பாடிய அருளாளர் என்பது உலகறிந்த செய்தி. அருணகிரிநாதர் தாம் பெற்ற இக பர சாயுச்சியப் பெருவாழ்வநுபவத்தை வகைப்படுத்தி உயர்த்தும் வகையில் **'வகுப்பு'** என்ற பெயரமைத்துப் பல வகுப்பு நூல்களை அருளியுள்ளார். சற்றொப்ப முப்பத்தாறு வகுப்பு நூல்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. பல வகுப்பு நூல்களை அருணகிரிநாதர் பாடவில்லை என்ற கருத்தும் உண்டு.

அருணகிரிநாதர் அருளியதாக அனைவராலும் ஒத்துக் கொள்ளப் பெற்ற ஒன்று **திரு வேளைக்காரன் வகுப்பு.**

முருகப் பெருமானைத் **'திருவேளைக்காரன்'** என்று பெயர்ப்படுத்துகின்றார் அருணகிரிநாதர். முருகன் வள்ளியம்மையாரிடம் **வேளம் புகுந்தவன்** ஆதலின் வேளைக்காரன் என்றார். வேளம் புகுதல் என்றால் என்ன? குறித்த வேலையை (பணியை), குறித்த வேளையில் (காலத்தில்) முடித்துக் கொடுப்பேன் என்று ஆணைமொழி கூறி ஓம் அறைந்து, அடைக்கலம் புகுதலே வேளம் புகுதல். கொடுத்த வேலையைக் குறித்த வேளையில் செய்து முடிப்பேன் என்று உறுதி கூறிச் செயன்மைப் படுத்துதலே வேளம் புகுதல். திருவேளைக்காரன் வகுப்பில் வரும் ஒரு வரியைக் காணலாம்.

"இருவர் அவர் நின்றிடத்தும் எவரெவர் இருந்திடத்தும்
ஒருவன் இவன் என்று உயர்ச்சி – கூடலாம்"

என்பது மேலே குறிப்பிட்ட வரியின் விளக்கம்.

இருவர் அவர் நின்றிடத்தும் ஒருவன் இவன் என்று உயர்ச்சி கூடலாம் எனவும் எவர் எவர் இருந்திடத்தும் ஒருவன் இவன் என்று உயர்ச்சி கூடலாம் எனவும் இரண்டாகப் பிரித்துக் கொள்ள வேண்டும்.

**முதல்நிலை :** 'இருவர் அவர் நின்றிடத்தும்' என்பது ஒரு போட்டியில், முடிவு நிலையில், ஒரே தகுதியுடன் இருவர் நிற்கிறார்கள். அவ்விருவரில் ஒருவரே வெற்றிபெறுதல் வேண்டும். பரிசும் அவருக்கே உண்டு. அவ்விருவரில் இவன் ஒருவனே தகுதியுடையவன் என அவனை மற்றையவனிடத்திலிருந்து உயர்த்தி நிறுத்தும் ஆற்றல் முருகன் அருளுக்கே உண்டு என எடுத்தாளுகிறார் அருணகிரிநாதர். **ஒரு நீயாகத் தோன்ற விழுமிய பெறலரும் பரிசில் நல்குவன்** என்பது நக்கீரர் வாக்கு.

**இரண்டாம் நிலை :** எவர் எவர் இருந்திடத்தும் ஒருவன் இவன் என்று உயர்ச்சி கூடலாம் என்பது.

அறிஞர்கள் குழுமிய அவை ஒன்று, அவையில் பலர் அமர்ந்திருக்கிறார்கள். பல்கலைக் கழக ஆசிரியர் (Tutor) துணை, இணைப் பேராசிரியர்கள், பேராசிரியர், துறைத் தலைவர், துணை வேந்தர், இணை வேந்தர், வேந்தர் என இவர்ளெல்லாம் ஒருவரின் ஒருவர் அதிகாரத்தாலும் மேல், மேல் என நின்ற தகுதியாலும் வரிசை பெற உயர்ந்தவர்கள். இத்தகு பேரவையில், முழுமையான தகுதியும் வரிசை பெறும் திறனும் இல்லாத ஒருவன் அமர்ந்திருக்கிறான். இவ்வரிசையை அருணகிரிநாதர் எவர், எவர் என மேலேற்றிக் கொண்டே போகிறார். அப்படி அமர்ந்தவன் **முருகபக்தன்** ஒருவன் இவனே : உயர்ந்தவன் இவனே என அந்த எளியவனை ஏற்றம் மிகப் பெய்து, உயர்த்தி நிறுத்துவான். எவர், எவர் தகுதிக்கும் மேலான தகுதியைத் தந்து உயர்விப்பான் ; அறிவிப்புச் செய்வான். இதுவே இரண்டாம் நிலையில் நின்ற வாக்கியப் பொருள்.

நக்கீரர் வாக்கினை அருணகிரிநாதர் படித்திருப்பாரா ? ஆனாலும் நக்கீரனாரின் "ஒரு நீ ஆக" என்ற வாக்கின் பொருள் திருவேளைக்காரன் வகுப்பில் விளக்கம் பெறுகிறது என்பதை ஒத்துக் கொள்ளத்தானே வேண்டும் !

**முடிப்புரை :**

முருகன் தன்னை அடைந்தவர்களுக்கு, அடைவதற்கரிய, பெருமைதரும் உயர்ச்சியை அடைவிக்கும் ஆற்றலுடையவன் என்பதை நக்கீரர், அருணகிரிநாதர் ஆகிய அருளாளர்களின் திருவாக்குகளால் உணரலாம்.

# வரலாற்றுப் பொன்னேடு



தமிழ்மாமணி, புலவர் சீனு. இராமச்சந்திரன்
தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம், புதுச்சேரி – 11.

கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் – குறள்

---

கந்தன் உறையுமிடம் கதிர்காமம். அதுவே ஊரின் பெயராக அமைந்தது பெருஞ்சிறப்பு. இவ்வூரில் உள்ள அருள்மிகு கதிர்வேலன், அன்னை முத்துமாரியம்மன், கங்கையம்மன் என்னும் முப்பெருங் கோவில்களுக்கும், திருப்பணி செய்து குடமுழுக்கு நன்னீராட்டு விழாவோடு வரலாற்றுப் பொன்னேடாக மலர் ஒன்றை வெளியிடும் அறப்பணிச் செல்வர்களுக்கும், குழுவினர்களுக்கும் என் நெஞ்சார்ந்த வணக்கத் தையும் வாழ்த்தினையும் செலுத்தி நனிபேர் உவகை கொள்கின்றேன்.

புகழ்மிகு புதுச்சேரிக்கு அணிகலனாக விளங்கும் நல்லூரில் கதிர்காமமும் ஒன்று. கதிர்காமம் புதுச்சேரி நகருக்கு மேற்கே ஐந்து கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. உழவர்கரை நகராட்சி எல்லைக் குட்பட்டது. புதுச்சேரி அரசு இலச்சினையாக விளங்கும் ஆயி மண்டபம் பிரெஞ்சு ஆட்சியாளரால் மூன்றாம் நெப்போலியன் காலத்தில் கட்டப்பட்டது.

அதற்கு ஒரு வரலாற்றுப் பின்னணியும் உண்டு. கதிர்காமத்திற்குச் சற்று மேற்கே முத்தரையர்பாளையம் என்ற வளங்கெழு மூதூர் உள்ளது. அவ்வூரில் அருங்கலைச்செல்வியர் ஆயி என்பவளும், அவள் தங்கை ஊசி என்பவளும் வாழ்ந்திருந்தனர் என்றும், தென்பால் உள்ள உழவர்கரை என்னும் ஊரில் சிறந்த சிவன்கோயில் இருந்ததறிந்த தென்னாட்டை ஆண்ட கிருட்டினதேவராயர் வழிபட வந்தாரென்றும் மன்னர் வருகைக்காகத் தங்களின் மாளிகையை வண்ணமுறச்செய்து அறச்செல்வியர் ஆயியும், ஊசியும் மன்னனை வணங்கத் காத்திருந்ததாகவும், மன்னன் கிருட்டின தேவராயர் அவர்களின் மாளிகையே சிவன் கோவில் என்று கும்பிட்டதாகவும் அருகிலிருந்த அமைச்சர் அப்பாசி "மன்னா! இது கோயில் அன்று; தாசிகள் இல்லம்" என்று சொல்ல, மன்னன் வெட்கித் தலை குனிந்து மெல்ல நகர்ந்தான் என்றும், இச்செய்தியறிந்த வேசிகள் இருவரும் பின்னர் மன்னனைச் சந்தித்து மன்னிப்புக் கேட்டு, வாழ்ந்த மாளிகையைத் தரைமட்டமாக இடித்துத்தள்ளி நன்னீர்குளம் கட்டினர் என்றும், பின்னர் வெள்ளையர் வாழ்ந்த மாளிகைக்குத் தண்ணீர் மூடுபோட்ட சுண்ணாம்பு வாய்க்காலின் வழி அனுப்பி வைத்தனர் என்றும், வரலாற்றுச் செய்தி ஒன்று வாய்மொழியாக வழங்கப்படுகிறது.

புதுவை ஆளுநர்மாளிகை முன் உள்ள பாரதி பூங்காவில் மூன்றாம் நெப்போலியன் இச்செய்தியைக் கல்வெட்டாகப் பதிக்கப்பட்டுள்ளதை இன்றும் காணலாம்.

புதுச்சேரிக்கும் முத்தரையர்பாளையத்திற்கும் இடையில் உள்ள கதிர்காமம், தெலார்சு என்னும் வெள்ளைக்கார உயர் அலுவலர் வாழ்ந்த இடத்திற்கு மிக அண்மையில் இருந்ததால் பிரெஞ்சு அரசு தனிக் கவனம் செலுத்தி சிறப்பளித்தாகவும் பேசப்படுகிறது. அவ்வெள்ளையன் பெயரால் தெலார்சுபேட்டை என்றும் வெள்ளைக்காரன் தோட்டம் (வேளாண் தோட்டம்) என்றும் இன்று பெயர் விளங்கி வருகின்றது.

பிரெஞ்சு ஆட்சியில் கிடைத்த சலுகை காரணமாகக் கதிர்காமம் திருக்கோவில்களில் சுவாமி உலா, செடல் விழா எல்லை தாண்டி தெலார்சு பேட்டை பிள்ளையார் கோவில் வரை வந்து வழிபாடு செய்யும் வாய்ப்பையும் பெற்றுள்ளது. சாமி சமயங் கடந்து சைவமும், வைணவமும் தழைத்திருந்த தெலார்சு பேட்டையும், கதிர்காமமும் உடன் பிறப்பாளர்களைப்போல் ஒருமையுடன் இணைந்து விழாவெடுத்து மகிழ்வதை இன்றும் காணமுடிகிறது.

கிராம தேவதைகளாகக் கதிர்காமம் மாரியம்மன் கோவில், தெலார்சு பேட்டை திரௌபதியம்மன் பெருங்கோவில் தேர்த்திருவிழா, தீமிதித் திருவிழா பெருஞ்சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. கதிர்காமத்தில் கதிர்வேலன் திருக்கோவில் சூரசம்பாரப் பெருவிழா ஆண்டு தோறும் கொண்டாப்படுகிறது.

பிரெஞ்சு ஆட்சிக் காலத்தில் நான் மாணவனாகத் கதிர்காமம் சத்திரப்பள்ளியில் படித்த போது (1945) பிரெஞ்சு ஆளுநரும், காலல்துறை உயர் அதிகாரிகளும் கதிர்காமத்தில் தைத்திங்கள் நான்காவது வெள்ளிக்கிழமை நடைபெறும் செடல் திருவிழாவிற்கு வெள்ளைக்காரக் குடும்பங்கள் மாரியம்மன் கோவில் தெருவில் இருந்த இராமநாத முதலியார் இல்லத்தில் அமர்ந்து விழாவைக் கண்டுகளித்த காட்சி இன்றும் என்னால் மறக்க முடியவில்லை.

அதே போல் வீமக்கவுண்டர்பாளையம் தீமிதி, தேர்த்திருவிழா பார்க்க பரந்து விரிந்த மந்தை வெளித்திடலில் அலைகடல் போல் மக்கள் திரளாகக்கூடுவர். சித்திரைத்திங்கள் அமாவாசை அடுத்த பஞ்சமி திதியில் தொடங்கி வெள்ளிக்கிழமை மாலையில் நிறைவுபெறும். அன்று பிரெஞ்சு ஆட்சியாளர்கள், அரசு உயர் அதிகாரிகள், காவலர்கள் மேளதாளம் முழங்க மலர் மாலை அணிவித்துத் தெலார்சுபேட்டை திரௌபதி அம்மன் ஆலயத்திலிருந்து ஊர்வலமாக அழைத்து வந்து கூத்தாடி மேடையில் அமரவைத்துத்

தலைவர் அ. செகந்நாதக் கவுண்டர், சீனுவாசக் கவுண்டர், அரியபுத்திரக் கவுண்டர், காத்தவராயன் கவுண்டர், மாம்பர் வெ. வடிவேல் கவுண்டர் ஆகிய அறங்காவலர் குழுவினர் பெருமரியாதை செய்து வழியனுப்பி வைத்த காட்சி இன்றும் என் நெஞ்சில் நிழலாடிக் கொண்டிருக்கிறது. மின் விளக்கு இல்லாததால் கைவிளக்கு ஏற்றிக் கைத்தறிநெசவு கதிர்காமத்திலும், வேளாண் பயிர்த் தொழில் வீமக்கவுண்டர்பாளையம் தெலார்சு பேட்டையிலும் மிகச் சிறப்பாக நடந்து வந்த காலமது.

அன்று வீதியில் அதிகாலையில் கைத்தறி நெசவாளர் ஓசையும், மாட்டை முன் சூட்டி ஓட்டி மேழியைத் தோளில் தாங்கி நடக்கும் உழவர் குரலோசையும் இன்று கேட்க முடியவில்லையே என்ற என் ஏக்கத்தை இக்கட்டுரையில் பதிவு செய்து மனநிறைவு கொள்கிறேன்.

ஊர்கூடித் தொழில் செய்த அமைதியான காலமது. அறிவியல் முன்னேற்றத்தில் அனைத்தும் பெற்றுவிட்டோம். தெய்வ வழிபாட்டுத் திருத்தலங்கள் செல்வச் செழிப்பால் சிறந்தோங்கி விளங்குகின்றன.

கதிர்காமம் வாழ் சான்றோர்கள் ஆலயப் பணிகளைக் கலையுணர்வோடு காலத்திற்கேற்றாற்போல் திருப்பணிகள் பலசெய்து பெருங்குடமுழுக்கு நன்னீராட்டுத் திருவிழாவில் மலர் ஒன்று வெளியிடும் பெரும் பணி ஏற்றிருக்கும் தாளார்களைப் போற்றி வணங்குகின்றேன்.

தமிழ்க்கடவுள் திருமுருகன்சுடர் விடும் கதிர்வேலனாய் வள்ளி, தெய்வானையுடன் காட்சி தருகின்றான். அவனருள் வாழ்க்கை மக்களுக்கோர் பாடம் புகட்டட்டும் என்ற அருளாளர்கள் திருமுருகன் மேல் பன்னூற்கள் படைத்தருளியுள்ளார்கள். அந்நூல்களில் மூத்தது, முதன்மையானது நக்கீரர் அருளிய திருமுருகாற்றுப்படை. கந்தபுராணமும், அருணகிரியார் பாடிய திருப்புகழும், குருபாத தாசர் பாடிய குமரேசர் சதகமும், வள்ளல் இராமலிங்க அடிகளார் பாடிய சென்னைக் கந்தகோட்டப் பாடலும், அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிச்சிந்தும், மகாகவி சுப்பிரமணிய பாரதியார் பாடிய தோத்திரப்பாடலும், பாலதேவராயன் பாடிய கந்தர்சஷ்டிக் கவசமும் என்றும் படிக்கப்பட வேண்டியவை. இளைஞர்களுக்குப் பாடமாகப் புகட்டப்பட வேண்டியவை.

ஆலயத் திருப்பணி செய்யும் அன்பர்கள் வாரம் அல்லது மாதந்தோறும் கந்தன் கருணையைப் போதிக்க வகுப்பு நடத்தும் வாய்ப்பை உண்டாக்கலாம். வள்ளலாரின் சண்முகக் கும்மி இன்றைய வாழ்வியலுக்கு உதவும் என்ற வகையில் சில அடிகளை

நினைவுபடுத்த விழைகின்றேன். சண்முகன், கந்தன், முருகன், பழனியாண்டி என்ற பட்டப் பெயர்களில் அழைக்கப்படும் திருமுருகன்

குறவர் குடிசை நுழைந்தாண்டி – அந்தக்
கோமாட்டி எச்சில் விழைந்தாண்டி
துறவர் வணங்கும் புகழாண்டி – அந்தக்
தூயவன் பொன்னடி போற்றுங்கடி

என்ற பாவடிகளில் "சாதி கடந்து முருகன் காதல் கொண்டான். குறத்தி வாழ்விடம் குடிசை. அவ்விடம் தேடி அவள் எச்சில் விழைந்தான். துறவிகள் போற்றும் புகழ் வாய்ந்த அந்தத் தூயவனைப் போற்றுங்கள்" – என்று வள்ளலார் கூறிய கருத்துக்களை வாழும் மக்கள் கடைப்பிடிக்க வேண்டும். சாதி வெறிபிடித்து அலையும் தலைவர்கள் சிந்தித்துப், பார்க்க வேண்டும். முருகன் தமிழர்களின் தனிப்பெருங்கடவுளாகப் போற்றப்படுவதைக்

"குறுமுனிக்கு உபதேசம் வைத்தமெய் ஞான குருவே
மயிலேறி விளையாடு குகனே ! புல்வயல் நீடு
மலைமேவு குமரேசனே ! – என்று குமரேசர் சதகம் கூறுகின்றது. குறுமுனியான அகத்தியருக்குத் தமிழைக் கற்பித்த ஞானகுரு – முருகன் என்றும் போற்றுகின்றது.

"தோகைமேல் உலாவும் கந்தன், சுடர்கரத்து இருக்கும் வெற்றி, வாகையே சுமக்கும் வேலை, வணங்குவதே எமக்கு வேலை" – என்று புதுவையில் வாழ்ந்த தேசியக்கவி பாரதி போற்றி வணங்கியதை நாமும் ஏற்று வணங்குவோம்.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோட்டம் கட்டி விழாவெடுத்த ஞான்று இலங்கை மன்னன் கயவாகு வருகை தந்து சிறப்பித்தான் என்பதை இளங்கோவடிகள் தாமியற்றிய சிலப்பதிகாரத்தில் செப்பியுள்ளார். அந்த இலங்கையில் கந்தகோட்டம் கதிர்காமம் என்னும் ஊரில் செந்தமிழ்ப் பற்றுடன் இன்றும் நம்தமிழ் மக்கள் போற்றி வழிபட்டு வருகின்றார்கள். அந்தக் கதிர்காமத்தில் உறையும் கதிர்வேலன்தான் இந்தப் புதுவைக் கதிர்காமத்திலும் வாழ்ந்து வாழ்த்தியருளுகின்றான்.



உ

அத்தி முகத்து உத்தமனை
நித்தம் நினை சித்தமே!



# விநாயகர் வழிபாடு

தமிழாகரர் தெ. முருகசாமி
இராதாகிருட்டிணன் நகர், புதுச்சேரி – 605 009.

நமது நாட்டில் உள்ள சிவாலயங்கள் தோறும் நடைபெறும் பூசை முறைகளின் தொடக்கமாக விநாயகரை வழிபடுவது ஒரு மரபாக இருந்து வருகிறது. வீடுகளிலும் திருமண விழா, புதுமனை புகுவிழா போன்ற மங்கள விசேடங்களை நடத்தும்போதும் தொடக்கத்தில் விநாயகரை வணங்கித்தான் தொடங்குகிறோம். தமிழ்நாட்டின் மிகப் பழைய சங்க இலக்கியங்களிலோ தொல்காப்பியத்திலோ காணப்படாத விநாயக் கடவுள் பற்றிய தெளிவான குறிப்பைச் சைவத் திருமுறைகள் தோன்றிய காலத்திலிருந்துதான் தெளிவாக அறிய முடிகிறது. வேத நெறியும் சைவத் துறையுமாகிய வடமொழி மரபும் தமிழ்மொழி மரபும் இணைந்த ஒரு கலவையான வழிபாட்டுமுறை தமிழகத்தில் தோன்றிய காலந்தொடங்கி விநாயகரை வழிபடுகிற வழக்கம் வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்பது பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களின் கருத்தாகும்.

இந்த ஆராய்ச்சி ஒருபுறமிருக்க, விநாயகரின் வழிபாடும் பூசனையும் எளிமைக்கு எளிமையாக அமைந்துவிட்டதால் மற்ற கடவுளர்க்கு இல்லாத சிறப்பும் தலைமையும் வளர்ந்து விட்டதோடு எங்கும் நீக்கமற நிறைந்து காணும் முதலிடத்தையும் பெற்றுவிட்ட தெய்வமாக விளங்குகிறார் என்பது ஆன்ம சிந்தனைக்குரிய இனிப்பான செய்தியாகும்.

“பிடித்து வைத்தால் பிள்ளையார்” என்பது ஒரு நாட்டுப்புறப் பழமொழி. ஒருபிடி சாணத்தை உருட்டி மஞ்சள் குங்குமம் இட்டு அறுகம் புல்லை அதன் தலையில் வைத்துவிட்டால் வழிபாட்டிற்குரிய பிள்ளையார் நம் கண்முன் தோன்றிடுவார். அதுபோலவே மஞ்சள்பொடியை எடுத்து சிறிது தண்ணீரால் ஈரமாக்கி மூன்று விரல்களால் பிடித்து வைத்தாலும் விநாயகர் அங்கே வந்துவிடுவார். மேலும் களிமண்ணால் அவர் வடிவத்தைப் படைத்து வைத்து வணங்கும் வழிபாட்டு எளிமையும் உடைய ஒரே கடவுளாக உள்ளவர் விநாயகர் ஒருவரே ஆவார்.

கடவுள் ஒரு புல்லிலும் உள்ளான் (God is a Blade of Grass) என்பது ஓர் ஆங்கில ஞானியின் கடவுள் தத்துவமாகும். இந்த அடிப்படையில் அமைந்த எளிமைதான் விநாயகர் வழிபாடு விரைந்து எங்கும் பரவக் காரணமாயிற்று. இத்தகைய எளிய கடவுளுக்கு விநாயகர், பிள்ளையார், கணபதி, ஐங்கரன், ஆனைமுகன்,

விக்கினேசுவரன் போன்ற பலபெயர்கள் உள்ளன. ஒவ்வொரு பெயரும் ஒவ்வொரு காரணம் பற்றிய பெருமையை உணர்த்தும் பெயர்களாக உள்ளன.

வி+நாயகன் – விநாயகன். இதற்கு மேலான தலைவன் என்பது பொருள். மேலான ஞானத்தை (அறிவை) விஞ்ஞானம் என்பது போல மேலான தெய்வம் விநாயகர் ஆவார். தனக்குமேல் ஒரு தலைவன் இல்லாத, தானே தலைவனாம் தன்மையன் என்பது இதன் நுட்ப பொருளாகும்.

வி–என்றால் கல்வி என்ற பொருளும் உண்டு. தன்னை வணங்குவார்க்குக் கல்வியைத் தருபவர் என்றும் உரைப்பர். வி–என்பதற்குத் திசை என்ற மற்றொரு பொருளும் உண்டு. அதற்கேற்ப அவர் ஒருவரே எல்லாத் திசைகளுக்கும் தலைவர் என்ற பொருள் பொருத்தமான வகையில் எங்கும் காணப்படும் கடவுளாகக் காட்சியளிக்கிறார்.

தேவகணங்களுக்கெல்லாம் தலைவர் என்பதால் கணபதி என்றும் விரிந்து பரந்த உலகில் கடவுள் எங்கும் உள்ளார் என்பதைப் பளிச்சென உணர்த்தவே கண்ணுக்குப் புலப்படும் பேருருவமான யானையின் வடிவம் தரப்பட்டதால் ஆனைமுகன் என்றும் விநாயகருக்குப் பெயர்கள் அமைந்தன. ஐந்து கைகளை உடையதால் ஐங்கரன் எனப்பட்டார். தம்மை வழிபாடு செய்வார்க்கு நேரும் இடையூறுகளை நீக்குவதால் விக்கினேஸ்வரன் என்ற பேர் பெற்றார். இவ்வாறு பல பெயர்களால் பெருமை பெற்ற விநாயகரின் உருவத் தோற்றம் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக உள்ள இனிய தெய்வமாகவும் உள்ளார்.

விலங்கு உடலும் மனித உடலும் சேர்ந்த இரட்டை வடிவத் தோற்றம் உடையவராக விநாயகர் காணப்படுகிறார். திருமால் நரசிங்கமாகத் தோற்றமளித்தது போல விநாயகரும் நரவிலங்காகக் காட்சி தருகிறார். அஃறிணையும் உயர்திணையும் இணைந்ததே இவ்வுலகம் என்பதைக் கடவுள் தாமாக இருந்து காட்டும் விதமாக அவ்விருவேறு உருவத் திருமேனி விநாயகருக்குப் படைக்கப்பட்டது. இத்தோற்றத்துடன் கூடிய விநாயகரைத் திருமூலர்,

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை<br>
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை<br>
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்<br>
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

எனத் துதித்து வழிபடுவதாகத் திருமந்திரத்தின் முதல் வணக்கப்பாடல் தெரிவிக்கிறது.

யானையின் நான்கு கால்களும் விநாயகருக்கு நான்கு கைகள். எந்த விலங்கிற்கும் இல்லாத துதிக்கை ஐந்தாவது கை. இக் கைகள் ஐந்தும் படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல், அருளல் என்ற ஐந்தொழிற்கான அடையாளங்கள்.

ஒரு கையிலுள்ள பாசக்கயிறு பிறவிக்குக் காரணமாகிய பாசத்தைச் சுட்டி உணர்த்தும் படைப்புத் தொழிலைக் குறிக்கிறது.

மற்றொரு கையின் அங்குசமானது உலக சங்காரத்தை உணர்த்துகிறது.

கீழ்நோக்கிய அபயவரதமாகிய இன்னொரு கை தனது தாளை அடைந்தார்க்கு அஞ்சேல் என அபயம் அளித்துத் திருவடி இன்பத்தை அருளும் குறிப்பைக் காட்டுகிறது.

மோதகமுடைய மற்றொருகை இன்ப அருளைச் சட்டென்று வெளிப்படையாகக் காட்டாமல் சற்று மறைத்துக் காட்டியருளும் திரோதானத்தைச் சுட்டுகிறது.

ஐந்தாவதாகிய தும்பிக்கை மூக்காக அமைந்துள்ளதால் மூச்சுக்காற்றை உள்வாங்கி வெளிவிடும் உயிர்ப்பால் மனித உடலில் உயிர் தங்கும் காலம்வரை ஆன்மாவைக் காத்தருளும் குறிப்பைத் தருகிறது. இப்படியாக ஒவ்வொரு உறுப்புகளுக்கும் தத்துவ விளக்கம் கூறப்படுகின்றன

விநாயகப் பெருமானுக்குரிய கொம்புகள் இரண்டு. ஒன்று ஒடிந்தும் மற்றது முழுமையாகவும் காணப்படும். ஒடிந்த கொம்பு உலக ஆசாபாச உணர்வுகளில் திளைக்கும் ஆன்மாவின் பாச ஞானத்தையும் முழுக்கொம்பு ஆன்மாவைப் பக்குவப்படுத்தி அருளவல்ல அப்பழுக்கற்ற பரிபூரணமாகிய இறைவனை உணர்த்தும் பதிஞானத்தையும் சுட்டுவதாக உள்ளன.

எந்த விலங்கிடத்தும் காணமுடியாத உடலின் மேல் தோல் சுருக்கங்கள் யானைக்கு மட்டுமே உண்டு. யானைக்குள்ள தோற்சுருக்கம் மனித உடலிலும் காணலாம். நரை திரை மூப்பு என்ற வாழ்விற்குட்பட்டது மனித வாழ்வு என்பதைச் சுட்டும் அடையாளமே இதுவாகும்.

விநாயகரின் உடல் உறுப்புகளில் எல்லோரையும் வியக்கச் செய்வது அவரது பெரு வயிறு. எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் காட்டும் பரம் பொருள் தத்துவத்தை உணர்த்தும் குறிப்பை அப்பெருவயிறு காட்டும்.

மேலும் அப்பெருமானுக்குள்ள தாமரை இலை போன்ற அகன்ற பெரிய இரு செவிகளும் பக்தர்களிடம் பிறவிப் பிணியாகிய அனல்காற்று வந்து தாக்காத படியாகக் காத்து அருட்காற்றை வீசும்படியான விசிறிகளாக உள்ளன.

எத்தகைய உருவத்திற்கு இத்தனை சிறிய கண்கள் என வியக்குமாறுள்ள மிகச் சிறிய கண்கள் இரண்டும் எதையும் நோக்கரிய நோக்கால் பார்க்க வேண்டும் என்ற ஞானக் குறிப்பை உணர்த்தும் அடையாளமாகக் காணப்படுகின்றன.

இத்தகைய பேருருவான விநாயகர் நொய்ம்மையான எளிய பிறவியாகிய எலி மீது அமர்ந்திருப்பதான காட்சி வியப்பினும் வியப்பாக உள்ளது. இவ்வளவு பெரிய உருவம் இவ்வளவு சிறிய உருவத்தின்மேல் எப்படி அமர்ந்து நகர்கிறது எனச் சிந்திக்கவும் வியப்பாக உள்ளது. செய்திப் பரிமாற்றத்திற்கு உதவியாக உள்ள தொலைபேசியின் கம்பி சிறிதாயினும் அது தாங்கிச் செல்லும் செய்தியின் வலிமையால் நலிவடைவதில்லை. நாம்காணும் பருப்பொருளைவிட எண்ணத்திற்கும் கருத்திற்கும் அதிக ஆற்றல் உண்டு. எனவே ஞான சொரூபமாகிய ஆண்டவனை (விநாயகரை) எளிய ஆன்மா (எலி) சுமக்க வேண்டுவது இயல்பு என்ற தத்துவத்தின் வெளிப்பாடே விநாயகப் பெருமானை எலி சுமப்பதான திருவருட் காட்சியாகும்.

இவ்வாறாகப் பல்வேறு தெய்வத் திருநாமங்களாலும் ஞானத்தோற்றத்தாலும் கண்ணிலும் கருத்திலும் கொள்ளத்தகும் விநாயகப் பெருமான்தான் மூல முழு முதற் கடவுள் என்பதால் அவரை வணங்கி வழிபட்டுப் பலனை அடைந்தோர் பலராவர். அகத்தியர், காசிபர், இராவணன் போன்ற புராண மாந்தர்கள் வழிபட்டுப் பேறு பெற்றதாக விநாயகர் புராணம் கூறுகிறது.

விநாயகரது வழிபாட்டில் ஆவணிமாத சதுர்த்தி விரத வழிபாடு மிக உயர்ந்தது. ஆவணி அமாவாசைக்கு அடுத்த நான்காம் நாள் தொடங்கி மறு திங்கள் சுக்கிலபட்ச சதுர்த்தி வரை முப்பது நாள் விரதம் இருக்கவேண்டும். நாள்தோறும் உடல் தூய்மையுடனும் உள்ளத் தூய்மையுடனும் ஆனை முகக் கடவுளை மண்ணாலான உருவம் செய்து தோத்திர வழிபாட்டு மந்திர உச்சாடணத்தால் உருவேற்றி மலரிட்டு தீபதூபத்துடன் வழிபடவேண்டும். நிவேதனமாக வைக்கப்பட்ட பால், பழம் முதலியவற்றை வழிபாட்டிற்குப்பின் உண்டு மகிழ்வதோடு மண் உருவை ஒவ்வொரு நாளும் நீரில் கரைத்துவிட வேண்டும். பூசனை முடிவில் அவரவர்க்கேற்ற தானங்களைச் செய்யவேண்டும் என விநாயகர் புராணம் கூறுகிறது.

விரதம் கொள்வதற்கு ஆவணித் திங்களே சிறந்தது. கார்காலம் தொடங்கும் முதற்பருவம் என்பதால் வணக்கத்தையும் வழிபாட்டையும் முதலில் கொள்ளும் விநாயகருக்கு ஆவணி உகந்த மாதமாகும். புராணத்தில் கூறியவாறு பருவதராஜன் தன் மகள் பார்வதிதேவிக்கு இச்சதுர்த்தி விரதச் சிறப்பைக் கூறும்போது ஆவணி மாதச் சதுர்த்திச் சிறப்பு கூறப்படுகிறது. மகாபாரதக் கிளைக் கதையில் வரும் நிடத நாட்டு அரசன் நளனது வரலாற்றில் நளன் விநாயகரின் சதுர்த்தி விரதத்தால் இகபர நலம் எய்தினான் எனக் கூறப்படுகிறது. ஆவணி மாதச் சதுர்த்தி விரதம் சிறப்படைந்ததால் எல்லாமாதச் சதுர்த்தியும் சிறப்பு வழிபாட்டுக்குரியதாக ஆனது.

சுக்கிலபட்ச வளர்பிறை சதுர்த்தியைப் போல அமரபட்சத் தேய்பிறை சதுர்த்தியும் வழிபாட்டுக்குரிய சிறப்பிடத்தைப் பெற்றுவிட்டது. இத்தேய்பிறை சதுர்த்தியைச் சங்கடகர சதுர்த்தி எனப் போற்றி வழிபடுவர். அமரபட்ச சதுர்த்தி சங்கடகர சதுர்த்தியாகப் பெயர் பெற்றதற்கு ஒரு வரலாறு உண்டு.

கயிலைக்குச் சிவபெருமானைக் கண்டு வழிபடவந்த நாரதர் சிவனிடம் தான் கொண்டு வந்த மாங்கனி ஒன்றைத் தர, அதனால் சிவன் தம் பிள்ளை இருவரில் யாருக்குத் தருவது என நாரதரிடமே கேட்ட போது நாரதர் இளையவராகிய முருகனுக்குத் தரும்படி கூறினார். நாரதர் உரை கேட்டுச் சினந்த விநாயகருக்குக் கோபம் மூண்டது. இதை ஆகாயத்திலிருந்து பார்த்த சந்திரன் நகைத்து ஏளனம் செய்தான். உடனே சந்திரனது ஒளி மங்கித் தேயக் கடவதாகுக என்றும் தேய்ந்த உருவத்தைப் பார்த்தவர்களும் துன்பமடைவர் என்றும் சாபம் வழங்கியதால் சந்திரன் ஒளியிழந்து போகவும் தேவர்கள் அனைவரும் சந்திரனது அமுத ஒளி இல்லாமல் துன்புற்றனர்.

விநாயகர் சாபத்தை மாற்ற வேண்டித் தேவர்கள் அவரிடம் சென்று சிறியோர் செய்த சிறு பிழையைப் பொறுத்தருள வேண்டியவாறு விநாயகரும் சந்திரனுக்கு வாழ்வளித்தார். ஆனாலும் ஆவணித் திங்களின் முன் பக்கத்தில் வருகின்ற நான்காவது நாளில் மட்டும் சந்திரனை எவரும் பார்க்காதிருக்கக் கடவர் என்றும் எவரேனும் மறந்தும் பார்த்தால் துன்புறுவர் என்றும் திருவாய் மலர்ந்தருளினார். சந்திரனும் தன் தவற்றை எண்ணி மன்னிப்பு வேண்ட, விநாயகர் சந்திரனிடம் “அங்காரக சதுர்த்தி தோறும் நீ தோன்றுகிற நேரத்தில் உன்னை என்னோடு சேர்த்து வணங்கும் படியாக உனது கலைகளுள் ஒன்றை என் முடியில் வைத்துக் கொள்வேன் எனக் கூறியருளினார்.

விநாயகர் கூறிய அங்காரக சதுர்த்திதான் சங்கடகர சதுர்த்தி. பரத்துவாச முனிவருடைய மகன் அங்காரகன் தந்தையிடத்தில் ஆயகலைகள் கற்றுத்தேர்ந்து விநாயக மந்திரச் சிறப்பை அறிந்து அம்மந்திரத்தின் வழி விநாயகரது அருளைப் பெற விரும்பினான். அவனது தவத்திற்கு இரங்கிய விநாயகர் அவன் கேட்ட வரங்களைத் தந்தார். ஆகாயத்தில் உள்ள கோள்களுள் ஒன்றாகத் தான் ஆகவேண்டும் என்றும் விநாயகர் காட்சி தந்த சதுர்த்தியானது அங்காரகன் என்ற தன் பெயருக்கேற்ப செவ்வாய்க்கிழமையில் வரும்போது துதிப்பவர்களின் சங்கடங்கள் தீர்க்கப்பட வேண்டும் என்றும் சந்திரன் கேட்டபடி விநாயகர் அருளியதால் மற்றைய சதுர்த்திகளைவிட அங்காரகனது நாளாகிய செவ்வாய்க்கிழமை வரும் சதுர்த்தியானது விநாயகருக்குப் பேருவகையைத் தந்தது. அந்த சதுர்த்தி பக்தர்களின் தீராத சங்கடங்களை எல்லாம் தீர்க்கும் நாளாதலால் அது சங்கடகர சதுர்த்தி என்ற பேர் பெற்றது. இச் சங்கடகர சதுர்த்தி மாசி மாதத்தில் அமரபட்சத்தில் செவ்வாய்க்கிழமை கூடியதாக இருந்தால் மிகவும் சிறப்பானது என்பது விநாயக புராணம் கூறும் சங்கடகர சதுர்த்தி விரத பலாபலனாகும்.

விநாயகரது வழிபாட்டில் அவரைக் கும்பிடுவோர் தலையில் குட்டிக் கொண்டு கும்பிடுவது வழக்கம். தலையை இடமாகக் கொண்ட மூளையின் இயக்கமாக உள்ளது அறிவு. அதைத் தட்டி எழுப்பும் அடையாளமாகக் குட்டிக் கொள்வதென்பது சாதாரண வாழ்வியல் உண்மையானாலும் புராணத்தின்படி இதற்கோர் உட்பொருள் உண்டு.

கயிலைக்குச் சென்ற இராவணன் இலங்கையில் சிவலிங்கம் ஒன்றை நிறுவ எடுத்துவந்ததை அறிந்த இந்திரன் அதைத் தடுத்து நிறுத்த விநாயகரை வேண்டிக் கொள்ள. அவரும் இராவணனை எதிர்த்துப் போராடியபோது விநாயகர் என அறியாத இராவணன் அவரது தலையில் குட்டினான். பின்னர் தம்மை விநாயகர் எனக் காட்டியதும் இராவணன் கண்டு வணங்கி மன்னிப்பு வேண்டியதோடு தண்டனையும் கேட்டான். முன்பு என் தலையில் குட்டியவாறு நீயே உன் தலையில் குட்டிக்கொள் என விநாயகர் கூறி மன்னித்தருளினார். இதனால் தன்குற்றத்தை உணர்ந்து தானே தன் தலையில் இரத்தம் சொட்டச் சொட்டச் குட்டிக் கொண்டான். தவறு செய்தவர் எவரேயாயினும் விநாயகர் சந்நிதி முன் நின்று தம் தவறுகளுக்காக வருந்தி தமக்குத் தாமே தண்டனையாகக் குட்டிக் கொண்டால் தவறுகள் மன்னிக்கப்படும். ஆக மன்னிக்க வேண்டும் என இராவணன் வேண்டிக் கொள்ள விநாயகரும் அவ்வாறே ஆகும்படி அருளியதாக அவரது புராணம் கூறும் கதையின் உட்கருத்து, நலம்பயக்கும் வாழ்வியல் கருத்தேயாகும்.

இப்படியாக மூல முழு முதற் கடவுளாகிய விநாயகப் பெருமானை எந்நாளும் வணங்கி வழிபடுவோர் எல்லா நன்மைகளையும் அடைவர் என்பதால் அத்தகு தெய்வத்தை எப்போதகத்து நினைவார்க் கிடரில்லைக் கைப்போ தகத்தின் கழல் எனப் போற்றி வணங்குவோமாக!

நன்றி : காரைக்குடி சோவாரி பிள்ளையார் கோவில் குடமுழுக்கு விழா மலர்



உ
சிவமயம்

# கயிலை நாதன்

சித்தாந்தரத்தினம். சிவநெறித் தொண்டர் சிவ. ஏ. முனிசாமி,
புதுச்சேரி.

பரத கண்டத்தின் வடதிசையின்கண் பேரெயிலெனத் திகழும் இமயமால் வரையின் உச்சியில் வடபுறத்தே ஆழிமட்டத்திற்கு மேல் 22,900 அடி உயரத்தில் தென்திசை நோக்கியதாக திருக்கயிலை மாமலை அமைந்துள்ளது. வெள்ளியங்கிரி என்பதற்கொப்ப அஃது பனிபடர் வரையாய்ப் பொலிகின்றது. நொடித்தான் மலை எனவும் தேவாரம் இம்மலையைப் பாடுகிறது. நொடித்தல் அஃதாவது அழித்தல். அழித்தல் தொழில் புரியும் உருத்திர மூர்த்தி இம்மலையில் உறைவதால் அப்பெயர் பெறுகிறது.

இது பூகயிலாயம் எனவும் பெயர் பெறும். இறைவனது இருப்பிடமாய் எங்கும் பரவியுள்ள அருவமாகிய கயிலாயம் வேறு; இப்பூ கயிலாயம் வேறென ஆன்றோர் அறுதியிடுவர்.

இயற்கையாய் அமைந்த இம்மலையின் செங்குத்துச் சுவர்கள் திருக்கோயிலின் 'திருச்சுற்றுகள்' (பிரகாரங்கள்) போல் இலங்குகின்றன. சதுரம் முக்கோணம், வட்டம் போன்ற வடிவங்களில் சித்திர வேலைப்பாடுகள் உடைய மேடைகளும் கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்புடைத்தாய்க் காட்சி அளிக்கின்றன.

தென்குமரி முதல் இமயம் வரையுள்ள திருக்கோயில்களில் விளங்கும் கோபுரங்கள் எத்தனை வகையுண்டோ அத்தனை மாதிரிகளில் கோபுரங்களும் இத்திருமலையின் கண் காணக் கிடக்கின்றன.

இத்தகு கீர்த்தியும் சீர்த்தியும் மிக்க இக்கயிலை வரையிற்றான் கயிலைநாதன் எழுந்தருளி உயிர்கட்கு ஆராவமுதாய்ப் பேரருட்கருணை மழை பொழிகின்றான்.

மூவர் முதலிகளான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரரின் தேவாரப் பாடல்கள் கயிலை நாதனைப் போற்றிப் பரவுகின்றன. இம்மூவருள் சுந்தரர் மட்டுமே வெள்ளை யானை மீதேறி கயிலை சென்றார். அப்பரடிகளோ உடல் உறுப்புகள் தேய்ந்தொழியுமளவு மனவுறுதி கொண்டு கயிலைப் பயணம் மேற்கொண்டு அது கூடாமல் கயிலை நாதனின் திருவருளால் கயிலைக் காட்சியைத் திருவையாற்றில் கண்டு மகிழ்ந்தார்.

திருஞானசம்பந்தரோ திருக்காளத்தி மலையில் இருந்தவாறே திருக்கயிலையைத் தரிசித்து சொல்லலங்கல் அணிவித்துள்ளார்.

தருக்குற்ற இலங்கை வேந்தன் இராவணன் ஒருமுறை கயிலை வரையைப் பெயர்த்தெடுக்க முயன்றபோது இறைவன் தன் கால் விரலால் அழுத்த மலையின் கீழ் அகப்பட்டுத் தன்பிழை உணர்ந்து சாமகானமிசைத்து வழிபட்டு வாளும் வாணாளும் பெற்றான். இதனால் கயிலை நாதனின் ஒளிவந்த கழல்கள் எளிவந்த அடியார்கட்கு இன்னருள் சுரக்கும் என்பது போதறும்.

சிவனடியே சிந்திக்கும் சிவஞானம் உடையவராய் விளங்கிய காரைக்கால் புனிதவதியம்மை கணவனால் புறக்கணிக்கப்பட்டபின் 'வனப்பு நின்ற தசைப்பொதி கழித்து இறைவர் தாள் போற்றும் பேய்வடிவு பாங்குறப் பெற்று பேயாய நற்கணத்துள் ஒருவராகி, திருக்கையிலையில் எழுந்தருளிய கயிலைநாதனின் திருவோலத்தைக் காணும் பெருவிருப்புடன் கயிலை மலையைத் தம் காலால் மிதித்தல் தகாதெனக் கருதியவராய் தம் தலையால் நடந்தே தரிசிக்க சென்றார்.

'இமயப் பொருப்பின் இளமென்பிடியாகிய' உமையம்மை பேய்வடிவங்கொண்டு தலையினால் தம்மை நோக்கி வரும் புனிதவதியாரைக் கண்டவுடன் பிரானை நோக்கி, "இவள் யாரென வினவ 'இவள் அன்பினால் நம்மைப் பேணும் அம்மை காண்' எனப் பதிலிறுத்து 'அம்மையே' எனும் செம்மொழியால் பேயாரை அழைத்தருளினார் இறைவர்.

தாயும் தந்தையுமிலியாகத் திகழும் இறைவர் 'அம்மையே' என அழைத்துச் சிறப்பித்தது கயிலை வள்ளல் தன்பால் பேரன்பு பூண்டோர்க்குத் தண்ணருள் சுரக்கும் இயல்பினன் என்பதற்கு மற்றுமோர் சான்று.

நாமும் ஒன்றியிருந்து புதுச்சேரி, கதிர்காமம் அருள்மிகு கதிர்வேல் சுவாமி திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கைலாயநாதனை நாளும் சிந்தித்தால் நம் நெஞ்சினுள் கயிலை நாதனின் கழலடி காணலாம்.



உ



# கதிர்காமத்துறை கந்தா போற்றி

முதுபெரும்புலவர். ந.தண்டபாணி,
புதுவண்டிப்பாளையம், கடலூர்-4.

தற்போது வரலாற்று அறிஞர்கள் தொல்காப்பியர் காலம் கி.பி.க்கு முன்னதாக அதாவது 5000 ஆண்டாக நிர்ணயித்துள்ளனர். அத்தொல்காப்பியத்தில் தொல்காப்பியர் கடவுட் கொள்கையைத் தெளிவாகக் கூறியுள்ளார்.

நிலத்தை - நான்கு வகையாகப் பிரித்து 1. மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி என்றும் 2. காடும் காடு சார்ந்த இடமும் முல்லை என்றும் 3. வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என்றும் 4. கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் என்றும் விளக்கம் காட்டி, மேலும் இந்நிலங்களில் ஏதேனும் ஒன்று தன் வளம் இழந்து பயன் தராதாயின் அது பாலை எனலாகும் என்றும் உனரத்துள்ளனர். ஆதலின் நிலம் ஐவகை ஆம்.

இந்நிலங்கட்குத் தெய்வமாக விளங்குவன சேயோன் (முருகன்) மாயோன் (திருமால்) இந்திரன், வருணன் ஆம் என்றார்.

மேலும் 'கொடிநிலை கந்தழி வள்ளி' என்றும் ஓர் உண்மையையும் கூறுகிறார்.

கொடிநிலை - என்பது கீழ்த்திசையில் தோன்றும் வெஞ்சுடர்

கந்தழி - ஒரு பற்றுக்கோடின்றி அருவாகித் தானே தனித்து நிற்கும் தத்துவம் கடந்த பொருள்.

வள்ளி - தண்கதிர் மண்டலம் நிலவாம் என ஒரு முறையையும் அக்காலத்துச் சான்றோர் வாயிலாக எடுத்துக்காட்டியுள்ளார்.

'கொடிநிலை கந்தழி வள்ளியென்ற வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்று' என்ற இவைகள் வடுநீங்கு சிறப்பினை உடையன எனவும் அழுத்தமாகக் கூறுகிறார்.

இம்முறையில் - முருகன், செவ்வேள் - கந்தன் (கந்தழி) சேயோன் என்ற பெயர்களுடன் தொடர்புடையவனாக விளங்குகிறான்.

சிலப்பதிகாரம் - ஞாயிறு போற்றுதும் திங்களைப் போற்றுதும் மாமழை போற்றுதும் என்கிறது. இளங்கோவடிகள் தனது கோட்பாட்டிற்கு இணங்க தெய்வ வணக்கம் கூறுகிறார். எந்த வகையிலும் முருகன் தமிழர்களின் பெரும் தெய்வமாக விளங்குகிறான்.

நக்கீரர் - திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்தில்

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு

ஓ வற இமைக்கும் சேண்விளங்கு அவிரொளி

என்று கடலில் தோன்றும் ஞாயிற்றின் தோற்றமே முருகன் வழிபாட்டுக்கு உரியதென்கிறார்.

அடுத்து – முருகன் வேலைப் படைக்கலமாகக் கொண்டவன் எனவும் அவ்வேலுக்குச் செங்குந்தம் என்ற ஒரு பெயர் உண்டு என்பதும் தமிழிலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்றன. செங்குந்தம், ஈட்டி, வேல் என்பன ஒரு பொருள் உடைய சொற்கள்.

எனவே பன்னெடுங்காலமாக வழிவழியாக நாம் செங்குந்தத்தின் தொடர்பைக் கொண்டு செங்குந்தர் என்ற பெயர் கொண்டு வாழ்கிறோம்.

ஒளிவிட்டு விளங்கும் செங்குந்தம் 'கதிர்வேல்' எனப் போற்றப்படும். இலங்கையில் ஒரு மலையில் கதிர்வேசாமா கோவில் உள்ளது. அதன்வழிபாடே தனிச்சிறப்புடையதாம். அப்படிப்பட்ட பெயரைத் தமது மக்கள் நம்மைச் சார்ந்த மக்கள் தங்கட்குச் சூட்டிக்கொள்வதைக் காணலாம். இன்று நாம் கண்டு மகிழ நிகழும் புதுச்சேரியின் கதிர்காமத்துத் தலத்தில் பன்னெடுங்காலமாக விளங்கும் முருகனுக்குப் பெருஞ்சாந்திக் குடமுழுக்கு விழா பெறற்கரிய பேறாம்.

நம் குலப் பெருமையை எடுத்து மொழிய நம் மக்கள் வேண்டியதால். கொண்டல்கவி கவிச்சிங்கம் அஞ்சாநெஞ்சர் கூத்தபிரான் (நடராஜன் மறுபெயர்) நம்முடைய ஆற்றலைக் காண விரும்பி விடுத்த சவாலை ஏற்ற கைக்கோளப் பெருமக்கள் (முருகனால் கைத்துணையாகக் கொண்ட வீரபாகு வமிசத்தார் மனுநீதிச் சோழனின் சம்பந்திகள்) தங்கள் தலையைவெட்டி சிரச்சிங்காதனம் அமைத்துக் கொடுக்க அதன்மீது ஒட்டக்கூத்தர் என்னும் மாபெரும் கவிஞர் அமர்ந்து ஈட்டி எழுபது என்ற செங்குந்தத்தின் புகழைப்பாடி முருகனை வேண்டி, அந்த வெட்டப்பட்ட தலைகளை தம் தம் உடலுடன் சேர்க்கச் செய்து பெருமை பெற்றார் என்பர். (சோழர் அவைக்கு வந்து உளறினால் அவர்களை ஒருமிக்கச் சேர்த்து அவர்களின் தலைமுடியை ஒன்றோடொன்றாய் முடித்துப் போட்டு தயவு தாட்சண்யமின்றி வெட்டிப்போடுவார் ஒட்டக்கூத்தர் என்ற அவப்பெயருக்குப் புலவர் ஆளாக்கினர். இது புலவர்களின் விளையாட்டுச் செய்தியாகும்)

'செந்தமிழ்க் காகப் போந்து கிளந்த பாவடையாக
நந்தமிழ்க் கிடுங்கால் எல்லா நகரமும் உளம்வியந்த
அந்தரத் தமரர் வாழ்த்தி அணிமலரை மாரிபெய்தார்
இந்தச் செங்குந்தர் பெற்ற இசை(புகழ்) எவர்பெற்றார் அம்மே'

ஈட்டி எழுபது 72

'குன்றின் நெஞ்சுபகவெறிந்த குந்தம்'

'அஞ்சுடர் நெடுவேல்'

‘குந்தம் வேல் ஈட்டி என்பன ஒரு பொருளன’

முருகனையும் வேலையும் இணைத்துக் கதிர்வேல் என்ற திருப்பெயர்கொண்ட புதுச்சேரிக் கதிர்காமத்து எழுந்தருளி அனைவர்க்கும் அருள்பாலிப்பது மிகமிகச் சிறப்பாம்.

சென்ற நூற்றாண்டில் இரண்டு குடமுழுக்கும் தற்போது ஒன்றும் சிறக்க நடத்திப் பெருமை கொள்ளும் நம் இனத்தார்க்கும் உற்றார் உறவினர்க்கும் என் நன்றியும் நல்வாழ்த்தும் உரித்தாகுக. மேலும் நம்மை முருகன் கைவேலுடன் இணைத்துப்பாடும் நம் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் மயிலம் சுப்பிரமணியர் துதியமுதின் சில துளிகளை நெஞ்சில் நிறுத்துவோமாக.

‘வீழ்தலும் யாம் வாழ்தலுமே வேலவா உன் கையிலுண்டு

வீணில் நாங்கள் பட்டதெல்லாம் சொல்லவோ – நின்பால்

வேண்டி நிற்பதெல்லாம் இன்ப மல்லவோ – என்றும்

சூரர்குலம் வேரறுக்க ஒருவேலும் – நான்

துணையெனப் பிடித்திட (உன்) இரு காலும் – என்றும்

‘சமயம் வருதல் மெய் எனது உறவினர் சரவணபவ ஓம் எனச் சாற்றினர் பகை நாற்புறம் வளைத்தே நொறுக்கிடுவோம் இனிக்கையில் அவனருள் உண்டு கண்டாய்

கந்தன் படைச் செங்குந்தர்களாய்த்

துயர் ஒழித்தெழுவோம் இனிமேல்

பயமிலை குலம் உய்யும் உய்யும்

என்றும் பாடியவர் கனகசுப்புரத்தினமாம் பாவேந்தர் பாரதிதாசன் ஆவார். புலவர் வாக்கு பொய்யாது. நலமே தரும். வாழ்க! வாழ்க!



உ



# திருப்புகழ் காட்டும் திராவிடம்

**சேது முருகபூபதி**

தலைமை குற்றவியல் நீதிபதி (ஓய்வு)

புரவலர். அருள்மிகு அருணகிரிநாதர் திருப்புகழ் மன்றம்

பி-2, சுதானா அடுக்கு மாடி குடியிருப்பு, எண்26, மெயின் ரோடு,

ஆனந்த ரங்கப்பிள்ளை நகர்,புதுச்சேரி - 605 008.

---

'திராவிடம்' என்ற சொல்லைக் கேட்டதுமே சிலருக்குச் சிந்தை பலவாறாகப் பயணம் செய்யும். சமயம் மாறிய தமிழன் சமயம் மாறாத தமிழனைக் குறிக்கப் பயன்படுத்திய சொல். உண்மையில் இந்தச் சொல் முதன் முதலாகச் சிவபெருமானின் கருவறையில் சிவாச்சாரியர்களினால் பயன்படுத்தப்பட்டது என்றால் உங்களுக்கெல்லாம் ஆச்சரியமாக இருக்கலாம்! சிவன் கோவிலுக்குச் செல்லும் பழக்கமுடையவர்களுக்கு இது தெரியும். வழக்கமாகச் செய்யும் பூஜைகளையெல்லாம் முடித்துவிட்டு, வேத மந்திரங்களைச் சொல்லிய பிறகு சிவாச்சாரியர் கருவறைக்கு வெளியே உள்ள ஓதுவாரைப் பார்த்து 'திராவிட வேதப்பிரியே' என்று உரத்த குரலில் சொல்லுவார். இதைக் கேட்டதும் அந்தக் கோவிலில் உள்ள ஓதுவாமூர்த்தி பன்னிரு திருமுறைகளிலிருந்து ஏதாவது ஒரு பாடலைப் பாடுவார். அவர் பாடி முடித்ததும் சர்வ மங்கல தீப ஆராதனை நடக்கும். ஆக திராவிடம் என்று சொல் சமூக சீர்திருத்தவாதிகளுக்கு மட்டும் சொந்தமானது இல்லை. அரசியல்வாதிகளுக்கு மட்டும் சொந்தமானது இல்லை. ஆதியில் ஆன்மீகவாதிகள் பயன்படுத்திய சொல். காலடி சங்கரர் சீர்காழித் தமிழனான திருஞானசம்பந்தரைத் திராவிடச் சிசு என்றார். பிறகு நம் நாட்டுக்குத் தேசிய கீதம் பாடிய இரவீந்திரநாத் தாகூர் அவர்கள் பஞ்சாப் சிந்து குஜராட்ட மராட்டா திராவிட உத்கல வங்கா என்றார். மனோன்மணீயம் பாடிய சுந்தரனார் தெக்கணமும் அதில் சிறந்த திராவிட நல்திருநாடும் என்றார். தமிழ்த் தாத்தா என்று அழைக்கப்படும் டாக்டர். உ.வே. சுவாமிநாத ஐயர் திராவிட வித்யா பூன் என்று அழைக்கப்பட்டார். இங்கெல்லாம் பலவாறாகப் பயன்படுத்தப்பட்டாலும் உண்மையான பொருள் என்ன?

இந்த திராவிடம் என்ற சொல்லைப் பயன்படுத்தியே பகுத்தறிவுத் தந்தை பெரியார் அவர்களினால் திராவிடர் கழகம் என்ற இயக்கம் தொடங்கப்பட்டது. சமுதாய நோக்கத்திற்காகத் தொடங்கப்பட்ட கழகம், பேறறிஞர் அண்ணா அவர்கள் காலத்தில் அரசியல் சொல்லாகப் பயணப்பட்டது. தற்போது உள்ள தமிழக முதல்வர் அவர்களினால் இந்த திராவிடச் சிந்தனை வளர்ந்து வருகிறது.

'திராவிடம்' என்ற சொல் தமிழுக்குச் சொந்தமில்லத ஒரு சொல்லாகும். திராவிடம் என்ற சொல்லில் அப்படி என்னதான் பொருள் உள்ளது? தமிழுக்குச் சொந்தமில்லாத சொல்லாக இருந்தாலும் மனித இனமே எப்பொழுதும் எக்காலத்தும் ஏற்றுக்

கொள்ளக்கூடியதும் ஜாதி, சமயம், மதம், மொழி, நாடு போன்ற வரம்புகளைக் கடந்ததுமான உண்மைப் பொருளைச் சுமந்து வரக்கூடிய சொல்லாகும். அதனால்தான் தமிழினமும் அந்தச் சொல்லை ஏற்றுக் கொண்டது. திராவிடம் என்ற சொல்லுக்குத் தமிழில் முப்பொருள் உண்மை எனப் பொருள்படும்.

முப்பொருள் உண்மை என்றால் என்ன?

"சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்
மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த் தொகை
வான்றிகழ் தளையென வகுப்பர் அன்னவே!"

– கந்தபுராணம் கச்சியப்ப சிவாச்சாரியார்.

மனித சமுதாயத்திற்கே பொதுவான உண்மையைச் சொல்லக்கூடியது இந்தப் பாடல், காலங்காலமாய் கற்றறிந்த அறிஞர்களினால் உறுதியாகக் கண்ட கடவுட்கொள்கையைத்தான் மூன்றுள மறையெலாம் மொழிய நின்ற உண்மையைத்தான் முப்பொருள் உண்மை என்று உறுதிப்பட கூறப்பட்டுள்ளது. முப்பொருள் உண்மை என்றால் என்ன? சைவ சித்தாந்தத்தில் பதி, பசு, பாசம், என்பார்கள். இந்த உண்மையானது எக்காலத்தும் எப்பொழுதும் உள்ளது என்பது சான்றோர்கள் ஆய்ந்தறிந்த உண்மையாகும். இந்த முப்பொருள் உண்மையிலிருந்து மாறுபட்ட மதங்கள் பௌத்தம், சமணம் ஆகும். இவ்விரு மதங்களும் பதி என்ற கடவுளைப் பற்றி கவலைப்படாத மதங்களாகும். ஆனால் நம் இந்து மதமோ கடவுள் இல்லையென்றாலும் சரி உண்டு என்றாலும் சரி எல்லோரையும் உள்ளடக்கிய நம்பிக்கையின் இருப்பிடமாகும். உண்டு, இல்லை என்பது அறிவை எல்லையாக வைத்து சொல்லக்கூடியது. அறிவின் எல்லையைத் தாண்டி அருள் எல்லைக்குள் சென்றால் மேலே சொன்ன முப்பொருள் உண்மை விளங்கும். இதைச் சொல்வதுதான் இந்து மதம். செய்வான்-செய்வினை-வினைப்பயன் என்பது வரை எல்லா மதவாதிகளும் ஏற்றுக் கொள்வார்கள். ஆனால் வினையை ஊட்டுவது என்ற தெய்வீகத் தன்மையின் பெயரால் தலைமை சொல்லப்படும்போது பதி நிலையில் மட்டும் மாறுபாடு கொண்டது சமண பௌத்த மதங்கள். மற்ற மதங்கள் எல்லாம் முப்பொருள் உண்மைக்குள் வரும். பதி, பசு, பாசத்தில் நிற்கும்.

நம் தமிழகத்தைப் பொறுத்தமட்டில் ஆறு சமயங்கள் பேசப்பட்டன. இவை அல்லாமல் சமண, பௌத்த, இஸ்லாம் கிருஸ்துவம் போன்ற மதங்களும் வந்தன. பௌத்த சமண மதங்கள், இஸ்லாம், கிருஸ்துவத்தைப் போல இந்தியாவில் வளரவில்லை. ஏனென்றால் பௌத்த சமண மதங்கள் பதி-பசு-பாசம் என்பதில் பதிக் கொள்கையை மறுப்பவைகள். திரி என்ற சொல் மூன்று எனப்படும். மூன்று

உண்மைப்படி வாழ்பவர்கள் என்பதனால் அவர்களை வேதவாதிகள் சமஸ்கிருதத்தில் திராவிடர்கள் என அழைத்தார்கள். திராவிடக் கொள்கையில் வாழ்பவர்கள் உண்மையே எல்லாம் என வாழ்பவர்கள். பதி என்ற தலைமையையும் ஏற்றுக் கொள்வார்கள். அதாவது ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற கொள்கையை உடையவர்கள்!

அருணகிரிப் பெருமான் தமிழ் எழுதிய காலத்தில் ஒரு அருளாளனுக்கு உள்ள கடமையை உணர்ந்து தமிழ் எழுதியிருக்கிறார். தான் வாழும் சமுதாயத்தை மேவி உள்ள அவலங்களையும் அதனால் ஏற்படும் விளைவுகளையும் தன்னைப் போன்ற மனித இனம் வாழத் தெரியாமலும் இழந்த இறையாண்மையை மீண்டும் பெற்று உய்வடைய வழியறியாமல் காமத்தால் உழன்று வருவதைத் தடுக்கத் தன்னால் முடிந்த வரை சந்தப்பாக்களாகப் பாடி, சமூக, சமுதாய, மனித இன மான உணர்வுடன் எழுதியதை அதேவேகத்தில் இந்த ஜீவன் எதுவாக மாற வேண்டும். எதை உணர வேண்டும், தன்னை உணர்ந்தால் எதனைப் பெறலாம் என்றும் அப்படி பசுவான ஆன்மாவை மேவிய காம, குரோத, லோப, மோக, மத, மாச்சரியங்களை மனிதனாகப் பிறந்த நாம் நம் ஆன்மாவின் பகைகளான ஆணவத்தை நீக்கினால் நம் ஆன்மாவுக்குள் பதியான இறைவன் தோன்றுவதை உணரலாம் என்று வெகுவாகத் தான் பாடிய திருப்புகழில் பல இடங்களில் உணர்த்தி உள்ளார். அருணகிரியார் பதியாக முருகனை முன்னிலைப்படுத்துகிறார். முருகன் என்ற சொல் ஆன்மாவின் பகையான ஆணவத்தை அகற்றியவன் எனப்படும். பதியான தலைமையை முருகனாகவும் பசுவாகத் தன்னையும் பாசமாகத் தன்னை மேவிய அவலங்களையும் குறிப்பிடுகிறார். உதாரணமாக அருணகிரிப் பெருமான் முருகனுடைய அருள் பெற்ற இடமான வயலூர் திருப்புகழில் தெரிவிக்கிறார்.

அரிமரு கோனே நமோவென் றறுதியி லாளே நமோவென்
றறுமுக வேளே நமோவென் றுனபாதம்
அரசுர சேயே நமோவென் நிமையவர் வாழ்வே நமோவென்
றருண சொரூப நமோவென் றுதாசை
பரிபுர பாதா சுரேசன் றருமாக னாதா வராவின்
பகைமயில் வேலா யுதாடம் பரநாளும்
பகர்தலி லாதாளை யேதுஞ் சிலதறி யாவேழை நானுன்
பதிபசு பாசோப தேசம் பெறவேணு

இந்தத் திருப்புகழுக்கு என்ன பொருள் என்றால், திருமாலின் மருகனே உன்னை வணங்குகின்றேன் என்றும், முடிவு (அந்தம்) இல்லாதவனே உன்னை வணங்குகின்றேன் என்றும், ஆறுமுக வேளே உன்னை வணங்குகின்றேன் என்றும்,

செல்வமே உன்னை வணங்குகின்றேன் என்றும் செந்நிறச் சொருபனே உன்னை வணங்குகின்றேன் என்றும், துதித்து வணங்க எனக்கு ஆசை இருக்கின்றது. சிலம்பணிந்த பாதனே! தேவேந்திரன் தரும் மகள் தேவசேனையின் கணவனே! பாம்புக்குப் பகையான மயில் (வாகனத்தையும்) வேலாயுதத்தையும் கொண்ட ஆடம்பரனே (கோலாகலனே), ஒருநாளேனும் (பகர்தல் இலா தாளை) (நான் நினைத்துச்) சொல்லுதல் இல்லாத சொல்லாத (உன்) திருவடியைச் சற்றேனும் சிறிதளவேனும் அறியாத ஏழையாகிய நான் – உன் (திருவாயால்) பதி, பசு, பாசம் எனப்படும் திரிபதார்த் தங்களாகிய நித்தியப் பொருள்களின் இலக்கணங்களைப் பற்றி உபதேச மொழிகளைப் பெறவேண்டும் என வேண்டுகிறார். அதே போல

"குயிலோமொழி அயிலோவிழி கொடியோஇடை பிடியோநடை
குறியீர்தனி செறியீரினி யென்றுபாடிக்
குனகாவடி பிடியாவிதழ் கடியாநகம் வகிராவுடை
குலையாவல் குலளையாவிரு கொங்கைமீதிற்
பயிலாமன மகிழ்மோகித சுகசாகர மடமாதர்கள்
பகையேயென நினையாதுற நண்புகூரும்
பசுபாசமும் மகிலாதிக பரிபூரண புரணாகர
பதிநேருதி னருளால்மெய்யு ணர்ந்தில னோ

என்கிறார். இந்தத் திருப்புகழுக்கு என்ன பொருள் என்றால், உங்கள் மொழி குயிலின் குரலோ உங்கள் கண் வேலோ உங்கள் இடை கொடியோ உங்கள் நடை பெண் யானையின் நடையோ, இவ்வழகைத் தெரிந்து கொள்ளுங்கள், தனியாக வந்து நெருங்கிப் பழகுங்கள் இனி, என்றெல்லாம் (வேசையரைப்) புகழ்ந்து பாடிக் கொஞ்சிப் பேசி அவர்தம் காலைப் பிடித்தும் வாயிதழைக் கடித்தும் நகம் கொண்டு கீறியும் ஆடையைக் கலைத்தும், அல்குலைக் கலந்து திளைத்து (அனுபவித்தும்), இரண்டு கொங்கைகள் மீதிலும் நெருங்கிப் பொருந்திய பழகியும் மனம் களிப்பதற்கு இடமாயுள்ள வரும். (மோகிதம்) காம மயக்கச் சுக கடல் போலுள்ளவருமான மாதர்கள் பகைத்து– விலக்கத்தக்கவர்களே என்று நான் நினையாமல் இருப்பதற்கு ஆதரவை மிகக் காட்டும் பசு ஜீவான்மா பாசம் தளை–மும்மலக் கட்டு (அகிலம்) ஆக எல்லாவற்றுக்கும் அதிகனே – மேம்பட்டவனே நிறைபொருளே (புரணம் ஆகர) ஒளிக்கு இருப்பிடமாவனே கடவுளாகிய உன்னிடத்தில் (நேரும்) உன் திருவருளால் (மெய்) உண்மைப் பொருளை நான் உணர மாட்டேனோ என்று பசுவாகிய ஆன்மா பாசத்தின் பிடியிலிருந்து தன்னை உணர்ந்த நிலையில் பதியாகிய இறைவனிடம் முறையிடுவதைக் கண்டு வியக்கலாம். இதுதான் முப்பொருள் உண்மை!

இதே கருத்தை திருமூலரும் தாம் பாடிய திருமந்திரத்தில்

பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே
இதே கருத்தைச் சிவஞான சித்தியார் எனக் கூறப்பட்டுள்ளது.
"பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதி ஞானத்தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடி" என்று குறிப்பிடுவார்.

ஏகப்பட்ட உதாரணங்கள் உள்ளன. கட்டுரையின் அளவு கருதி சுருங்கச் சொல்லி தலைப்பிற்கு ஆதரவாக முப்பொருள் உண்மை என்ற தங்க இழையானது திருப்புகழில் இழையோடி உள்ளது என்பதைச் சுட்டிக்காட்டி உள்ளேன். திருப்புகழ் படிப்பவர்களுக்கு இது விளங்கும். இந்தக் கட்டுரை திருப்புகழ் படிக்கும் ஆர்வத்திற்குத் துணை செய்யும் என்றும் திராவிடம் என்ற முப்பொருள் உண்மைதான் திருப்புகழின் நீரோட்டம் என்றும் திராவிடக் கொள்கையென்றால் முப்பொருள் உண்மைதான் என்றும் இந்த கொள்கைதான் இந்த உலகத்தை உய்வடையச் செய்யத் துணை செய்யும் என்றும் உறுதிபடக் கூறி இந்தக் கட்டுரையை நிறைவுசெய்கிறேன்.





# சிவ வாக்கியரின் சமுதாயச் சிந்தனைகள்

முனைவர் இராச. திருமாவளவன்,
புதுச்சேரி.

சிவம் என்பது தனி ஒரு கடவுள் பெயர் அன்று. அது, அன்பு, அறிவு, உண்மை என்னும் பல உயர்ந்த கருத்துக்களின் தொகுப்பு என்பர் சித்தர்கள்.

அன்பும் சிவமும் இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே (270)

எனத் திருமந்திரம் இதனைக் குறிப்பிடுகிறது. இத்தகைய உயர் கருத்துக்களைத் தம் வாக்கால் மக்களுக்கு உணர்த்துவதையே வாழ்க்கையாகக் கொண்ட சித்தர் ஒருவரைச் சிவ வாக்கியர் என மக்கள் அழைத்தனர். இதனால் அவர் இயற்பெயர் என்ன என்பதை அறியமுடியாமலேயே போய்விட்டது. அந்த அளவிற்குச் சிவவாக்கியர் என்னும் பெயர் மக்கள் மனத்தில் நீங்கா இடம் பெறுவதாயிற்று.

சமயம், மக்கள் மன அமைதியுடன் வாழ்வாங்கு வாழவேண்டும் என்பதனையே நோக்கமாகக் கொண்டது. ஆனால் ஒவ்வொரு மனிதனும் தன் சமயமே உயர்ந்தது, தான் வணங்கும் கடவுளே உயர்ந்தவர் என நினைப்பதோடு பிறரும் அவ்வாறு நினைக்க வேண்டும் என எதிர்பார்க்கிறான்; வற்புறுத்துகிறான். அப்பொழுது அது சமய வெறுப்பாக, காழ்ப்பாக மாறிப் பூசலுக்கும் சண்டைக்கும் வழிவகுக்கிறது. சிவவாக்கியர், 'ஆளுக்கு ஒரு கடவுள் இருக்கமுடியுமா?' என்னும் அடிப்படை வினாவை எழுப்புகிறார். எங்கும் உள்ள கடவுள் எந்தப் பெயரால் அழைக்கப்பட்டாலும் ஒருவரே என்பதை இதனால் தெளிவுபடுத்துகிறார்.

எங்கள்தேவர் உங்கள்தேவர் என்றிரண்டு தேவரோ?
இங்குமங்கு மாய்இரண்டு தேவரே இருப்பரோ?
அங்கும்இங்கும் ஆகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ?
வங்கவாரம் சொன்னபோர்கள் வாய்புழுத்து மாள்வரே (131)

என்னும் பாடல் ஆழ்ந்த சிந்தனையைத் தூண்டி மக்களைத் திருத்துவதாக உள்ளது.

தனிமனித நடத்தையில் பாலியல் வன்முறை இன்று மிகுந்துள்ளது. செய்தித்தாள் முதலிய அனைத்து ஊடகங்களிலும் அன்றாடம் இது இடம் பெறுவதைக் காணலாம். நாட்டையும் மொழியையும் நதியையும் தெய்வத்தையும் தாயாக நினைத்த மனிதன் தன் முன் ஒரு பெண்ணைக் காணும்பொழுது காமத்தோடு பார்க்கிறான்; அவளை அடைய நினைக்கிறான். அதனால் அடிதடி முதலிய வன்முறை செயல்கள் நிகழ்கின்றன.

சிவவாக்கியர் இத்தகையவர்களுக்கு ஒரு மனநல மருத்துவராகிப் பெண்ணாசையைத் தவிர்க்க வழிகாட்டுகிறார். ஆணுக்கும் பெண்ணுக்கும் உடல் அமைப்பு வேறுபடலாம். அடிப்படையில் உடலில் உள்ள சதை, இரத்தம் முதலிய பொருள்கள் மாறுபடுவதில்லை. அந்த உடல் அழியும் போது பிணம் என்னும் ஒரு பெயரையே பெறுகின்றது. இறுதியில் தோட்டி கையில் ஒப்படைக்கப்பட இருக்கும் உடலுக்காக மனிதன் சண்டையிட்டுக் கொள்வது பயன் அற்றது என்பதைச் சிவவாக்கியர் சுட்டிக்காட்டுகிறார்.

வடிவுகண்டு கொண்டபெண்ணை மற்றொருவன் நத்தினால்
விடுவனோ அவனையின்னம் வெட்டவேணும் என்பனே
நடுவன்வந்து அழைத்தபோது நாறும்இந்த நல்லுடல்
சுடலைமட்டும் கொண்டுபோய்த் தோட்டிகைக் கொடுப்பரே (5)

என்பது அப்பாடல்.

மக்களிடம் மண்டிக்கிடக்கும் மற்றொரு தீமை சாதி வேறுபாடு. சாதியில் உயர்வு தாழ்வு கற்பித்துச் சண்டையிட்டு மனிதன் மாள்வதை நினைத்த சிவவாக்கியர்

சாதியாவது ஏதடா சலம்திரண்ட நீரலோ
பூதவாசல் ஒன்றலோ பூதம்ஐந்தும் ஒன்றலோ
காதில்வாளி காரைகம்பி பாடகம்பொன் ஒன்றலோ
சாதிபேதம் ஓதுகின்ற தன்மைஎன்ன தன்மையோ? (46)

எனக் கேட்கிறார். சாதிக் கொடுமையின் உச்சநிலை தீண்டாமை. தன் சக மனிதனைத் தொடுவதும் தீட்டு எனக் கருதும் மனப்பான்மையைச் சிவவாக்கியர் கடுமையாகச் சாடுகிறார்.

தீட்டம்தீட்டம் என்றுநீர் தினமும் மூழ்கும் மூடரே
தீட்டமாகி அல்லவோ திரண்டு காயம் ஆனதும்
பூட்டகாயம் உம்முள்ளே புகமுகின்ற பேயரே
தீட்டு வந்து கொண்டலோ தெளிந்த தேசி வாயமே (465)

எனச் சக மனிதரைத் தீட்டு என ஒதுக்குகின்றவரைச் சிவவாக்கியர் மூடர் என்றும் பேயர் என்றும் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு சமுதாயத் தீமைகளைக் கண்டறிந்து அவற்றைக்



# கந்தபுராணத்தின் உபதேசம்

சித்தாந்தசரபம், திருமுறைமணி
புலவர் எ. **வேலாயுதன்,** M.A., காஞ்சிபுரம்

அருவமும் உருவுமாகி அனாதியாய்ப் பலவாய் ஒன்றாய்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகிக்
கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டுங்–கொண்டே,
ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகமுய்ய ; (கந்தபுராணம்)

செந்தமிழின் திருவருள் நூல்காளகத் திருத்தொண்டர்புராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம், என்னும் முப்பெரும் புராணங்களும் விளங்குகின்றன. செம்பொருள் என வரும் சிவபெருமானின் மும்மை நலஞ் சான்ற கதிர், மதி, தீயெனும் முக்கண்களென்றே போற்றப் பெறுகின்றன.

இவற்றுள் கந்தபுராணம், சிவபெருமானின் நெற்றிக் கண்ணாக நடுவின் மேனோக்கும். ஞானத்தொளியாகப் போற்றப் பெறுகின்றது.

அன்புநெறி சிவநெறி, மேனெறி, தமிழர் திருநெறி என்றெல்லாம் போற்றப்பெறும் சைவ சித்தாந்தக் கொள்கையைப் புராண வரலாற்றின் பொருந்த விளக்கும் ஞான நூலாக கந்தபுராணம் விளங்குகின்றது.

கந்தபுராணம் இயற்றியருளிய கச்சியப்ப சிவாச்சாரியார், சிவபூசனையும், செந்தமிழ் உணர்வும் சிறந்தோங்கப்புரிந்த பெருவாழ்வினர். ஞானத் தமிழ்ப்புலமையின் பெரு நலம் மிக்கவர். வடமொழியின் பெருநூல்களால் சைவசித்தாந்தத்தின் கொள்கையும் நெறியும், மாற்றம் பெறுதலைத் தடுத்து நிறுத்தும் பொருட்டே கந்தபுராணம் இயற்றியருளினார் என்பது பாயிரப்படலத்தின் மூலம் தெரிகின்றது.

ஆனதோர்பொழுதின் கண் அமரரும் முனிவோரும்
மாநில மிசை வைகும் மாக்களும் இறையுள்ள
ஞான மதில ராகி நவின் மறை நெறி மாற்றித்
தீ நெறி பலவாற்றிப் பனுவல்கள் பல செய்தார். (பாயிரப்படலம் – 3)

என்னுங் கச்சியப்பர் இதனால் அவனியில் அறமெல்லாம் அருவினையென நீக்கிப் பல நெறி அறமென்றே பற்பலரும் செய்யப் பெற்றன என்றும் கூறுகின்றனர். ஆக,

மெய்ம்மையறம் செய்தற்கரிதென்று நீக்கி விட்டுப் பிறவியைப் பெருக்கும் நெறிகளை அறமென்று பற்பலருஞ் செய்ய முற்பட்டதை நினைவூட்டுகின்றார் எனத்தெரிகிறது.

இங்ஙனமே சேக்கிழாரும், "ஆதியருமறை வழக்கம் அருகி அரன் அடியார்பால் பூதி சாதன ஒழுக்கம் போற்றல் பெறாது ஒழியக் கண்டு ஏதமில் சிவபாத இருதயரும் இடருழந்தார்." என்று "ஆதி யருமறை வழக்கம்" அருகியதைக் குறிப்பதோடு "பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட .......... பிள்ளையார் அவதாரம் செய்தார்" என்பதாலும் காணலாம்.

இங்கு பவம் பெருக்கும் புரை நெறிகள் என்று சேக்கிழார் குறிப்பது சமண-புத்த நெறிகளையென்றால் கச்சியப்பர் "பவநெறி யறமென்றே பற்பலருஞ்செய்யப் பெற்றன." என்று குறிப்பிடுவார். பவநெறி - உலகாயதரும் மாயாவாதம் என்னும் ஓருயிர்க் கொள்கையாம். ஏகான்ம வாதமும் என்றே மாயை உபதேசப்படலத்தும் சுக்கிரன் உபதேசப்படலத்தும் உணர்த்துகின்றார்.

கந்தபுராணத்தின் அசுரகாண்டத்துள்வரும், காசிபன் உபதேசப்படலம், மாயை உபதேசப்படலம், சுக்கிரன் உபதேசப்படலம், என்னும் மூன்றுபடலங்களும் முறையே திருநெறிய தமிழின் சைவசித்தாந்தக் கொள்கை நெறியுணர்த்தும் போதமும், உலகின் செல்வத்தினும் மிக்கது ஒன்றில்லை என்னும் பொருட் பற்றின் எழு மாயையின் மயக்கமும் - "உன்னை நீ பிரமமென்றே தெற்றெனத் தெளிதி" (சுக்-உபதே-47) என்னுந்திரிபுணர்வின் மாற்றும் ஏகான்ம வாதமுமாக விளங்கக்காட்டி உரைக்கின்றார் கச்சியப்ப சிவாசாரியார். இவற்றுள் காசிபர் உபதேசம் வருமாறு:

**"காசிபர் உபதேசம்"**

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களின் ஆற்றலென வரு சூரபதுமன் சிங்கமுகன் தாருகன் மூவருக்கும், தந்தை காசிபர் தம்மக்களுக்கு நன்னெறி காட்டி உய்க்கும் திறமாக உபதேசம் புரிகின்ற படலத்தில்

சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்
மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆரு யிர்த் தொகை
வான்றிழ் தளை யென வகுப்பர் அன்னவே!

என்னும் பாடல் இறை உயிர் தளை என்னும் முப்பொருள் உண்மைபேசும் சைவ சித்தாந்தத்தின் மெய்ம்மையையே காசிபர் உபதேசிக்கின்றதைத் தெரிவிக்கின்றது. இத்திருப்பாடலில் சான்றவர் ஆய்ந்திடத்தக்கவாம் பொருள் மூன்றுள் என்றதனால்,

“ அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்
அந்தம் ஆதி யென்மனார் புலவர்” என்னும் சிவஞானபோத முதற் சூத்திரத்தின் என்மனார் புலவர் என்னும் தொடர் விளக்கம்போல் தொன்றுதொட்டு வரும் உலகுயிர் வாழ்வும் இறையுண்மையும் அறிவு நலஞ்சான்ற புலவர் ஆய்ந்துணரத்தக்கன இம்முப்பொருள் திறமும், மெய்ப்பொருள் உண்மையும் வகுத்துணர்வதே என்றுணர்த்துகின்றார் கச்சியப்பர்.

இறையுயிர்தளை யெனும் முப்பொருள் உண்மையை வகுத்து ஆன்றதோர் தொல்பதி என்று இறையையும் ஆருயிர்த்தொகை என்று உயிர்களையும் வான்றிகழ்தளை என்று தளைகளையும் அடைமொழியுணர்த்தியுணர்த்தும் பாங்கு முப்பொருள் பொது சிறப்புத் தன்மைகளை விளங்கக் காட்டுவதுடன் முறைசிறந்த வகையும் தெளிய உரைப்பதும் காணலாம்.

தொடர்ந்து ஆன்றதோர் தொல்பதி பற்றி காசிபர் உரையிற் காட்டும் கச்சியப்பர்.

(1) அளித்திடல் (2) காத்திடல் (3) அடுதல் (4) மெய்யுணர்.
ஒளித்திடல் (5) பேரருள் உதவலே யெனக்
கிளத்திடு செயல்புரிகின்ற நீலமார்
களத்தினன் பதி, யது கழறும் வேதமே !

என்று ஐந்தொழில்புரி அருளாளன் நீலமார் களத்தினன் சிவபெருமானே தொல்பதி என்கின்றார். தொல்பதியின் தன்மையும் சிறப்பும் பற்றிக் காசிபர் வாக்கில்

பற்று, இகல், இல்லதோர் பரமன் நீர்மையை
இற்றென உரைப்பது அரிது எவர்க்கும் என்பரால்
சொற்றிடும் வேதமும் துணிதிலா அவன்
பெற்றியை இனைத்தெனப் பேச வல்லமோ !

என்று தெரிய உரைக்கின்றார் கச்சியப்பர். அடுத்து ஆருயிர்த்தொகை பற்றிக் கூறுகையில்

மூவகை யெனுந்தளை மூழ்கி யுற்றிடும்
ஆவிகள் உலப்பில அநாதி யுள்ளன
தீவினை நல்வினைத் திறத்தின் வன்மையால்
ஓவறமுறை முறை உதித்து மாயுமே !

என்கின்றார். இதனுள் மும்மலங்களுள் மூழ்கியுற்றிடும் உயிர்கள் அளவிலாதன என்றும் அநாதியே உள்ளன அவையென்றும் இருவினைத் திறத்தினால் முறை முறையே பிறந்து இறந்து வருவனவென்றும் தெரிவிக்கின்றார். மேலும் மண்ணில் நீரில் உதிப்பனவும் நெருப்பில் வளியில் வெளியில் சேருவனவும் ஆகி மக்கள் விலங்குகள், பறவைகள், புல்லாகவும், தேவராகவும் வருவன உயிர்கள் என்றும், மருளானாம் மாணாப்பிறப்பு (குறள்) என்றபடி எண்ணற்றவுயிர்கள் மூவகைத் தளையின் பேதைமையால் பிறந்தும் கூற்றத்தால் இறந்தும் வருவன என்றும் தெரிவிக்கின்றார்.

இங்ஙனம் எண்ணற்ற உயிர்கள் நில்லாதனவற்றை நிலையன என்றுணரும் பேதைமையால் பிறந்திறந்து உழல்கின்றன என்கின்றார் தொடர்ந்து அறம் என்ற ஒரு பொருள் உள்ளது. அதுவே நாம் (உயிர்கள்) போற்றிடின் இருமையின்பமும் எளிதின் ஆக்கும். அன்பு சார்ந்திடும் அருளெனுங்குழவியும், அணையும், ஆங்கு தவமெனும் மாண்பு எய்துமேல் தெருளுறும். அவ்வுயிர் சிவனைச் சேருமால் சேர்ந்தபோதே பிறவியுந்தீரும். தொன்மையாய்ச் சார்ந்திருக்கின்ற மூவகைத் தளையும் நீங்கிடும். பேரா இயற்கைப் பேரின்பந்தனை ஆர்ந்திடும். அத்தன்மை சொல்லொணாததாகும் என்று

தருமமென்று ஒரு பொருள் உளது தாவிலா
இருமையின் இன்பமும் எளிதின் ஆக்குமால்
அருமையின் வரும்பொருளாகும் அன்னதும்
ஒருமையி னோர்க்கலால் உணர்தற் கொண்ணுமோ?

தருமமே போற்றிடின் அன்பு சார்ந்திடும்
அருளெனுங் குழவியும் அணையும் ஆங்கவை
வருவழித் தவமெனும் மாட்சி யெய்துமேல்
தெருளுறும் அவ்வுயிர் சிவனைச் சேருமால்.

சேர்ந்துழிப் பிறவியுந் தீரும் தொன்மையாய்ச்
சார்ந்திடு மூவகைத் தளையும் நீங்கிடும்
பேர்ந்திடல் அரியதோர் பேரின் பந்தனை
ஆர்ந்திடும் அதன்பரிசு அறைதற் கேயுமோ ?!

இம்மூன்று பாடல்களில் காசிபர் வாக்காகத் தெரிவிக்கின்றார் கச்சியப்பர். தொடர்ந்து தவத்தின் உயர் பெருமையைப் பல்லாற்றானும் தெரிவிக்கும் காசிபர் "சிவத்தைப் பேணின் தவத்திற்கழகு" என்றபடி சிவனையுன்னியே மாதவம் புரிதல் வேண்டும். அம்மாதவம் ஆவது பூசனை புரிந்து நாளும் வழிபடுவதே என்னும் மார்க்கண்டேயர் வரலாற்றை விரிவாக உரைக்கின்றார்.

மாதவமாக சிவ பூசனை புரிந்து கூற்றுவனைக் குதித் தோடப் பண்ணுகின்ற மார்க் கண்டேயர் வரலாற்றை – மார்க்கண்டேயப் படலம், என்னும் பகுதியில் விரித்துரைக்கும் கச்சியப்பர் இதனுள் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவ ஞானமும், பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானமும் – மார்க்கண்டேயர் சிவ பூசனையின் உறுதிப் பொருளாகத் தெரியவுரைக்கின்றார். இங்கு, "சைவ சித்தாந்தம்" சிவத்தொடு உயிர்கள் சம்பந்த முறு சிவ பூசனை ஒழுக்கத்தின் கொள்கையாகும். உயிர்ப்பிறவியை மாற்றும் மரணமிலாப் பெருவாழ்வளித்துப் பேரின்பமளிக்கும் பெருநெறியாகும் என்பதே குறிப்பாக உணர்த்துகின்றார். தமிழ் நாட்டுத் திருக்கோயில்களின் பதி பசு பாசம், என்னும் முப்பொருள் உண்மையை, சிவலிங்கம் (பதி) நந்தி (பசு) மலர்தலைப்பீடம் (பாசம்) என்னும் மூன்றும் நிறுவி, உலகின் உடம்பெடுத்த உயிர்கள் (பசுக்கள்) உலகியற் சார்பின் (மலர்தலைப் பீடத்தின்) பாசத்தால் கட்டுண்டு இருப்பினும் – பதியை – (சிவலிங்கம்) நோக்கியே இருப்பதாக விளக்கப் பெறுகின்றதும். ஆலமர்செல்வன் தென்முகத் தெய்வமாய் சின் முத்திரை திருக்கைவிரற் குறிப்பும் சைவத்தின் பொய்தீர் ஒழுக்க நெறியின் குறியீடுகளேயாகும் என்பதும் ஒருங்கு வைத்துணரலாகும்.

**"மாயை உபதேசம்"**

சூர பதுமனாதியோர்க்குக் காசிபர் உபதேசித்த இந்தக் கொள்கையின் இருந்து நீங்குமாறு மாயை "உலகாயதம்" என்னும் தன் கொள்கையை உபதேசிக்கின்றாள்.

உலகில் மேம்பட இருக்க வேண்டும். அதற்குக் கல்வியும், செல்வமும் மிகப்பெற வேண்டும். கல்வியினும், செல்வமே முதன்மையாகும்.

நூலுறு கல்வி நுனித்து நாடியே
வாலறி வெய்திய வரத்தி னோர்களும்
மேலுறு திருவோடு மேவு றாரெனின்
ஞாலமங் கவர்தமை நவையுள் வைக்குமால்

என்று கல்வியெனும் சிற்றுயிர்க்குற்ற பெருந்துணையையும், வாலறிவன் நற்றாள் தொழுதற்கு என்னாமல், இடை நின்றொழியும் பெருட்செல்வம் பெருக்குதற்கே என்றுரைக்கின்றாள்.

மேலும் மேம்பட்ட பெருஞ்செல்வம் பெறுதற்கும் தேவரினும் மேம்பட ஆள்வதற்கும். நெறிகாட்டி.

தந்திர நெறிகளும் தவறில் பான்மையும்
மந்திர முறைகளும் மற்று முள்ளவும்
இந்திர வளனுறும் இயல்பின் மூவர்க்கும்
முந்திர வுதவிய முதல்வி நல்கினாள்

என்று தெரிவிக்கின்றார் கச்சியப்பர். மேலும் மாயை உபதேசமே மேற்கொண்டு சூரனாதியோர் செல்கின்றதும் உலகியலின் மேம்படு செல்வ மெய்தி மாயையின் மயங்குகின்றதும் தெரிவித்து இம்மயக்கத்தினர்க்குச் சுக்கிரன் உபதேசம் தலைக்கேறி "உன்னை நீ பிரமமென்றே தெற்றெனத் தெளிதி" ஆயிரத்தெட்டு அண்டமும் நூற்றெட்டு சதுர்யுகம் ஆளும் பெருமிதங் கொள்ளுமாறும் தெரிவிக்கின்றார்.

இத்தன்மையுறு சூனாதியோரால் விண்ணும் மண்ணும் வாழுயிர்களும் ஒடுக்கப்பெறுகின்றன. ஒழுகலாறுகள் மாறி – ஆதிக்கத்தின் அடிமையாகின்றன. நடுநிலையருளும் இறைவன் நெற்றிக்கண் ஒளியாகத் தோன்றி வருகின்ற முருகப்பெருமான் இவர்தம் வாழ்வும் ஆற்றலும் ஒடுங்க வேற்படை விடும் போது ஆணவ வலி தளர்ந்து மாயையே மெய்யுணர்வைத் தருகின்றாள். ஆயினும் சூர் முதல் ஆணவம் திருத்த முடியாமல் நிற்றல் கண்டு வருந்துகின்றாள். முடிவில் முருகப்பெருமான் ஞானவேற்படையினால் சூரன்தன் வலியெலாம் ஒடுங்கி முருகன் அருள் நோக்கினால். சேவலும் மயிலுமாக ஆட் கொள்ளப் பெறுகின்றான். முருகன் திருவடி தோய்வரம்பிலா அருள் பெற்றுய்கின்றான்.

தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவராகி மேலைத் தொல் கதி யடைவரென்கை
ஆயவும் வேண்டுங்கொல்லோ அடு சமர் இந்நாள் செய்த
மாயையின் மகனும் அன்றோ வரம்பிலா அருள்பெற்றுய்ந்தான்.

என்கின்றார் கச்சியப்பர்.

சூரனாதியர்க்கு காசிபர் உபதேசத்தினை யேற்காமற் செய்த மாயை உபதேசம். இம்மாயையின் விளை பெரும்பொருட் பெருக்கினர் ஏற்ற ஒருயிர் கொள்கை ஏகான்ம வாதம் எல்லாம்மேலோங்கவும் சைவ சித்தாந்தம் போதித்த காசிபர் உபதேசம். ஆணவ முதலிய மும்மல வடிவினராய் சூரனா தியோரால் புறக்கணிக்கப் பெறுவதும் முடிவில் முருகனருளால் - சூரன் தொல்கதியுறுவதும், வுணர்த்துகின்றது கந்தபுராணம். ஆக சைவசித்தாந்தம் உபதேசத்தின் உணர்வதை - உலகாயதம் உணரவொட்டாது. இறைவனருளும் வாழ்வியல் திறமுமே உணர்வின் உறுதிசெய்யும் என்றுணர்த் துகின்றது. உலகின் நிலையாமை தெரிந்தாலும் நிலையான இறையருள் ஒளியுணரக் காட்டும் போது தான் உறுதி பெறும் என்கின்றது.

மலர்தலையுலகின் ஞாயிறு உதிப்ப பகல் விளங்கக் கண் மலர்வதும், பொருள் தெரிவதும் போல என்றே இறையருள் உணர்த்தவே - ஆணவம் - அறியாமை ஒடுங்கும் என்னும் மெய்ம்மையைத் தெளிவாக உரைக்கின்றது கச்சியப்பர் அருளும் கந்தபுராணம் - இறையருள் உணர்த்தவும் வினைவலி ஒடுங்கவும். நாளும் அன்பு பெருகி அருளோங்கு பேறுற்று வாழ வேண்டும். அதற்கு நாளும் சிவ பூசனை புரிதலைப் பொய்தீர் ஒழுக்கமாகப் போற்றி வாழ்வதே உறுதியாகும்.

இந்திர ராகிப் பார்மேல் இன்பமுற்று இனிது மேவிச்
சிந்தையின் நினைந்த முற்றிச் சிவ கதியதனிற் சேர்வர்
அந்த மில் அவுணர் தங்கள் அடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித்து ஓது வோரே ! (பாயிரம்-4)

### கந்தபுராணச் சிறப்பு

“மாயோன் மேய காடுறை யுலகமும், சேயோன் மேய மைவரை யுலகமும்” என்னுந் தொல்காப்பியத்தின் மேவிய தெய்வத் திருவாகத் திருமால் வழிபாடும் முருகவழிபாடும் விளங்கிய தமிழகத்தில் மிண்டிய மாயாவாதம் என்னும் சண்டமாருதம் வடமொழியாதிக்கமாய்ப் பெருகி, சிவத்தினின்றும் திருமால்வழிபாடு வைணவமாகப் பிரிந்தது. முருக வழிபாடும் கௌமாராய்ப் பிரிந்துபோம் நிலையில் அறிவு-விழைவு-சீலம் ஆகியவற்றின் திருவருள் தோய் சைவத்திறமே முருக வழிபாடு என்று ஒருமையுணர்வைக் காட்டுகின்றது கந்தபுராணம்.

அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாரனார்க்கே! என்று திருமுறைகள் உணர்த்துகின்றன. இங்ஙனம் தமிழகத்தே ஒருமையுடனிருந்த திருமால் வழிபாட்டினை "வைணவம்" என்று வடமொழியாக்கம் வேறாகப் பிரித்துவிட்டது. ஆனாலும் கந்தபுராணம் தோன்றி

ஈசனே யவன் ஆடலால் மதலை யாயினன் காண்
ஆசிலா அவன் அறுமுகத் துண்மையால் அறிதி
பேசில் ஆங்கவன் பரனொடு பேதகன் அல்லன்
தேசிலாவகன் மணியிடைக் கதிர் வருதிறம் போல்

என்று சிவனே ஆறுமுகன் என்றுணர்த்தியது. வலியுறுத்தப் பெற்றது. ஆதலின் "கௌமாரம்" என்று சைவத்தினின்றும் பிரித்துக்காட்டும் வடமொழியாக்கம் செல்லாததாயிற்று. தமிழ் மரபின் முருக வழிபாடு, சைவத்தின் அங்கமாகிய முதன்மை நிலை பெற்றது.

"நங் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்"
"சமரசூரபன்மாவை தடிந்த வேற் குமரன் தாதை"

என்னும் திருமுறை வாய்மை நிலை பெற்றது. ஒற்றுமையாகத் தமிழர் திருநெறியின் பூசனை ஒழுக்கமும், சைவசித்தாந்த மெய்ப்பொருள் கொள்கையும் உலகம், குறிப்பாகத் தமிழ் கூறு நல்லுலகம் போற்றியோங்க வேண்டும் என்னும் இறைவன் பெருங்கருணையே கச்சியப்பர் அவதாரமும் கந்தபுராணத் தோற்றமும் என்றே தெரிகின்றது.



உ



# முருகக் கடவுளிடம் மட்டுமே காணலாகும் வழிபாட்டு முறைகள்

முனைவர். **பே. ஞானசேகரன்,**
எம்.ஏ. பி.எட்., எம்ஃபில்., பி.எச்.டி. இணைப்பேராசிரியர்
இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி – 630 003.

---

ஆதி சங்கரர் கி.பி. 8–ஆம் நூற்றாண்டில் விநாயகரை வழிபடும் கடவுளாகக் கொண்ட காணாபத்யம், முருகனை இறைவனாகக் கருதுவோர் இறைஞ்சும் கௌமாரம் சிவனை முழுமுதற் கடவுளாகப் போற்றும் சைவம், சக்தியைப் பரம்பொருளாகத் துதிக்கும் சாக்தம், திருமாலைத் தனித் தெய்வமாகக் கொண்டொழுகும் வைணவம், சூரியனை வணங்கும் மக்கள் மிகுதியாக உள்ள சௌரம் என்ற ஆறு மதங்களின் வழிபாடுகளைத் தோற்றுவித்தார். அவ்வகையில் திருமுருகனை ஒருமுகமாகப் போற்றும் மக்கள் தங்களின் மனம், மொழி மெய்களால் கந்தனை வந்தனை செய்வதையே தங்கள் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் கௌமார வழிபாட்டைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுவர். திருமுருக வழிபாட்டில் மட்டுமே காணத்தக்க மூன்று வழிபாட்டு முறைகளைச் சுட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

பிற சமய வழிபாடுகளில் இல்லாமல் முருக வழிபாட்டில் மட்டுமே காணப்படும் மூன்று வழிபாட்டு முறைகள் வருமாறு:

1. கந்த சட் (ஷ்)டித் திருவிழாவின் ஆறு நாட்களிலும் முருகனடியார்கள் கோவிலில் தங்கி இருந்து வழிபடும் வழிபாட்டு முறை.

2. முருகன் ஆலயங்களுக்குப் பாதயாத்திரையாகச் சென்று வணங்கும் வழிபாட்டு முறை.

3. சட்(ஷ்)டி விரத வழிபாட்டு முறை. இம்மூன்று வழிபாட்டு முறைகளைப் பற்றி விரிவாகக் காண்போம்.

**1. கந்த சட்(ஷ்)டி திருவிழாவின் ஆறு நாட்களிலும் விரதமிருக்கும் அடியவர்கள் வீடுகளுக்குச் செல்லாமல் கோவிலிலேயே தங்கியிருந்து வணங்கும் வழிபாட்டு முறை:**

சைவ சமயத்தில் பொதுவாக மக்கள். தாங்கள் வழிபடும் கடவுளர்க்குரிய சிறப்பு நாட்களில் ஆலயங்களுக்குச்சென்று அந்தந்தத் தெய்வங்களுக்குத் தேங்காய், பழம், பூ, சூடம் அல்லது திருவிளக்கு ஏற்றி வழிபாடு செய்துவிட்டுத் தங்கள் வீடுகளுக்குத் திரும்பி

விடுவர். ஆனால் முருகப் பெருமானுக்காகக் கொண்டாடப்பெறும் ஐப்பசி மாதத்துச் சுக்கிலபட்சத்துச் சட்(ஷ்)டி திதியின் ஆறு நாட்களிலும் முருகனை வழிபடும் மெய்யடியார்கள் திருமுருகன் திருக்கோயில்களிலேயே இரவும், பகலும் தங்கியிருந்து விரதம் இருப்பர். முருகனையே நினைந்து நினைந்து உணர்ந்து மனமுருகி முருக வழிபாட்டுக்குரிய திருப்பாடல்களை வாய்விட்டுக் கூறி வழிபடுவர். முருகப் பெருமானின் படைவீடாகிய திருப்பரங்குன்றம் திருச்செந்தூர் திருவாவினன்குடி (பழனி) ஆகிய திருத்தலங்களில் கந்த சட்டி விரத ஆறு நாட்களிலும் முருகனடியார்கள் அங்ஙனம் இருப்பதைக் காணலாம். நீராடச் செல்லும் நேரம் தவிர மற்றநேரங்களில் எல்லாம் அடியவர்கள் திருக்கோவில்களிலேயே தங்கி இருப்பர். இந்த வழிபாட்டு முறையை விநாயகருக்காகத் தங்கி இருப்பர். இந்த வழிபாட்டு முறையை விநாயகருக்காகக் கொண்டாடப்பெறும் விநயகர் சதுர்த்தியன்றோ சிவனுக்காகக் கொண்டாடப்பெறும் 'சிவனிரவு அன்றோ காணஇயலாது. சிவன் இராத்திரி அன்று கூட ஆலாலகண்டருக்கான சிவன் ஆலயங்களில் இரவு முழுவதும் நிகழும் தூப தீப வழிபாட்டின் போது கண்விழித்திருந்து இறையை இறைஞ்சும் அன்பர்கள் மறுநாள் வைகறைப் பொழுதில் வீடுகளுக்குச் சென்று விடுவர். முருகப் பெருமானுக்குரிய கந்த சட்(ஷ்)டித் திருநாட்களில் அப்படி இல்லாமல் எப்பொழுதுமே கோவில்களில் இருந்து வழிபடுவர். இங்ஙனம் வழிபடும் வழிபாட்டு முறையைப் 'பாடு கிடத்தல்' என ஆன்றோர் அழைப்பர்.

முருகன் மீது பற்றுக்கொண்ட அடியவர்கள் ஆண்-பெண், ஏழை-பணக்காரர், படித்தவர்-படிக்காதவர் என்ற வேறுபாடின்றி இல்லத்தை மறந்து. உணவைத் துறந்து, உள்ளத்தை இறை மீது நிறுத்தி இங்ஙனம் கடுமையான முறையில் வழிபடும் வழிபாட்டு முறை வேறு எந்தச் கடவுளர் வழிபாட்டிலும் காண முடியததாய், முருக வழிபாட்டில் மட்டுமே காணக் கூடியதாய் உள்ளது. இது முருக வழிபாட்டின் சிறப்பாகும்.

2.முருகன் ஆலயங்களுக்குப் பாதயாத்திரையாகச் சென்று வழிபடும் வழிபாட்டு முறை:

மக்கள் தங்களுக்கு விருப்பமான கடவுள்களை விரும்பும் வகைகளில் வழிபடும் வழிபாட்டுச் சுதந்திரம் சைவ சமயதில் முழுமையாக உள்ளது. அம்முறையில் தமிழகத்தின் பல ஊர்களில் இருந்தும், விரதம் இருந்து காலணி அணியாமல் முருகப் பெருமானை வழிபடும் அன்பர்கள் குழுக்கள் குழுக்களாகப் பழனி போன்ற முருகன் ஆலயங்களை நோக்கிக் கால் நடையாகச் சென்று குமரக் கடவுளை வழிபட்டு வருவது ஆண்டாண்டு தோறும் நடக்கும் வழக்கமான நிகழ்ச்சி ஆகும்.

இத்தகைய வழிபாட்டு முறை வேறு எந்தத் தெய்வவழிபாட்டிலும் இல்லை. ஐயப்ப வழிபாட்டில் ஐயப்ப அன்பர்கள் நடந்து செல்வது பிற்காலத்தில் ஏற்பட்டதாகும். இப்படிப்

வேண்டுதல்கள் விரைவில் நிறைவேறும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் இவ்வழிபாடு தோன்றியிருக்கலாம்.

3.சட்(ஷ்)டி விரத வழிபாட்டு முறை:

ஒவ்வொரு மாதம் சுக்கில சட்(ஷ்)டி– திதியில் முருக பக்தர்களால் மேற்கொள்ளப்படும் விரதம் இது. இவ்விரதத்தை மகப்பேறில்லாப் பெண்கள் முருகப் பெருமானை நினைந்து சட்(ஷ்)டி நாளில், நாள் முழுவதும் உணவு உண்ணாமல் இரவு மட்டும் பாலும் பழமும் அருந்தி வழிபட்டால் மகப்பேறு வாய்க்கும் என்பது தொன்றுதொட்டு மக்களிடையே இருந்து வரும் நம்பிக்கை ஆகும். இதன் அடிப்படையில் எழுந்ததே 'சட்டியில் இருந்தால்அகப்பையில் வரும்' என்ற பழமொழி ஆகும். இந்த வழிபாட்டு முறையும் முருகப் பெருமான் வழிபாட்டில் தான் இருக்கிறதே தவிர வேறு எந்தத் தெய்வ வழிபாட்டிலும் இல்லை.

இதுகாறும் கண்ட செய்திகளால் முருகனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் மக்கள் கௌமார மத வழிபாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதையும் முருக வழிபாட்டில் கந்த சட்(ஷ்)டி திருவிழாவின் ஆறு நாட்களிலும் முருகனை வழிபடும் அன்பர்கள் தங்கள் வீடுகளுக்குச் செல்லாமல் கோவிலில் இருந்தே வழிபடுதல், முருகன் இருக்கும் இடங்களுக்கு முருக பக்தர்கள் பாதயாத்திரையாகச் சென்று வழிபடுதல், மாதந்தோறும் வரும் சட்(ஷ்)டித் திருநாளில் மகப்பேறு வேண்டிப் பெண்கள் கந்தனை நினைந்து வழிபடுதல் ஆகிய மூன்று வழிபாட்டு முறைகளும் முருக வழிபாட்டில் மட்டுமே உண்டு என்பதையும், இக்கட்டுரையில் உணரும் நாம் புதுச்சேரிக் கதிர்காம முருகனை வணங்கித் திருவருள் பெறுவோமாக.



உ



# பாரதியார் படைத்துக்காட்டிய கந்தரலங்காரக் காட்சி

முனைவர் சொ. சேதுபதி

துணைப்பேராசிரியர். தமிழ்த்துறை

பாரதிதாசன் அரசினர் மகளிர் கல்லூரி புதுச்சேரி – 3.

பேச : 9443190440 எழுத : sethukapilan@gmail.com

பத்திரிகையாளராகவும் தீவிர அரசியல் ஈடுபாடு கொண்ட இளைஞராகவும் தம்மிடம் தஞ்சம் புகுந்த பாரதியாரைப் பக்தியுடைய பாவலராகப் பரிணமிக்கச் செய்த புதுமை, புதுவைக்கே உண்டு புதுச்சேரி என்றும் பாண்டிச்சேரி என்றும் அழைக்கப்பெறும் புதுவையை, பாரதியார் 'செந்தமிழ் தென்புதுவை' என்று சிறப்பித்துக் குயில்பாட்டில் பாடுவார். வேதபுரம் என்று விளித்துத் தம் கதை கட்டுரைகளில் களமாக்கி மகிழ்வார். கடற்கரையிலேயே தம் கவலைகளைப் போக்கிக் களிகொள்ளும் வழக்கம் அவருக்கு உண்டு. வேதபுரக் கடற்கரையின்மீது தீராத மையல் பாரதியாருக்கு. நெடுநேரம் கடற்கரையைக் களமாகக் கொண்ட கவிதைகளும் கதைகளும் கட்டுரைகளும் குறிப்புகளும் பாரதியார் படைப்புகளில் சிறப்பிடம் பெறுவன.

> காலையிளம் பரிதி வீசுங் கதிர்களிலே
> நீலக் கடலோர் நெருப்பெதிரேசேர்மணிபோல்
> மோகனமாஞ் சோதி பொருந்தி முறைதவறா
> வேகத் திரைகளினால் வேதப்பொருள் பாடி
> வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய
> செந்தமிழ்த் தென்புதுவை யென்னும் திருநகர் (குயில்பாட்டு 1–5)

என்பது அவர்தம் கவிவாக்கு.

வேதவிளக்கங்களையும் விளங்கொணா வாழ்வியல் மர்மங்களையும் விளக்கும் ஞானகுருவாகக் கடல் பாரதியாருக்குத் தரிசனங் காட்டிய பெருமை. விரித்து விளக்குதற்குரியது. அவற்றுள் ஒன்றினை எடுத்து விளக்கும் நோக்கில் அமையும் கட்டுரை இது.

## வேதபுரக்கடலும் ஞான விளக்கமாகும் வானமும்

காலையிலும் மாலையிலும் நள்ளிரவிலும்கூட, வேதபுரக் கடற்கரையில் சென்று மோனத்தவமிருக்கும் பாரதியார் அன்று (1917 ஆண்டின் தொடக்ககாலக்கட்டத்தில் நடுப்பகலில் சென்று கடற்கரை மணலின் மேல் அலைக்கு எதிரே போய் அமர்கிறார். அந்தச் சூழலைப் பின்வருமாறு சித்திரமாக்குகின்றது அவர்தம் பத்திரிக்கைத்தமிழ்

காலை முதலாகவே வானத்தை மேகங்கள் மூடி மந்தாரமாக இருந்தபடியால் மணல் சுடவில்லை உச்சிக்கு தேரே ஸூர்யன் மேகப்படலத்துக்குட்பட்டு சந்தேகத்தால் மறைக்கப்பட்ட ஞானத்தைப்போல் ஒளி குன்றியிருந்தான். அலைகள் எதிரே மோதின வடகீழ்த் திசையிலிருந்து சில்லென்று படுவதனால் அலைகளைப் பார்க்கும்போது கொஞ்சம் கண்கூசிற்று. சிறிது தொலைவில் ஒரு வெளிநாட்டு வியாபாரக்கப்பல் வந்து நின்றது. நானும் பொழுதுபோகாமல் ஒரு தோணிப்புறத்திலேயிருந்து கடலையும் அலையையும் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தேன்.

'அடடா! ஓயாமல், ஓ-யா-மல் எப்போதும் இப்படி ஓலமிடுகிறதே! எத்தனை யுகங்களாயிற்றோ! விதியன்றோ இந்தக் கடலை இப்படியாட்டுவது? விதியின் வலிமை பெரிது'

விதியினால் அண்ட கோடிகள் சுழல்கின்றன. விதிப்படியே அணுக்கள் சலிக்கின்றன. மனுஷ்யர், தேவர், அசுரர், முதலிய பல்கோடி ஜீவராசிகளின் மனங்களும், செயல்களும் விதிப்படி நடக்கின்றன. இந்த ஸீர்யன் விதிக்குக் கட்டுப்பட்டிருக்கிறான். மேகங்களெல்லாம் விதிப்படி பிறந்து விதிப்படியோடி விதிப்படி மாய்கின்றன.

இந்த வருணனையில் கடல் சம்சார சாகரம் எனப்பெறும் வாழ்வாக பிறவிப்பெருங்கடலாகச் சித்திரம் கொள்கிறது. வானம், ஞானம் போதிக்கும் கூடம் ஆகிறது. கதிரோன் ஞானத்திற்கு உவமையாகிறான் மேகப்படலம் அஞ்ஞானத்தின் அடையாளமாகிறது. கடல் இறங்காமல், கப்பலை தோணிப்புறத்தில் இருந்து பார்த்தபடி விதியை அளக்கும் பாரதியாரின் பைந்தமிழ் கடல் அலையை அதன் ஓய்வுறா இயக்கத்தை ஓயாமல் என்பதை உள்ளபடி சுட்டி அதன் ஓய்வுறாத்தன்மையை ஓ-யா-மல் என்று அவர் எழுதிக் காட்டுகிறார்.

தமிழ் மரபில் நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய கூட்டி எழுஉதல் என்பதுதான் தொல்காப்பிய மரபு. பாரதியாரோ அதனைக் கடந்து ஓ-யா-மல் என்று இடைவெளி கொடுத்து எழுதுகிறார். இந்த இடைவெளியில் அளபெடை இல்லை. மாறாக அளவிலாக் காலம் வந்து பதுங்குகின்றது. புதிய எழுத்தாக்க முறைமை பதிவாகிறது. அதில் விதியானது அணுவிலிருந்து தொடங்கி அனைத்துலகையும் ஆட்டிப் படைக்கும் அழகை அதிசயத்தை வியப்பது புலனாகிறது. விதி, ஒரு யோகியைப் பாரதியின் முன்னால் கொணர்ந்து நிறுத்துகிறது. அவருக்குப் பாரதியார் ஒரு பெயரும் கொடுக்கிறார் 'கடற்கரையாண்டி'. ஏற்கெனவே பாரதியார் படைப்புகளில் குள்ளச்சாமி, கோவிந்தசாமி , மாங்கொட்டைச்சாமி, யாழ்ப்பாணத்துச்சாமி எனப் பல சாமியார்கள் உண்டு. இவர்கள் பாரதியாரின் சிந்தை கவர்ந்த சித்தர்கள். கதைகளில் வரும் வாழைப்பழச்சாமியும் மிளகாய்ப்பழச்சாமியும் கற்பனைப் பாத்திரங்கள். கவிதைகளில் வெளிப்படும் பண்டாரமும் குடுகுடுப்பைக்காரனும்போலக் கடற்கரை வருணாசிரம சபை கட்டுரையில்

வரும் கிழச்சாம்பான் போல, இந்தக் கடற்கரையாண்டிப் பாத்திரம் கற்பனையா? உருவகமா? உண்மையா? என்பது ஆய்வுக்குரியது. முதலில் பாரதியார் பதிவில் இப்பாத்திரத்தைத் தரிசிக்கலாம்.

**கடற்கரையாண்டி**

இவருக்கு வேதபுரத்தார் 'கடற்கரையாண்டி' என்று பெயர் சொல்லுவார்கள். ஏழைகள் இவரைப் பெரிய சித்தரென்றும் ஞானியென்றும் கொண்டாடுவார்கள். கண்ட இடத்திற் சோறு வாங்கித் தின்பார். வெயில் மழை பார்ப்பது கிடையாது. சில மாதங்கள் ஒரூரிலிருப்பார். பிறகு வேறெங்கேனும் போய், ஓரிரண்டு வருங்களுக்கும் பின் திரும்பி வருவார். இவருடைய தலையெல்லாம் சடை; அரையிலொரு காவித்துணி வேதபுரத்தில் தங்கும் நாட்களிலே இவர் பெரும்பாலும் கடலோரத்தில் உலாவிக்கொண்டிருப்பார்; அல்லது தோணிகளுக்குள்ளே படுத்துத் தூங்குவார்.

கடற்கரையிலேயே பெரும்பாலும் உலவிக்கொண்டு உறங்கிக் கொண்டிருக்கும் இந்தச் சித்தர்ஞானிக்குக் 'கடற்கரையாண்டி' காரணப் பெயர். கடற்கரை அவர் உலவும் இடம். ஆண்டி என்பது அவரது அடையாளத்தால் அமைந்தது. காவியுடுத்திய சடையுடை ஆண்டிக் கோலம் கருதி அமைந்தது எனலாம். (கொண்டாடுபவர்கள் ஏழைகள் என்பது கவனிக்க வேண்டிய குறிப்பு) நதிமூலம் ரிஷிமூலம் போல் இந்த ஞானியின் மூலமும் தெரியவில்லை. இனி, யோசிக்க இடமின்றிப் பாரதியார் கடற்கரையாண்டி உரையாடல் காதுகளில் விழுகிறது. பாரதியார் சொல்கிறார்.

**பாரதியார் கடற்கரையாண்டி உரையாடல்**

இந்தக் கடற்கரையாண்டி நடுப்பகலில் நான் அலைகளைப் பார்த்து யோசனை செய்வது கண்டு புன்சிரிப்புடன் வந்து என்னருகே மணலின்மேல் உட்கார்ந்து கொண்டு 'என்ன யோசனை செய்கிறாய்' என்று கேட்டார்.

'விதியைப் பற்றி யோசனை செய்கிறேன் ' என்றேன்

'யாருடைய விதியை' என்று கேட்டார்

'என்னுடைய விதியை' உம்முடைய விதியை; இந்தக் கடலின் விதியை; இந்த உலகத்தின் விதியை' என்று சொன்னேன்.

அப்போது கடற்கரையாண்டி சொல்லுகிறார்.

'தம்பி, உனக்கும் கடலுக்கும் உலகத்துக்கும் விதி தலைவன். எனக்கு விதி கிடையாது; ஆதலால் உங்கள் கூட்டத்தில் என்னைச் சேர்த்துப் பேசாதே' என்றார்.

‘எதனாலே?’ என்று கேட்டேன்

அப்போது அந்த யோகி மிகவும் உரத்தக் குரலில் கடலோசை தணியும்படி பின்வரும் பாட்டை ஆச்சர்யமான நாட்ட ராகத்தில் பாடினார்.

“சேல் பட் டழிந்ததது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார் மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே!”

**பாரதியார் படைத்துக் காட்டிய இசைச்சித்திரம்**

பாரதியார் – கடற்கரையாண்டி இருவரது உரையாடலின் உச்சம் மேற்சுட்டிய பாடல் எழுத்து இசையாகி எழுந்து உலவும்போது கருத்து நர்த்தனம் புரிகிறது. பாடுபவர் அபிநயம் காட்டுகின்றார் அருணகிரிநாதரே எழுந்தருளி இசைப்பதுபோல் ஒரு தோற்றம் வாசக மனதுக்குள் படிகிறது. வாசிப்பனுபவம் தரமுடியாத சுகத்தை அனுபவத்தைக் கேட்டல் அனுபவம் தந்திருப்பதைப் படித்துணர வைக்கப் பாரதியார் தமிழ் பின்வருமாறு முயற்சி செய்கிறது.

‘கந்தரலங்காரத்தில் நான் பலமுறை படித்திருக்கும் மேற்படிப் பாட்டை அந்த யோகி பாடும்போது, எனக்குப் புதிததாக இருந்தது. மேலெல்லாம் புளகமுண்டாய்விட்டது. முதலிரண்டடி சாதாரணமாக உட்கார்ந்து சொன்னார். மூன்றாவது பாதம் சொல்லுகையில் எழுந்து நின்று கொண்டார். கண்ணும் முகமும் ஒளிகொண்டு ஆவேசம் ஏறிப்போய்விட்டது. ‘வேல் பட்டழிந்தது வேலை’ (கடல்) என்று சொல்லும்போது சுட்டுவிரலால் கடலைக் குறித்துக் காட்டினார். கடல் நடுங்குவதுபோல் என் கண்ணுக்கும் புலப்பட்டது.

அலைகடல் இந்த இசைப்புயலால் ஆட்டங்கண்டுவிட்டது தோற்றம்தான். இதில் மயக்கம் இல்லை. பாரதியார் தொடர்கிறார்.

“பிறகு சொன்னார் :

‘தெய்வத்தின் வேலாலே கடல் உடைந்தது. மலை தூளாய்விட்டது. சூரபத்மன் சிதறிப் போனான். அந்த முருகனுடைய திருவடி என் முடிமீது தொட்டது. நான் விடுதலை கொண்டேன். விடுதலைப் பட்டது பாச வினை விலங்கே.

இங்ஙனம் அவர் சொல்லிக்கொண்டிருக்கையில் மழை வந்து விட்டது. நானெழுந்து வீட்டுக்குப் புறப்பட்டேன். அவர் அப்படியே இறங்கி ஸ்நானம் செய்யப்போனார். நான் மணலைக் கடந்து சாலையில் ஏறும்போது கடற்புறத்திலிருந்து சிங்கத்தின் ஒலிபோலே 'விடுதலை; விடுதலை விடுதலை' என்ற ஒலி கேட்டது ஓம் (சுதேசமித்திரன், 03.02.1917)

**ஓ-யா-த கவியலைகள்**

காட்சி முடிந்துவிட்டது கவிதை கடந்த உரைநடை இலக்கியத்தின் உச்சநிலை இச்சிறு படைப்பில் தெள்ளத் தெளிவாகிச் சிந்தை நிறைக்கிறது. கடற்கரையாண்டியின் விளக்கம் எழுப்பிய பக்திப் பிரவாகத்தை ஞானத் தெளிவினை இச்சித்திரத்தின் இறுதிப்பகுதி நிரந்தரப்பதிவாக்குகிறது.

கடற்கரையாண்டி சொல்லிக் கொண்டிருக்கையில் மழை வந்துவிடுகிறது. மழை அருளின் குறியீடு: வீட்டை நினைவுறுத்திய ஞானத்தூண்டல். "நான் எழுந்து விட்டுக்குப் புறப்பட்டேன்" எனும் தொடரின் 'நான்' பாரதியார் மட்டுமா? எழுதிய, அச்சிட்ட, மறுபடி அச்சிட்ட அச்சிடப்போகிற, வாசித்த, வாசிக்கப்போகிற வாசிப்பதைக் கேட்ட, கேட்கப்போகிற அனைவரையும் உள்ளடக்கிய நான் எழுந்தது ஆன்மா. ஆன்ம எழுச்சியைக் கந்தர் அலங்காரப் பாடல் வழியாகக் கடற்கரையாண்டி எனும் யோகியைக் கொண்டு நிகழ்த்தி விடுகிறது; பாரதிதமிழ்

விதியின் விதியைக் கரையில் வந்து வந்து எழுதிக் கொண்டிருந்த கடல் நடுங்கி, உடைந்து போகப் பண்ணி, மலையைத் தூளாக்கி, சூரபத்மனைச் சிதறிப்போகவும் பண்ணி விடுதலை கொடுத்துவிட்டது. கந்தரலங்காரப் பாடல். முருகனின் திருவடி என் (எனப் படிக்கும் எல்லோருடைய) முடிமீதும் படிகிறது. எல்லா 'நான்' களும் விடுதலைகொள்ள பாசவினை விலங்கும் விடுதலைப்படுகிறது. விதியின் ஓலமாக முன்னம் தோன்றிய கடலோசை இப்போது சிங்கத்தின் கர்ஜனையாக ஒலிக்கத் தொடங்குகின்றது. 'விடுதலை; விடுதலை; விடுதலை' மூன்றுமுறை எழுதிக்காட்டி முத்தாய்ப்பாய் ஓம் என முடிக்கிறார் காளிதாஸனாகிய பாரதியார்.

பின்னோரிடத்தில் விடுதலை மந்திரத்தைச் சிட்டுக்குருவியைக் கொண்டு உபதேசித்த பாரதியார் இக்கட்டுரையில் கடற்கரையாண்டியைக் கொண்டு உணர்த்திக்காட்டுகிறார். கந்தரலங்காரப்பாடல் அதற்குப் பெருந்துணை புரிகிறது. மலைமேல் இருக்கும்

மலையாண்டியான முருகப்பெருமானே கடலின் கரையில் வந்திறங்கிக் கடற்கரையாண்டி ஆனானோ? இவனுக்குத் திருச்செந்தூர்க் கடற்கரை மட்டுமல்ல. செந்தமிழ்த் தென்புதுவைக் கடற்கரையும் சொந்தமன்றோ? வேதபுரக்கடற்கரை என்று பாரதியார் விளிப்பதுகூட வேதக்கடலுக்கு கரைகாணும் செந்தமிழ்த்திறத்தை முருகனைக் கொண்டு முன்னுணர்த்தத்தானோ? எனப் புதுவைக் கடல் அலைபோலப் பலப்பல சிந்தனை அலைகளை எழுப்பிக் கொண்டிருக்கிறது பாரதியாரின் இச்சித்திரம்.

'வேலன் அல்லது சுப்பிரமணியக் கடவுள் என்பது ஆத்மாவில் வீர்ய ரூபமாகிய அக்நி தேவனுக்குப் பெயர். இஃது வேதப்பொருள் (வேலன்பாட்டு உரைக்குறிப்பு)

என்று பிறிதோரிடத்தில் விளக்கம் எழுதும் பாரதியாரின் குறிப்பைக் கடலுக்குப் பொருத்தி பாரதியார் மொழி பெயர்த்த ஸ்ரீஅரவிந்தரின் 'கடலுக்கு' கவிதையையும் அதற்கான பாரதியார் குறிப்புரையையும் ஒப்புநோக்கி.

> "................... முறைதவறா
> வேகத் திரைகளினால் வேதப்பொருள் பாடி
> வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய
> செந்தமிழ்த் தென்புதுவை யென்னும் திருநகர் (குயில்பாட்டு 1-5)

என்னும் கவிவாக்கைப் பயிலும்போது சுப்பிரமணியக் கடவுளே எழுதுகோல் எனும் வேல் ஏந்தி சுப்பிரமணிய பாரதியாராகப் புதுவைக்கு வந்து புகுந்தது போல் ஒரு சித்திரமும் புலப்படுகின்றது.

துணைநின்ற நூல்கள் :


1. பாரதி பாடல்கள் ஆய்வுப்பதிப்பு 'தமிழ்ப்பல்கலைக்கழகம்' தஞ்சாவூர்
2. சீனி. விசுவநாதன் (தொ. ஆ) காலவரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள் தொ-9
3. தொல்காப்பியம்.






உ

# தாள் தாமரை

சிவத்தமிழ்ச்செல்வர் புலவர். வ. ஞானப்பிரகாசம்
43, சிங்காரவேல் நகர், கடலூர் - 607 004.

தாமரை, உலகில் காணும் மலர்களிலேயே மிக உயர்ந்த மலராக மதிக்கப்பெறுவது. அருளாளர்களும் அவ்வாறே போற்றியுள்ளனர்.

"பூவினுக்கு அருங்கலம் பொங்கு தாமரை" என்பது அப்பரடிகள் அமுதமொழி.
"பூவெனப் படுவது பொறிவாழ்பூவே" என்பது சிவப்பிரகாசர் செம்மொழி.

இந்த உயர்ந்த தாமரை மலரிலேதான் தெய்வங்கள் உறைவதாகப் புராணங்கள் புகன்றன. நான் முகன் தாமரை மலரில் உறைகின்றான். திருமகள் செந்தாமரையிலும், கலைமகள் வெண் தாமரையிலும் உறைவதாகப் புலவர்கள் போற்றினர். திருமுருகன் அவதாரத்தைக் கச்சியப்பர்,

"மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்கொணாமல்
நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி அருளொடு சரவணத்தில்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந்து அருளி னானே"

எனக் கந்த புராணத்தில் காட்டியுள்ளார். தெய்வங்கள் தாமரையில் உறைவது மட்டுமல்ல. திருவடிகட்குத் தாமரையையே உவமையாக்கினர்.

"தாமரை புரையும் காமர் சேவடி" எனக் குறுந்தொகைக் கடவுள் வாழ்த்து குமரக் கடவுளைப்போற்றும்.

தாமரையின் இயல்புகளுள் ஒன்று. அது சேற்றில் முளைப்பது "சேற்றில் முளைத்த செந்தாமரை" என்பது காலங்காலமாக வழங்கிவரும் மரபுத் தொடர். எனவே தான் தாமரைக்குப் "பங்கஜம்" என வடமொழியில் ஒரு பெயருண்டு, பங்கம் என்பது சேறு, பங்கத்தில் தோன்றுவது பங்கஜம் ஆகும்.

இறைவன் திருவடிகளைத் தாமரை என்பதால் அவையும் சேற்றில் தான் பொருந்தும், பக்தர்கள் இறைவன் திருவடிகள் தம் உள்ளத்தில் வந்து பொருந்த வேண்டும் என வேண்டுவர். ஆனால் நம் உள்ளமோ கல் போன்றது "நெஞ்சக் கனகல்" திணியான மனோ சிலை, என்பன அருணகிரிநாதரின் வாக்குகள். "நெஞ்சம் கல்லாம்", கல்லார் நெஞ்சு என்பன மணிவாசகரின் மணி மொழிகள், "மனக் கருங்கல் பாறை" என்பது

அருட் பிரகாச வள்ளலார் அமுதமொழி, கல்போன்ற கல்லான நெஞ்சத்தில் இறைவன் திருவடித்தாமரைகள் எப்படிப் பொருந்தும்? எனவேதான் அருணகிரிநாதர், "திணியான மனோசிலை மீது உனதாள் அணியார் அரவிந்தம் அரும்பு மதோ?" – கந்தர் அநுபூதியில் என திருமுருகனை வினவுவார்.

இங்கு ஓர் உண்மையை நாம் சிந்திக்க வேண்டும். இந்த உலகம் தோன்றும் போதே சேறாகத் தோன்றிவிட வில்லை, ஒரு காலத்தில் (நம் நெஞ்சம்போல்) கல்லாகத்தான் இருந்தது. தமிழரின் பழமையையும் வீரத்தையும் கூற வந்த புறப்பொருள் வெண்பா மாலை, "கல்தோன்றி மன் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்தகுடி" என மொழிந்தது. கல் காலநிலையில் மாற்றமடைந்து துகளாகி, மணலாகி, சேறாகிக் குழைந்துள்ளது, அதுபோல் நம் நெஞ்சத்தையும் குழைவிக்க வேண்டும். அவ்வாறு குழைவிக்க நம் முயற்சியும் வேண்டும். இறைவன் திருவருளும் துணை செய்யும். இறைவன் திருப் புகழைத் தோத்திரம் செய்வதாலும், அவன் திருநாமங்களை இடைவிடாது ஓதுவதாலும், உலக உயிர்களிடத்தில் இரக்கம் கொண்டு ஒழுகுவதாலும் திருவருள் துணை நின்று உள்ளத்தை உருக்கும்.

"நெஞ்சைக் கனகல்லும் நெகிழ்ந்துருகத் தஞ்சத் தருள் சண்முகன்"

"முருகன் குமரன் குகன் என மொழிந்து உருகும் செயல்தந்து உணர்வு என்று அருள்வாய்?" என்பன அருணகிரியார் அருள் வாக்குகள்.

"கற்போலும் நெஞ்சங் கசிந்துருகக் கருணையினால் நிற்பானை" என்றும்

"கல்லாம் மனத்துக் கடைப்பட்ட நாயேனை வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக் கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன் கருணை வெள்ளத்து அழுத்தி வினைகடிந்த வேதியனை" என்றும்

"கல்நார் உரித்த கனியே போற்றி" என்றும் கூறியன மணிவாசகரின் மணிமொழிகள் ஆகும்.

"கல்மனமும் கனிவிக்கும் கந்தன் தன்னைக் கதிகாட்டும் திருச்செந்தூரில் கண்டு உய்ந்தேன்" என்பது திருச்செந்தூர் முருகன் சந்நிதி முறை.

இவ்வாறு இறைவன் நம் உள்ளத்தைக் குழைவித்துத் தம் திருவடிகளைப் பதிய வைக்கிறான். இதையொட்டிக் கச்சியப்ப சிவாசாரியார் தம் கந்தபுராணத்தில் ஒரு கற்பனை செய்கிறார்.

திருப்பரங்குன்றத்தில் முருகனுக்கும் தெய்வயானைக்கும் திருமணம் நிகழ இருக்கிறது. தெய்வவயானையை அணி செய்து அழைத்து வருகிறார்கள். திருப்பரங் குன்றமாகிய

மலைப்பகுதியில் அம்மை நம் மென்மையான பாதங்கள் பதிய நடந்து வருகிறாள். அம்மையின் காலில் சிலம்பு ஒலிக்கிறது. அது அன்னையின் பாதங்கள் இக்கல்லில் நடக்க வல்லனவோ? என்று கேட்பது போல் இருக்கிறது. இடுப்பில் மணிமேகலை ஒலிக்கிறது. அது அன்னையின் இடை வருந்துமே என்று இரங்குவது போல் இருக்கிறது.

கல்லுயர் பொருப்பினிடை காமரடி செல்ல
வல்லனகொல் என்று மணி நூபுரம் அரற்ற
மெல்லிடை வருந்தும் என மேகலை இரங்க
எல்ல வரும் உள் மகிழ எம் அனை நடந்தாள்

என்கிறார் கச்சியப்பர்.

அதன்பிறகு கச்சியப்பரே ஒரு சமாதானம் சொல்கிறார். முருகப் பெருமானின் திருவடிகள் தீயவனாகிய என் நெஞ்சப் பாறைகளிலும் நின்று உலவுகின்றன என்றால், அன்னையின் திருவடிகள் சாதாரண பாறை களில் நடப்பது ஒரு புதுமைத்தோ? என்கிறார்.

பஞ்சிதனில் மெல்லடி பனிப்பவரை யின்பால்
குஞ்சரி நடந்த செயல் கூறுபுது மைத்தோ
செஞ்சுடர் வை வேலுடைய செம்மல்அடி தீயேன்
நெஞ்சக அடுக்கலினும் நின்றுலவும் என்றால்

என்பது அவரது சுவையான தமிழ்ப்பாடல். எனவே இறைவனின் தாள் தாமரை நம் மனதில் பொருந்துமாறு நாம் நம் நெஞ்சை நெகிழ்விப்போம். திருவருள் துணை நின்று, நம் திணியார் மனோசிலை மீதும் அணியார் அரவிந்தத்தை அரும்பவைக்கும்.





உ

# அரும்பெறல் மரபின் பெரும் பெயர் முருகு

அப்பரடிப்பொடி ச. திருநாவுக்கரசு,
முசிறி.

**முன்னுரை :** இறைவன் ஒருவனே. அவன் நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன். எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்து இருப்பதால்தான் அவன் இறைவன் எனப்படுகிறான். அவனே எல்லாவற்றையும் கடந்து இருக்கின்றான். அதே சமயம் எல்லாவற்றினுள்ளும் இருக்கின்றான். கடந்தும் உள்ளும் இருப்பதால்தான் அவன் கடவுள் எனப்படுகிறான். அவன் ஒளிப்பிழம்பாக இருக்கின்றான். ஆனால் தன்னை இடைவிடாது நினையாதவர் உள்ளத்தில் தன்னை மறைத்துக் கொண்டுள்ளான். "ஓராதார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே என்பார் திருவாசகம் தந்த மாணிவாசகர். இறைவனுக்கென்று ஒரு குறிப்பிட்ட உருவம், ஒரு குறிப்பிட்ட பெயர் இல்லை. ஆனால் நாம் ஆயிரம் திருநாமம் கூறி அவனை வாழ்த்துகின்றோம். போற்றுகின்றோம். துதிக்கின்றோம். "ஒரு நாமம் ஒருருவம் ஒன்றும் இல்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" என்பது மணிவாசகரின் வாக்கு. "பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்" என்பார் அப்பரடிகள். "வெகுகோடி நாம சம்பு குமாரா நமோநம" என்று பாடி மகிழ்வார் அருணகிரிநாதர்.

**முருகு :** பண்டைத் தமிழர்கள் தமது இறைவனை 'முருகு' என்ற அழகிய தமிழ்ச்சொல்லால் குறித்தனர். ம்-மெல்லின மெய், ர்-இடையினமெய், க்-வல்லினமெய். இந்த மூன்று இன மெய்களிலும் உகர உயிர் ஏறிய முருகு என்ற சொல்லை இறைவனைக் குறிக்க அமைத்துள்ள பாங்கு எண்ணி வியக்கத் தக்கது. ஓங்காரம் எல்லா ஒலிகளுக்கும் மூல ஒலி என்பர். அவ்வொலி அகரம், உகரம், மகரம் ஆகிய ஒலிகளை உள்ளடக்கியது என்பர். அகரம் இறைவனது ஆக்கல் செயலையும், உகரம் இறைவனது காக்கும் செயலையும், மகரம் இறைவனது ஒடுக்கும் செயலையும் குறிப்பன என்பர். முருகு என்ற சொல்லில் மூன்று உகரங்கள் வருகின்றன. எனவே முருகு காக்கும் கடவுள் என்பதை உணரலாம். முருகு என்பது பல பொருள்களைத் தரும் ஒரு சொல். "முருகு கள் இளமை நாற்றம் முருகவேள் விழா வனப்பாம்" என ஒரு தமிழ் நிகண்டு முருகு என்ற சொல்லுக்கு ஆறு பொருள்களைத் தருகிறது. இளமையும் நாற்றமும் கள்ளும் விழாவும் முருகவேளும் அழகும் முருகே" என்ற பிங்கலந்தை நிகண்டு மேற்கண்ட ஆறு பொருள்களையே வழிமொழிவதைக் காணலாம். குறிப்பாக, சிறப்பாக முருகு என்ற சொல் மணம், தெய்வத்தன்மை, இளமை அழகு என்ற பொருள்களைக் குறிப்பதாகக்

கொள்ளலாம். இதனை ''மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி'' எனத் திருமுருகாற்றுப்படை மொழிவதைக் காணலாம். இயற்கை மணமும், மாறா இளமையும், எல்லாவற்றையும் கடந்தும் எல்லாவற்றினுள்ளும் ஒளிரும் கடவுள் தன்மையும், அழியா அழகும் இறைவனிடத்திலே இலங்குவது கண்டு, தேர்ந்து இறைவனை முருகு என்றார். முருகு என்னும் முதல்நிலை அன் என்னும் ஆண்பால் விகுதி பெற்று முருகன் ஆயிற்று. முருகினின்றும் முருகன் தோன்றினான். இரு சொற்களுக்கும் பொருளில் வேற்றுமை இல்லை. இரண்டும் ஒரு பொருளையே குறிப்பன. முருகே முருகன். முருகனே முருகு.

**முருக வழிபாட்டின் தொன்மை :** முருக வழிபாடு மிகத் தொன்மை வாய்ந்தது. முருகன் தமிழ்க் கடவுள். 'தமிழன்', 'தமிழ்ப் பெருமான்', 'தமிழ் இறை', 'முத்தமிழோன்' எனப் பெருமக்கள் அழைத்திருப்பதைக் காணலாம். மேலும் முருகன் குறிஞ்சி நிலக்கடவுள். 'குறிஞ்சிக் கிழவோன்', 'மழைகிழவோன்' என்பன அறிஞர்களின் வாக்குகள். "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்தகுடி" தமிழ்க்குடி. இத்தமிழ்க்குடி கடவுளும் முதன் முதல் தங்கிய இடம் குறிஞ்சி நிலமாம் மலையும் மலைசார்ந்த இடம் என்பது வரலாற்றறிஞர் கொள்கை. மலையில் வாழ்ந்த பழந்தமிழ்மக்கள் தங்கள் இறைவனாம் முருகை குறிஞ்சிக் கிழான் என்றனர். இப்பெயர் முழு முதல் கடவுளாம் முருகின் தொன்மையைக் குறிப்பனவாகும். இன்று நமக்குக் கிடைக்கும் தமிழ் நூல்களில் மிகவும் தொன்மையானது தொல்காப்பியம் ஆகும். தொல்காப்பியத்தில் முருக வழிபாடு பற்றிய அகச் சான்றுகள் உள்ளன. அக்காலகட்டத்தில் முருக வழிபாடு முதிர்ந்து வளம்பட்ட நிலையில் இருந்தமையைத் தொல்காப்பியம் நமக்குத் தெளிவாக உணர்த்துகிறது.

**முருகப் பெருமான் தோற்றம் :** முருகப் பெருமான் தோற்றம் பற்றிப் பலவிதங்களில் புராணங்கள் புகல்கின்றன. வடமொழியில் உள்ள பாரதத்திலும் ஸ்காந்தத்திலும் சொல்லப்படுகின்ற அறிவுக்குப் பொருத்தமானதாக இல்லை. ஆனால் முருகனின் தோற்றத்தை முழுமுதல் கடவுள் நிலைக்குச் சற்றும் இழுக்குவராமல் கச்சியப்ப சிவாச்சாரியார் தமிழ்க் கந்தபுராணத்தில் பாடி மகிழ்கிறார். அதில் முருகன் சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு சுடர்களாகத் தோன்றி, காற்றாலும், நெருப்பாலும் தாங்கப் பெற்று, நாணற் (சரவணப்) பொய்கையிலே குழந்தையாய், மண்ணில் திருவிளையாடல் புரிந்தான் எனச் சொல்லப்படுகிறது. இதனைக் கூர்ந்து நோக்கினால் முருகன், மண், நீர், தீ, வளி, வெளி என்னும் ஐந்து பூதங்கட்கும் காரணன் என்பதை அறியலாம். இவ்வுண்மையைக் கச்சியப்பர் தமது தணிகைப் புராணத்தில்,

ஓங்கொளியாய் விசும்பாதி தொறுமியலுந்
தனதியல்பை உருவின் மாட்டும்
பாங்குபெறத் தெரித்ததுபோற் பலபொறியாய்ப்
பரமர்விழி பயந்த ஞான்று
தேங்கொளியாய் வெளியடர்ந்து வளிதொடர்ந்தெள்
ளொளி படர்ந்து தெளிநீர்ப் புக்கு
நீங்கிவிளை யாட்டயர்ந்து தணிகையமர்
பெருவாழ்வை நினைந்து வாழ்வாம்

என்று முருகப் பெருமானைப் போற்றிருப்பதால் அறியலாம்.

**முருகனே சிவன் :** சிவபெருமானின் மகன் முருகன் என்று புராணங்கள் கூறுகின்றன. சிவபெருமானின் மகன் என்பதால் முருகன் சேயோன் எனப் பெயர் பெற்றான் என்பர். சிவனே முருகன் என்னும், சேய்போல் வந்தான் என்றும், இது ஒரு திருவிளையாடல் என்றும் தமிழ்க்கந்தபுராணம் கூறுகிறது.

"ஈசனே அவன் ஆடல ால் மதலை ஆயினன்காண்" என்றும்,
ஆதலின் நமதுசக்தி ஆறுமுகன் அவனும் யாமும்

பேதகம் அன்றால் என்றும் சிவபெருமான் கூறுவதாகச் சொல்லும் கந்தபுராண வாக்குகள் தெளிவாக நமக்கு விளக்குகின்றன. பரம்பொருளான பிரமமே நமக்கெல்லாம் கருணை பொழிய சோதிப் பிழம்பு என்ற நிலையிலிருந்து முருகன் திருவுருவத்தை எடுத்தது என்பதை,

அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனியாகிக்
கருணைகூர் முகங்க ளாறும் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன்வந் தாங்கு உதித்தனன் உலகம் உய்ய.

என்னும் கந்தபுராணப் பாடலால் அறியலாம்.

சேயோன் என்ற தமிழ்ச்சொல் முருகனையும், சிவபெருமானையும் ஒருசேரக் குறிக்கும் எனலாம், சே என்ற ஓரெழுத்தொரு மொழிக்குச் சிவப்பு, சிவந்த ஒளி என்று நிகண்டுகள் பொருள் கூறுகின்றன. எனவே, சிவந்த ஒளியுடையவன் சேயோன். சிவந்த நிறத்தை உடையவன் சிவன். அவன் பவளம்போல் மேனியுடையவன் என்பார் அப்பரடிகள். சேயோன் என்பது செம்மைப் பண்பைக் குறிக்கும்போது சிவனையும் முருகனையும் குறிப்பதாகக் கொள்ளலாம். சிவபெருமானின் இருப்பிடம் வெள்ளிமலை என்பர். அவன் அயனுக்கும் அரிக்கும் காட்சிகொடுத்தது திருவண்ணாமலை. எனவே சிவன் மலையோடு தொடர்புள்ளவன் எனலாம். முருகனும் மலையும் மலைசார்ந்த

இடமுமான குறிஞ்சி நிலக்கடவுள். குன்றுதோறாடும் குமரன் அவன். எனவே முருகனையும் சிவனையும் ஒருசேரக் குறிக்கும் சேயோன் என்ற சொல்லைத் தேர்ந்து "சேயோன் மேய மைவரை உலகம்" என்று தொல்காப்பியர் கூறியிருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. சிவபெருமானைப் "பிறவா யாக்கைப் பெரியோன்" என்று சிலப்பதிகாரமும், "தாயுமிலி தந்தையிலி தான்தனியன்" என்று திருவாசகமும் கூறுகின்றன. அருணகிரிநாதர், "பெம்மான் முருகன் பிறவான் இறவான்", "தேவதேவ தேவாதிதேவப் பெருமானே", "மன்றுளாடும் சிவசிவ ஹரஹர தேவே நமோ நம"," திரிபுரமெரி செய்தகோவே நமோ நம" என்றெல்லாம் சொல்வதைக் காணலாம். எனவே முருகனே சிவன், சிவனே முருகன் என்பதை உணரலாம்.

**புராணச் செய்திகள் :** முருகனுக்கு ஆறுமுகங்கள், பன்னிரண்டு கைகள் எனப் புராணம் கூறும். அவன் வள்ளி, தெய்வயானை ஆகிய இரு பெண்களை மணந்துள்ளான். கையில் வேல் தாங்கியுள்ளான். சூரனைத் தடிந்தவன் என்றெல்லாம் கூறப்படுகிறது. ஆறுமுகம் பிரணவத்தோடு கூடிய அஞ்செழுத்தின் அறிகுறி, வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, மேல், கீழ் என்னும் ஆறு திக்குகளிலும் நிறைந்த சிதாகாச வடிவத்தை அறிவுறுத்துவது, சிவபெருமானுக்கு ஐம்முகம் சத்திக்கு ஒருமுகம் இரண்டும் சேர்ந்து முருகனுக்கு ஆறுமுகம் என்றெல்லாம் ஆறுமுக நுட்பங்களைக் கூறுவர். ஆறுமுகங்கள், பன்னிரண்டு கைகள் இவற்றின் செயல்பாடுகளைத் திருமுருகாற்றுப்படையும் கந்தர் கலிவெண்பாவும் சிற்சில வேறுபாடுகளுடன் விரிவாக விளக்குகின்றன. வள்ளி முருகனின் விழைவு ஆற்றலையும் (இச்சா சக்தி) தெய்வயானை முருகனின் செயலாற்றலையும் (கிரியா சக்தி), வேல் முருகனின் அறிவாற்றலையும் (ஞானசக்தி) குறிக்கும் என்பர். அறிவு (ஞானம்) ஆழமாகவும் அகலமாகவும் கூர்மையாகவும் இருக்க வேண்டும் என்பதை வேலின் வடிவமே காட்டுகிறது ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே என்பது திருவாசகம். சூரபன்மன் – ஆணவம் சிங்கமுகன் – கன்மம், தாரகன் – மாயை, முருகன் சூரனைத் தடிந்தான் என்பது அவன் அடியார்களின் மும்முலங்களையும் போக்குபவன் என்பதைக் குறிக்கும் எனலாம்.

**முருகனும் தமிழும் :** முருகனே தமிழ், தமிழே முருகன் என்று விளக்குகிறது கீழ்க்கண்ட புலவர் புராணப் பாடல்.

கண்ணிகர் மெய்யும் சென்னிக் கணநிகர் இனத்தின் கூறும்
திண்ணமே தோள்க ளேபோல் திகழ்தரும் உயிரும் வேறொன்று
எண்ணுதற் கரியதான எஃகமும் இயலில் காட்டும்
புண்ணிய முனிக்கோன் செவ்வேள் பொற்பதத் தடிமையாகும்.

முருகனுக்குப் பன்னிரண்டு தோள்கள், தமிழில் பன்னிரண்டு உயிரெழுத்துகள், முருகனுக்குப் பதினெட்டு கண்கள், தமிழில் பதினெட்டு மெய்யெழுத்துகள். முருகனுக்கு

ஆறு தலைகள், தமிழில் வல்லினம், மெல்லினம், இடையினம் என இனம் ஒவ்வொன்றிற்கும் ஆறு எழுத்துகள். முருகனிடம் வேலாயுதம், தமிழில் ஆய்த எழுத்து என ஒப்புமை காட்டுகிறது மேற்கண்ட பாடல்.

**சிவபெருமான் சுடர் :** சிவபெருமான், பராசக்தி, விநாயகன், முருகன்- இவர்களெல்லாம் வெவ்வேறு கடவுள்கள் அல்லர். எல்லோரும் ஒரே பரம்பொருளின் வெவ்வேறு பரிமாணங்களே. சுடர் சிவபெருமான் எனக் கொண்டால் சுடரின் சூடு பராசக்தி சுடரின் செம்மை நிறம் விநாயகன், சுடரின் ஒளி முருகன் எனப் பின்வரும் பழம்பாடல் விளக்குகிறது.

சுடரோ சிவபெருமான் சூடு பராசத்தி
திடமார் கணநாதன் செம்மை – படரொளியோ
கந்தவே ளாகும் கருதுங்கால் சற்றேனும்
வந்ததோ பேத வழக்கு.

இவ்வாறெல்லாம் பல்வேறு பரிமாணங்களைக் கொண்ட முருகு என்னும் பெயர் பெரும் பெயராகும் (மகா வாக்கியம்) என்று சொல்கிறது திருமுருகாற்றுப்படை அரும்பெறல் மரபின் பெரும் பெயர் முருரு என்பது நக்கீரர் வாக்கு.

**வழிபடும் முறை:** அருளாளர்கள் உணர்த்திய முருகப் பெருமானின் திருவுருவை இடைவிடாது மனம் மொழி மெய்களால் வழிபட வழிபட இயற்கை வடிவாயுள்ள முருகன் தோன்றுவான். எங்கும் நிறைந்த முருகப் பெருமானை இவ்வுருவத்தில் வழிபடுகிறேன் என்னும் எண்ணம் உள்ளத்தில் பதிதல் வேண்டும். முருகனை வழிபடும் முறையைத் திரு.வி.க. அவர்கள், "முருகன் இயற்கை வடிவாய் யாண்டு மிருப்பவன் " என்னும் உணர்வோடு செய்யப்படும் உருவவழிபாடு நாளடைவில் மனக்கேட்டை அழித்து. இயற்கையிலுள்ள முருகைப் புலப்படுத்தாமற் போகாது. இப்புலப்பாடு அக, புற வேற்றுமையைக் களைவதாகும். இந்நிலை கைவரப் பெற்றவர் இயற்கை மணமுடையராய், மாறா இளமையுடையராய், கடவுட்டன்மையுடையராய், அழியா அழகுடையராய்ப் பிற பிறப்புத் துன்பமின்றி இன்ப வாழ்வில் திளைத்திருப்பர். யாதொரு தெய்வம் கொண்டாலும் அத்தெய்வமாக முருகன் வருவான் என உணர்ந்து திரு.வி.க. அவர்கள் கூறியாங்கு வழிபட்டு உய்தி பெறுவோமாக!



உ



# தெய்வ வெண் திருநீறு சிறக்கவே

சித்தாந்தரத்தினம் அ. மாசிலாமணி
தலைவர், திருப்பாதிரிப்புலியூர்ச் சித்தாந்தச் சைவ நெறி மன்றம்,
கடலூர் - 607 002.

திருநீறு சைவர்களுக்கு மிக முக்கியமான ஒன்றாகும். இதனை விபூதி என்பதும் வழக்கத்தில் உள்ளது. விபூதி என்பதற்கு ஐஸ்வர்யம் என்று பெயர். சிவனின் திருமேனியில் தோன்றியது விபூதி. 'வி' என்பது மேலான என்பதையும் பூதி என்பது செல்வம் என்பதையும் குறிக்கும். சிவனடியார்களுக்குத் திருநீறு, கண்டிகை (உருத்திராக்கம்). சடைமுடி ஆகிய மூன்றும் சிவச் சின்னங்களாகும். இவற்றை தரித்திருப்போரைச் சிவனடியார்களாகவே கொள்ள வேண்டும். இவற்றுள் திருநீறு பற்றி இங்கு சிந்திக்கலாம்.

தீவினைகளை நீறுபடுத்துவதால் திருநீறு எனவும், அழியாத செல்வத்தைக் கொடுப்பதால் விபூதி எனவும், ஆன்மாக்களிடம் உள்ள மலமாசைக் கழுவுவதால் சாரமென்றும் வழங்கப்படுகின்றது.

விபூதியில், பசுஞ்சாணத்தால் தயாரிக்கப்படும் விபூதியே சிறந்தது. கன்றுடன் கூடிய பசுவின் சாணத்தை. சிவமந்திரங்களால் உண்டாக்கப்பட்ட சிவாக்னியில் சிவன் திருவடியை நினைந்து இட்டு எடுத்த தூய திருநீறுக்கு கற்பம் என்று பெயர். பௌர்ணமி, அமாவாசை அல்லது அஷ்டமி திதி காலை பசு சாணம் போடும்போது அது தரையில் விழும் முன் நல்ல பாத்திரத்தில் ஏற்று பிறகு அதனைச் சிறு உருண்டைகளாக உருட்டி வெயிலில் உலர்த்தி நன்கு உலர்ந்தபின், நெல் உமியைக் குவித்து, தீமூட்டி, அதில் உருண்டைகளைப் போட்டு வெந்ததும் அவைகளை எடுத்து சல்லடை போன்ற மெல்லிய துணியில் இட்டு சலித்து, அத்துடன் சந்தனத்தூள் குங்குமப்பூ பச்சைக்கற்பூரம் வெட்டிவேர், தாழம்பூ சேர்த்து விபூதி கிண்ணத்தில் போட்டு வைத்துக்கொள்ள வேண்டும். இத்தகைய விபூதியை அணிந்தால் அது சேக்கிழார் கூறும் தெய்வ வெண் திருநீறாக அமையும்.

விபூதியைத் தினமும் காலைக் கடன்களை முடித்து நீராடி பஞ்சாட்சரம் (ஓம் நமசிவாயஅல்லது ஓம் சிவாய நம) ஓதி அணிய வேண்டும். காலையில் நீராட

இயலாவிட்டால் கை கால்களைச் சுத்தம் செய்து கொண்டு பஞ்சாட்சரம் சொல்லி அணியலாம். திருநீற்றின் மூன்று வரிகளில் மேல்வரி பரமேஸ்வரன்; நடுவரி திருமால்; கீழ்வரி பிரம்மா எனவும், பஞ்சாட்சரம் சொல்லி, அணிவதால் எல்லா பாவங்களும் விலகும் எனவும் தேவி பாகவதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. விபூதியைத் தரிக்க எடுக்கும்போது வலக்கைப் பெருவிரல் (கட்டைவிரல்) உதவியுடன் சுட்டுவிரல், நடுவிரல், மோதிரவிரல் இம்மூன்றினால் எடுத்து இடக்கையில் வைத்துக்கொண்டு சிவதீட்சை பெற்றவர்கள் அதற்குரிய மந்திரங்களை அர்ச்சித்தும், ஏனையோர்கள் சிவாயநம அல்லது நமசிவாய என அர்ச்சித்தும் வடக்கு அல்லது கிழக்கு நோக்கியோ நின்று சிவபெருமானின் திருவடியை நினைந்து அண்ணாந்து கீழே சிந்தாமல் பூசிக்கொள்ள வேண்டும்.

சிவதீட்சை பெற்றவர்கள் நீரினால் குழைத்தும் மற்றவர்கள் உத்தூளனமாகவும் (பஸ்மமாக) அணிந்துகொள்ள வேண்டும் என்பது சாத்திரங்களில் கூறப்பட்ட விதியாகும். விபூதி தரிக்கும்போது வலக்கை நடுவிரல்கள் மூன்றினாலும் நெற்றியில் தரிக்க வேண்டும். நடந்துகொண்டும், கிடந்துகொண்டும் விபூதி தரிக்கக் கூடாது. சுவாமி முன்னும், குரு முன்னும் முகத்தை திருப்பி நின்று அணிதல் வேண்டும். சிவதீட்சை பெற்றோர் உடம்பில் பதினாறு இடங்களில் தரிக்க வேண்டும். சிரம், நெற்றி, மார்பு, கொப்பூழ், முழந்தாள்கள், புயங்கள், முழங்கைகள் மணிக்கட்டுகள். விலாப்புறங்கள், முதுகு, கழுத்து ஆகிய இடங்களாகும். மார்பு நெற்றி புயங்கள் இம்மூன்று இடங்களில் ஆறு அங்குல நீளமும் ஏனைய இடங்களில் ஓர் அங்குல நீளமும் இருத்தல் அவசியம். விபூதி குறிகள் ஒன்றை ஒன்று தீண்டாத வகையில் தரிக்க வேண்டும். சிவனடியார்களுக்கு மாகேசுவர பூசை அளிக்கும்பொழுது, அவர்கள் வீட்டில் உள்ளவர்களை அழைத்து அவர்களுக்குத் திருநீறு அளித்து விட்டுத்தான் உண்பார்கள். திருவருளைச் சிந்தித்து திருநீறு அணிந்த பின்பே சிவனடியார்கள் உணவு உண்பார்கள். திருநாவுக்கரசர் அப்பூதியடிகளின் வீட்டில் மாகேசுவர பூசையை ஏற்றுக்கொள்ளும்போது வீட்டில் உள்ளவர்களுக்குத் திருநீறு அளிக்க எண்ணி, அவரின் மகனை அழைத்த பொழுதுதான், அவன் விடம் தீண்டி இறந்த விபரம் தெரிந்தது. அவர் பதிகம்பாடி இறந்த பிள்ளையை உயிர்ப்பித்துக் கொடுத்தார் என்று திருநாவுக்கரசர் புராணத்தில், சேக்கிழார் பதிவு செய்துள்ளார்.

திருநீறு அணிபவர் அருகிலேயே சிவபெருமான் இருந்து வருகிறார். உடல்முழுவதும் திருநீறு அணிந்தவன் அருகில் கொடும்பாதகன் சென்றால் பாதகனின்

பாவங்கள் அனைத்தும் அகலும். நீறணிந்தவனுக்குத் திருவமுது படைத்தால் பெரும்யாகம் செய்த பலன் உண்டு.

திருச்செந்தூரில் பன்னீர் இலையில் கொடுக்கும் விபூதியும், பழனி மூலவர்க்கு அபிகேம் செய்த விபூதியும் பல நோய்களைத் தீர்க்க வல்லவை என்று காஞ்சி காமகோடி பீடாதிபதி பரமாச்சாரியர் கூறியுள்ளார். திருப்பாதிரிப்புலியூர் பதிகத்தில் அப்பர் பெருமான்

“ கருவாய்க் கிடந்துன் கழலே நினையும் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்து உன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய்ப் பொலிய சிவாயநம என்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீ பாதிரிப்புலியூர் அரனே ”

என வேண்டுகிறார். சிவாயநம என நினைந்து நீறணிந்தால் சிவகதி கிடைக்கும் என்பதைத் தெளிவுப் படுத்துகின்றார். மற்றொரு பதிகத்திலே அப்பர் பெருமான் (4-ம் திருமுறை பொது)

“சந்திரன் சடையில் வைத்த சங்கரன் சாமவேதி
அந்தரத் தமரர் பெம்மான்ஆன்நல்வெள் ளூர்தியான்தன்
மந்திர நமச்சிவாயவாக நீறணியப் பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்ட தன்றே”

என அருளியுள்ளார். பெருமானுடைய திருவைந்தெழுத்தை ஓதி திருநீற்றை அணிந்தால் கொடிய நெருப்பில் இடப்பட்ட விறகுபோல நம்முடைய நோய்களும், வினைகளும் வெந்து சாம்பலாகும். மேற்கண்ட பதிகத்திலிருந்து நாம் அறிந்து கொள்வது என்னவெனில், திருநீற்றை நமசிவாய எனவும் சிவாயநம எனவும் ஓதுவித்து அணியலாம் என்பதாகும்.

திருநீறு நம்மேல் பட்டாலே அனைத்துப் பாவங்களும் விலகும் என்பதை தேவிபாகவதத்தில் கீழ்க்கண்ட நிகழ்ச்சி மூலம் விளக்கப்பட்டுள்ளது.

துர்வாச முனிவர் நாள்தோறும் தேகம் முழுவதும் திருநீறு அணிபவர். அவர் ஒரு சமயம் பிதிர்லோகம் செல்லும்போது வழியில் அவலக்குரல்கள் கேட்கின்றன. காரணம் என்னவென்று அறிந்தபோது பிதிர்லோகம் அருகில் கும்பீகம் என்னும் நரகத்தில்

உள்ளவர்கள் வலி, வதை பொறுக்கமுடியாமல் கூச்சலிடுகின்றனர் என உணர்ந்தார். எனவே அந்த நரகத்தைத் துர்வாசர் எட்டிப் பார்த்தவுடன் அவலக்குரல்கள் நின்றுவிட்டன. அதில் உள்ளவர்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள். இந்தத் தீடீர் மாற்றத்தைக் கண்டு நடுங்கிய யமதூதர்கள் தர்மராஜனிடம் தெரிவிக்க, அவன் வந்து இந்திரனிடம் உரைக்க, பின் திருமால், பிரம்மா, இந்திரன் மூவரும் பரமேசுவரனிடம் வந்து வேண்டி காரணத்தைக் கேட்கிறார்கள். அதற்குப் பரமேஸ்வரன், துர்வாச முனிவர் அணிந்திருந்த திருநீறே காரணம் என்றும், அவர் நரகக்குழியைக் குனிந்து பார்த்தபொழுது அவருடைய நெற்றியில் இருந்த திருநீறு காற்றினால் பறந்து நரகக் குழியில் விழ அந்த இடமே புனிதமானது. அங்கு உள்ளவர்களும் புண்ணியமானார்கள் என விளக்கம் அளித்தார். இதன்மூலம் நரகக்குழிக்குச் சென்று அல்லலுறும் உயிர்கள்மீது திருநீறு படுமானால், அவ்வுயிர்கள் துன்பத்திலிருந்து விடுபடும் என்பதை அறியலாம்.

திருமூலரும் தம்முடைய திருமந்திர 2111-ஆவது மந்திரப் பாடலில் இடபவாகனத்தை உடைய இறைவனே, என் தலைவா எனச் சொல்லி நெற்றியில் திருநீறு பூசும் அடியார்கள் இவ்வுலகிலேயே தேவர்கள் ஆவார்கள், அவர்கட்கு பிறவியால் வரும் துன்பமும், இல்லை என்கிறார்.

திருஞானசம்பந்தர் திருநீற்றுப்பதிகம் என்றே ஒரு பதிகம் பதினாறு பாடல்களில் அருளியுள்ளார். மந்திரம் ஆவது என முதலடியைக் கொண்டது இது. இதில் திருநீற்றின் பெருமையை விளக்கியுள்ளார். மந்திரம் நினைப்பவரைக் காப்பது. அழகு தருவது, நூல்களால் புகழப்படுவது, கொடிய துயர்களைப் போக்கவல்லது, சிவஞானத்தைத் தந்து அறியாமையைப் போக்குவது, பக்தியை விளைவிப்பது, அறிவு, பெருமை, புண்ணியம் ஆகியவற்றைத் தருவது தவம்செய்யும் முனிவர்கட்கு ஆசையை அறுப்பது, பேரின்ப நிலையை அளிப்பது, மன வருத்தத்தைத் தணிப்பது, செல்வமாக விளங்குவது, தத்துவங்களில் இருப்பது, மெய்ப்பொருளை உணர்த்துவது. பிறவியாக இடரைத் தவிர்த்து நிலையான இன்பம் அளிப்பது என்று இவ்வாறாகத் திருநீற்றின் பெருமையை உணர்த்துகிறார். தேவராயர் இயற்றிய கந்த சஷ்டி கவசத்திலும் “நீறிடும் வேலவன் நித்தம் வருக” என முருகனை வேண்டுகிறார். முருகன் அழகை விவரிக்கும்போது “நீறிடு நெற்றியும் நீண்ட புருவமும்” என உரைக்கின்றார். அடுத்து “பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க” என்று நீறணந்த நெற்றியைக் குறிப்பிடுகின்றார். “நேசமுடன் நெற்றியில் அணிய பாச வினைகள் பற்றாது நீங்கும்” எனவும் விபூதியின் பெருமையை

விளக்குகிறார். மேலும் இந்தக் கந்த சஷ்டி கவசத்தை ஒரு நாளில் முப்பத்தாறு உருக்கொண்டு ஓதியே செபித்து உகந்து திருநீறு அணிந்தால் எல்லா நற்பேறும் கிட்டும் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் திருநீற்றினை வெண்ணீறு வெள்ளைப்பொடி எனக் கோயில் நான்மணி மாலையிலும் தவளநீறுபூசி வெள்ளை நீறு எனக் கழுமல மும்மணிக்கோவையிலும், இறைவனைத் திருநீற்று எழில் ஏகம்பர் எனத் திருஏகம்பமுடையார் திருவந்தாதியிலும் கூறியுள்ளார். நீறணி பவளக்குன்றமே , தவளவெண்பொடி, தெள்ளுநீறு, பொங்கெழில் திருநீறு படரொளி திருநீறு எனவும் பலவாறாகத் திருவிசைப்பாவில் குறிப்பிட்டுள்ளார்கள் அருளாளர்கள்.

திருநீற்றினைப் பற்றி இதுவரை சிந்தித்ததில் திருநீறு எத்துணை சிறப்புடையது எனவும் நாம் வணங்கும் இறைவன் எவ்வளவு மகிழ்வோடு அதை அணிந்து கொண்டுள்ளார் எனவும் இந்த விபூதியினை நாம் மனதார பரமேஸ்வரனையோ அல்லது அவருடைய இருபத்தைந்து மூர்த்தங்களில் அவரவர்க்குப் பிடித்த மூர்த்தத்தை நினைந்து நமசிவாய அல்லது சிவாயநம எனவும் உச்சரித்து அணிந்து கொண்டால் இப்பிறப்பில் எல்லா வளமும் பெறுவதோடு அடுத்து பிறவியிலும் நாம் இன்பமுடன் வாழலாம் எனவும் உணரப்படுவதால் சைவர்களாகிய நாம் திருநீறு பூசி முக்தி பெற முயல்வோமாக.



உ



# வாரியார் விருந்து

உ. இராச மாணிக்கம்
ஜோதி நகர், கடலூர் - 2.

கடந்த நூற்றாண்டில் கட்டவிழ்த்து விடப்பட்ட நாத்திக வாதத்தைத் தனிமனிதனாக எதிர் கொண்டு தனது வாதத்திறமையாலும், சொற்பொழிவுகளாலும் மக்களைத் தன்பால் ஈர்த்து வியக்கவைத்து தெய்வ பக்திக்குத் தமிழைத் துணை கொண்டு அவணியை வலம் வந்தவர் வாரியார் ஆவர்கள்.

சைவத்தையும், தமிழையும் இரு கண்களாகக் கொண்ட வாரியார் அவர்களின் சொற்பொழிவுகளில் எழுந்த நயத்தக்க நாகரிகம், பொருள் நயம், நகைச்சுவை நுட்பங்கள், ஆழமான ஆணித்தரமான கருத்துப் பதிவுகள் ஆகியவற்றைத் திரும்பத்திரும்பப் படித்தாலும், கேட்டாலும் சலிக்காது. இக்கட்டுரையின் மூலம் அவரது புகழ் மகுடத்தில் ஒரு மாணிக்கக் கல்லைப் பதிக்க முயல்கிறேன்.

தமிழ் என்று நினைக்கும்போது திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அகமும், முகமும் மலர்வதை அவரை முன்னிருந்து பார்த்தவரெல்லாம் நன்கறிவர். இதற்கு என்ன காரணம் என்று அவரை அணுகிக் கேட்டால் “வேறு எம்மொழிக்கும் இல்லாத சிறப்பு நம் செந்தமிழுக்கு ஒன்றுண்டு; செம்மை சேர் இறைவனால் அடியெடுத்துக் கொடுத்த மொழி அகிலத்தில் வேறெம்மொழியும் பெறாத சிறப்பல்லவா” என்பார்.

அவரின் சொற்பொழிவுகள், பதில்களில் சிலவற்றைத் தேர்வு செய்து இக்கட்டுரையைப் படிப்போர் உளம்குளிரத் தொகுத்தளிக்கிறேன்.

முருகனுக்குத் தோள்கள் பன்னிரண்டு. தமிழ்மொழியின் உயிரெழுத்தும் பன்னிரண்டு, திருமுருகனின் கண்கள் நெற்றிக் கண்களோடு சேர்த்துப் பதினெட்டு; தமிழின் மெய்யெழுத்தும் பதினெட்டு;

வெற்றி வேல் முருகனின் ஆய்தம் ஒன்று. அதுவே வேலாயுதம்; தமிழின் ஆய்த எழுத்தும் ஒன்றுதான் என வாரியார் சுவாமிகள் பொருத்திக்காட்டிப் பேசும் போதெல்லாம் அரங்கம் அதிரும்.

முத்தும் முத்தமிழும் பிறந்தது தென்னாடு. வரலாற்றும் பதிவுகள் சேர, சோழ, பாண்டிய நாடென பறைசாற்றுகின்றன. தமிழகத்தைச் சுற்றியுள்ள நீர்ப் பகுதிகளும் மூன்று. அவை முக்கடல் அல்லது முந்நீர் எனப் போற்றப்படும். வாழ்வறம் வகுத்த

வள்ளுவரும் அறம், பொருள்,இன்பம் என்னும் முப்பாலையே வகுத்துக் காட்டினார். இறைவனும் ஆக்கல் காத்தல் அழித்தல் எனும் முத்தொழில்களை விளையாட்டாய்ச் செய்து வருகிறார் என்பார் மெய்ஞானியாரும்.

ஆனால் முக்கன்னடம் முத்தெலுங்கு மும்மலையாளம், முத்துளுவம் என்றோ முச்சமஸ்கிருதம் என்றோ வழங்குவது இல்லை. தமிழ் ஒன்றுதான் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என விளங்குவதாக வாரியார் சுவாமிகள் பெருமையோடு தமிழின் புகழ் பாடுவார்.

'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்'

என்ற குறளுக்கு உயிரூட்டும் வகையில் புலால் உண்ணுதலை முற்றிலுமாகக் கைவிட்டு மறக்கறி உணவையே உண்ணுதல் உடல்நலம் மனநலம் ஆகியவற்றிற்குத் திறமேற்றும் என்பதை வாரியார் சுவாமிகள் நயம்பட எடுத்துரைப்பார்.

"பஞ்சின் அருகில் தண்ணீர் இருப்பின் மென்மையான பஞ்சு இழுத்துக் கொள்ளும் கடினமான கல்லின் அருகில் எவ்வளவு நீர் ஆறாய் ஓடினாலும் கல் இழுக்காது. அதுபோல மென்மை கொண்டவரிடத்தில் மேன்மையும் இறைமையும் சென்றடையும். கடினமான புலாலைப் புசிப்பவர்க்கு மென்மையான இறைமை நில்லாது என எளிய உவமையால் பெரிய உண்மையை அரங்கத்தில் பதியவைத்துப் பல பேரைச் சைவமாக மாற்றிய பெருமை வாரியாரைச் சாரும்.

'நான் என் மனமறிய யாருக்கும் துரோகம் செய்தததில்லை, ஏன் எனக்கு இவ்வளவு துன்பம்' என வாரியாரிடத்தில் புலம்புவோர் உண்டு.

அதற்கு வாரியார் நுட்பமாக 'நேற்று எழுதிய தேர்வுக்கு இன்று மதிப்பெண் தெரிந்துவிட்டது. இன்று எழுதிய தேர்வுக்கு நாளை மதிப்பெண் தெரிய வரும்! அதுபோலப் பூர்வஜென்மப் பாவத்தினால் இன்று துன்பம் வாட்டுகிறது. இன்று நீ செய்யும் பூசையும் புண்ணியமும் நாளை இன்புறச் செய்யும் என மாணவர்களும் வியப்புறும் வண்ணம் பதில் கூறுவார்.

வாரியார் சுவாமிகள் தனது பேருரையில் தத்துவார்த்தமாகப் பல வியங்களைக் கூறுவார். "உடல் அழியக் கூடியதுதான். ஆனால் அதன் ஆயுளை நம்மால் நீடிக்க வைக்க இயலும்" என வழிப்பாட்டுநெறிமுறைகளை எளிமையாக எடுத்துரைப்பார்.

மனிதனின் ஆயுளைக் குறைக்கும் காரணிகள் ஐந்து. கடுமையான வெயில், சுடுகாட்டுப்புகை, தன்னைவிட அதிக வயதுள்ளவரைச்சாரும் தகாத புணர்ச்சி, குட்டையில் தேங்கிய நீர், இரவில் தயிர் சாதம் இவையாவும் ஆயுளைக் குறைத்துவிடும்.

ஆயுள் வளர்ப்பன ஐந்து. மாலை வெயில், ஓமப்புகை, இளம்மனைவி, அருவிநீர், இரவில் பால்சாதம் என வாழும் கலையைக் கூறி அஞ்ஞான இருட்டை நீக்குவார்.

மேலும் அருந்ததி என்றால் குறுக்கிடாதவர்; வைகுண்டம் என்றால் வளையாதது. காசி என்பது புருவமத்தி, அட்சதை என்றால் உமிநீக்கப்படாத அரிசி என ஆயிரம் சுடர்களை நம் அறிவில் ஏற்றி அருள்மொழி அரசராக வாரியார் திகழ்ந்தார் என்றால் மிகையாகாது.

சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என முருகன் மாடு மேய்க்கும் சிறுவனாக வந்து கேள்வியெழுப்பி தமிழ் மூதாட்டி ஔவையைத் திணறடித்த கதையை நாமறிவோம்! நாடறியும் அதனை

"கருங்காலிக் கட்டைக்கு நாணா கோ டாலி
இருங் கதலித் தண்டிற்கு நாணும் – அருங்கானில்
காரெருமை மேய்க்கின்ற காளைக்குத் தோற்றனனே
ஈரிரவு துஞ்சாதென் கண்"

என ஔவையார் பாடி வேதனையடைந்தார்.

இதுபோல் மாடு மேய்க்கும் சிறுவனிடமும் மாண்பு உண்டு என்பதனைத் தெனாலிராமனோடு ஒப்பிட்டவர் வாரியார் சுவாமிகள்.

தெனாலி என்னும் ஊரில் ராமன் எனும் சிறுவன் காளி கோயிலில் மழைக்காக ஒதுங்கியபோது ஆயிரம் சிரமாலைகளோடும் தலைகளோடும் காட்சி தந்தபோதும் பயப்படாமல் சிரித்தான்

அதைப்பார்த்த காளி என்னைப்பார்த்து எல்லோரும் பயப்பட நீ மட்டும் சிரிக்கிறாயே? எனக் கேட்க அதற்குச் சிரித்த ராமன் எங்களுக்கு ஒரு மூக்கில் சளி பிடித்தாலே துன்பப்படுகிறோம் உனக்கு இவ்வளவு மூக்கு இருக்கிறதே சளிபிடித்தால் எவ்வாறு தாங்குவாய்" எனக் கேட்க அதற்குப் பதிலளித்த காளி 'அச்சம் தரும் என்னையே சிரிக்க வைத்து விட்டாயே இன்றுமுதல் நீ ஓதாமலே உணர எல்லாக் கலைகளும் வாய்க்கும்' என அருள் புரிந்து மறைந்ததைக் கதையாகச் சொல்லி 'பெரியோரை வியத்தலும் இலமே சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே' என்று கணியன் பூங்குன்றனார் செதுக்கி வைத்த வாழ்வறத்துக்குப் பொருள் இதுதான் என விளக்கும்போது எல்லோரும் கை தட்டி ஆர்ப்பரிப்பார்.

கதை சொல்லி நீதி சொல்லும் கலையில் வாரியாருக்கு நிகர் வாரியாரே தான். ஒரு ஓலைக்குடிசையில் விவசாயக் கூலியான பாட்டியும் ஐந்தாம் வகுப்புப் படிக்கும் பேத்தியும் வாழ்ந்து வந்தனர்.

திடீரென ஒருநாள் கருமேகம் திரண்டு மழை பொழியவே இறவாணத்தின் வழியே மழைத் தண்ணீர் வேகமாக விழுந்தது.

மழை நீரைப் பாத்திரத்தில் பிடித்து வைக்க பாட்டி கட்டளையிட பேத்தி பரண் மேல் ஏறி பயன்படாமல் கவிழ்த்து வைக்கப் பட்டிருந்த ஐந்தாறு பாத்திரங்களைக் கொண்டு வந்து விழும் மழையில் வைத்துவிட்டுப் போய்விட்டாள். நீண்ட நேரம் மழை பொழிந்து ஓய்ந்து விட பாட்டி பாத்திரங்களைப் பார்த்தாள்; தண்ணீர் இல்லை. காரணம் பாத்திரங்களைப் பேத்தி கவிழ்த்து வைத்திருந்தாள் எனக் கூறி பிறவி நோய் நம்மை விட்டுப் போவதற்கான வழிமுறைகளைச் சொல்லி விடுவார் வாரியார்

கவிழ்த்த பாத்திரத்தில் எப்படித் தண்ணிர் இருக்காதோ அதுபோலக் கவிழ்ந்த உள்ளத்தில் ஒழுக்கம் இருக்காது; பக்தி இருக்காது; பக்தி இல்லாத இடத்தில் இறைவன் தங்குவானா? எனக் கேட்டு சிந்தனையைத் தூண்டுவார் அருள்மொழி அரசர் வாரியார் சுவாமிகள்.

அடியார்களுக்கு உணவளிப்பதை ஆண்டவனுக்கு உணவளிப்பதாகக் கருத வேண்டும் என வாரியார் கூறும்போது 'ஆண்டவனுக்குச் செய்வது ஆராதனை; அடியார்களுக்குச் செய்வது சமராதனை! கிளைஅஞ்சலகத்துக்குப் போவதுபோல் அடியார்களுக்கு உணவளித்தால் ஆண்டவனுக்குப் போய்ச் சேரும் என்பதை நயம்பட உரைத்து அன்னதானத்துக்குப் பெருமை சேர்ப்பார் வாரியார் சுவாமிகள்.

இறைவன் ஞானசம்பந்தரையும் சுந்தரரையும் நாவுக்கரசரையும் ஆட்கொண்ட விதத்தை மாற்றாரும் வியக்கும்வண்ணம் வார்த்தைகளை வாரி இறைப்பதில் வாரியாருக்கு நிகர் வாரியார்தான்.

ஞானசம்பந்தரைப் பாலைக்கொடுத்து ஆட்கொண்டார். சுந்தரரை ஓலை கொடுத்து ஆட்கொண்டார். நாவுக்கரசரைச் சூலை கொடுத்து ஆட்கொண்டார் மாணிக்கக வாசகரை காலைக் கொடுத்து ஆட்கொண்டார் எனக் கூறி வாரியார் தம் பைந்தமிழ்ப் புலமையை வெளிப்படுத்தி வியப்பில் ஆழ்த்துவார். பெண்ணுக்குத் துறவு உண்டா? சரியா? என்ற கேள்விக்குப் பதில் தரும் வாரியார் நம் சங்க நூல்களில் பெண்ணுக்குத் துறவு விதிக்கப்படவில்லை ஔவையாரும் 'சற்றேனும் ஏறுமாறாக நடப்பளே ஆமாகில் கூறாமல் சந்நியாசம் கொள்; என ஆண்களுக்கு மட்டுமே வழிகாட்டுவாள்.

துறவு என்பது கரடுமுரடான பாதை. அதை மென்மையான பெண்மை தாங்காது. ஏனெனில் திருமணம் ஆன மறுகணமே பிறந்த வீட்டை துறக்கிறாள்; பாலும் தேனும் உணவோடு ஊட்டிய தாய் தந்தையைத் துறக்கிறாள்; மகள் எனும் பட்டம் மறைந்து மறுமகள் பட்டம் பெறுகிறாள்.

சந்நியாசம் என்பது எல்லாவற்றையும் துறப்பதுதானே. எனவே இப்படி முற்றும் துறந்தவளாக இல்லறத்தை நடத்துவதால் தனியாகத் துறவறம் தேவையில்லை என்பதையும், இலக்கியங்கள் தனியே துறவை விதிக்கவில்லை எனக் கூறிப் புதிய பார்வையில் தாய்க்குலம் பெருமை பெறப்பேசுவார் வாரியார் சுவாமிகள்.

வாரியார் சுவாமிகள் தோன்றிய காலம் ஆங்கிலேயர் ஆட்சியில் ஆங்கிலம் பேசுவோர்க்கும் எழுதுவோர்க்கும் ஏற்றமும் மதிப்பும் கூடிய காலம். தமிழைக் காட்டிலும் சமஸ்கிருத மொழியில் சுலோகங்களைப் பொருள் தெரியாமல் ஒப்புவித்தாலும் பொருள்சேரும் காலம்.

தேவார திருவாசகங்கள் தெருவில் நிற்க, சங்க இலக்கியங்கள் பரணில் கிடக்க, ராமாயணமும் மகாபாரதமும் மேடைகளில் நடனமாடின. திருப்புகழ் வண்ணங்களும் சந்தங்களும் கேட்பதற்கு இனிமை உடையன என்றாலும் அவற்றைக் கற்போர் தொகை தேய்ந்து போனது. இக்காலத்தில் தம் தந்தையார் போக முடியாத சொற்பொழிவுக்குத் தாமே சென்று மக்களை இசையால் ஈர்த்து தமிழின் சுவை கலந்து விரிவுரையில் வெற்றி பெற்றவர் வாரியார் அவர்கள்.

'ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' என்னும் ஔவைத் தமிழை ஒட்டி 'பாலும், தேனும் உடலுக்குறுதி வேலும் மயிலும் உயிருக்கு உறுதி' என்னும் கிளர்தமிழாய் உரைத்தவர் வாரியார்.

'இரை தேடும்போது இறையைத் தேடு' என்பது வாரியார் வாக்கு. இதைப் படித்துவிட்ட முடிதிருத்தும் கடை உரிமையாளர் ஒருவர் வாரியார் தாக்கத்தால் 'வெட்டிக் கொள்வதைப்பற்றிப் பேசுங்கள் வெட்டியாய்ப் பேசாதீர்கள்' என எழுதி வைத்தாராம்.

"சிறிய அழுக்கைப் பெரிய அழுக்காகிய சோப்பினால் போக்கிக் கொள்ள வேண்டும். அதுபோல வினைப்பயனால் தொடரும் பிறவி நிழலை இறைவனின் திருவடியாகிய பெரிய நிழலில் சேர்த்து நீக்கிக் கொள்ளவேண்டும்" என நமது சிந்தனையைச் செழிப்பாக்குவார்.

ஈசனிடம் கொண்ட அன்பை நெஞ்சில் நிறுத்திப் பொன், பொருள், மாடு, மனை, வீடு, வாசல் நிலம், புலம் இவையெல்லாம் இறைவனின் பணிக்கே என வழங்கி நன்மையும் தீமையும் இறைவன் ஈசன் தருகின்ற அருட் கொடையே என்று எண்ணி நாளும் முருகனின் புகழ்பாடி வாழ்ந்து விண்ணுலகம் சென்ற வாரியாரை அறுபத்து நான்காம் நாயன்மார் என்றே போற்றிப் புகழ்பாடுவோம்.

**குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!**
திருச்சிற்றம்பலம்.

உ
சிவமயம்
வேலும் மயிலுந் துணை



# வினை தீர்க்கும் வேலவன்

சிந்தாந்தரத்தினம் சிவ. ஆறு. சிவசண்முகம், பி.காம்.,
திருப்பாதிரிப்புலியூர்.

---

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

வேலா சரணம் சரணம் என்மேல் வெளாமல் இனி
மேலாயினும் கடைக்கண் பார் பருப்பத வேந்தன் மகள்
பாலா குறுமுனி யார்க்கும் திருப்புகழ் பண்ணவர்க்கும்
ஆலால முண்டவர்க்கும் உபதேசித்த ஆண்டவனே.

பழங்காலந் தொட்டே நம் தமிழகத்தில் வேலவனைப் பொதுவாக அனைவரும் வழிபடும் கடவுளாகப்போற்றி வழிபட்டு வருகின்றனர். சிறப்பாக மலைவாழ் மக்கள் குறிஞ்சி நிலக் கடவுளாகப் போற்றி வருகின்றனர்.

பழனிப்பகுதியில் மூலவர்க்குப் பஞ்சாமிர்தம், விபூதி, சந்தனம் போன்ற திரவியங்களால் அபிடேகம் செய்யப்படும்போது சுவாமியின் அருள் சக்தியால் அவை நோய்தீர்க்கும் மாமருந்தாக மாறி நன்மை செய்கின்றன.

சங்க இலக்கிய நூலான பத்துப் பாட்டில் முதலாவதாக வைத்துப் போற்றப்படும். திருமுருகாற்றுப்படை என்னும் நூலில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்று ஆறு தலைப்புகளில் வேலவனாகிய முருகப்பெருமான் தன் அடியார்களுக்காக எவ்வாறெல்லாம் கருணை உள்ளத்தோடு அடியார்கள் இம்மை, மறுமை நலங்கள் பெற்று உய்தி பெறுவதற்காக அருள் பாலிக்கின்றான் என்பதை முருகன் அருள்பெற்றான் ஒருவன், முருகன் அருள்பெற வேண்டி வழியில் எதிர்ப்படும் அன்பருக்கு எடுத்துக் கூறுமுகத்தான் நக்கீரர் என்ற கடைச்சங்கப் புலவர் பாடியுள்ளார்.

கடவுள் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அடியார்களுக்கு அருள்பாலிக்கிறார் என்பதை விரிவாகக் கூறியுள்ளார்.

ஆன்மாக்களாகிய உயிர்கள் இறைவனாகிய தலைவனைச் சென்று கண்டு தொழுது அவன் புகழ்பாடி உள்ளன்போடு வணங்கினால் வேண்டுவார் வேண்டுவதே

ஈவான் கண்டாய், என்பதற்கேற்ப "அஞ்சேல் உன்வரவை அறிவேன்" என்று நகைமுகத்துடன் கூறி உனக்கு இவ்வுலக வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களையும் மறுமைக்கு வேண்டிய வீடுபேற்றையும் மகிழ்வாக வழங்கி அருள் புரிவான் என்பதைக் கூறியுள்ளார்.

சற்றேறக்குறைய முந்நூறு ஆண்டுகட்கு முன் வாழ்ந்த திருக்கோவிலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் இரண்டாம் பட்டத்தில் எழுந்தருளி அருளாட்சி செய்தருளிய ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரியார் சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூரை அடுத்துள்ள புதுவண்டிப்பாளையம் எனும் ஊரில் கோயில் கொண்டுள்ள அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலின் தென் புறச்சுற்றில் வேல்கோட்டம் அமைத்துள்ளார்கள். அங்கே மெய்யடியார்களுடைய துன்பங்கள் துடைக்கப்பட்டுகின்றன. மேலும் அவர்கள் வளமான வாழ்வினைப் பெற்று இன்புறுகின்றனர் என்பது இன்றும் கண்கூடாகக் காணும் உண்மை நிகழ்ச்சியாகும்.

வேலவனை உண்மையான அன்பு நெஞ்சமொடு தஞ்சமடைந்தால் உறுதியாக அவனுடைய திருவடியாகிய வீடுபேற்றினை அடைவர் என்பதை அவர்கள் இயற்றிய முருகன் அந்தாதி என்னும் நூலில் கூறியுள்ளார்கள்.

அவ்வாறு வழிபட்ட மனிதர்களில் அருணகிரிநாதர் அவர்களையும் தேவர்களில் குறுமுனியாகிய அகத்தியரையும் போற்றிப் பாடியுள்ளார்கள். மேலும் எல்லாம் வல்ல ஆலாலம் உண்ட சிவபெருமான் முருகப் பெருமானிடம் பிரணவ உபதேசம் கேட்டு மகிழ்ந்தனர் என்பதையும் குறிப்பிடுள்ளார்கள்.

சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும் என்பது உலகியல் பழமொழி. அதன் உண்மைப் பொருள் சஷ்டி நாட்களில் விரதம் இருந்து முருகனை அன்புடன் வழிபட்டால் மகப்பேறு எய்தி மகிழ்வர் என்பதே என்று அம்மடாலயத்தின் ஐந்தாம் பட்டத்தில் எழுந்தருளி தன்னுடைய ஆன்மீக விரிவுரையால் தமிழ்நாட்டின் பட்டி தொட்டியெல்லாம் சென்று சொற்பொழிவாற்றிய சிவத்திரு ஞானியார் சுவாமிகள் கூறியுள்ளார்கள்.

அவனை அடைக்கலம் புகுந்தால் எல்லாத் தீங்குகளும் நீங்கி மேலான நிலைகளை எய்தி இன்புறலாம் எனக் கீழ்க்கண்டவாறு ஆன்றோர்கள் பாடியுள்ளனர்.

தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவராகி மேலைத் தொல் கதி யடைவர் என்கை
ஆய்வும் வேண்டுங் கொல்லோ! அடுசமர் இந்நாள் செய்த
மாயையின் மகனும் அன்றோ வரம்பிலா அருள் பெற்றுய்ந்தான்.

"முருகா எனஉனை ஓதும் தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடைவார்! வியாதி அடைந்து நையார்!
ஒருகால முந்துன்பம் எய்தார்! பரகதி யுற்றிடுவார்
பொருகாலன் நாடு புகார் சம ராபுரிப் புண்ணியனே.

சிவபெருமானின் தத்புரும், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம், ஈசானம் என்னும் முகங்களோடு சிற்சத்தியாகிய சிவசக்தியின் அதோமுகம் என்னும் கீழ்நோக்கிய முகம் ஒன்றும் சேர்ந்து ஆறுதிருமுகங்களைக் கொண்டு முருகன் சிவசொருபமாகவும் சக்தி சொருபமாகவும் விளங்கி அருள்பாலிக்கின்றார்.

கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல் கீழ் என்னும் ஆறுதிசைகளிலும் பரவி நிற்பவன் முருகன் எனவும் சான்றோர் கூறுவர்.

ஆறு சமயம் கடவுள் வேறு வேறு அன்றியான் ஒருவனே அங்கங்கிருந்து அன்பர்க்கு முக்திதரு வித்தென்று யாவர்க்கும் அறிவித்த வதனமணியே! என்றும்

ஆறு சமயமும் தம்மில் ஒவ்வாதிங்கு அலைவதென்னே!
தேறும் அறிவின ரெல்லாம் அறிந்தும் தெளிதிலரே!
பேறு தரும்தெய்வம் யாவைக்கும் யான்பெரும் தெய்வமென்றே
வீறு முகங்கொண்டு போரூர் முருகன் விளங்கியதே! என்றும்

திருபோரூர்ச் சந்திதி முறையில் சிதம்பர சுவாமிகள் அருளிச் செய்துள்ளார். முருகன் காணாபத்யம் கௌமாரம், சைவம், சாக்தம், வைணவம், சௌரம் என்னும் அறுவகைச் சமயங்களின் கடவுளாகவும் விளங்கி அருள் பாலிக்கின்றான்.

முருகனாகிய வேலவனை வழிபட்டால் விநாயகர், சிவபிரான், அம்பிகை , திருமால், சூரியன் ஆகிய பல கடவுள்களையும் வழிபட்டெய்தும் பேறுகளையெல்லாம் ஒருங்கே பெற்றுய்யலாம் என்பது தெளிவு.

முருகன் குழந்தை வேலனாய், பாலசுப்பிரமணியனாய் இளைஞர்களும், வள்ளி தெய்வானை சமேதராய் இல்லறத்தினரும் பழநியாண்டவராய்த் துறவறத்தினரும் சுவாமிநாதனாய் ஞான பண்டிதனாய் கலைஞர்களும், தேவசேனாபதியாய் வீரர்களும் ஆகிய பலரும் வழிபடத்தக்க கடவுளாக விளங்கித் தண்ணருள் புரிகின்றான்.

ஆன்மாக்களாகிய நாம் செய்ய வேண்டுவது மன, மொழி, மெய்களால் உண்மையான அன்போடு இறைவனுடைய திருவடியைச் சரணமடைதல் வேண்டும் என்பதை அப்பரடிகள் ஒன்றியிருந்து நினைமின்கள் உன்தமக்கு ஊனமில்லை என்று தெளிவு படுத்தியுள்ளார்கள்.

ஆதலால் நாமும் வேலனுடைய திருவடியை மெய்யன்போடு வழிபட்டு நமது வினைகள் தீர்க்கப்படுவதற்கு உறுதி கொள்வோமாக!

# பகை போக்கும் பச்சை மயில் வாகனன்

**முனைவர் மு. பழனியப்பன்**
பேருரையாளர், மாமன்னர் கல்லூரி, புதுக்கோட்டை.

---

மனித வாழ்க்கை புதிரானது. அடுத்த நிமிடம் என்ன நடக்கும் என்பதை எவராலும் அனுமானிக்க முடியாது. அடுத்த நிமிடம் இது நடக்கும் என எண்ணினால் அது எண்ணியபடியே முடியலாம். அல்லது அதற்கு மாறாக எதிராக முடியலாம்; முடியாமலேயும் போகலாம். இவ்வளவு புதிர்த் தன்மை வாய்ந்த வாழ்வில் எதிர்கால நிலையில் பயமின்றி வாழ ஒரு நம்பிக்கை தேவைப்படுகின்றது. இந்த நம்பிக்கையைப் பக்தியின் வழியாக பெறலாம் என சமயவாதிகள் வழிகாட்டுகின்றனர். நடப்பதெல்லாம் அவன் செயல் என்று எண்ணிவிட்டால் நடப்பனவற்றைப் பற்றிய கவலை மனிதரை அணுகாமல் சென்றுவிடும்.

நம்பிக்கை மிக்க பக்தி சார்ந்த மனித வாழ்வில் அவ்வப்போது சோதனைகள் எதிர்கொள்கின்றன. வேதனைகள் வந்து சூழ்கின்றன. எதிரிகள் நேரம் பார்த்து வதைக்கத் தயாராக இருக்கிறார்கள். இவற்றைக் கடக்க பக்தி எனும் உணர்வில், இறைவன் காப்பான் என்ற நம்பிக்கையில் மிக்க உறுதியாக இருந்து நாள்களை நகர்த்த வேண்டி இருக்கிறது.

இறைவன் வருவானா, வந்து காப்பானா என்ற சந்தேகத்திற்குத் துளியும் இடம் இல்லாமல் இறைவன் வருவான், வந்து காப்பான் என்ற சத்தியத்தை இக்காலத்தில் நல்லோர் பெற்றாக வேண்டும். இதற்குப் பல பக்தியாளர்கள் சான்று. அவர்களின் வாழ்க்கை வரலாறு சான்று. அவர்களின் தெய்வப் பனுவல்கள் சான்று.

வேலும், மயிலும் வேதனையில் உள்ளோர்க்கு உதவிக்கரம் நீட்ட வரும். கலியுக தெய்வம் கந்தன் வேதனைப்படும் பக்த உள்ளங்களை நாடி வருவான். வந்திருக்கிறான். இவனே எதிரிகளின் வலுவை அழிக்க உரம் தருபவன். இவனிடம் கொள்ளும் பக்தி பயத்தை நீக்கும். யாமிருக்க பயமேன் என எங்கும் பயமின்மையை அன்பருக்குத் தந்து இவனின் அருள் நீங்காது நிற்கும். பகை விலக உடன் அணையவேண்டிய தெய்வம் முருகப் பெருமான். பகைகடியும் பெருந்தகை பச்சைமயில் வாகனன்தான்.

அன்புடைய, பக்தியுடைய நல்லார்க்கு எதிரிகள் இருப்பார்களா? என்ற கேள்வி எழலாம். அன்பே வயமாகி விட்டால் எதிரிகள் கூட நண்பர்கள்தானே. இருப்பினும் நல்லோர்க்கும், அன்பானவர்களுக்கும் பல பகைகள், எதிரிகள் தோன்றலாம் எனக் குமர

குருபரசுவாமிகள் காட்டுகின்றார்.

“பல்கோடி சன்மப் பகையும் அவமிருந்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும் பல்கோடி
பாதகமும் செய்வினையும் பாம்பும் பசாசும் அடற்
பூதமும் தீ நீரும் பொருபடையும் தீதகலா
வெவ்விடமும் துட்ட மிருக முதலாம் எவையும்
எவ்விடம் வந்தெமை எதிர்ந்தாலும் அவ்விடத்தில்
பச்சை மயில் வாகனமும் பன்னிரண்டுத் திண்தோளும்
... எந்தத் திசையும் எதிர் தோன்ற” (குந்தர்கலிவெண்பா 111 – 116)

1. சன்மப்பகை, 2. விக்கினம் (இடைஞ்சல்) 3. பிணி 4. பாதகம் (நம்பிக்கெடுத்தல்) 5. செய்வினை 6. பாம்பு 7. பிசாசு 8. பூதம் 9. தீயால் ஏற்படும் அழிவு 10. நீரால் ஏற்படும் அழிவு 11. படைக்கலன் கொண்டவர்கள் 13. துன்பம் 14. விலங்குகள் ஆகிய இவற்றால் நல்லவர்க்கும் பகைமை தோன்றலாம். அவர்கள் அதனைப் பகையாகக் கொள்ளாவிட்டாலும் எதிர் தரப்பார் அன்புள்ள பக்தியாளர்களை எதிரியாகக் கருதுவர்.

இந்தச் சூழலில் முருகப் பெருமானை வேண்டினால் அப்பெருமான் எத்திசையும், எவ்விடமும் கருதாமல் உடன் வந்து தோன்றி அத்தீமையை அழிப்பான் எனக் குமரகுருபரசாமிகள் அறுதியிட்டு உரைக்கின்றார். இதனையே அவர் கந்தர் கல்வெண்பாவில் வேண்டுகோளாகவும் வைக்கின்றார்.

அருணகிரிநாதர் இன்னும் பல பகைகளில் இருந்து மனிதரைக் காப்பவன் முருகன் என அருளுகின்றார்.

நாளென் செயும் வினைதான் என் செயும் எனை நாடிவந்த
கோளென் செயும் கொடுங்கூற்று என்செயும் குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்துத் தோன்றிடினே

(குந்தர் அலங்காரம் 38)

இப்பாடலில் நாள் கருதியும், முன் செய்த வினை காரணமாகவும், நம்மை நடத்தும் கோள்கள் குறித்தும், எமன் பொருட்டும் வரும் தீமைகளை முருகப்பெருமானின் அழகான பாதங்களைச் சரணடைந்தால் தீர்த்துக் கொள்ளலாம் என்கிறார் அருணகிரிநாதர். குமரேசர் இருதாளும் நெஞ்சத்தில் தோன்றுதல் வேண்டும். இது மட்டும் நடந்து விட்டால் வாழ்வில் எப்பகையும் இருக்காது.

பகை விலகப் பாம்பன் சுவாமிகள் பத்துப் பாடல்களைப் பாடியுள்ளனர். இதற்குப் பகைகடிதல் என்றே பெயர் தரப் பெற்றுள்ளது. அதிகமான இன்னல்களை எதிரிகள் வாயிலாகப் பெறும் பக்தர்கள் இப்பதிகத்தைத் தினம் ஓதினால் எதிரிகள் அழிவர் என்பது மாறாத நம்பிக்கை ஆகும்.

திருவளர் சுடர் உருவே சிவை கரம் அமர் உருவே
அருமறை புகழ் உருவே அறவர்கள் தொழும் உருவே
இருள் தபும் ஒளி உருவே என நினை எனது எதிரே
குருகுகன் முதல் மயிலே கொணர்தி உன் இறைவனையே (பகை கடிதல்)

என்றவாறு பாடப்படும் இப்பதிகம் எதிரிகளை அழிக்க முருகப் பெருமானை உடன் கொண்டு வர மயிலை வேண்டுவதாகப் பாடப் பெற்றுள்ளது.

தீமைகளை அழிக்கக் கந்தன் எனப் பேர் புனைந்து குழந்தையாக நல்லோரைக் காக்க வந்தவன் முருகப் பெருமான். இவன் பாலகனாயினும் – வயதாலும், அனுபவத்தாலும், வீரத்தாலும், தவத்தாலும் சிறந்த – ஆனால் கொடுமை மிக்க சூரபதுமனை வென்றவன். இவன் எதிரிகளை அழிக்க, அருள பன்னிரண்டு கைகளும் அறுமுகமாகவும் தோன்றும் இயல்பினன். இவ்வாறே வருகை புரிந்து சூரபதுமனுக்கு அருளினான். இந்த நிகழ்வு மேலும் நம்பிக்கையே ஊட்டுவதாக உள்ளது.

மானிட வாழ்வு பெற்றுள்ள இவ்வுலக உயிர்களுக்கும் பகையால் ஏற்படும் துயரத்தை மாற்ற பச்சை மயில் வாகனன் அன்றி வேறுயார் துணையாக முடியும்.





# மனித நேயம்

நல்லாசிரியர், கவிஞர், புலவர்
**மெ. நாச்சியப்பன்,** எம்.ஏ., பி.எட்.,
காரைக்குடி.

உலகில் உள்ள ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு காலத்தில் மகான்களால் அந்தந்த காலத்திற்கேற்பத் தோற்றிவிக்கப்பட்டது. புத்தரும், மகாவீரரும், இயேசுவும், நபிகள் நாயகமும், குருநானக்கும் இவ்வாறுதான் தன்மக்கள் தன்னாடு என்று குறுகிய எல்லைக்குள் மதங்களை உருவாக்கி சமயத்திற்கு ஏற்றவகையில் தோற்றுவித்ததாய் சித்தர்களும் ஞானிகளும் தனது சித்தாந்த சிந்தனை வழி நின்று வெளிப்படுத்தினர். இவற்றை ஆழ்ந்து நோக்கின் இந்து மதம் தவிர மற்றவை ஏறத்தாழ மூவாயிரம், நாலாயிரம் வருடங்களுக்கு முன்பு தோன்றியுள்ளவை. இந்து மதம் மட்டும் ஒருவரால் காலத்திற்கேற்றவாறு தோற்றுவிக்கப் படாமல் உலகம் தோன்றிய நாள் முதல் ஆண்டவனாலேயே தோற்றுவிக்கப் பட்டு எல்லாக் காலத்திற்கும் எல்லாமக்களுக்கும் ஏற்ற வகையில் அனாதியாய் இருந்து கொண்டிருக்கிறது என்பதைச் சைவசித்தாந்த மறை நூல்களும் ஞானியர்களும் தெற்றென விளக்கிப் போந்தனர்.

ஆண்டவனின் வெளிப்பாட்டை அருவம், உருவம், அருவுருவம் என நிலைநாட்டினர். அநபாய மன்னனின் அமைச்சராய் விளங்கிய சேக்கிழார் பெருமான் இறையருள் தந்த "உலகெலாம்" என்ற முகப்புடன் கூடிய திருத்தொண்டர் புராணத்தில் அறுபத்து மூன்று நாயன் மார்களின் வழியே மனிதநேய மாண்பை எடுத்துக்கூறி மனிதனும் தெய்வமாகலாம் என்று தத்துவஞானத்தை வெளிக் கொணர்ந்தார்.

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாம் தழைத்து ஓங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே !

என வாழ்த்தி அடியவர் வழியே ஆன்மிக நெறியில் மனித நேயத்தை மன்பதையில் விதைத்தார். வேடர் குலத்தில் தோன்றிய திண்ணன் என்பான் சிவகோசரியார் சிவவழிபாட்டை முடித்துப்போந்த வேளையில் திண்ணன் வேட்டையாடிய மான், பன்றி போன்றவற்றின் இறைச்சியைச் சிவபெருமானுக்குப் படையல் செய்து மகிழ்ந்தான். இவ்வாறு ஐந்து நாட்கள் நிகழ்வுற்ற காட்சியில் சிவகோசரியார் சூடிய பூக்களைத் திண்ணன் காலால் நீக்குவான். அவன் காலடி நமக்கு முருகன் காலடியினும் கனிவு தருவதாய் இறைவன் கனவிற் சொன்னார். சிவனின் வலக்கண்ணில் இரத்தம் வடிந்தது.

திண்ணன் பதைத்து "ஊனுக்கு ஊன்" எனக்கருதி அம்பினால் தனது கண்ணைத் தோண்டி லிங்கத்தின் கண்ணில் பொருத்தினான் குருதி நின்றது. வேடன் மனதில் மகிழ்ச்சி பொங்கியது சற்று நேரத்தில் இடது கண்ணிலும் இரத்தம் கொட்டியது. தனது மற்றொரு கண்ணையும் தோண்டி அடையாளம் காண கண்முனையில் தன் செருப்புக் காலை வைத்துக் கொண்டு மற்றொரு கண்ணைத் தோண்ட முயன்றான். சிவபெருமான் கண்ணப்பா நிற்க ! எனக்கூறி அவன் கையைப் பிடித்தார் அவனுக்கு வீடுபேறு அளித்துத் தம் வலப்பக்கம் அமரும் சிறப்பளித்தார். கண்தானம் செய்யும் இற்றை நாளிற் கண்ணப்ப நாயனார் வரலாறு அற்றைநாளில் வித்திட்ட செயல் மனிதநேயம் மனிதர்களால் காக்கப்படவேண்டும் என்பதற்குச் சான்றாகும், உடல்தானம் செய்வதற்குச் சிறுத்தொண்டர் வரலாறும் ஓர் சான்றாகும் அல்லவா?

இறைவன் என்றொரு கவிஞர் – அவன்

படைத்த கவிதை மனிதன் எனத்தற்காலக் கவிஞர் பாடினார். இதனையே அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்றார் தமிழ் மூதாட்டி. பெறுதற்கரிய பிறவிகளுள் மானிடப் பிறவியே மேலானது. இயற்கை வளங்களைப் பண்படுத்தி, அழகு படுத்தி, மகிழ்வோடு தானும் வாழ்ந்து பிறரையும் வாழவைக்கும் பேறுடைய பிறவியே மனிதப் பிறவி.

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்'

என்று தமிழ்மறை கூறும். எழுத்துகள் அனைத்தையும் ஆய்தமெனப் பயன்படுத்திய மகாகவி பாரதியார் கூட உயிர்களிடத்தில் அன்புவேணும் – தெய்வம் உண்மையென்று தானறிதல் வேண்டும் வயிரமுடைய நெஞ்சு வேணும் – இது வாழும் முறையடி எனத் தனிமனித ஒழுக்கத்தைப் பேணிடச்செய்தான். பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல் என்றும், தீதும் நன்றும் பிறர்தர வாரார் என்றும், செம்புலப்பெயல் நீர் போல அன்புடை நெஞ்சம் வேண்டும் என்றும், சங்கப் பாடல்வரிகள் நினைவூட்டின. பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என நாடி தமக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் பிறநலம் கருதி வாடிய பயிரைக் கண்டபோது தாமும் வாடி மனிதப் பிறவிக்குப் புனிதம் சேர்த்தனர். மனிதநேயம் காத்தனர். நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின் என்பது புறப்பாட்டு வாழ்வியல் நெறிகளுள் ஒன்று.

இந்து சமயத் துறவி சுவாமி விவேகானந்தரும், சண்ட மாருதம் பசும் பொன் முத்துராமலிங்கத் தேவரும், விடுதலை வேள்வியில் தன்னை மாய்த்துக் கொண்ட, பெண்ணின் பெருமை காத்த, வ.உ.சிதம்பரம் பிள்ளையும் தனக்கென வாழாப் பிறர்க்கென வாழ்ந்த பெருந்தகையாளர்கள். எண்ணிய முடிதல் வேண்டும் நல்லவே எண்ணல் வேண்டும் என்ற மகாகவி கூற்றின் இலக்கணத்துக்குச் சொந்தக் காரர்கள்.

கடவுள், சாதி, சமயம், மதம், மொழி, நாடு, நிறவேறுபாடு ஆகியவைகளைக் கடந்த மனித நேயர்கள் இவர்கள், சமரச சுத்த சன்மார்க்க வழி நின்று ஒருமைப்பாட்டைத் தூக்கி நிறுத்திய அருட்பிரகாசர் கூறிய அகிலமாம் அன்பே கடவுள் ஒன்று சிவம் என்றுணர்ந்து இவ்வுலகமெலாம் நன்றே ஒருமையுற்று வாழி எனும் அமுதமொழியை உள்ளடக்கி வாழக் கற்றுக் கொள்ளல் வேண்டும் எனச் சொல்லி வாழ்வாங்கு வாழ்கிறவர்கள்

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப் பொன் நீற்றற்கே சென்றுதாய் கோத்தும்பீ

என்ற மாணிக்கவாசகர் கூற்றுப்படியும் அன்பால் வாழ வேண்டும்.

பூத்துக் குலுங்கும் புதுச்சேரி மாநிலத்தில் மணக்குள விநாயகரின் மாண்பைப்போல் வள்ளி தேவயானையுடன் உடனுறை குறிஞ்சித்தலைவனாம் கதிர்வேல் சுவாமியின் குடமுழுக்கில் சூரபதுமனை வென்று மனிதநேயம் காக்கும் செம்மொழி இறைவனின் அருள்பிரகாசம் அனைவரின் உள்ளத்திலும் மிளிரட்டும். கதிர் என்றால் ஒளி – அதனையே கதிரவன் – கதிர்வேல் கதிரேசன் எனப் பெயரிட்டு அழைக்கிறோம்.

தமிழ்க் கடவுள் முருகப் பெருமானுக்கு முகங்கள் ஆறு. தமிழில் வல்லின எழுத்து ஆறு. மெல்லினம் ஆறு. இடையினம் ஆறு. பன்னிரண்டு தோள்களையுடையவன். தமிழில் உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு மெய்யெழுத்து பதினெட்டைக் குறிக்கும் வகையில் பதினெட்டுக் கண்களை உடையவன். முருகனின் திருக்கரத்தில் உள்ள வேல் வேறு எந்த தெய்வத்திற்கும் இல்லாத உன்னத ஆயுதம், அதே போல் தமிழில் உள்ள ஆயுத எழுத்து வேறெந்த உலக மொழியிலும் இல்லை. இச்சை – கிரியை – ஞானம் என்ற 3 தன்மைகளும் பொருந்தியது வேலாயுதம். அதேபோல் ஆய்த எழுத்தும் மூன்று புள்ளிகளை உடையது. கதிர்வேலன் நடுவிலும் வலமும் இடமும் வள்ளி – தெய்வயானையும் உடனிருந்து கதிர்காமச் சிற்றூரில் அறம் பொருள் இன்பம் என்ற முப்பாலையும் தன்னெல்லைக்கு அப்பாலுள்ள அடியவர்க்கும் தப்பாமல் தருவதால் இச்சன்னதி அனைவருக்கும் நிம்மதியருளும் வெகுமதி எனலாம். திருக்குட நன்னீராட்டு விழாவன்று பிரசவிக்கும் மலர் மணத்தில் மனிதநேய மானுடத் தமிழ் ஆர்வலர் அனைவரையும் வணங்கிமகிழ்கிறேன். பரிஏறும் முருகப்பெருமானின் திருவருள் போற்றி மனிதநேயம் காக்கும் மனிதராய் வாழ்வோம்.

'கதிர்வேலன் காவடிக்குள் தமிழே கொஞ்சும்
பதிவளரும் இவனருளோ பாரெலாம் விஞ்சும்'

உ



# கந்த புராண நுண் பொருள் மற்றும் முருகன் பெருமை

இரா. வெங்கடேசன்
முன்னாள் செயலாளர்
திருப்பாதிரிப்புலியூர்ச் சித்தாந்தச் சைவ நெறி மன்றம், கடலூர்.

புராணம் என்ற சொல் புராணம் என்று வந்தது. புராணம் என்றால் பழமை என்பது பொருள். திருவாசகத்திலே மாணிக்கவாசகர் பாடியது சிவ புராணம். அதாவது இறைவனது பழமையைச் சொல்வது. பூதக்கண்ணாடி கொண்டு நுண்ணிய பொருள்களைப் பார்க்கிறோம். அதுபோல வேதங்களிலே உள்ள நுண்ணிய தர்மங்களை விரித்துக் காட்டுவது புராணம்.

சத்தியத்தைப் பேசு என்பதை எடுத்துக் காட்டுவது அரிச்சந்திர புராணம். செய்நன்றி கொன்றதை விளக்குவதுதான் கந்தபுராணம். செய்நன்றி கொல்வதுதான் பாவங்களுக்கெல்லாம் மிகப்பெரிய பாவம். நன்றி மறப்பது வேறு. நன்றி கொல்வது வேறு. உதவி செய்தவனுக்கு மேற்கொண்டு கெடுதல் பண்ணுவதுதான் நன்றி கொல்வது. நன்றி கொன்றவன் உய்வு பெறமாட்டான் என்ற ஒரே தர்மத்தை வலியுறுத்த வந்தததுதான் கந்தபுராணம்.

1008 அண்டங்களையும் 108 யுகங்களையும் அழியா ஆக்கையையும் சூரபத்மனுக்கு வழங்கியவர் சிவபெருமான். முருகப் பெருமான் போருக்கு வந்த உடனே சூரபத்மன் அவரை வணங்கித் 'தங்கள் தந்தையின் வரத்தால் நான் வாழ்கின்றேன்' என்று சொல்தற்குப் பதிலாக நன்றி கொன்று விட்டு அவரை அழிக்க முற்பட்டான். ஆகவே, சூரனை வேலாயுதம் அழிக்கவில்லை. அவன் கொன்ற நன்றி அவனை அழித்து விட்டது. இதையே வேறு வகையாகச் சொன்னால் அஞ்ஞானத்தை மெய்ஞ்ஞானம் வென்றது என்பதாகும்.

வேல் என்றால் ஞானம். அதன் அடிப்பகுதி ஆழமாக இருக்கும். நடுப்பகுதி விசாலமாக இருக்கும். நுனிப்பகுதி கூர்மையாக இருக்கும். அதேபோல் அறிவு ஆழமாக இருக்கவேண்டும். பிறகு அது பரந்து விசாலமாக இருக்க வேண்டும். வேலின் நுனிபோல் அது கூர்மையாக இருக்க வேண்டும். எல்லாவற்றையும் வெல்வது ஞானம்தான். தாரகன் மாயா மலம். சிங்கமு கன்ம மலம். சூரபத்மன் ஆணவ மலம்.

நமது எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணம் ஆணவ மலம். அது இடையே வந்ததன்று. ஆன்மா என்றைக்கு உண்டோ அன்றைக்கே ஆணவ மலம் உண்டு. செம்பு என்றைக்கு உண்டோ அன்றைக்கே களிம்பு உண்டு. அரிசி என்றால் தவிடும் இருக்கும். நீர் என்றால் சேறும் இருக்கும். ஆன்மாவின் ஆணவ மலத்தைப் போக்க பகவான்

இரண்டு மலங்கள் கொடுத்தார். அவை கன்ம மலம், மாயா மலம். முள்ளை முள்ளாலே எடுக்க வேண்டும். வைரத்தை வைரத்தாலே அறுக்க வேண்டும். சத்தத்தைச் சத்தத்தாலே அடக்க வேண்டும். எனவே, ஆணவ மலத்தைப் போக்க வல்லது கன்ம மலம். அதைக் கழிக்க வல்லது மாயா மலம்.

முருகப் பெருமான் மாயாமலமான தாரகனை அய்யப்பனுக்கு வாகனமாகவும் கன்மமலமான சிங்க முகனை அம்பிகைக்கு வாகனமாகவும், ஆணவமலமான சூரபத்மனைத் தனக்கு வாகனமாகவும், கொடியாகவும் ஆக்கித் தன்னைத் தொழும் அடியவர்கள் அவர்களையும் வணங்க வைத்தார்.

வள்ளி அம்மைதான் இச்சா சக்தி, தெய்வயானை கிரியா சக்தி. ஆகவே வள்ளி வலப்புறமும், தெய்வயானை இடப்புறமும் இருக்க வேண்டும். தெய்வயானை கையில் நீலோற்பல மலர் இருக்க வேண்டும். அது சந்திரனைக் கண்டு அலர்வது. வள்ளி கையில் தாமரை மலர் இருக்க வேண்டும். அது சூரியனைக் கண்டு மலரும். முருகனுக்கு இமையா நேத்திரங்கள், 24 மணி நேரமும் திறந்த விழிதான். அதனால் முருகனை வணங்கும் அடியார்கள் வாழ்வு என்றும் மலர்ந்திருக்கும்.

முருகனுக்கு ஆறு திருமுகங்கள், பன்னிரண்டு திருக்கரங்கள், பதினெட்டு கண்கள் உண்டு. சிவனுக்கு மூன்று கண்கள். ஆகவே குமாரனுக்கு ஆறு முகத்திலும் சேர்த்து பதினெட்டு கண்கள். எப்போதுமே அப்பாவை விடக் குழந்தைக்கு கொஞ்சம் பெருமை அதிகமாய் இருக்கும். வெண்ணெய் தானே நெய். வெண்ணெயில் மணம் இருக்காது. ஆனால் நெய் மணக்கும்.

முருகனின் 12 கரங்களும் தமிழ் மொழியின் 12 உயிர் எழுத்துக்கள். அவனது 18 கண்களும் தமிழ் மொழியின் 18 மெய்யெழுத்துகள், ஆய்த எழுத்து முருகன் கையில் உள்ள வேலாகும். அவனது ஆறுமுகங்கள் 3 எழுத்து வகைகளின் ஆறு எழுத்துகள் என்பதை உணர்த்தும். சைவர்களுக்கு மூன்று புராணங்கள் மிகவும் முக்கியமானவை. அவைகளாவன திருவிளையாடல் புராணம், பெரிய புராணம் மற்றும் கந்த புராணம். சிவனின் முக்கண்கள் போன்ற இம்மூன்று புராணங்களில் வலக்கண் பெரிய புராணம். இடக்கண் திருவிளையாடல் புராணம். நெற்றிக்கண் கந்த புராணம்.

முருகன் பிரணவப் பொருளானவன். முருக நாமம் ஒரு கோடி நாமங்களுக்குச் சமமானது. பிற நாமங்களைக் கோடி முறை செபித்தால் எத்துணைப் பயன் கிட்டுமோ அத்துணைப்பயன் முருகா என்று ஒரு முறை செபித்தால் கிட்டும். ஓர் அரசன் வேட்டை ஆடும்போது தவறுதலாக ஓர் அந்தணனை அம்பெய்திக் கொன்று விட்டான். அரசன் தவறுக்கு வருந்தி மாதவ முனிவர் மகனிடம் பிராயச்சித்தம் செய்ய வழி கேட்டான். முனிவரின் மகன் ‘முருகனை அன்புடன் இதய சுத்தியுடன் வணங்கி முருகா என்று

மூன்று முறை ஓதினால் பிரம்மகத்தி நீங்கும் என்றான். மாதவமுனிவர் வந்ததும் செய்தி அறிந்து மகனைக் கடிந்து கொண்டார் ஒரு முறை முருகா என்றாலே கோடிபிரம்மகத்தி தோங்கள் தீருமே நீ ஏன் மூன்று முறை சொல்ல சொன்னாய் என்று கூறி, நீ முருக நாமத்தின் அருமை பெருமைகளை அறியவில்லை ஆகவே நீ வேடனாகப் பிறக்கக் கடவது" என்று சாபமிட்டார் அவன்தான் இராமாயணத்தில் வரும் வேடர் தலைவன் குகன் என்பதாகக் கூறுவர்.

முருகா என்று நாக்கு மட்டும் சொன்னால் போதாது. ஊன், உள்ளம், உணர்வு, உயிர், நாடி, நரம்பு எல்லாம் ஒன்று பட்டு உருகி ஓதவேண்டும். பல பிறவிகளில் செய்த புண்ணியப் பயன் இருந்தால்தான் முருக பக்தி ஒருவருக்குக் கிட்டும்.

ஆறு முகங்களில் இருந்து வெளிப்படும் ஒளிகள் ஆறுவகை 1. ஞானப்பிரகாசம் 2. வியாபகம் ஞானானந்தப் பிரகாசம் 3. சர்வஞானப் பிரகாசம் 4. சுத்த ஞான சாட்சிப்பிரகாசம் 5. சர்வ பரிசுத்த அருட் பிரம்ம ஞானானந்த பிரகாசம் 6. அநாதி நித்யப் பிரம்ம ஞானானந்த சிவப் பிரகாசம்.

இகம், பரம், வீடு என்னும் மூன்று நலன்களையும் முருகன் வழங்குவான். வள்ளி நாயகி மூலம் இக நலங்களையும், தெய்வயானை மூலம் பரலோக நலங்களையும், வேலால் முத்தி நலத்தையும் வழங்குவான். மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களே ஆறு படைவீடுகளகும். முருகனுக்கு வாகனங்கள் மூன்று மயில், யானை, ஆடு என்பவை. ஆணவ மலமாகிய மயிலையும், கன்ம மலமாகிய யானையையும், மாயா மலமாகிய ஆட்டையும் அடக்கி அவை மீது ஆரோகணிக்கின்றான்.

இறைவன் பேரும், ஊரும், செயலும், குணமும், குறியும், வரவும் , போக்கும், முன்னும், பின்னும் இல்லாதவன். அவன் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும் பொருட்டு பேரும் உருவும் தாங்கிக்கொண்டான். அந்த வகையில் மூவிரு முகங்களும் ஆறிரு புயங்களும் மூவாறு நயனங்களும் கொண்டு அருள் புரிகிறான். ஆறு சமயங்கட்கும் ஆறு ஆதாரங்கட்கும், ஆறு அத்துவாக்களுக்கும். ஆறுபடை வீடுகட்கும் அவன் அதிபதி. அவன் பிறப்பு இறப்பு இல்லாதவன் என்றும் அகலாத இளமையுடையவன், இனிமையுடையவன், ஞான மணம் வீசும் ஞானப் பண்புகள் உடையவன், அளவில் இன்ப முடையவன் பேரழகு உடையவன். அவனை வணங்கி இம்மைப் பேறு பெறுவோமாக!



# இனி நாம் செய்ய வேண்டியது என்ன ?

கவிஞர் C.N. நாச்சியப்பன், காரைக்குடி

தமிழகத்திற்கு ஒரு பாரம்பரியமான வரலாறு உண்டு. அது பெருமை மிக்கது ஆகும்.

அரசியல் வரலாறு சேர, சோழ, பாண்டிய மன்னர்களான மூவேந்தரை முன்னிறுத்தியதாகும்.

கலாச்சார வரலாற்று அகனாநூறு, புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களும் இன்னும் பல அரிய நீதி நூல்களும் அமைந்த வரலாறு ஆகும்.

பக்தி வரலாறு ஏழாம் நூற்றாண்டு திருஞான சம்பந்தர், நாவுக்கரசரின் காலம் தொடங்கி பனிரெண்டாம் நூற்றாண்டு தெய்வச் சேக்கிழார் காலம் வரை பொற்காலம் என்று புகழத் தக்கதாகும்.

இக் காலத்தைத் திருமுறைகள் பரவிய தேனினும் இனிய காலம் எனக் கூறலாம்.

இருபதாம் நூற்றாண்டாகிய சுதந்திர போராட்ட காலத்திலும் தமிழகம் மகாத்மா காந்திக்கும் கைகொடுத்துச் சிறப்புப் பெற்ற அரசியல் வரலாறு உண்டு.

தென்னகத்தில் காந்தியின் கொள்கைகளைக் கடைப்பிடித்து, ஹரிஜனங்களை ஆலயப் பிரவேசத்திற்கு அழைத்துச் சென்ற மதுரை வைத்திய நாத ஐயர் போன்ற தலைவர்களின் சேவையை இன்று நாம் மக்களுக்கு எடுத்துச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம்.

கள்ளுக்கடை மறியலில் திரு.வி.கவும், ஈ.வே. ராமசாமிப் பெரியாரும், ராஜாஜியும், காமராஜரும் ஆற்றிய தொண்டை நாம் இன்று இளைஞர்களுக்கு எடுத்துச் சொல்லியாக வேண்டும்.

செக்கிழுத்த செம்மல் வ.உ.சி., வ.வே.சு. ஐயர், சுப்பிரமணிய சிவா போன்ற தீரர்கள், அஞ்சா நெஞ்சுடன் வெள்ளையனை எதிர்த்துப் போராடிய வரலாறுகள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கவைகளாகும்.

சுப்பிரமணிய பாரதி கம்பனுக்குப் பின் தமிழ் இலக்கிய உலகிற்குப் பாலமாகத் தீர்க்க தரிசனத்துடன் எளிய தமிழில் காக்கை குருவி எங்கள் ஜாதி என்று மக்களைக் கூவி எழுப்பிறனே - அவனது சேவையை இன்றும் நாம் போற்றிக் கொண்டுதான் இருக்கிறோம்.

ஆனாலும் இன்றைய தமிழகத்தின் நிலை என்ன ?

படிக்காத ஒரு தலைவன் - மாடு மேய்க்கும் பையன்களையும் பள்ளிக்கு அனுப்பி மாமேதைகள் ஆக்குகிறானே.

இன்றைய தினம் கல்வியின் நிலை என்ன ?

விலை போட்டு வாங்கவா முடியும் ? என்று பாடிய புரட்சிக் கவிஞரின் வரிகளைத் திருப்பிப் போட்டுப் பார்த்தால், ஆம் போட்டுத்தான் இன்றைய தினம் கல்வியை வாங்க வேண்டிய நிலையில் இருக்கிறோம் !

பல கோவில்கள் தஞ்சை மாவட்டத்தில் பிரகாரம் வர இயலாத நிலையில் கருவக்காடாகக் காட்சி அளிக்கின்றன.

சில கோவில்களில் கருவறையிலேயே முட்டுக் கொடுத்துச் சுவாமியை நிலை நிறுத்தும் நிலையைச் சிலர் கண்டிருக்கலாம்.

சில கோவில்களில் ஒரு வேளை நைவேத்தியத்திற்கும் வழியற்ற நிலையிலும் இருக்கின்றன.

இன்னும் பல அவலங்கள் ! கும்பாபிகேம் செய்ய வேண்டுமென்றால் சாமியை மட்டும் கவனித்தால் போதாது !

இதுதான் தமிழகத்தின் எதிர்காலமா ? இல்லை இந்தியாவின் அரசியல் நாகரிகமா ? ஆன்மீகப் பெருமக்கள் சிந்தித்துச் செயல்பட வேண்டிய காலம் இதுதான்! அப்பர் பெருமான் உழவாரப் பணி செய்து தொண்டு செய்தார். சம்பந்தர் புறச் சமயக் கோளரியாக விளங்கினார். சுந்தரர் முதலை உண்ட பாலனை எழுப்பினார்.

மாணிக்கத் தமிழ் பாடிய மாணிக்க வாசகர்; தந்தது உன் தன்னை ? கொண்டது என் தன்னை, யார் கொலோ சதுரர் ? என்று இசைத்தார்.

நமது திருப்பணி இந்த நால்வர் பெருமக்களின் வழியில் இன்றும் என்றும் தொடரத் துணிவுடனும் பக்திப் பணிவுடனும் பணியாற்றிப் பக்தி உலகத்தைப் பண்பாடான தமிழகத்தைப் பூத்துக் காய்த்துப் பழுத்துக் கனிய தொண்டாற்றுவதே இன்றைய நமது கடமை ஆகும்.



உ

# "அருள் தரும் ஆறுபடை வீடுகள்"

திருமதி. புலவர். திலகவதி சுப்ரமணியன்
92, பாரதி வீதி, கதிர்காமம், புதுச்சேரி - 605 009.

சேனைகளும் சேனாதிபதியும் தங்கியிருக்கிற இடத்திற்குப் படைவீடு என்று பெயர். ஆன்மாக்கள் மும்மலக் கல்லில் இருவினைக் கயிற்றால் கட்டுண்டிருக்கின்றன. அந்தக்கட்டினின்றும் விடுபடுவதே வீடு எனப்படும்.

மழைநீர் சிப்பியினின்றும் மூத்து விடுபடுவதனால் முத்து எனப்பேர் பெற்றதுபோலப் பந்தத்தினின்றும் விடுதலை பெற்றவன் ஜீவன் முக்தன். இந்த ஜீவன் முக்தனுக்கு வீடு பேற்றைத் தருகிறவன் முருகன். "கந்தன் என்ற சொல்லுக்குப் பகைவர்களுடைய ஆற்றலை வற்றச் செய்பவன்" என்பது பொருள். அகப்பகை புறப்பகை என்ற இரு பகைகளையும் அழிக்கின்ற வெற்றிவேல் வீரனாகிய விமலன் தங்கியிருக்கிற வீடு படைவீடு எனப்பேர் பெற்றது. ஆறுபடை வீடுகளையும் வணங்கி ஆறுமுகப் பெருமானின் ஆறு எழுத்து மந்திரத்தை இடைவிடாது நினைக்கும் அகக் கோயிலில் முருகன் எப்போதும் வீற்றிருப்பான்.

நமது உடம்பிலே அகநிலை ஆராய்ச்சியாக ஆறு ஆதாரங்கள் அமைந்திருக்கின்றன. அவை மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை எனப்படும். இவ் ஆதாரங்கள் ஆறிலேயும் ஆறெழுத்தும் ஆறுபடை வீடும் அடங்குவதாகக் கூறுவதுண்டு.

முருகன் தெய்வயானையை மணந்து, திருமணக்கோலமாக வீற்றிருக்கும் திருக்கோயில் திருப்பரங்குன்றம் இது மூலாதாரக்கோயில்.

கடல் வந்து அலைகள் வந்து வந்து திருக்கோயிலில் மதிற் புறத்தே தாக்கி பின் ஒய்ந்து திரும்புவது போலச் இது சுவாதிஷ்டானம். அலைகள் மனப்பாறையில் மோதித் தேய்கின்ற இடம்.

சிந்தாகுலம் திருச்செந்தூர். (சிந்தனை + ஆகுலம் = சிந்தாகுலம், சிந்தனையின் துன்பம் நீக்குவது)

ஞான தண்டாயுதபாணியாக யோக தண்டத்துடன் காட்சியளிக்கும் திருக்கோயில் திருவாவினன் குடி (பழனி). இது மணிபூரகம்.

தந்தைக்கு இதமாக ஓம் என்பதன் பிரணவப் பொருளை உபதேசித்த திருக்கோயில் திருவேரகம். (சுவாமிமலை) இது அநாகதம்.

களிப்புடன் குறிஞ்சி நிலமாகிய மலைகள் தோறும் விளையாடுகிற திருக்கோயில் குன்று தோறாடல். இது விசுத்தி

ஞானப்பழம் முதிர்ந்து உதிர்கிற சச்சிதானந்தச் சோலையாக விளங்குவது பழமுதிர்சோலை. இது ஆஞ்ஞை

"உல்லாச நிராகுல யோக இதச்
சல்லாப விநோதனும் நீயலையோ"

என்று இந்த ஆறுபடை வீட்டினையும் குறிப்பாகக் கந்தரனு பூதியில் அருணகிரிநாத சுவாமிகள் கூறுகிறார். எனவே ஆறுதலின்றி அநேகப் பிறப்பினை எடுத்து அலைகின்ற ஆன்மாக்களாகிய நாம் ஆறுபடை வீடுகளையும், சென்று வணங்கி, ஆறுமுகப்பெருமான் அருள் பெற்று, ஆறுதலை அடைவோமாக.



உ

# அருளில்லார்க்கு அவ்வுலகில்லை

திரு. புலவர் கோ. சு
92, பாரதி வீதி, கதிர்காமம், புதுச்சேரி - 605 009.

உலகில் தோன்றி வாழ்கின்ற உயிரினங்களில் ஒழுக்கம், பண்பு இவற்றைக் கடைப்பிடித்து வாழ்கின்ற தனிச்சிறப்பு மனித இனத்திற்கே உண்டு அதிலும் இந்தியமக்கள் முற்காலத்தில் பின்பற்றிய கொள்கைகள் மேலை நாடுகளில் வாழ்ந்த மக்களைப் பெரிதும் கவர்ந்தன. அதனால் நம் நாட்டின் நாகரிகம், பண்பாடு இவைகளைப் பின்பற்றினார்கள்.

மனிதனாகப் பிறந்த பயனை அடைவதற்குப் பொருள்வளமும், அதற்கேற்ற முயற்சியும் செயல்களும்தான் முக்கியம். அருள்துறைக்காக காலத்தை வீணாக்கவேண்டிய அவசியமில்லை என்ற பலர் நினைக்கின்றார்கள். வேறுசிலர் "அருள்துறையில்தான் இறைவன் அருள் கிடைக்கும். பேரானந்த வாழ்வுகிட்டும். அதனால் பொருள் துறையை ஒதுக்கிவிட்டு அருள் துறையிலேயே முழுநேரமும் முயற்சி செய்ய வேண்டும். அருள் வேண்டுபவர்கள் அதற்காகத் தவம், அறம் முதலியவற்றில் முழுமையாக ஈடுபடுவதற்குப் பொருள்துறையிலிருந்து ஒதுங்கிவிடல் வேண்டும்" என்று கூறிக்கொண்டிருப்பது முற்றிலும் உண்மை. "அருளிலார்க் கவ்வுலகமில்லை என்பதையும் பாவலர் பகர்கின்றனர். மதங்கள் தோன்றியதற்கும் காரணம் மனிதன் விலங்கு அறிவிலிருந்து மாறுபட்டு உயர்ந்தோர் குறிக்கோளை உருவாக்கியபோது மதங்கள் தோன்றின. மதங்கள் வகுத்த நெறிகளைப் பின்பற்ற மக்களுக்கு தத்துவத்தலைவர்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு நெறிகளைப் போதித்தனர். அறம் என்பது நல்ல பண்புகளின் தொகுப்பு என்றும், பொருள் என்பது அறத்தின் வழி பொருள் ஈட்டி உலகப் பொதுமையை நிலைநாட்டுவது என்றும் இன்பம் என்பது அறம் பொருளின் வழியே மக்கள் இன்பவாழ்வு வாழ வேண்டும் என்னும் கொள்கைகளைச் சான்றோர்கள் பாகுபடுத்தினார்கள்.

மனிதன் மாக்கள் பண்புகளிலிருந்து மாறுபட்டு அன்பு, அருள், இரக்கம், கருணை ஆகிய மென்மைப் பண்புகளை மேற்கொண்டு மேன்மை அடைய வேண்டும் என்று மதங்கள் கூறின. திருவள்ளுவர் அருளுடைமை என்ற அதிகாரத்தில் 'மனிதா நீ

தேடுகின்ற செல்வங்களில் அருள்செல்வமே அனைத்துச் செல்வங்களிலும் மேலானது. பொருட்செல்வம் அழிந்துபோகும். அவை இழிந்தவர் இடத்திலும் இருக்கிறது. அதனால் பயன் ஒன்றும் இல்லை எனவே அருட்செல்வத்தையே நீதேடு' என்றார்.

இந்த மண்ணில் வாழ்கின்றவர்கள் அனைவரும் எப்படி வாழவேண்டும் என்று இலக்கணம் வகுத்து அதை எளிமையாகச் சொன்னவர் வள்ளுவரே. வடலூர் வள்ளல் பெருமான் "மரணமிலாப் பெருவாழ்வு வாழலாம் காண்பீர்" என்கிறார். எல்லோரும் சமம் என மதித்துவாழ்ந்த புத்தர், ஏசு, காந்தி, நபிகள்நாயகம் ஆகியோர்கள் இன்றும் நம்மிடையே வாழ்கிறார்கள் என்பதே மரணமிலாப் பெருவாழ்வு ஆகும்.

அருளிலார்க் கவ்வுலகமில்லை பொருளிலார்க்கு இவ்வுலகு இல்லை என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். ஆகவேதான் வாழ்கின்றபோதே மனிதா உன்னால் இயன்ற நன்மையைச்செய்; அது அனைத்து வகையிலும் உனக்கு உதவி செய்யும், என்ற அடிப்படையில்தான் நம்முதியோர்களும், அறநூல்களும் இயம்புகிறார்கள். நாம் இனியாவது அவ்வாறு செயல்பட்டு நன்னெறிகளைக் கடைப்பிடித்து நன்மனிதனாக வழ்வோம். தெய்வமுண்டு என்பதில் ஐயமில்லை.

தெய்வத்திருவருள்தான், கதிர்காமம் அருள்மிகு ஸ்ரீ கெங்கையம்மன் திருக்கோயில் அருள்மிகு ஸ்ரீ முத்துமாரியம்மன் திருக்கோயில் அருள்மிகு ஸ்ரீ கதிர்வேல் சுவாமி திருக்கோயில்களின் திருப்பணிகளைச் செய்வித்து நன்னீராட்டுக் குடமுழுக்குப் பெருவிழாவைக் காணச் செய்துள்ளது எனலாம்.



உ

# விஸ்வரூப முருகன்

முருகப் பெருமானுக்கும், சிவபெருமானுக்கும் வேறுபாடு என்பதே கிடையாது. முருகனைப் பாலகனாக நினைத்துப் போரிட நினைத்த சூரபத்மனுக்கு முன் முருகன் விஸ்வரூபம் எடுத்து நின்றார். "சூரனே நீ பல வடிவங்கள் எடுத்ததைக் கண்டேன் நீயும் என் வடிவங்களைப் பார்" என்று உரைத்தார்.

முருகனின் வடிவத்தில் பெரிய மலைகள் அவரது திருப்பாதங்களில் இருந்தன, கால் விரல் கடல்வரை இருந்தது. நட்சத்திரங்கள், மின்னல்கள் நவகிரகங்கள் ஆகியவை அவரது கணுக்காலில் காணப்பட்டன. முனிவர்கள் முழுங்காலுக்கு அடியிலும் சிந்தாமணி முழங்காலிலும், தொடைகளில் இந்திரன், ஜெயந்தன் முதலானவர்களும் காணப்பட்டார்கள். இடுப்பின் சந்திப்பில் யமனும், விலாக்களில் தேவர்கள், இடுப்பில் அரக்கர்கள் நாகர்கள் இருந்தனர். தொப்புளில் அனைத்து உற்பத்திகளும், மார்பில் சாஸ்திரங்களும் உடல் ரோமங்களில் கோடிக்கணக்கான பிரமாண்டங்களும் காட்சியளித்தன.

இரு கைகளிலும் பிரம்மாவும், விஷ்ணுவும் கை விரல்களில் தேவமாதர்களும் கழுத்தில் சொற்களும், நாக்கின் நடுவில் வேதங்களும், பற்களில் அட்சரங்களும், நாக்கு முழுவதற்கும் சிவாகமங்களும், உதட்டில் சப்த கோடி மகா மந்திரங்களும் அடங்கியிருந்தன மூக்கில் வாயு, கண்களில் சூரிய-சந்திரர், காதுகளில் திசைகள், நெற்றியில் ஓங்காரம் இருந்தன. இவரது விஸ்வரூபத்தைக் கண்டு அனைத்துத் தேவர்களும் தரிசித்துக் கரம் குவித்து வணங்கினார்கள். அப்போதுதான் சூரபத்மனுக்கு ஞானம் உதயமாயிற்று 'அற்புதமான இந்த தேவாதி தேவனைச் சாதாரண பாலகனாக கருதிப் போர் செய்யத் துணிந்தேனே என்று வணங்கினான்.

நன்றி : தினகரன்,

தேதி :



# புதுச்சேரியில் உள்ள சித்தர் பீடங்கள்

1. ஸ்ரீ தொள்ளக்காது சுவாமிகள்
   ஸ்ரீ மணக்குள விநாயகர் ஆலயம், புதுவை.
2. ஸ்ரீ மகான் படே சாஹிப் சுவாமிகள்
   (ஜீவ சமாதி சின்னபாபுசமுத்திரம், கண்டமங்கலம்
   குருபூஜை தேதி (மாசி மாதத்தில் வரும் ஆயில்ய நட்சத்திரம்)
3. ஸ்ரீ சித்தானந்தா சுவாமிகள்
   (ஜீவ சமாதி கருவடிக்குப்பம், புதுவை.
   குருபூஜை தேதி வைகாசி மகம் நட்சத்திரம் .
4. ஸ்ரீ குரு அக்கா சுவாமிகள்
   (ஜீவ சமாதி) வைத்திக்குப்பம், புதுவை.
   குருபூஜை ஆனி மாதத்தில் வரும் திருமஞ்சனம்
5. ஸ்ரீ நாராயண பரதேசி சுவாமிகள்
   (அக்கா ஸ்வாமி சீடர்) வைத்திக்குப்பம், புதுவை.
   மார்கழி-திருவாதிரை குருபூஜை
6. ஸ்ரீ கம்பளி ஞானதேசிக சுவாமிகள்
   (ஜீவ சமாதி) தட்டாஞ்சாவடி, தொழிற்பேட்டை, புதுவை.
   மார்கழி 6ஆம் தேதி குருபூஜை
7. ஸ்ரீ கதிர்வேல் சுவாமிகள்
   3 ஆவது குறுக்குத்தெரு, பிருந்தாவனம். புதுவை.
8. ஸ்ரீ சக்திவேல் பரமானந்த சுவாமிகள்
   காராமணிக்குப்பம், புதுவை
   ஆடி மாதம் 25 ஆம் தேதி குருபூஜை
9. ஸ்ரீ சந்தானந்த சுவாமிகள்
   சிருங்கேரிமடம் சேரேத்தோப்பு எதிரில் எல்லைப்பிள்ளைச்சாவடி புதுவை.
10. ஸ்ரீ பெரியவர்களுக்குப் பெரியவர் சுவாமிகள்
    தட்டாஞ்சாவடி, புதுவை.
11. ஸ்ரீ வேதானந்த சுவாமிகள்
    திருவள்ளுவர் நகர், முத்தியால்பேட்டை, புதுவை.
12. ஸ்ரீ சுப்ரமணிய அபிநவ சச்தானந்தம் சுவாமிகள்
    சிருங்கேரிமடம், எல்லைப்பிள்ளைச்சாவடி, புதுவை.
13. ஸ்ரீ சடையப்பர் சுவாமிகள்
    வழுதாவூர் சாலை (ராணி மருத்துவமனை எதிரில்) புதுவை.
14. ஸ்ரீ மௌலானா சாஹிப் சுவாமிகள்
    முல்லா வீதி, புதுவை.

15. ஸ்ரீ நாகலிங்க சுவாமிகள்
(ஜீவ சமாதி) அம்பலத்தடியார் மடம் வீதி, புதுவை.
ஆனி 7ஆம் நாள் குருபூஜை

16. ஸ்ரீ மண்ணுருட்டி சுவாமிகள்
தென்னஞ்சாலை சுப்புராயப்பிள்ளை சத்திரம், புதுவை.

17. ஸ்ரீ தேங்காய் சுவாமிகள்
வில்லியனூர் ரோடு, தட்டாஞ்சாவடி, புதுவை.

18. ஸ்ரீ ராம் பரதேசி சுவாமிகள்
சுல்தான்பேட்டை, புதுவை.

19. ஸ்ரீ பவழங்குடி சித்தர் சுவாமிகள்
சோம்பட்டு, திருக்கனூர் வழி

20. ஸ்ரீ ரங்கசாமி சித்தர் சுவாமிகள்
சோம்பட்டு திருக்கனூர் வழி

21. ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சுவாமிகள்
பள்ளித்தென்னல், புதுவை. ஆனி 26ஆம் தேதி குருபூஜை

22. ஸ்ரீ குருசுவாமி அம்மாள் சுவாமிகள்
அரியூர், புதுவை. சித்திரை பௌர்ணமி குருபூஜை

23. ஸ்ரீ லஸ்ரீ அருள்சக்தி அன்னையின் சித்தர்பீடம் உள்ளது. இவரது குருசாமி ஸ்ரீ
இரெட்டியப்பட்டி சுவாமிகள் நினைவிடமும் உள்ளது.
பிள்ளையார்குப்பம், கிருமாம்பாக்கம், புதுவை.

24. ஸ்ரீ லஸ்ரீ உலகநாத களரானந்த சுவாமிகள்
சோரியாங்குப்பம் பள்ளி, பாகூர், புதுவை.

25. ஸ்ரீ அப்பார் சுவாமிகள்
ஏம்பலம், புதுவை.

26. ஸ்ரீ மகான் வண்ணார பரதேசிசுவாமிகள்
ஒதியம்பட்டு, புதுவை.

27. ஸ்ரீ வியோமா சுவாமிகள் (திருக்காஞ்சி சாமியார்)
கணுவாப்பேட்டை, வில்லியனூர், புதுவை.

28. ஸ்ரீ கணபதி சுவாமிகள்
எடையஞ்சாவடி, கருவடிக்குப்பம் வீதி

29. ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்
நல்லாத்தூர், ஏம்பலம்
புரட்டாசி பௌர்ணமி குருபூஜை

30. ஸ்ரீ அழகர் சுவாமிகள்
தென்னம்பாக்கம், ஏம்பலம்,
சித்திரை முதல் திங்கள் குருபூஜை

31. ஸ்ரீ கழுவெளி சித்தர் சுவாமிகள்
இரும்பை, திருச்சிற்றம்பலம்.
32. ஸ்ரீ சிவஞானபாலய சித்தர் சுவாமிகள்
பொம்மையார்பாளையம்.
33. ஸ்ரீ சிவஞான பால சித்தர் சுவாமிகள்
மயிலம், முருகன் கோயிலுக்கு வலப்புறம்.
34. ஸ்ரீ சுப்புராய பரதேசி சுவாமிகள்
மைலம் (மூலவர் இருக்குமிடத்தில் ஜீவ சமாதி
35. ஸ்ரீ பகவந்த சுவாமிகள்
புதுப்பாளையம், கடலூர்.
36. ஸ்ரீ தயானந்த சுவாமிகள்
புதுப்பாளையம், கடலூர்.
37. ஸ்ரீ தேவராஜ் சுவாமிகள்
வன்னியநல்லூர், சூனாம்பேடு.
ஆனிமாதம் பூராட நட்சத்திரம் குருபூஜை.
38. ஸ்ரீ சற்குரு நித்தியானந்தா சுவாமிகள்
கோழிப்பாக்கம், (பட்டாம்பாக்கம், அண்ணா கிராமம் அருகில்)
39. ஸ்ரீ கந்தசாமி சுவாமிகள்
காரணப்பட்டு (இராமலிங்க அடிகளாரின் சீடர்) இராமலிங்க சுவாமிகளின் பாதணிகள் இங்கு உள்ளன.
40. ஸ்ரீ கல்பட்டு ஐயா இராமலிங்க அடிகளாரின் சீடர்
வடலூர்.
41. ஸ்ரீ லஷ்மண சுவாமிகள், புத்துப்பட்டு காலாப்பட்டு.
42. ஸ்ரீ கண்டலினி சித்தர், திருவக்கரை.
43. ஸ்ரீ சுப்புராயர் சுவாமி, குறிஞ்சிப்பாடி.
44. ஸ்ரீ கோலசுவாமி, குறிஞ்சிப்பாடி.

## தமிழகத்திலும் மற்ற அண்டை மாநிலத்திலும் உள்ள சித்தர் பீடங்கள்

1. கொங்கணவர் சித்தர், திருப்பதி.
2. போகர் சித்தர், பழனி.
3. திருமூலர் சித்தர், சிதம்பரம்.
4. இடைக்காடர் சித்தர், திருவண்ணாமலை.
5. குதம்பை சித்தர், மயிலாடுதுறை, (பெரிய கோவில்) மயூரநாதர்.
6. கருவூரார் சித்தர், தஞ்சைப் பெரியகோயிலில் சமாதி உள்ளது.
7. பாம்பாட்டி சித்தர், விருத்தாசலம். (சங்கரன் கோயில்)

8. ஞானசித்தர், மயிலாடுதுறை.
9. அகத்தியர் சித்தர், அனந்த சயனம்.
10. மச்சமுனி சித்தர், திருப்பரங்குன்றம்.
11. அருணகிரி நாதர் சித்தர், திருப்பரங்குன்றம்.
12. இடைக்காடர் சித்தர், திருப்பரங்குன்றம்.
13. வால்முகி சித்தர், எட்டுக்குடி.
14. அழுகண்ணர் சித்தர், நாகப்பட்டினம்.
15. கோரக்கர் சித்தர், வடக்குப் பொய்கை நல்லூர் நாகப்பட்டினம்.
16. கடுவெளி சித்தர், காஞ்சிபுரம்
17. சுந்தரானந்தர் சித்தர், மதுரை (மீனாட்சிஅம்மன் கோயில்)
18. குணங்குடியர் சித்தர், சென்னை.
19. பட்டினத்தார் சித்தர், திருவொற்றியூர்.
20. பாம்பன் அடிகள் சித்தர், திருவான்மியூர்.
21. திருப்புகழ் தண்டபாணி சித்தர், திருவாமாத்தூர்.
22. ஸ்ரீ ராம தட்சிணாமூர்த்தி சித்தர், பனையூர் (சங்கரன் கோயில்)
23. ஸ்ரீ சீரடி சாய்பாபா, ஆந்திரா
24. ஸ்ரீ இராகவேந்திரர், மந்த்ராலயம், கர்நாடகா.
25 நந்தீசுவரர், காசி.
26. புலிப்பாணி சித்தர், பழனி
27. இராமதேவர் சித்தர், அழகர்மலை.
28 கமலமுனி சித்தர், திருவாரூர்.
29 சட்டைமுனி சித்தர், திருவரங்கம்.
30 தன்வந்திரி சித்தர், வைத்தீஸ்வரன் கோயில்.
31 பதஞ்சலி சித்தர், இராமேஸ்வரம்.
32 வான்மீகர் சித்தர், எட்டுக்குடி.
33 காலங்கி நாதர், சதுரகிரிமலை, மதுரை.
34 காகபுசுண்ட சித்தர் ஆச்சாள்புரம் (பேருந்து நிலையம் அருகில்)
35 திருமாளிகைத்தேவர், திருவாவடுதுறை (சிவன் கோயில்அருகில் எட்டு சமாதிகள் உள்ளன)

**ஜீவசமாதி ஆலயங்கள்**

1. மெய்கண்டார்: திருவெண்ணெய்நல்லூரில் வடக்கு வீதியின் கோடியில் இவரது ஜீவசமாதி உள்ளது. ஆண்டுதோறும் ஐப்பசி சுவாதியில் குருபூஜை நிகழ்கிறது.
2. அருணந்தி சிவாச்சாரியார் : பண்ருட்டியிலிருந்து 6 கி.மீல் உள்ள திருத்துறையூரில் சிவன் கோயிலுக்கு நேர் எதிரில் இவரது ஜீவசமாதி இருக்கிறது ஆண்டுதோறும் புரட்டாசி பூரத்தில் குருபூஜை நடைபெறுகிறது.

3. குகை நமசிவாயர்: திருக்கோவிலூரில் வடக்கு விதியில் இவரது ஜீவசமாதி உள்ளது. திருவண்ணாமலை அடிவாரத்திலிருந்து 300 அடி உயரத்திலும் இவரது சமாதி இருக்கிறது.

4. சுவாமி ஞானானந்தகிரி: திருக்கோவிலூரில் இவரது தபோவனமும் ஜீவ சமாதியும் இருக்கின்றன.

5. திருக்களர் ஆண்டவர்: மன்னார்குடி திருத்துறைப்பூண்டி சாலையில் 21 கி.மீல் உள்ள திருக்களர் என்னும் ஊரில் சிவன் கோயிலுக்கு அருகில் உள்ளது.

6. ஸ்ரீ தாண்டவராய சுவாமி இவரது குரு ஸ்ரீ நாராயண சுவாமி: நன்னிலத்தில் இவர்களது ஜீவ சமாதிகள் ஒரே இடத்தில் இருக்கின்றன.

7. நெரூர்சதாசிவம் பிரம்மேந்திரா: கரூருக்கு மிகஅருகில் உள்ள நெரூரில் இவரது ஜீவ சமாதி உள்ளது. மானாமதுரை (சிவகங்கை மாவட்டம்) யிலும் இவரது ஜீவ சமாதி இருக்கிறது. 1762 முதல் ஆராதனை நடைபெறுகிறது.

8. ஸ்ரீ பொன்னம்பல ஸ்வாமிகள்: சிதம்பரத்தில் மன்னார்குடி ரோட்டுத் தெருவில் இவரது ஜீவ சமாதி உள்ளன.

9. ஸ்ரீ ரமணர் ஸ்ரீ சோத்திரிசுவாமிகள்: திருவண்ணாமலை மலைவலப் பாதையில் இவர்களது ஜீவ சமாதிகள் உள்ளன.

10. குருதட்சிணாமூர்த்தி சுவாமி: திருவாரூரின் ஒரு பகுதியான மடப்புரத்தில் இவரது சமாதி உள்ளது. ஆண்டுதோறும் ஆவணி உத்திர நட்சத்திரத்தில் குருபூஜை நடைபெறுகிறது.

11. ஈசானியஞானதேசிகர்: திருவண்ணாமலை மலைவலப் பாதையில் ஈசானிய லிங்கம் அருகில் உள்ளது.

12. கோரக்கர் ஜீவ சமாதி: வேளாங்கண்ணி நாகப்பட்டினம் சாலையில் வடக்குப் பொய்கை நல்லூரில் உள்ளது.





உ

## கதிர்காமக் கங்கையம்மன் கருணைப் பதிகம்

**ஆ. சிவலிங்கனார்,**

மயிலம் பொம்மபுர ஆதீனப்புலவர், கதிர்காமம், புதுவை.

"எங்கெங்கு காணினும் சக்தியடா" என்ற பாவேந்தர் வாக்குபடி இந்த உலகமே சக்தி வடிவந்தான். அணுமுதல் அண்டம் வரையிலான இயக்கம் அனைத்திலும் ஊடுருவி உள்ளது சக்தி ஒன்றே.

சக்தியை ஆற்றல் என்று கூறினாலும் கண்ணுக்குத் தெரியாத ஆனால் கருத்தால் உணரத்தக்க அதனை அவரவர்க்குத்தக்க அறிவு பூர்வமாக உணர்ந்து வடிவமைத்துக் கொண்டாடும் வழிபாடே சக்தி வழிபாடு. அதன் ஒரு கூறுதான் இவ்வுலகத்தின் பஞ்சபூத இயக்கங்களில் ஒன்றான நீரைப்போற்றும் மரபில் உருவான மாரியம்மன் வழிபாடு. அவ்வருள் மாரிக்குப் பல பெயர்கள் உண்டு. அவற்றுள் கங்கையம்மன் என்பதும் ஒன்று.

### மலை அலை கலை - மகள்கள்

ஒருபரம் பொருளாம் சிவனிடத் துமையே
உயர்மலை மகளென வந்தும்
கருநிற மாலோன் களிப்புறக் கடலின்
அலைமக ளெனவுமே வந்தும்
பெருகுறு கலைசேர் மகளென வந்தும்
பேரருள் புரியுமெந் தாயே
தருவளர் கதிர்கா மத்துறை கங்கை
யம்மையே யெங்களுக் கருளே. (1)

### கதிர்காமக் கங்கையாள்

இருநில மீதில் எங்களுக் கருள
இறையவன் சடையினின் றிழிந்து
வருபுனல் வடிவை நீக்கியே நல்ல
மாணிழை வடிவுடன் வந்து
பெருகுறு செல்வர் வாழ்ந்திடு கின்ற
பேர்கதிர் காமத்தில் வாழும்
ஒருபெருங் கங்கை யம்மையே எம்மை
உயர்வுறக் காத்தருள் வாயே. (2)

### பரிவாரக் கோயிலாள்

மும்மைசேர் மதத்துக் கரிமுகத் தவனும்
ஐந்தலை நாகமும் முன்னர்
செம்மையாய் இருக்கச் சிறந்திடும் கோயில்
சேர்ந்தவர்க் கருளவந் தமர்ந்தாய்
எம்மையும் யாங்கள் ஏற்றமாய் வாழ
இன்னருள் செய்திடு வாயே
செம்மைசேர் கதிர்கா மத்துறை கங்கை
யம்மையே காத்தருள் வாயே. (3)

### அருச்சனை ஆரணங்கு

நால்வகை யுண்டி யறுசுவைக் கறியும்
நாண்மலர் கொண்டருச் சித்துக்
கால்வலம் வருவோர் பெறுவரே நின்னைக்
கடையனும் கால்வலம் வருவேன்
சால்புயர் குந்தர் சேர்ந்துவாழ் கின்ற
தண்கதிர் காமத்தி லிருந்து
மேல்வரு துயரை யாவர்க்கும் நீக்கும்
மேன்மைகொள் கங்கையம் மையே. (4)

### வரந்தரு வனிதை

ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் அன்புடன் நாளும்
வந்துமே நின்னைக் கண்டடி பணிந்து
மகிழ்வுறும் வாழ்வளிப் பாயே
செந்தமிழ்ப் புலவோர் சேர்ந்திடு புதுவை
சேர்கதிர் காமத்தி லமர்ந்து
வந்தவர்க் கருளும் வரமுறு கங்கை
யம்மையே அழகமர் வடிவே. (5)

### காங்கேயக் கன்னி

ஆறுமா முகத்தான் அறுசுட ரான
அன்றுநீ தாங்கிய வதனால்
பேருகாங் கேயன் எனப்பெயர் பெற்றான்
பிள்ளையான் அப்பெயர் பெறவே
பேறுகள் பலவும் அளித்துநீ காக்க
பிணிபல நீக்கியே காக்க
சேறுவாழ் வயல்சூழ் சீர்கதிர் காமச்
செம்பொருட் கங்கையம் மையே. (6)

### அருட்பழப்பாவை

எழுமைசேர் பிறவி எடுத்திட வரினும்
என்றுமே நினைமற வாத
கிழமையால் உயரப் பிணிகளை நீக்கிக்
கேடிலா வாழ்வளித் திடுவாய்
பழமதோர் பறவை எனவரும் அடியார்
பார்த்துனை வந்தடை தற்குச்
செழுமைசேர் கதிர்கா மத்துறை கின்ற
சீர்பெறு கங்கையம் மையே. (7)

### மண்ணில் வந்த மங்கை

எண்மிகு குணத்தான் திருமுடி நின்றும்
எளியரேம் அருள்பெற வேண்டி
மண்மிசை வந்து மகிழ்கதிர் காமம்
மன்னிவீற் றிருந்தருள் புரியும்
கண்மணி யனையாய் கருணையங் கடலே
கற்பக மெனவிளங் கிடுவாய்
விண்மிசை யமரர் விரும்பிவந் தனைசெய்
வேல்விழிக் கங்கையம் மையே. (8)

### கோளறுக்கும் கோமகள்

ஒன்பது கோளும் ஒருமுக மாக
உவந்தெனை யருளிட வேண்டி
மன்பதை யுலகில் மற்றுமோர் தெய்வம்
மனதினில் எண்ணிட கில்லேன்

துன்பம தகற்றி இன்புறச் செய்யும்
தூயநீர் மயமெனும் தாயே
அன்புறு வோர்கள் அடைகதிர் காமம்
வாழ்பெருங் கங்கை யம்மையே. (9)

### பார்புகழ் பார்வதி

பத்துடை அடியர் பதமலர் போற்றப்
பார்வதி வடிவமே வாழ்க
எத்திசை யோரும் ஏத்துநின் அருளும்
என்றுமே வாழ்கமற் றுள்ள
நத்துயிர் யாவும் நானில மீதில்
நன்கனம் வாழ்ந்திட வேண்டி
மெத்துறு கங்கை யம்மையே வாழ்க.
மேல்கதிர் காமமே வாழ்க. (10)



### புதுச்சேரி கதிர்வேல் சாமி துதி

புதுச்சேரி அருகினிலே கதிர்கா மத்தில்

புகழோடு எழுந்தருளும் கதிர்வேல் சாமி !

புதுமைக்கும் பழமைக்கும் உரிய னாகிப்

புறப்பட்ட கதிர்வேலா ! புனித மக்கள்

மதுக்கடலில் அமிழ்ந்தின்று மயங்கு கின்றார்

மயக்கத்தைத் தீர்க்க எழு ஞான வேலா !

பதுமைகளாய் மக்களெலாம் மாறா வண்ணம்

பனடவிடுத்துக் காத்திடவே முருகா ! வா வா !

**அரு. சோமசுந்தரன்,** M.A., B.T.





# அருள்மிகு கங்கையம்மன் அருள்மிகு முத்துமாரியம்மன் பதிகம்

சந்தாப்பாமணி புலவர் அரங்க நடராசன், புதுவை 605 013

## அருள்மிகு கங்கையம்மன்



பூமேவு செல்வியும் நாமேவு நங்கையும்
பொலிவோடு கூடிவாழும்
புதுவைக்கு மேற்கிலே கதிர்காம மென்கின்ற
புகழோங்கு நல்லூரினில்

தாமேவு தொழிலையும் வாணிகந் தன்னையும்
தாழ்வொன்றி லாதுசெய்து
தாங்குபொரு ளோடுபுக ழேற்றுவாழ் கின்றநல்
தங்கநிக ரார்வணங்க

வாமனார் செஞ்சடையி னின்றுநில மீதினில்
வந்திழிந் துயிரையெல்லாம்
வண்ணமுட னாளவே கங்கையெனு மம்மையாய்
வடிவுற் றமர்ந்தமயிலே

ஏமமாய் நின்றெம்மை எந்நாளும் நீகாக்க
ஏத்தியே போற்றுகின்றோம்
இருவரறி யாவொருவன் விரிசடையி லேயுறையு
மெம்மம்மை யேகங்கையே! 1.

மலையனின் மகளாகி மாசக்தி தானாகி
மண்ணிலே தோன்றிவந்து
மறைமுதல்வ னானதிரு சிவனாரி டங்கொண்ட
மாணிக்க மல்லவோநீ?

அலைமீதி லரவணையி லறிதுயில் கொண்டுள்ள
ஆதிமூ லக்கடவுளின்
அழகார்ந்த மார்பிடங் கொண்டதிரு மகளாகி
ஆளுபவள் நீயல்லவோ?

தலையான தொழிலான ஆக்குதற் றொழிலினைத்
தக்கவா றூன்றியாற்றும்
தலைநான்கு கொண்டவன் தன்நாவி லுறைகின்ற
தமிழ்வாணி நீயல்லவோ?
நிலையான உலகமதி லைம்பெரும் பூதத்து
நீராக உள்ளமகளே
நிறைவான மனமோங்கி இழிவான குணநீங்கி
நெறிகாண வந்தருள்கவே -2.

சோறின்றி வாழலாம் வீடின்றி வாழலாம்
துணியின்றி யும்வாழலாம்
துணையின்றி வாழலாம் மணமின்றி வாழலாம்
சுற்றமற் றும்வாழலாம்

வீறின்றி வாழலாம் வினையின்றி வாழலாம்
வெட்கமின் றியும் வாழலாம்
வித்தான உண்ணுநீர் இல்லாது மண்ணிலே
மெய்வாழ்வு கொளமுடியுமோ?

ஆறின்றி உள்ளதோ ரூருக்கு ளெந்நாளு
மழகில்லை என்றதெல்லாம்
அழகான பசுமையை அம்மைநீ ஆற்றினால்
அளிசெய்வ தாலல்லவா?

மாறின்றி நஞ்செயும் புஞ்செயும் பயிரேறி
வளமிகச் செய்யவேண்டி
வாழ்கின்ற நின்கோவில் வலமாக வருகிறோம்
மங்கைகங் கையம்மையே! -3.

கங்கையில் மூழ்கினால் பொங்குதீ வினையெலாங்
காற்றினில் தூசுபோலக்
காணாது போகுமென் றாராய்ந்த சான்றவர்
கழறுவது பொய்யல்லவே

பொங்குகட லென்னவே தங்குதடை யின்றியே
பூரிப்பு டன்பாய்கிறாய்
புகழோங்கு மாசிலாப் புண்ணியக் கங்கையாய்ப்
பொலி வடைய வினை தீர்க்கிறாய்
எங்கெங்கு முள்ளநீர் எல்லாமுன் வடிவமே
என்றெண்ணி மூழ்குகின்றோம்
எங்களிட முள்ளபல பொல்லாத வினைகளை
ஏகவே செய்யவேண்டும்
துங்கசெங் குந்தர்வாழ் கதிர்காம நகரிலே
சுடராய மர்ந்ததேவி
தூயநிற மாகவரு வானதியு மானதிரு
மங்கைகங் கையம்மையே! –4.

விண்ணின்று மாரியாய்ப் பெய்துநீ மண்ணிலே
வெப்பந்த ணிக்கவருவாய்
வெற்பென்று கூறுகிற மலைமே லிருந்துநீர்
வீழ்ச்சியாய்ப் பெருகிவருவாய்

மண்ணின்று மேல்நோக்கி வருகின்ற ஊற்றாகி
மக்களுக் குதவிவருவாய்
மாசொன்றி லாதநீ ராகவே நடையிட்டு
வருகின்ற கங்கையம்மா!

தண்ணென்ற தன்மையைத் தாங்கிவரு முன்னிடம்
தன்னலங் காணவில்லை
தருகின்ற நீருக்கு முதவியாய்க் கைம்மாறு
தருகெனக் கேட்கவில்லை

விண்ணமுத மேயெங்க ளுள்ளமுந் தன்னலம்
விளையாத நிலமாக்குவாய்
வீறார்ந்த கதிர்காம நகரிலே குடிகொண்ட
விமலைகங் கையம்மையே! –5.

## அருள்மிகு முத்துமாரியம்மன்

காரன்ன கூந்தலும் பிறையன்ன நெற்றியும்
நெற்றியிற் செந்திலகமும்
கனிகளிற் கோவையைக் கண்முன் நிறுத்திடுங்
கவினோங்கு செம்மையிதழும்
நீர்மன்னு குவளைமல ரென்னவே அருளொழுகு
நெடிதான இருவிழிகளும்
நிகரிலா மணமுள்ள முல்லையின் மொட்டன்ன
நிரலான பல்வரிசையும்
போர்வில்லை ஒத்ததாய்க் கோடிட்டி லங்கிடும்
புருவத்தி னினியவழகும்
பொருவிலா முழுமதிய மென்னவே காண்கின்ற
பொலிவான திருவதனமும்
சீரொன்றி எங்களின் கதிர்காம நகரினிற்
செல்வமாய் வந்தமர்ந்த
திருவருளு மொருகடவு ளெனவுலகு பரவுகிற
செம்மையம் மைமாரியே! 6

சினமான தீயைநான் நீங்கவேண் டும்நல்ல
செயலினைச் செய்யவேண்டும்
தீதான பேராசை சிறிதளவு மென்னிடஞ்
சேரா திருக்கவேண்டும்
மனமான கூட்டிலே சூதொன்று மில்லாத
வாழ்வுநான் வாழவேண்டும்
வாடிவரு வோர்பசியை நீக்கஉண விடுகின்ற
வலிமைநான் கொள்ளவேண்டும்
குணமாண்பு கொண்டுளோர் செய்தஒரு நன்றியைக்
கொல்லாம லெண்ணவேண்டும்
கோடாத நாவோடு வாய்மையே பேசிடுங்
கொள்கையில் நிற்கவேண்டும்
உனையென்று மறவாத உள்ளமும் மற்றவையு
மொருசேர அருளவேண்டும்
உயர்வான கதிர்காம நகரிலே குடிகொண்ட
ஒண்மையம் மைமாரியே! 7

சீர்கொண்டு வாராத பெண்களைத் தீயினால்

தீய்க்கின்ற வன்கொடுமையும்

சிறுமியர் க்கறியாத வயதிலே திருமணஞ்

செய்கின்ற ஒருகொடுமையும்

கார்கொண்ட கூந்தலார் தம்மைக் கடத்திக்

கெடுத்துக் கொலைபுரிதலும்

கருவுற்ற பெண்பெறும் பெண்குழந் தைகளைக்

கடிதினிற் கொன்றுவிடலும்

வேர்கொண்டு மேலோங்கி நிற்கின்ற பொல்லாத

வெறிகொண்ட செயலிவற்றால்.

வெந்தழல் நடுவிலே மானினம் போலவே

விதிருற்ற பெண்ணினத்தார்

நீர்கொண்ட கண்ணுடன் வாழ்கின்ற நிலைநீக்கி

நீ காக்க வேண்டுமன்றோ?

நெற்றியிற் கண் கொண்ட வித்தகன் பங்கினில்

நிற்கின்ற பெண்ணணங்கே! ௮

பிணிநீங்க வேண்டியும், பணியொன்று வேண்டியும்,

பிழைபொறுத் திடவேண்டியும்,

பெண்ணுக்கு விரைவாக மணமாக வேண்டியும்,

பிள்ளைவர முறவேண்டியும்,

உணவின்றி வாடுகிற வறுமையைப் போக்கென்ன

உனதுதிரு முன்வேண்டியும்,

உயர்வுதரு கல்வியின் தேர்விலே வெற்றியை

உதவென்று மிகவேண்டியும்,

கணவரிட முள்ளபல தீயொழுக் கங்களைக்

களைகவென உனைவேண்டியும்

கவலையுட னுன்னுடைய கோவிலை வலம்வந்து

கைதொழுது நிற்பவரின்

துணையாகி மாரிபோல் உதவலால் உனைமுத்து

மாரியென் றேதொழுகிறோம்

தூய்மையார் நெஞ்சினில் நேயமாய் வாழ்கின்ற

தோகையம் மைமாரியே! 9

பொன்கொண்ட மேனியும் கண்கொண்ட கருணையும்

பொலிவாக வேவிளங்கப்

புதிதாய் மலர்ந்துள்ள நறியதா மரைபோன்ற

பூமுகத் தமைதிதவழ,

விண்கொண்ட புகழோடு கதிர்காம நகரினில்

வீற்றிருந் தருளுகின்ற

வேதநா யகியென்னு நன்முத்து மாரியின்

மென்மலர்ப் பாதத்திலோர்

பண்வண்டு வந்தூது மணநாறு மலரினைப்

பக்தியொடு வைத்தேத்துவார்

பண்பினா லோங்குவார் பசியினால் பிணியினால்

பயமே இலாதிருப்பார்

கண்கண்ட வளமெலா மினிதாக வந்துறக்

கவலையொன் றின்றிவாழ்வார்

கதிகளில் முதலான கதிசென்று பிறவாமை

காண்பதுவு முறுதியன்றோ! 10



# இறையருள் எங்கும் மிளிர்க

தமிழ்மாமணி. புலவர் த. தட்சணாமூர்த்தி
தி. ரா. பட்டினம்

---

### அருள்மிகு கதிர்வேல் சுவாமி

சிவனாரின் நெற்றிக்கண் தன்னில் தோன்றி
சீரான வாழ்வுதனை அளிக்கும் சேந்தன்;
நவமாகக் கதிர்காமம் நடுவில் உள்ளான்,
நாடிடுவீர் அவன்தாளை நன்மை கொள்வீர்;
பவம்நீங்கும் வருந்தீங்கு பறந்து போகும்,
பாவமது சேராது பழியும் வாரா,
தவம்வேண்டாம் நன்மையொன்றே நினைத்தால் போதும்,
தானேவந் தருளிடுவான் உறுதி யாக.

### அருள்மிகு முத்துமாரியம்மன்

மருந்துண்டு வாழ்ந்தவர்கள் மனம்வ ருந்தி
மார்க்கமது காணாது திகைத்த மக்கள்
பெருந்துன்பம் நீங்கிடவே வழியைத் தேடி
பெற்றார்கள் இறையருளே துணையா மென்று!
கருதிவந்து புதுவைகதிர் காமந் தன்னில்
கருணைமுத்து மாரியின்தாள் கதியென் றேற்றே
ஒருமனதாய் வேண்டிநோய் நீங்கப் பெற்றார்;
உறுதுணையாம் மாரியம்மை போற்றி வாழ்வோம்.

### அருள்மிகு கங்கையம்மன்

கங்கையென்றால் நீரதனின் பெயரே யாகும்,
கருதினால் அதுவன்றி வாழ்வு இல்லை;
பொங்கிவரும் நீரின்னல் தாரா வண்ணம்
போற்றியே நன்மைதர வேண்டு கின்றோம்;
தங்கியுளாள் கதிர்காமம் வடக்கு வீதி
தருவான கற்பகமாய் அந்த அன்னை
அங்குசென்று அவளடியை வேண்டு வோர்கள்
அதி நன்மை பெற்றிடுதல் உறுதி யாமே.

## *தமிழடி பரவி நிற்போம் !*
## *தவறாது வெற்றி காண்போம் !!*

**கவிஞர் ஆ. திருவாசகன்** **ஆசிரியர் வீர சைவமுரசு,** சென்னை.

1) வித்தக வாழ்வு வேண்டின்
வீரமே சேர வேண்டின்
சித்தகம், தெளிய வேண்டின்
செம்பொருள் அறிய வேண்டின்
தத்துவம் கடந்த சோதி
தன்னே ரிலாத தேவன்
உத்தமன் முருகன் நிற்கும்
உயர்கதிர் காமம் வாரீர் !

2) மண்ணக வாழ்வில் என்றும்
மணங்கமழ் மகிழ்வு வேண்டின்
எண்ணிய எல்லாம் வந்து
எய்திடும் வாய்ப்பு வேண்டின்
விண்ணகம் ஆளும் ஈசன்
விடையேறி மங்கை பாகன்
கண்ணினில் வந்த கந்தன்
கதிர்காமம் கடுகி வாரீர் !

3) வஞ்சகம் வீழ வேண்டின்
வறுமைநோய் தீர வேண்டின்
நெஞ்சகம் எந்த நாளும்
நிம்மதி உறுதல் வேண்டின்
விஞ்சிடும் புதுவை சார்ந்த
வியன்கதிர் காமம் வாழும்
அஞ்சுகம் உமையாள் ஈன்ற
அழகனைத் தொழுவோம் வாரீர் !

4) தமிழகம் மீண்டெ முந்து
தன்மானம் பெறுதல் வேண்டி
தமிழகத் தமிழர் எல்லாம்
தமிழ்மானம் உறுதல் வேண்டி
தமிழர்தம் தனித்த தெய்வம்
தண்கதிர் காமச் செல்வன்
தமிழடி பரவி நிற்போம் !
தவறாது வெற்றி காண்போம் !!

உ
சிவமயம்

# அழகனே வாழ்க! வாழ்க!

காப்பியக் கவிஞர் கவிமாமணி. கவிஞர் கோ. நா. மீனவன்
2 டி, நாச்சியப்பா இராயல் அபார்ட்மெண்ட்ஸ்,
அம்பாள்புரம் 3 ஆம் வீதி காரைக்குடி - 630 002

---

பூங்குயில் இனிது பாடும்
பொற்பதி கதிர்கா மத்தின்
பாங்கினில் இருந்து காக்கும்
பண்பமை குறிஞ்சி வேந்தன்
தூங்கிசை வண்டு கிண்டத்
தோன்றிடும் மதுசால் மாலை
தாங்கிய முருக வேளின்
தளிரடி தலைமேல் கொள்வாம்

தண்மலர்க் கமலம் ஆறு
தாங்கிடச் சரவ ணத்தில்
பண்பயில் மொழிகொள் அன்னை
பரிவுடன் அணைத்த காலை
விண்பயில் தேவர் போற்ற
வேலனாய் வந்தோன் வாழ்க
கண்பயில் கதிர்கா மத்துக்
கந்தனே போற்றி போற்றி.

பனிமதி சூடும் எங்கள்
பரமனின் நுதலில் தோன்றி
நனிமலர்க் கடம்பு சூடி
நங்கையர் இருவ ருக்கு
நனிமகிழ் நாதன் ஆகி
நாடெலாம் புரக்கும் செவ்வேள்
இனிதருள் கதிர்கா மத்தில்
இருப்பவன் தாள்கள் போற்றி.

மலையெலாம் உலந்த செவ்வேள்
மலரடி வாழ்க வாழ்க
கலைகளின் மூல மான
கந்தனே வாழ்க வாழ்க
அலையுலாம் செந்தூர் வாழும்
அழகனே வாழ்க வாழ்க
தலையினால் வணங்கு கின்றோம்
தாள்மலர் போற்றி போற்றி.



புதுச்சேரி, கதிர்காமம்,

# அருள்மிகு கதிர்வேல் முருகன் திருப்பதிகம்

இரா. அருணாசலம், ஆனந்தா நகர், புதுச்சேரி - 9.

### காப்பு வெண்பா

நல்லூர் கதிர்காமத் துள்ளுறை வேலனுக்கு
நல்லதோர் பாமாலை நான்தொடுக்க – வல்லமை
தந்திடுவாய் அய்ங்கரனே! தண்டமிழ்ச் சொல்லெடுத்துக்
கந்தனைப் பாடநீயே காப்பு.

### திருப்பதிகம்

1. கருணைமிகு தெய்வம் கதிர்வேல் முருகன்
அருளினை வேண்டும் அடியார்க்-கருள்செயக்
கற்றறிந்தோர் வாழும் கதிர்காமத் தூரிலே
உற்றிருப்பார் நெஞ்சம் உவந்து.

2. கதிர்வேல் அருளற்குக் காத்திருக்க, வல்வேல்
கதியென்று வந்தே தம் கையால் – துதிப்போர்க்கு
நல்வாழ்வே எய்திடும் ஞானம் பெருகிடும்
நல்லூர் கதிர்காமம் நாடு.

3. வங்கக் கடலோரம் அங்காடி வைத்தோர்கள்
தங்கும் கதிர்காமம் தன்னிலே – செங்கையில்
வேலெடுத்துச் சூரனை வென்றிட்ட வேலவன்
ஞாலமதைக் காத்திடுவான் நன்கு.

4. தண்டமிழ்ப் பாவலனாம் தண்டபாணி சாமிகளின்
வண்ணச் சரப வழிபாட்டால் – எண்ணமதில்
தூய உணர்வூறித் துன்பம் அகன்றிடும்
நேயம் வளர்ந்திடும் நேர்.

5. கதியிலா மாந்தர் கதிர்வேல் அருளால்
கதிபெற் றுயர்வர் கனிந்து – வெதிர்போல்
வளைந்தே அடியார் வறுமை யகற்றி
உளைவின்றிக் காப்பார் உவந்து.
(வெதிர்–மூங்கில்)

6. பொற்புடைக் குன்றாம் பொதிய முனிவர்க்கு
நற்பொருள் செப்பிய ஞானமிகு – வெற்பனே!
கல்வியெனும் செல்வம் கதிர்காம மக்களின்
இல்லத் திருக்க இரங்கு.

7. அரும்பயன் தேடும் அகிலத் தவரே
நிருமல ஞானம் நெருங்க – அருள்தரும்
தெய்வம் கதிர்வே லவனைத் தொழுதிட
எய்துவீர் பேரின்பம் ஈங்கு.

8. கதிர்வேல் அருளால் கதிர்காம மக்கள்
விதியை மதியினால் வென்றே – எதிராக
வந்திடும் ஏய்ப்போரின் வன்மம் அகற்றியே
சிந்தையில் தீய்ப்பார் சினம்.

9. உதிக்கும் ஒளிக்கதிரால் ஓடும் இருள்போல்
கதிர்வேல் முருகன் அருள்தான் – விதியினை
வேரறுத்துப் பக்தர்கள் வேண்டும் வரந்தனை
வாரி வழங்கிடு மாம்.

10. தந்தைக்கே ஓமெனும் தாரக மந்திரத்தைச்
சிந்தை குளிரவே செப்பிய – கந்தா !
கதிர்காமத் துள்ளுறை காமாட்சி மைந்தா !
துதிக்கின்றோம் நீயே துணை.





### கதிர்வேலன் முத்துமாரி கங்கையம்மன்

# வாழ்த்து மடலும் வணங்கு மடலும்

பேராசிரியர். புலவர் **ஆறு. மெ. மெய்யாண்டவன்**
ஸ்ரீ வெங்கடேசுவரா கல்வியியல் கல்லூரி, பேராவூரணி.

---

கதிர்காமக் கதிர்வேலன் புதுவைக் கந்தன்
கவின்மிகுந்த ஊர்மக்கள் கவலை தீர்ப்போன்
கதிர்மணிகள் உழவர்களைக் காக்கும் வேலி
கருணைஅன்னை முத்துமாரி கதிர்வேல் சாமி
மதிநல்கு கங்கை அன்னை மூவ ருக்கும்
மகிழ்வோடு மங்கலமாய் நன்னீ ராட்டும்
புதிதெனவே விளங்குமிந்தப் புனித நாளில்
பொதுமக்கள் கந்தனருள் பெற்று வாழ்க.

புதுச்சேரி பாரதிக்கும் தாச ருக்கும்
பூங்கவிதை மலர்க்காடு பொதிந்த கூடு
மதுசிந்து அரவிந்த மலரின் ஞானம்
மாந்தமனத் தேடலுக்கு மாம ருந்தாம்
எதுவரினும் காக்குமன்னை முத்து மாரி
இனியகங்கை அம்மனுடன் கதிர்வேல் சாமி
புதுமைமிகு ஆன்மீகம் பொலியும் கோவில்
புத்தொளியால் மூவர்அருள் பெற்று வாழ்வோம்

மனம்கலங்கு மனிதனுக்குக் கடவுள் காட்டும்
மாக்கருணை வெள்ளமென மூவ ரூட்டும்
இனம்காணா உவகைதரு அருளின் ஈட்டம்
என்றென்றும் புதுவைமக்கள் எய்தி வாழி
தனம்நல்கும் குணம் நல்கும் சாந்தி நல்கும்
தன்னேரில் முத்தெய்வத் தாளைச் சேர்வோம்
தினந்தோறும் முத்தெய்வத் திருத்தாள் போற்றித்
திருத்தொண்டால் மூவருளம் களிக்கச் செய்வோம்.

இலங்கையிலே வாழ்தமிழர் இன்னல் போக்க
இங்குறையும் கதிர்காமன் அருளைச் செய்வான்
நலம்கூடும் நற்றமிழர் வாழ்வில் நாளும்
நாமுமவன் திருவடியை நாடி நிற்போம்
புலம்பெயர்ந்த தமிழர்எலாம் புலம்பி டாமல்
புத்துணர்வு பெற்றுயரக் கந்தன் காப்பான்
இலம்என்று இருப்பார்க்கு எல்லாம் ஈயும்
இம்மூவர் திருவடிகள் ஏத்தி வாழ்வோம்.

தமிழ்காக்கும் கதிர்வேலன் தாள் வணங்கித்
தன்னலத்தைத் துறந்திடுவோம் தமிழைக் காப்போம்
அமிழ்தொத்த அன்னைமுத்து மாரி அம்மா
அடியவர்கள் வாழ்வினிலே அனைத்தும் ஈவாய்
உமிழ்நீரில் கங்கை அம்மன் உருவைக் காண்போம்
உத்தமஊர் புதுவைக்கோர் உரத்தைச் சேர்ப்போம்
அமிழ்தென்றால் தமிழாகும் அதனைப் போல
அத்தனைபேர் வாழ்வினிலும் அன்பை வார்ப்போம்.

நன்மைதரும் கதிர்வேலன் நாமம் போற்றி
நற்கருணை முத்துமாரி நற்றாள் போற்றி
இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்றம் சேர்க்கும்
இனியகங்கை அம்மன்அடி இணைகள் போற்றி
அம்மைஉமை திருப்பாலன் அய்யன் வேலன்
அரியகந்த வேல்சாமி அடிகள் போற்றி
மும்மைக்கும் நமைக்காக்கும் மூன்று தெய்வம்
மும்மலங்கள் நீக்கிஎன்றும் மேன்மை சேர்க்கும்.



உ



# கதிர்வேல் மாரி கங்கையம்மன்

பொற்கிழிக்கவிஞர்
**கா. நாகப்பன்,** எம்.ஏ. பி.எட்.,
4/69, எஸ்.ஆர்.எம். தெரு, காரைக்குடி – 630001
அ.பேசி: 9488264913

---

## கதிர்வேல்

கண்டிகதிர் காமத்தில் அண்டினோர் காக்கவே,
கதிர்வேலாய் நின்ற குமரா!
பண்டுபுகழ் புதுவையில் கண்டுநிகர் மக்களும்
பல்வளம் பெற்று வாழ
பெண்டுகள் தெய்வானை வள்ளிமான் இருவரும்
பக்கமாய் நின்று சேர,
கொண்டுவரும் அன்பினைக் கொள்கின்ற கதிர்வேலே!
கொற்றவா காக்க வருக!

## முத்துமாரிஅம்மன்

கத்து திரைக்கடல் சூழ் புதுவையினில் கண்மணி முத்துமாரி,
முத்து தரும் அருள் முத்துக் குமரனைக் கார்த்திகைப் பெண்களிடம்
தத்து வளர்க்கவே தாய்நீ கொடுத்ததால் புதுவை கதிர்காமம்
கொத்து வளம்பெறும் கூட நீ நலமுடன் தந்திட வந்திடுக!

## கங்கை அம்மன்

கங்கை அம்மாநீ – மாலின் தங்கையம்மாநீ
காசினியில் காசியிலே வலம்வருவாயே (கங்கை)
மங்கயர்க் கரசி எங்கள் அங்கயற்கண்ணி
மாநகர்ப் புதுவையில் சேர்ந்திடுவாயே!– (கங்கை)
வங்கக்கடல் அலைசொல்லும் வாழ்த்து வோமிலே
வந்துதிக்கும் கங்கையம்மா வாழ்த்திடுவாயே (கங்கை)
தங்ககுண விசாலாட்சி தழைக்கும் காசியில்
தங்கமனம் தங்கிடுவாய் தழைத்திடுவாயே (கங்கை)

உ
சிவமயம்



# புதுவைக் கதிர்காம முத்துமாரியம்மன் அந்தாதிப் பத்து

**பாவலர் இரத்தின சின்னசாமி, க.இ.கல்.இ.**
தமிழாசிரியர் (ஓய்வு)
தலைவர், அருள்மிகு தளிஞ்சைக் காளியம்மன் திருக்கோயில்)
திலாசுப்பேட்டை, புதுச்சேரி – 9.

---

**காப்பு**
**ஓடிகொம்பா உம்மன்னைக் கந்தாதி பாட**
**அடியெடுத்துத் தந்தென்னை ஆள்**

1. உலகாள் திரிசடையன் உள்ளம் இடம்கொள்
உலகம்மை நல்முத்து மாரி – உலவும்
கதிர்காமம் கல்வியும் செல்வமும் சூழும்
பதியாய்க் திகழழகைப் பார்

2. பார்க்குமிட மெங்கும் பராசக்தி மின்னிடுவாள்
ஆர்க்கும்சொல் எல்லாம் அவள்பெயரே – வேர்க்குநீர்
வார்க்கும் கருமாரி வாழ்வளிப்பாள் நோய்தீர்த்தே
யார்க்கும் அமுதூட்டும் யாய்.

3. யாரும் அறியவொண்ணா எட்டா அரும்பொருளே
கோரும் நலந்தரு கோமளமே – தீரும்
நிலப்பகைகள் நாளும் நினைவணங்க மேலும்
கலகம் களைந்தென்னைக் கா

4. காக்க உனையன்றிக் காட்ட ஒருவரில்லை
தேக்குமன்பில் தோயும் திரிபுரையே – தாக்கும்
பிணியெல்லாம் தாக்குப் பிடியாமல் ஓட
அணிவகுக்கும் உன்படை ஆம்

5. ஆரணங்கே அன்பகமே அன்றாடம் உன்கோயில்
தோரண வாயில் தொடுவோர்க்குப் – பூரணமாய்
எல்லா நலம்விளங்க ஏற்ற வினைசெய்வாய்
பொல்லாப் பகையைப் பிளந்து

6. பிறைமதியன் காதலியே பெண்ணுக் கணியே
குறைமதியன் என்னுள் குடிகொள் – நிறைமதியே
ஆசையால் வந்துறும் அல்லல் அகன்றிடப்
பூசை நான் செய்யப் புகுத்து

7. புகுந்தென்னுள் புத்தொளி பாய்ச்சி இருளாய்ப்
புகுந்த அகந்தையைப் போக்கித் – தகுந்த
நலவாழ்வு நான்பெற வே நற்றாய் எனக்குப்
புலனடக்கும் வித்தை புகட்டு

8. புகலிடம் வேறில்லை போற்றுவோரு மில்லை
அகலிடம் அற்றலை கின்றேன் – தகவணங்கே
சுற்றமாய் ஏற்றென்னுள் சோர்வகற்றிச் சூழ்ந்திடும்
அற்றம் அகற்றி அமை

9. அமைந்த இடமெல்லாம் அம்மை இருப்பாள்
இமைப்பொழுதும் சோராமல் எந்தன் – சுமையைத்
தளர்த்திடுவாள் தண்ணளி தந்திடுவாள் நாளும்
கிளர்ந்திடுவாள் நற்றமிழைக் கேட்டு

10. கேட்ட வரம்தருவாள் கேளம்மை ஏற்றவர்க்கே
போட்ட புதுவேடப் போலிகளை – நாட்டில்
வெளிக்கொணர்ந்தே காட்டுவாள் வெற்றிக் கடைக்கண்
ஒளிபெற்றே வாழும் உலகு.

# திருவருள் வேண்டினன்

மூத்த தமிழறிஞர்,
பெரும்புலவர் **ப. அரங்கசாமி**
தலைவர், தமிழகப் புலவர் குழு, லால்குடி – 621 601.
தொ.பே. : 0431 – 2541552

## நேரிசை ஆசிரியம்

காவியக் கண்ணகிக் கடுஞ்சினங் கொண்டு
நாவிடு சாபம் நகரை எரித்திட
மாரி பெய்யா தொழிய மக்கள்
பேரிடர் துயரம் பெருகி வருந்திட
வெப்பும் குருவும் வீறுடன் தாக்க
செப்பருந் துயரால் சிதைந்து கிடந்தனர்

அவ்வேளை

சேர மன்னன் செங்குட் டுவனவன்
ஊரவர் துயரம் ஒழித்திடும் கடமையின்
பத்தினித் தெய்வம் கண்ணகிப் படிவம்
எத்திசை யோரும் ஏத்தித் துயர்கெட
ஊரில் நிறுவி உரிய விழாக்கொள
மாரி பெய்திட மக்கள் மகிழ்ந்தனர்
மாரி பெய்யச் செய்த அம்மையை
மாரி அம்மை என்று மக்கள்
பேரிட் டழைத்த பெயர்தான் இன்று
மாரி யம்மை எனப்பெயர் கொண்டனள்

புதுவையில்

இத்தகு பத்தினித் தெய்வப் பெயர்களுள்
முத்து மாரிப் பெயரவள் கோயில்
முத்தமிழ்க் கடவுள் முருகன் கோயில்
கங்கை யம்மன் கோயில் இவற்றின்
மங்கலக் குடநீ ராட்டும் நினைவாய்
உருக்கொள் மலரின் உருவம் கவினுறுத்
திருவருள் வேண்டினன் தேர்ந்து.

**ப. அரங்கசாமி**

# துதிப்போர் நெஞ்சில் உதிப்போன்

பூங்கா சண்முகம், கதிர்காமம்.



ஓம் !
உலகின் இயக்கம்
உயிரின் துவக்கம்!
ஒளிர்வேல் முருகனின் திருவடிவம்!

ஆழ்கடல் முத்தெடுக்க ஆசையுற்ற
அலைதவழ் கரையின்
தளர்நடைச் சிறுவன் யான்
சிலைதவழ் செஞ்சுடரோன்
வளர்புகழ் பாட வந்தேன்
குறையாயின் தாய்மையொடு பொறுப்பீர் !

வேயிளந்தோளி வீணையின் மொழியை
மாயையின் மயக்கினால்
மாமுனி மயங்கினான்
முற்றும் துறந்த முனிவன் காசிபன்
சற்றே துறவைத் துறந்தான்
கங்குல் பகலாய்க் காமம் தொடர்ந்தது
மங்காத வேட்கையால்
பெற்றனர் வடிவம் பற்பல
பெற்ற அசுரரோ எண்ணிலர்

மாயையின் நோக்கம் மகிழ்ச்சியுற
சீயமும் வேழமும் பின்தொடர
சூரபன்மன் முன்னர்த் தோன்றினான் !

அசுரர் குலம் தழைக்க
அண்டமும் அமரரும் ஆட்செய
முழுமுதற் கடவுளை முன்னிறுத்தி
தொழுதான் தொழுதான் சூரபன்மன்

பிறப்பிறப்பில்லாப் பிஞ்ஞகனிடம்
இறப்பு தொடரா யாசகம் வேண்டினான்
இட்ட பொருளின் நிறைவின்மையால்
இட்டான் தன்னை; எரிந்தான் அவியில்

ஆயிரத்தெட்டு அண்டங்களை
நூற்றெட்டு யுகங்கள் ஆளவும்
இந்திரஞால மந்திரத்தேரையும்
நந்தீசன் வழங்க நயந்து பெற்றான்
மாயிரு முந்நீர் நடுவே !
மயன்கண்ட மகேந்திரபுரியில் – மா
மன்னனாய் அமர்ந்தான் !

வரம் பெற்றவன்
வரம்பு கடந்ததால்
அறமும் அந்நியமாயிற்று
கள்ளுண்ட குரங்காய் கருமனத்தரக்கன்
உள்ளியனவெல்லாம் செய்தான்!
ஈசனை விடுத்து
எல்லோரையும் வென்றான்
நஞ்சுண்டவன் வரத்தால்
பஞ்ச பூதங்களும் – அசுரன்
பாதம் பணிந்தன
அவையவன் ஏவலுக்குக்
காவல் செய்தன!

எதிர்த்தவர் அவுணர்
இருட்சிறையில்
இந்திரன் மகனோ தனிச்சிறையில்
அமரர் அடிமையைச் சுமந்தனர்

அன்னமும்கருடனும் தம்மை மறைத்தன.
துன்பந் தொடரலால்
துவண்ட வானவர்
நன்னிலை வேண்டி
நமசிவாயம் பணிந்தனர்
காரிருள் கிழிக்கும்
மின்னொளிக் கதிரை
கண்ணுதலுக் கிணையாம் – சிவ
கந்தனை வேண்டினர்.

குறுஞ் சிரிப்பில் குன்றம் எரித்தவன் – தேவர்
உறுந்துன்பம் கண்டு
உள்ளம் வெகுண்டான்

சிவம் சினந்தது!
செம்முகம் ஐந்தும் சிவந்தன
காமனை எரித்த கண்ணோ
கனலை ஈன்றது!

கயிலை கனன்ற அனற்பொறியால்
அரண்டனர் அமரர்
அச்சமும் அஞ்சியது
பாதச் சிலம்பின் பரல்கள் சிதற
மாதொரு பாகனை மங்கை நீங்கினள்!
சிந்திய பரல்கள் சேயிழையாக
ஈசனைச் சார்ந்து அவர் சீவனைச் சுமந்தனர்
நவமணி வீரர் நாட்பட இருந்து
காவலுக்காய்ப் பின் கந்தனைச் சூழ்ந்தனர்

இதழ்விரி செந்தீ திரிபுரம் எரித்திடில்
நுதல்விழி நெருப்பினை என்னென் றியம்புவது?

என்பும் இளகியது
இயற்கையும் கருகியது

சங்கரன் அருளால் கடுமை தாங்கி
கங்கை சேர்த்தனர் காலும் நெருப்பும்
கண்பொறியால் கலக்கம் உற்ற
தண்புனல் கங்கை – யதனை
சரவணப் பொய்கையில்
சட்டெனச் சேர்த்தாள்;

என்றுமொளிர் இளங்கதிர்
பொன்னெனப் பூத்தது பொய்கையில்
விண்ணவர் வணங்க
மண்ணகம் பணிய
ஒன்றும் பலவுமாய்
இன்மையும் உண்மையுமாய்
நன்றாய்த் தோன்றினான்

அன்றலர் தாமரையில்
பன்னிரு கரத்தொடு – தவழ்
புன்னகை மிளிர – ஞானப்
பழமாய்த் தோன்றினான்
வரம்பில் இன்பம்
வரம்பில் ஆற்றல்
ஏதமில் ஆற்றல்
இயற்கை அறிவு
தன்வயம் தம்மொடு
தன்னேரில் முற்றறிவு எனும்
ஆறு குணங்களும் ஆறு முகங்களாய்க் கொண்டு
ஒருருவாய் உதித்தவன் – திருக்

கார்த்திகை மகளிர்க்கு
ஆறுருவாய் மாறி
அருளைக் கூட்டினான் !

குமரனின் குறும்புகள் பற்பல
அமரர் கண்ட அற்புதம் மிகப்பல
விரித்துரைக்கின் திரைகடலும் சிறிதாம்

நான்முகன் அறியா
நாதமந்திர உட்பொருளை
செஞ்சடையன் செவியில்
மெல்லச் செப்பினான்

உயிர்களைப் படைக்கும்
ஒருபெருந் தொழிலை
உவப்பொடு செய்தான்
களவியல் உரைக்குக்
கண்ணீர் மல்கியவன்
ஆற்றுப்படை கேட்டு
அஞ்சேல் என்று (உ) வந்தான் !

குறும்புகள் விளைத்த குமரன்
உறுகணம் உந்த
அன்னை தந்த அணிவேல் கொண்டு
தன்னை தந்த தனிப்படையும் கொண்டு
அமரர் சேனை அருந்துணையாக
நவமணி வீரர் நற்றுணையாக
வளர்புகழ்திருச் செந்தூர் எழுந்தான் !

செவிடன் காதில்
ஊதிய சங்காய் – தூதன்
ஓதிய வார்த்தை – சூரன்
உளம் செல்லவில்லை !

கொஞ்சும் குழவியென
குமரனை நினைத்ததனால்
அமரர் சிறைவிடுக்க – அசுரன்
அணுவளவும் இசையவில்லை
ஆணவத்தில் அவன் ஓர் எல்லை!

படைகள் கலந்தன !
பாலமுருகனின் படைக்கலத்தால் – அசுரர்
வேலை நிரப்பினர் தம் படைபலத்தால்
எதிர்ப்பேதும் இன்றி
இறையைச் சரணடைந்தனர்
வீரக் கழலோன்
உதிர்த்த சிரிப்பால்
உதிர்ந்தனர் உதிர்ந்தனர் – பின்
நீறாய்க் கரைந்தனர் !

அடலுறு தம்பி யானைமுகனும்
இடிக்குரல் மிகுவலி சிங்கமுகனும்
தனிப்படை வேலால் – உயிரின்
இனிப்பை அடைந்தனர் – இனியொரு
கருப்பை வாரா கதியில் அமர்ந்தனர்!

மாயையின் துணையும்
மாதவத்தால் பெற்ற
சேயோன் வரமும்
சிந்தை தருக்கியதால்
சிவகுமரனை உணர்ந்திலன்!

ஏயெனும் பொழுதில்
ஆயிரமாயிரம் அம்பு விடுத்தும்
தேவர் அருளிய பெருங்கலன் தொடுத்தும்
மாயம் விளைத்தும்
பல்வகையானும் படை நடத்தினான் !

செல்லாக் காசாய்
சிந்தின யாவும்
நெடுவேலொடு நின்றான் முன்
நின்றான்... திகைத்தான்!
சுற்றமும் உறவும்
பெற்றன யாவும்
முற்றிலும் இழந்து
நற்றவம் ஒன்றுடன் நாணி நின்றான்!

அருந்தவம் புரிந்ததன்
பெரும்பயனாய்
குமரகுருவின் குவளை நோக்கினால்
தேவரும் காணா
பெருவுரு கண்டான்!
முருகனை .....
முழு முதலாய்க் கண்டான்
விண்ணோரும் காணா மெய்ப்பொருளை
விண்முழுக்கக் கண்டான்!

இழப்பிற்கான காரணம் உணர்ந்தான்
இறப்பிலும் சிறப்பு
இருப்பதால் மகிழ்ந்தான்

மெய்ஞ்ஞானம் மின்னலாய் மறைய
அஞ்ஞானம் அவனுள் வேர்விட
அடுத்தும் தொடுத்தான் அருஞ்சமரை
அஃதே அவனின் இறுதிநிலை!

தாயை நினைத்த சேய்
தனக்குதவ வேண்டினான்
மாயை மனங்கொள – அசுரர்
ஆயம் முழுதும் மீண்டும் அணிவகுத்தன
மாண்டவர் மீண்டனர்
ஆண்டவனின் பூதகணங்களோ
அரண்டனர் ... அரற்றினர்
நன்றிது மாயமென நவின்ற நாயகன்
ஓங்காரம் ஒன்றொளிக்க – மாற்றார்
தாங்கொணாத் துன்பம் தாம் சுமந்தனர்

இன்னற் பெருக்கால் இறப்பை வேண்டினர்
சிவபாலன் சிந்திக்க
எழுந்தவர் இறந்தார் – மீண்டும்
எழா இடம் ஏகினார்.
முடிவில்
உலகை உலுக்கும் ஒரு மாமரமாய்
அலை கடல் நடுவே அளாவி நின்றான்

இதழ்க்கடையோரம் இளநகை அரும்ப
ஒருதனிவேலை – குகன்
ஊடுருவே விடுத்தான்
உயிர் உள்ளிருக்க விடுத்தான்!
கடும்போர் விளைத்தவன்
நெடுவேல் பிளக்க
இடிவிழுந்த மரமாய்க்
கிடந்தான் இரண்டாய்!

கந்தனின் கருணையால்
சிந்தின ஆணவம் மாயை
அழிக்க நினைத்தவன்
அகவும் மயிலாகி
அழகனைச் சுமந்தான்
விடியலை எழுப்பும் சேவலாகி
கொடியில் அமர்ந்தான்!
கொடுப்பவன் குமரன்
தடுப்பவன் எங்குளன்?

உறுபடை தாங்கி
சூரனை வென்றவன்
ஆற்றுப்படையால் மகிழ்ந்து
அறுபடை வீட்டில்
அருளாட்சி தொடங்கினான்!

தமக்கருள் செய்த தண்டபாணிக்குத்
தன் மகள் தேவயானையை
விருப்பம் சிறக்க தேவர்தலைவன்
திருப்பரங்குன்றில் திருமணம் கொடுத்தான்

தினைப்புனம் காத்து
வினைப்பயன் வளர்த்த
வள்ளிக் குறத்தியின்
உள்ளம் கவர்ந்தான்
களவு மணத்தால்
நம்பிராசன் நனி மகிழ – கடம்பன்
காதல் மணம் கொண்டான் !
தணிகை நின்று தண்ணருள் வளர்த்தான்!

தேவியர் இருவரைத்
திருமணம் கொண்டவன்,
திருப்புகழ் வேண்டித் திருவண்ணாமலையில்
அருணகிரிக்கு ஆடி அருளியவன்
யாமிருக்க பயமேன் என்றான் !
யாவர்க்கும் சண்முகமாய் நின்றான்!

வானிறைக்கும் வளர்கதிராய்
வருபிணி பனி களைபவன்
செந்தமிழ் மொழியின் சீலம் உரைத்த
தங்குபுகழ் அன்னையிடம்
சுட்டபழம் வேண்டுமா
சுடாத பழம் வேண்டுமா – என
நாவல் கனிகொண்டு

நாவளம் நவின்றவன்
வேதம் உணர்ந்த தேவ முனிக்கும்
ஏதமின்றி இலக்கணம் வகுக்க
ஞானமுணர்த்திய ஞாலமுதல்வன்
ஆறெழுத்து மந்திரத்தை
யாரெடுத்தும் ஓத
தானொடிக்குள் வருவான்

அன்று
முந்நீர் நடுவண் முகிழ்வள நல்லூர்
கதிர்காமந்தனிலே
ஆதிபூதக்கணங்களொடு
அசுரனை வெல்ல
ஆறுமுகன் தங்கினான்
இன்று
நினைப்போர் நெடுந்துயர் களைய
விளைநிறை கதிர்காமந்தனில்
நிலையாய் நின்றான் நிறையருள் செய்யவே!

ஆண்டியும் அவனே !
அரசனும் அவனே !
யாண்டும் அவனே !
எல்லாமும் அவனே !
கதிர்காமத்தூரில் வாழ் கதிர்வேலா !
துதிக்கின்றோர் நெஞ்சில்
உதிக்கின்ற மால் மருகா !
சரணம் சரணம்
சரவணபவனே சரணம் !

உ

# இறைவன் எங்குள்ளான்?

திருமுருக. கிருபானந்தவாரியார்

இறை என்ற சொல் இறு என்ற சொல்லடியாகப் பிறந்தது. எங்கும் நீக்கமற நிற்பவன் இறைவன். ஒருகாலத்தில் வடமொழி தென்மொழி என்ற இருமொழிகளிலும் வல்லவர்கள் ஒருங்கு கூடினார்கள். புலவர் மாநில மாநாடு வெகு சிறப்பான ஏற்பாடு. மன்னர்கள், பெருநிலக்கிழார்கள், பெருந் தனவந்தர்கள் இருந்து அதனை நடத்தினார்கள். மாநாட்டுக்கு வந்த தகுதி வாய்ந்த பெரும் புலவர்களை மேளதாளத்துடன் இனிது வரவேற்கச் செய்தார்கள்.

ஒரு பெரும் புலவர் தலைமை தாங்கினார். புலவர் மாநில மாநாடு தொடங்கியது. மொழியைப்பற்றி அறிவுநூல்களைப்பற்றிச் சமயங்களைப்பற்றி இன்னோரன்ன பல பொருள் களைப்பற்றி அங்கு ஆராய்ச்சிகள் நடைபெற்றன. இறுதியில் இறைவன் எங்குமிருந்தாலும் சிறப்பாக எங்கிருக்கின்றான்? என்பதுபற்றிப் பெரும் ஆராய்ச்சி நடந்தது. ஒரு புலவர் இறைவன் திருக்கயிலாயத்தில் இருக்கின்றான் என்றார். ஒரு புலவர் இறைவன் வைகுண்டத்தில் இருக்கின்றான் என்றார். ஒரு ஆதித்த மண்டலத்தின் நடுவில் இருக்கின்றான் என்றார். ஒரு புலவர் இறைவன் விண்ணுலகில் விளங்குகிறான் என்றார். ஒரு புலவர் அமராவதியில் இறைவன் இருக்கின்றான் என்றார். ஒரு புலவர் மூதண்டத்தின் முடிவில் இருக்கின்றான் என்றார். ஒரு புலவர் வேத முடிவில் இறைவன் இருக்கின்றான் என்றார். இவ்வண்ணம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு இடத்தையும் இயம்பித் தாம் கூறியதுவே உண்மை யென்று வாதிட்டார்கள்.

கற்றவர்கள் கூடி வாதிட்டால் அதற்கு முடிவு ஏது? கடல் கொந்தளித்ததுபோல் ஒலி முழங்கியது. வேதம், புராணம், இதிகாசம், தர்க்கம், நியாயம் முதலிய நூல்களைப் பிரமாணங் காட்டிப் பேசி ஆரவாரம் புரிந்தார்கள்.

முடிவில் ஒரு முதுபெரும்புலவர் “நாம் இப்படி வாதிப்பதில் பயன் இல்லை. இவ்வாதம் முடிவு பெறாது. காரைக்கால் என்ற ஊரில் ஒரு அம்மையார் இருக்கின்றார்கள். அவர்கள் நூலறிவும் அநுபவ அறிவும் நிரம்பியவர்கள். திருவருளுணர்வு பெற்றவர்கள். அவர்களிடம் போய் நாம் சமாதானம் பெறலாம்” என்றார். புலவர் குழு புறப்பட்டது.காரைக்காலை அடைந்தார்கள்.அம்மையார் உள்ளே சிவபூஜை செய்துகொண்டிருக்கின்றார்கள். அவருடைய கணவனார் பரமதத்தன் செட்டியார் திருமாளிகையின் முற்றத்தில் இருக்கின்றார். வந்தவர்களை அன்புடன் வரவேற்று அவர்கட்குப் பால் பழந் தந்தனர். ‘நீவிர் யாவர்? வந்தது என்ன காரியம்’ என்று வினாவினார்.

‘நாங்கள் புலவர்கள். ஒரு சந்தேகம் கேட்க வந்தோம். தங்கள் தரும பத்தினியார் புனிதவதி அம்மையார் எங்கே?

பரமதத்தன் வியப்புற்றான் ‘ஓ’ நம்முடைய மனைவி பெரும்புலமையுடையவள் போலும்! இத்துணைப்பேர் அவளைத்தேடி வந்திருக்கின்றார்களே! அப்படியானால் அவள் கூரிய ஞானமும் சீரிய அநுபவமும் உடையவளாக இருத்தல் வேண்டும். அதனை வெளிக்குச் காட்டாமல் அடக்கமே வடிவாக இருக்கின்றாள்’ என்று கருதினார்.

உள்ளே சென்று அம்மையாரைப் பார்த்து, “உன்னை நாடிப்புலவர் கூட்டம் வந்திருக்கின்றது,” என்றார். அம்மையார் புன்முறுவல் செய்து புலவர்கள் இருந்த இடத்தில் வந்து ஒருபுறம் ஒதுங்கி நின்று கை குவித்தார்கள்.

புலவர்கள் எழுந்து அவரை அன்புடன் தொழுது, அவர் அநுமதி பெற்றபின் அமர்ந்தார்கள். காரைக்காலம்மையார் ‘உங்கள் வரவு நல்வரவு, நீங்கள் இங்கு எய்திய கருமம் யாது?’ என்று வினவினார்கள்.

‘அம்மையே! அறிவின் சிகரமே! இறைவன் எங்குளான்? என்பது பற்றி எங்களுக்குள் ஒரு பெரிய வாதம் நிகழ்ந்தது. வானத்தில், அமராவதியில், கையிலையில், பகிரண்டத்தில், மறைமுடிவில், இப்படிப் பலப்பல இடங்களில் இருக்கின்றான் என்று வாதிட்டோம். முடிவுகாண முடியவில்லை தாங்கள்தான் முடிவுகூறவேண்டும்’

அம்மையார் புன்சிரிப்புடன் தலையசைத்து அடியிற்கண்ட அரிய வெண்பா வைக் கூறினார்கள்.

வானத்தான் என்பாரும் என்கமற் றும்பர் கோன்
தானத்தான் என்பாரும் தாமென்க – ஞானத்தான்
முன்னஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்
என்னெஞ்சத் தான் என்பன் யான்.

இறைவன் வானத்தில் இருக்கின்றான், அமராவதியில் இருக்கின்றான் பிற இடங்களில் இருக்கின்றான். என்றெல்லாம் கூறுவோர் கூறட்டும்; ஆனால் ஐயன் என் நெஞ்சில் இமைப்போதும் நீங்காது உறைகின்றான் என்றார்கள். இந்த வெண்பாவைக் கேட்ட புலவர் வியந்தார்கள். உரையில் நயந்தார்கள்.

முன்னஞ்சத்தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான் ‘இருளில் ஒளி’ என்ற முரண்தொடையையும், இறைவன் நினைப்பவர் மனங்கோயிலாக் கொண்டவன் என்ற உண்மையையும் உன்னி உன்னி உணர்வுபெற்றார்கள். இறைவன் யாண்டும் நீக்கமற நிறைந்து நின்றாலும், சிவஞானிகளின் திருவுள்ளத்தில் விளங்கித் தோன்றிக் காட்சி தருகின்றான்.

‘இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க’.

நன்றி !

உ

# திருமுறைகளும் இடைமருதும்

கயிலைக் குருமணி
திருப்பெருந்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகளார்
பேரூராதீனம் பேரூர் கோயம்புத்தூர் - 641 010.
தொலைபேசி : 0422 - 2607995

(திருமுறைப் பாடல்கள் மந்திரப்பொருளாக விலங்குவன என்பதை எடுத்து உரைப்பதோடு திருஞானசம்பந்தப்பெருமான் அன்போடு அடியார்கள் வழிபட்ட முறைமையையும் இக்கட்டுரை விளக்கி உரைக்கின்றது)

"திருமுறையே சைவநெறிக் கருவூலம்" என்பது ஆன்றோர் வாக்கு. தேவாரம் திருவாசகம் செம்பொருள் உணர்த்துவன. வாய்மையும் தூய்மையும் வழங்குவன. அவை மறைகளாகவும் ஆகமங்களாகவும் வழிகாட்டுகின்றன. பெருமந்திரம் எனத் திருமுறை கண்டபுராண ஆசிரியர் உமாபதி சிவாச்சாரியார் 'கண்டபெருமந்திரமே மூவர் பாடல்" என அருளியுள்ளார். இப்பாடல்கள் திருநெறிய தமிழ் எனப் போற்றப்படுவன. முழுமுதற் பொருளை வண்ணங்காட்டி வடிவு காட்டி வெளிப்படச் செய்யும் தெய்வப் பாடல்கள் புவனியில் சேவடி தீண்டி மலர்க்கழல்கள்காட்டி அடியவரை ஆட்கொண்ட மெய்பொருட் திறத்தை உலகறியச் செய்வன. இதனை சிவநெறி போற்றிய சிந்தையர் "மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர்மொழி" எனவும் "திருவாசகம் என்று ஒரு கால் ஓதில் கருங்கல் மனமும் கசிந்து உருகும்" எனவும் போற்றிப் புகழ்ந்தனர்.

"ஆகமமாகி நின்று அண்ணிக்கும்" இப்பாடல்கள் நிறைமொழி ஆணையில் கிளந்த மறைமொழியாலாகிய மந்திரங்கள். இம்மறை மொழிகளால் நிகழ்ந்த வரலாறுகளை மிகுதியாகக் காணமுடியவில்லை.

இத்தகைய அருட்பொலிவு நிறைந்த பாடல்களைக் கருவாகக் கொண்டு எழுந்து மெய்யியலாகிய சிவஞான போதமாகும். அதனை இயற்றியருளிய மெய்கண்டார் தோற்றமே "பேயடையாப் பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ள நினைவாயினவே வரம் பெறுவர்" எனும் திருமுறைப் பாடலாகிய மந்திர மொழியால் வாய்த்ததாகும். சிவஞானபோதம் "செம்மலர்" என நிறைவாகக் கூறும் சூத்திரம் திருமுறை வாழ்வையும் வளத்தையும் உணர்த்துவன. உலகறியச் செய்யும் இவ்வருட் பணிக்கு எழுந்தனவே சமயபீடங்கள்.

திருமுறைப் பாடல்களைப் பலப்பகுப்பாகக் காணலாம். இறைவன் திருமுன்பில் நின்று பாடியவை மூவர் முதற்பாடல்களும், மணிவாசகரின் திருச்சதகம் முதலாகிய பாடல்களும் ஆகும். தலங்களுக்கு அணிமையிலிருந்து பாடிய பாடல்கள் பல. திருவண்ணாமலையைக் காணும் காட்சி அரையணி நல்லூரில் திருஞான சம்பந்தருக்கும் கிடைத்தது. அங்கிருந்து பாடிய பாடல்

உண்ணாமலை உமையாளொடும் உடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம் முழுவதிரும்
அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வண்ணம் அறுமே

எனத் தொடங்கும் பதிகமாகும். இதுபோல மதுரையைக் காணும் போது திருஞானசம்பந்தர்

மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம் மடமானி
பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழலுருவன் பூதநா யகனால் வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாயாவதும் இதுவே

எனப் பாடிய பாடலாகும் . நால்வர் பாடல்களிலும் இத்தகைய பாடல்களை அறியலாம்.

திருஞானசம்பந்தர் தல வழிபாட்டிற்கு மேற்கொண்ட திருப்பயணத்தில் திருவிடை மருதூருக்கு அருகாமையில் வருகிறார். பக்தர்கள் திருவிடைமருதூர் தலம் இதுவெனக் கூறினர். இத்தலம் பற்றி முன்னமே ஆளுடைய பிள்ளையார் கேள்விப்பட்டுள்ளார். அவ்வாறறிந்ததில் நிகழும் நிகழ்ச்சியை மந்திரப் பாடலாக வழங்குகிறார்.

தடங்கொண்டதொர் தாமரைப் பொன்முடி தன்மேல்
குடங்கொண்டடி யார்குளிர் நீர்சுமந் தாட்டப்
படங்கொண்ட தொர் பாம்பரை யார்த்த பரமன்
இடங்கொண்டிருந் தான்றன் இடைமரு தீதோ

என வினவும் பாடலாகும்.

இப்பாடல் பெருவுடையராகிய (மகாலிங்கர்) இறைவனுக்கு அடியார்கள்காவிரியில் குளித்து திருக்குடங்களில் புனித நீர் எடுத்து வருகின்றனர். கருவறை சென்று தாமே தடங்கொண்டதோர் தாமரைப் பொன்முடி தன்மேல் குடங்கொண்டு குளிர் நீராட்டுகின்றனர். அத்தகைய பேரருட்சிறப்புமிக்க இறைவன் எழுந்தருளியுள்ள

திருத்தலம் இது தானா? என்று வினவுதாக அமைகிறது. தடம் என்பது பெருமையைக் குறிப்பது ஆகும். இறைவனது அழகிய செந்தாமரைக் காடனைய மேனியில் திகழும் திருமுடியின் செஞ்சடையின் பெருமை ஆற்றல்மிக்க கங்கையை அடங்கச் செய்யும் திறமுடையது அழிவு நிலையில் இருந்த சந்திரனை வளர்பிறையாக்கிய கருணைத்திறம் மிக்கது ஆதலின் தடங்கொண்டதோர் தாமரைப் பொன்முடி என்றார். அத்தகைய திருவடிமேல் கசிந்து முழுமுதலை விரிந்த படத்துடன் நஞ்சு நிறைந்த நாகம் அடங்கிட் கச்சாகக் கட்டியசைத் தாடும் அருட்கடல் எனக் கூறிப் போற்றுகிறார்.

தமிழகத்தின் தலைசிறந்த கோயில்களில் ஒன்றாகிய இடைமருது திருவையாறு போல போதொடுநிர் சுமதேத்தும் அடியவர்கள் திருமுன்புபிற்குச் சென்று திருமுடி மேல் பெருவுடையாராகலின் குடங்கொண்டு நீராட்டினர் என வேத நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமசிவாயவே என அருளியுள்ளார் இத் திருத்தலத்தில் பூச விழா சிறப்புடையது என்பதை ஆகமக் கருத்துக்களை அருளிய திருநாவுக்கரசராகிய அப்பரடிகள்.

பாசமொன்றில ராய்ப்பல பக்தர்கள்
வாச நாண்மலர் கொண்டடி வைகலும்
ஈசன் எம்பெரு மானிடை மருதினில்
பூசம் நாம்புகு தும்புன லாடவே

என்று களித்துக் கனிந்ததோர் காதற்கசிவோடு குளித்தாடிய சிறப்பை அருளியுள்ளார். திருஞானசம்பந்தரும்

பூசம்புகுந் தாடிப் பொலிந்தழ காய
ஈசன் உறைகின்ற இடைமரு தீதோ

என அருளிய பாடல்கள் மூலம் திருவிடைமருதில் பூசத் திருவிழாப் பொலிவுடையது என விவரிக்கப்படுகிறது.

சில நூற்றாண்டுகட்கு முன்பு வரை தமிழகத் திருக்கோயில்களில் பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றி நாக்கைக் கொண்டரன் நாமம் நவின்று கருவறை புகுந்து வழிபடும் மரபு இருந்தது. ஆலவாயாகிய மதுரையில் ஆடவரும் பெண்டிரும் மாதவரும் கருவறை சென்று வழிபட்டனர் என செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின்முறை வெல்லத் தோன்றிய ஞானத்தின் திருவுருவாகிய திருஞானசம்பந்தர் அருளியுள்ளார். அப்பாடல்

புண்ணிய வாணரும் மாதவரும் புகுந்துட னேத்தப் புனையிழையார்

அண்ணலின் பாடலொடுங் கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே – என்பதாகும்.

மேலும் சுந்தரமூர்த்தி சுவாமிகள்

அரைக்குஞ் சந்தனத் தோடகில் உந்தி ஐவ னஞ்சுமந் தென்கரைதன்மேல்
இரைக்குங் காவிரித் தென்கரை தன்மேல் இடைமரு துறை எந்தைபிரானை
உரைக்கும் ஊரன் ஒளிதிகழ் மாலை உள்ளத்தால் உகந்தேத்தவல் லார்கள்
நரைப்பு மூப்பொடு நடலையும் இன்றி நாதன் சேவடி நண்ணுவர்தாமே

என்று காவிரியின் சிறப்பினையும் இடைமருதில் எழுந்தருளியுள்ள இறைவனின் அருட்சிறப்பினையும் அருளியுள்ளார். திருவாசகத்தில் மாணிக்கவாசகர் இடைமருதுறையும் எந்தாய்ப் போற்றி என்று அருளியுள்ளார். திருமுறைப் பாடல்களில் காணும் இச்செய்திகள் அன்றைய முறையில் இருந்தவை. இன்றும் உலகு புகழ் திருத்தலமாகிய காசி முதலாகவுள்ள வடநாட்டுத் திருத்தலங்களில் பூவும் நீருமிட்டு ஆண் பெண் என்னும் இருபாலரும் வழிபட வாய்ப்பிருக்கிறது. ஒளிவளர் திருத்தலங்களாகிய பதினொரு சோதிலிங்கத் தலங்களிலும் கருவறை புகுந்து வழிபடும் வாய்ப்பு இருந்து வருகிறது. தென்னகத்திலும் தமிழர் வாழிடங்களிலும் ஆகமநெறியென்று திருத்தலங்களில் இறைவனை அனைத்து அன்பர்களும் தீண்டும் திருவுடையார்களாகும் வாய்ப்புகள் தடைப்படுத்தப்படுகின்றன. இடைக்காலத்து அயல்மொழி ஆட்சியாளர்களால் ஏற்படுத்தப்பட்ட இதனையே சம்பிரதாயம் என்று கூறுவது முறையாகுமா? சிவநெறியாளர்கள் சிந்தித்து மக்களுக்குத் தெளிவுபடுத்துவதுடன் சமய அமைப்புக்கள் செந்தமிழ் மரபு இதுவென எடுத்துக் கூறுவது சிவநெறி வளர்ச்சிக்கு உறுதுணை புரிவதாகும்.

நன்றி : திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்க சுவாமி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா மலர் 2006



உ

# திருமுறைச் சிறப்பு

சைவ சித்தாந்த வித்தகர்
**முரு.பழ. இரத்தினம் செட்டியார்**

முறையாகத் தீட்சை பெற்றுச் சிவவழிபாடு செய்வது ஒருமுறை. இதனைச் சித்தியார் கூறுகிறது. எல்லா மக்களும் தீட்சை பெற்றுச் சிவவழிபாட்டில் இறங்குவது இயலாது எனக் கருதிய ஞானசம்பந்தர். "தோடுடைய செவியன்" என்னும் திருப் பதிகத்தைப் பாடி அதனை ஓதினால் அஃது தீட்சைப் போறாகும் எனக் கூறி அருளியிருக்கிறார். இதனைச் சேக்கிழார், "மாநிலத்தோர்க்கு உரை சிறப்ப வாய் மலர்ந்தார்" எனக் கூறுகிறார். உரைசிறப்ப என்றால் உலகத்தார் வாசகத்துடன் பெற என்று பொருள். இதேபோல் அப்பர் சுவாமிகள் "கூற்றாயினவாறு" என்னும் பதிகத்தைத் தீட்சையாகப் பாடியுள்ளார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் "பித்தா பிறைசூடி" என்னும் பதிகத்தைப் பாடியுள்ளார்." தோடு, கூற்று, பித்தா இம்மூன்றும் பீடுடைத் தேசிகன் பேரருளாகும் எனப் பெரியோர்கள் கூறியுள்ளனர். இம்மூன்றும் குருவருள் பதிகங்களாகும். இம்மூன்று பதிகங்களில் ஏதேனும் ஒன்றை ஓதிவிட்டு மந்திர ஜபம் செய்தால் அது தீட்சை பெற்று மந்திரம் ஜபிப்பதற்குச் சமமாகும்.

திருமுறைகள் வேத மந்திரங்களுக்கு மேலானவையாகும். மறைக்கதவினைத் திறந்ததும், முதலை உண்ட பாலனை அழைத்ததும், எலும்பைப் பெண்ணாகச் செய்ததும் திருமுறை வாக்குகள் என்பதை யாவரும் அறிவர். வேத மந்திரங்கள் இவ்வளவு பெரிய அற்புதங்களைச் செய்யவில்லை. வேதாரணியத் திருக்கோயிலின் கதவைத் திறந்த சமயத்தில் சேக்கிழார் ஒரு பாடல் பாடி இருக்கிறார். "வேதத்திற்கும் திருமுறை வாக்கிற்கும் இடையீடு பெரிதாம் அன்றே" என அப்பாடலில் கூறியிருக்கிறார். 'இடையீடு' என்பது 'ஒற்றுமை' என சி.கே.எஸ் தம் பெரிய புராண உரையில் கூறியிருக்கிறார். ஆனால் அது பொருந்தாது. 'இடையீடு' என்பது இங்கே திருமுறை வாக்குகள் வேதமந்திரங்களைவிடச் சிறந்தவை என்பதையே உணர்த்துகிறது. வேதம் இறைவனால் அருளிச் செய்யப்பட்டது எனக் கூறுவர். திருமுறையை அடியார்கள் இறைவன் உள்நின்று உணர்த்த அருளிச் செய்தார்கள். வேதத்தை ஓதும் பொழுது இறைவன் வாக்கையே அவனுக்கு எடுத்து ஓதுகிறோம் என்றாகிறது. அதில் அவ்வளவு சிறப்பில்லை அடியார்களின் வாக்குகளை ஓதும் பொழுது இறைவனுக்குப் பேரானந்தம் உண்டாகிறது.

திருமுறைகளைப் பாடாமல் நேரடியாக இறைவனை வழிபடலாமா? பயன் உண்டா? என வினவலாம். வழிபடலாம். ஆனால் பயன் குறைவு, ஒருவன் ஒரு சிந்துப் பசுவைப் டாலர் 2000 கொடுத்து வாங்கி வந்தான். அஃது அதிக அளவில் பால் கறக்கக் கூடியது. முதல் நாள் பால் கறக்கச் சென்ற பொழுது பால் வரவில்லை. உதைதான் கிடைத்தது. ஏன் தெரியுமா? கன்றுக் குட்டியைப் பால் குடிக்கவிடாமல் அவன் நேரடியாகப் பால் கறக்க முயன்றான். நேரடியாகச் சென்று கறந்தால் பால் கிடைக்காது. கன்றின் வாயிலாகப் பால் சுரக்கச் செய்து அப்புறம்தான் பால் கறக்க வேண்டும். இறைவனின் அடியார்கள் அவனின் குழந்தைகளாகக் கருதப்படுவார்கள். "சிவனார் மகனார்" என ஞானசம்பந்தரைச் சேக்கிழார் சொல்கிறார். இறைவனின் குழந்தைகளான அடியார்களின் வாக்குகளை முதலில்ஓதினால் இறைவனின் திருவருள் எளிதில் சுரக்கும். திருமுறைப் பாடல்களை அருளாளர்கள் தமக்காகப் பாடவில்லை. அவர்கள் ஞானம் பெற்ற பின்னரே பாடியிருக்கிறார்கள். ஆகவே அவை நமக்காகப் பாடப் பெற்றவையாகும். அவற்றை ஓதிப் பயன் பெற வேண்டுவது நம் கடமை.

ஞானசம்பந்தரின் திருப்பதிகங்களில் உள்ள கடைசிப் பாட்டு "திருக்கடைக்காப்பு" என்று சொல்லப்படும். அதில் அந்தப் பதிகங்களை ஓதினால் என்ன பயன்கிடைக்கும்? என்பதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். சுந்தரரும் இவ்வாறு தம் இறுதிப் பாட்டில் கூறியிருக்கிறார். இப்பதிகங்களை ஓதுவதால் ஊழ்வினையின் பிடிப்பில் இருந்து நாம் விடுபடலாம் என இருவரும் கூறியுள்ளனர். ஆகவே திருமுறைகளை ஓதுவதன் மூலம் இம்மைப் பயன் மறுமைப் பயன் அம்மைப் பயன் ஆகிய மூன்றையும் பெறலாம்.

திருவாசகம் நெஞ்சை உருக்கும் தன்மை வாய்ந்தது. திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ஆகிய இரண்டும் நம் உள்ளத்தை ஒருமைப்படுத்தும் திறம் வாய்ந்தவையாகும். பெரிய புராணம் அடியார்களின் வரலாற்றை அருமையாக எடுத்துக் கூறுகின்றது. பதினோராம் திருமுறையில் உள்ள காரைக்கால் அம்மையார் திருவந்தாதி நம்மை உயர்ந்த நிலைக்கு இட்டுச் செல்லும் ஆற்றல் உள்ளது. இவ்வாறு பன்னிரு திருமுறைகளும் நம்மை உய்விப்பதற்காகவே தோன்றியுள்ளன.

திருமுறைகளை நாடோறும் நம் வழிபாட்டில் ஓத வேண்டும். படுக்கும் பொழுதும் காலையில் எழுந்தவுடனும் அவற்றில் உள்ள ஓரிரு பாடல் களையாவது சொல்லப் பழகிக் கொள்ள வேண்டும். திருமுறைகள் நமக்குக் கிடைத்த தமிழ்க் கருவூலங்கள் ஆகும். அவற்றைப் பயன்படுத்தி உய்ய வேண்டுவது நம் இன்றியமையாத கடமையாகும்.

நன்றி : திருமுறை மாநாடு சிங்கப்பூர் வெள்ளிவிழா வெளியீடு 2005

உ

# உருத்திராக்கம்

திருமுதுகுன்றம் அருள்திரு குமார தேவர் சுவாமிகள் திருமடம், 23-ஆவது குருமகா
சன்னிதானம் சீர்வளர்சீர் கல்யாண சுந்தர சிவப்பிரகாச பரமாச்சார்ய சுவாமிகள்
குமாரதேவர் மடம், விருத்தாச்சலம் - 606 001. கடலூர் மாவட்டம்.

சிவக்கண்மணி என்று போற்றப்படும் உருத்தராட்ச மணிகளின் பெருமைகளை அருள்திரு திருவாய் ஞானக்கூத்தர் திருவாய் மலர்ந்தருளிய விருத்தாசல தலபுராணத்தின் பதினான்காவது சருக்கத்தில் உள்ளது. அச்செய்திகள் அடிப்படையில் கருத்துகளைத் தெளிவுபடுத்தத் திருவருள் கூட்டி வைத்துள்ளது. அக்கருத்துக்களை இக்கட்டுரையில் காண்போம்.

திருபுராதிபர் என்ற அசுரர்களால் திருமால், நான்முகன் முதலான எல்லாத் தேவர்களும் துன்பம் அடைந்தனர். அதனால் அவர்கள் மனவலிமை இழந்து துன்பம் அடைந்து பரமசிவனைச் சிந்தித்து ஆயிரம் வருடங்கள் தவத்தைச் செய்தார்கள். அவர்கள் செய்த தவவலிமையினால் உறுதிப்பாட்டினால் பரமசிவன் இடபவாகனத்தின்மேல் உமையவளோடு எழுந்தருளிக் காட்சி கொடுத்தார். திருமால், நான்முகன் முதலான தேவர்கள் படுகின்ற துன்பத்தைக் கண்ட சிவபெருமானுடைய மூன்று கண்களிலும் இருந்து நீர்த்துளிகள் விழுந்தன.

சிவபெருமானின் மூன்று கண்களிலிருந்து உண்டான நீர்த்துளிகளே உருத்திராட்ச மணிகளாகும். சூரிய நேத்திரத்திலுண்டான மணி பன்னிரண்டு பேதமுடையது. அதற்கு நிறம் செம்மையும் பொன்மையும் ஆகும். சந்திர நேத்திரத்தில் தோன்றிய மணி பதினாறு பேதமுடையது அதற்கு நிறம் வெண்மை, அக்கினி நேரத்தில் உண்டான மணி பத்து பேதமுடையது அதற்கு நிறம் கருமை .

வேத அந்தணர்களுக்குரியன வெண்ணிற மணிகள், சத்திரியர்களுக்குரியது செந்நிறமணிகள் வணிகர்களுக்குரிமை பொன்னிற மணிகள் சூத்திரர்களுக்குரியன கருநிறமணிகள்.

உத்திராட்ச மணிகள் காய்க்கின்ற மரங்கள் முப்பத்தெட்டு வகைகளாகும். ஒருமுக இருமுக வடிவமணிகள் சிவ வடிவமாகும். ஒருமுக மணிகள் அணிந்தால் அந்தணனைக் கொன்ற பாவமும் இருமுக மணிகள் அணிந்தால் பசுவைக்கொன்ற பாவமும் நீங்கும்.

மூன்று முக மணிகள் அக்கினி வடிவமாகும் மூன்று முகமணிகள் அணிந்தால் பல பெண்களைக் கொன்ற பாவங்கள் நீங்கும்.

நான்கு முகமுள்ள மணிகள் பிரம்ம தேவருடைய வடிவம் ஆகும். அந்த மணிகளை அணிந்தால் மனிதர்களைத் துன்பம் செய்த பாவங்கள் நீங்கும். ஐந்துமுக மணிகள் காலாக்கினி வடிவம். அதை அணிந்தால் உணவில் ஏற்படும் தீங்குகள் நீங்கும். ஆறுமுக அணிகளை அணிந்தால் பிரம்மகத்தி பாதகங்கள் நீங்கும். ஏழு முகமுள்ள மணிகள் ஆதிகேச வடிவமாகும். அந்த மணிகளை அணிந்தால் பொன்களவினால் உண்டான பாதகங்கள் நீங்கும்.

எட்டு முகமுள்ள மணிகள் கணபதி வடிவம். அந்த மணிகளை அணிந்தால் குருதாரத்தைத் தீண்டின பழிநீங்கும். ஒன்பது முகமுள்ள மணிகள் பைரவர் வடிவம். அதை அணிந்தால் சிவ சாயுச்சியமும் விவேகமும் உண்டாகும்.

ஒன்பது முக உத்திராட்சத்தை இடக்கரத்தில் மாலையாகக் கட்டி அணிந்தால் ஒரு கோடி வேத மறையோர்களைக் கொன்ற பாவங்கள் நீங்கும். பத்து முக மணிகள் திருமால் வடிவம். அதை அணிந்தால் பிசாசு வாதை, மிருக வாதைகள் நீங்கும்.

பதினொரு முகமுள்ள மணிகள் ஏகதாச ருத்திரர் வடிவமாகும். அதை அணிந்தால் அதிக யாகம் செய்த பலன் உண்டாகும் பன்னிரண்டு முகமுள்ள மணிகள் சூரியர் வடிவம் அதை அணிந்தால் அசுவமேதயாகத்தின் பலன் உண்டாகிக் கொலை செய்த பாவங்கள் நீங்கும். பன்னிருமுக மணிகளை அணிந்தால் தீங்கு செய்யும் மிருகங்கள் ஓடும். விரும்பிய பலன் கிடைக்கும்.

பதின்மூன்று முகமுள்ள மணிகள் சுப்பிரமணியர் வடிவம். அந்த மணிகளை அணிந்தால் எண்வகைக் சித்திகள் உண்டாகும். மேலும் அப்பா, அம்மா சுற்றத்தார் குழந்தைகள் தம்பி, தமையன், பெண்,கரு ஆகியோரைக் கொலை செய்த பாதங்கள் எல்லாம் நீங்கும்.

பதின்மூன்று முகங்களுக்கு மேல் மணிகள்இல்லை முடிவில் ஒரு மணியும், தலையில் மாலையாக முப்பத்தாறு மணிகளும், கழுத்தில் முப்பத்திரண்டும், மார்பில் நூற்றெட்டும், கைகளின் மணிக்கட்டுகளில் தனித்தனியாக பன்னிரண்டு மணிகளும் காதுகளின் அவ்வாறு மணிகளும் அணியலாம். செவிக்குத் தனத்தனி ஒவ்வொன்றும் புயத்தில் தனித்தனி படிதனாறும் மார்பில் ஐம்பதும் அணிவதுண்டு.

மேற்கூறியபடி அணிந்தவர்களுக்கு ஆயிரம் யாகம் செய்த பலன் உண்டாகும். முக்காலத்தில் ஓர் உத்திராட்சப் பொதியைச் சுமந்த ஒரு கழுதையானது ஆரணியத்தில் சென்று விந்திய மலையைச் சேர்ந்து உயிரை விட்டது. அது கையலாயமலையில் நூறு கற்பகால முடிவு நிலைபெற வாழ்ந்திருந்தது. வெள்ளி, பொன், முத்து, பவளம் முதலானவற்றை இடையிடையே இட்டு மணிகளின் முகத்தோடு முகம் பொருந்தக் கோத்து அணிவது நன்றாகும். எந்தக் குலத்தில் பிறந்தவர்களும் எப்போதும் உருத்திராக்கமணி அணியலாம். பஞ்சாட்சரத்தை தியானம் செய்து அணிதல் நன்மை பெருகும். புண்ணியங்களைச் செய்கின்ற காலத்திலும் சிவபூசை நியமங்களைச் செய்கின்ற காலத்திலும் உத்திராட்ச மணிகளை அணிந்தால் நன்மை கிடைக்கும். ஞானக் கண்பெறுவது உண்மையாகும்.

உண்மையான தவத்தை உடைய பெரியோர்கள் எப்போதுமே உருத்திராட்சத்தை அணிந்திருப்பார்கள். ஒருவர் தம் ஆயுள் காலத்தில் ஆயிரம் மணிகள் அணிந்திருந்தால் அவரது பெருமை அளவிட்டுச் சொல்லமுடியாது. கோத்த உருத்திராட்ச மணிகளைத் தலையிலும் காதுகளிலும் கண்டத்திலும் மார்பிலும் கைகளிலும் தோள்களிலும் மணிக்கட்டுகளிலும் அணிந்தால் மூன்று கண்களை உடைய சிவவடிவம் ஆவார்கள்.

பஞ்சாட்சரத் தியானம் செய்து உருத்திராட்ச மாலையைஅணிந்தவர்களிடம் விருப்போடு சிவன் இருப்பான் அவர்கள் சென்ற இடம் எல்லாம் மோட்ச உலகமாகும். அவர்களை வழிபட்டவர்கள் தேவர்கள் ஆவார்கள்.

நன்றி ! – திருவிடைமதூர் அருள்மிகு மாகலிங்கசுவாமி திருக்கோயில்
திருக்குட நன்னீராட்டு விழா மலர் – 2006.

# திருநீறு

ஆறுமுக நாவலர்

1. சிவபெருமானை வழிபடுஞ் சமயத்துக்குப் பெயர் யாது?

   சைவ சமயம்.

2. சைவசமயிகள் சரீரத்தில் அவசியமாகத் தரிக்க வேண்டிய அடையாளம் யாது?

   விபூதி

3. விபூதியாவது யாது?

   பசுவின் சாணத்தை அக்கினியினாலே சுடுதலால் உண்டாகிய திருநீறு.

4. எந்த நிற விபூதி தரிக்கத் தக்கது?

   வெள்ளை நிற விபூதி

5. விபூதியை எதில் எடுத்துவைத்துக் கொண்டு தரித்தல் வேண்டும்?

   பட்டுப் பையிலேனும் சம்புடத்திலேனும் எடுத்து வைத்துக் கொண்டு தரித்தல் வேண்டும்.

6. விபூதியை எந்தத் திக்குமுகமாக இருந்து கொண்டு தரித்தல் வேண்டும்?

   வடக்கு முகமாகவேனும் கிழக்கு முகமாகவேனும் இருந்து கொண்டு தரித்தல் வேண்டும்.

7. விபூதியை எப்படித் தரித்தல் வேண்டும்?

   நிலத்தில் சிந்தாவண்ணம் அண்ணாந்து சிவசிவ என்று சொல்லி வலக்கையின் நடுவிரல் மூன்றினாலும் நெற்றியிலே தரித்தல் வேண்டும்.

8. விபூதி நிலத்தில் சிந்தினால் யாது செய்தல் வேண்டும்?

   சிந்திய விபூதியை எடுத்துவிட்டு, அந்த இடத்தைச் சுத்தம் செய்தல் வேண்டும்.

9. எக்காலங்களிலே விபூதி அவசியமாகத் தரித்துக் கொள்ள வேண்டும் ?

   நித்திரை செய்யப் போகும்போதும், நித்திரை விட்டெழுந்தவுடனும், தந்தசுத்தி செய்தவுடனும் சூரியன் உதிக்கும்போதும், அத்தமிக்கும்போதும், ஸ்நானஞ் செய்தவுடனும், போசனத்துக்குப் போகும் போதும், போஜனஞ் செய்தபின்னும் விபூதி அவசியமாகத் தரித்துக் கொள்ளல் வேண்டும்.

10. ஆசாரியபராயினும் சிவனடியாராயினும் விபூதி தந்தால் எப்படி வாங்கல் வேண்டும்?

    மூன்று தரமாயினும் ஐந்துதரமாயினும் நமஸ்கரித்து எழுந்து கும்பிட்டு இரண்டு கைகளையும் நீட்டி வாங்கல் வேண்டும்.

11. விபூதி வாங்கித் தரித்துக் கொண்ட பின் யாது செய்தல் வேண்டும்?

    முன்போல் மீண்டும் நமஸ்கரித்தல் வேண்டும்.

12. சுவாமி முன்னும் குரு முன்னும் சிவனடியார் முன்னும் எப்படி நின்று விபூதி தரித்தல் வேண்டும்?

    முகத்தை திருப்பி நின்று தரித்தல் வேண்டும்

13. விபூதி தாரணம் எத்தனை வகைப்படும்

உத்தூளம், திருபுண்டரம் என இரண்டு வகைப்படும்.

(உத்தூளனம் நீர் விட்டுக் குழையாது பூசுதல், திரிபுண்டரம் நீரில் குழைத்து மூன்று வரியாகப் பூசும் மூன்று குறிகள்)

14. திரிபுண்டரம் தரிக்கதக்க தானங்கள் யாவை?

சிரம், நெற்றி, மார்பு, கொப்பூழ், முழந்தாள்கள், இரண்டு புயங்கள் இரண்டு முழங்கைகள் மணிக்கட்டுகள் இரண்டு, விலாப் புறம் இரண்டு, முதுகு, கழுத்து என்னும் பதினாறு தானங்களாம்.

இவைகளுள் விலாப்புறம் இரண்டையும் நீக்கிக் காதுகள் இரண்டையுங் கொள்வதும் உண்டு. முழங்கை களையும் மணிக்கட்டுகளையும் நீக்கிப் பன்னிரெண்டு தானங்கொள்வதும் உண்டு.

15. திரிபுண்டரந் தரிக்குமிடத்து நெற்றியில் எவ்வளவு நீளந் தரித்தல் வேண்டும் ?

இரண்டு கடைப்புருவ எல்லைவரையுந் தரித்தல் வேண்டும். அதிற் கூடினாலுங் குறைந்த்ாலுங் குற்றமாம்.

16. மார்பிலும் புயங்களிலும் எவ்வளவு நீளந் தரித்தல் வேண்டும்?

அவ்வாறங்குல நீளந் தரித்தல் வேண்டும்.

17. மற்றத் தானங்களில் எவ்வளவு நீளந் தரித்தல் வேண்டும்?

ஒவ்வோரங்குல நீளந் தரித்தல் வேண்டும்.

18. மூன்று குறிகளின் இடைவெளி எவ்வளவினதாய் இருத்தல் வேண்டும்?

ஒவ்வோரங்குல அளவினதாய் இருத்தல் வேண்டும். ஒன்றை ஒன்று தீண்டலாகாது.

நன்றி : ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்குட முழுக்கு நன்னீராட்டு விழா மலர் 2000. ஏர்ணாகுளம்.



# ஒன்று அவன் தானே

பாலகவி வயிநாகரம்
திரு. வே. இராமநாதன் செட்டியார் (ஸ்ரீ தத்புருஷதேசிகர்)
தேவகோட்டை.

கடவுள் ஒருவரே என்பது எல்லா மதவாதிகளாலும் ஏற்றுக் கொள்ளப் பெறுவது. குடியாட்சி நாட்டில் அப்பொறுப்பை மேற்கொண்ட தலைவனோ முடியாட்சி நாட்டில் அந்நாட்டை ஆளும் அரசனோ பலராக இருக்கமுடியாது. ஆனால் அரசாங்க அலுவல்கள் பல அதிகாரிகளால் மேற்கொள்ளப்பெறும். அதுபோலவே முதற்பொருளாகிய கடவுள் ஒருவராயிருக்க, அவரது ஆணையினைப்பெற்ற தெய்வங்கள் பலவாயிருந்து, அவரது கட்டளைப்படி உயிர்கள் போகங்களை உண்பதற்கு உதவி செய்து கொண்டிருக்கின்றன. இவ்வுண்மை வேதாகாமங்களில் கண்ட முடிவானது. இதனை உணரமாட்டாதார், வைதீக நெறிபற்றி அமைந்த திருக்கோயில்களில் இருக்கும் தெய்வத் திருவுருவங்கள் பலவற்றையும், முதற்பெருங் கடவுளின் உருவத்திருமேனிகள் சிலவற்றையும் கண்டு, "பல கடவுளரை வழிபடுபவர் நாம்" என்று சொல்லித் தங்களது அறியாமையை வெளிப்படுத்திக் கொள்கின்றனர். இது, அரசனது ஆணையைப் பெற்று அரசாங்க அலுவல்களில் ஈடுபட்டுள்ள அனைவரையும் அரசனென்றே கருதுவதையும் அரசன் அணிந்து கொள்ளும் ஆடையணிகலன்களின் வேறுபாடுபற்றி, அவனை ஒருவனல்லன் என்று துணிவதையும் ஒக்கும்.

அரும்பொருள்கள் பலவற்றைக் தமிழுலகத்திற்கு வழங்கத் திருமூல தேவநாயனார், திருக்கயிலாய பரம்பரையிலிருந்து வந்தார். ஒப்புயர்வற்ற பரம்பொருளின் பேரருளைக் குறைவறப்பெற்ற அவர், தவம்கிடந்து வெளிப்படுத்திய முதலுண்மை,

ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினு நான்குணர்ந் தான் ஐந்து
வென்றனன் ஆறு விரித்தனன் ஏழுஉம்பர்ச்
சென்றனன் தான்இருந்தான் உணர்ந்து எட்டே.

என்னும் திருப்பாடலாகத் திருமந்திரத்தில் முதலிடம் பெற்று விளங்குகின்றது. மனிதர்களாகப் பிறந்த அனைவரும், கடவுளுண்மையை ஏற்றுக் கொள்ளுகின்றவர்கள் என்று சொல்வதற்கில்லை. "கடவுள் உண்டு" என்ற நிச்சயபுத்தி வருவதற்கு, மனித ராகவே சில பிறவிகள் எடுக்கவேண்டும் என்று மணிவாசகப் பெருந்தகையார் கூறுவர். கடவுள் நிச்சயம் ஏற்பட்ட பின்னரும் அக்கடவுளாவார் யார் என்பதில் தெளிவு உண்டாக, மேலும் பல பிறவிகள் எடுத்தேயாகவேண்டும்.

வைதீக நெறியாளரனைவருக்கும் வேதம் பிரமாண நூல். வேதத்தில் கடவுளின் இலக்கணம் விரிவாகப் பேசப்பெற்று, அவ்விலக்கணங்களெல்லாம் அமைந்த

கடவுளாவார் யார் என்பது சுருக்கமாகவும், குறிப்பாகவும் பேசப்பெற்றுள்ளது. வேதாந்தமாகிய உபநிடதங்களையும் சித்தாந்தமாகிய சிவாகமங்களையும் உணர்ந்தவர், முழுமுதற் கடவுள் உண்மையில், தெளிவுடையராயிருப்பர். அவ்வேதாந்த சித்தாந்தங்களின் சாரமாயிருப்பவை, செந்தமிழ்த் திருமுறைகளும் மெய்கண்ட சாத்திரங்களுமாம். திருமுறைகளில் ஒன்றான திருமந்திரம் வேதத்தைப்போல, முதலில் கடவுள் இலக்கணத்தை உணர்த்த முற்பட்டு, மேற்கண்ட திருப்பாடலை நமக்கு வழங்கியுள்ளது.

உபநிடதம் "ஏகம் ஏவ" என்று இறைவனைக் குறித்துக் கூறும். அதனைத் திருமூலர் "ஒன்றவன் தானே" என்று அருளினர். வாக்கு மனாதீத கோசரனாய், ஆன்ம போதத்திற்கு நெடுந்தொலைவில் இருப்பவன் ஆண்டவன் என்பதைக் குறிக்கச் சேய்மைச் சுட்டுச் சொல்லாகிய 'அவன்' என்பதை ஆசிரியர் இங்கே பயன்படுத்திக் கொண்டார். சுட்டிக்காட்டி உணர்த்த முடியாதவற்றை எல்லாம் இங்ஙனம் சேய்மைச் சுட்டால் அறிவிப்பது நமது பழைய மரபு. ஆளுடைய பிள்ளையார், சிவஞானம் பெற்ற நிலை, அறிந்தறிவிக்க முடியாத பெருநிலையாகும். அதனை அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் சுவாமிகள் "தவ முதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்" என்று அருளிச் செய்திருப்பது இங்கே நினைவு கூர்தற்குரியது.

கடவுள், உயிர்களோடு கலந்து அவையேயாயும், அவற்றிற்கு அப்பாற்பட்டுத் தானேயாயும், அவற்றின் தொழிற்பாட்டுக்குக் காரணமாய் அவற்றோடு உடனாயுமிருப்பவர். இம் மூன்று நிலைகளில் எல்லாவற்றையும் கடந்து அப்பாற்பட்டு இருக்கும் நிலையே அவனது தன்னிலையாகும். இந்த நிலையிலேயே அவர் "ஏகன்" என்று பேசப்பெறுகிறார். இந்தத் "தானேயானதன்மையில் அக்கடவுள் ஒருவராகவே உள்ளார்" என்பதனோடு, கடவுளுடன் இணையாக வைத்துப் பேச இரண்டாவது ஒரு பொருளில்லை என்ற உண்மையும், "ஒன்று அவன் தானே" என்பதிலிருந்து உணர்த்தப் பெறுகின்றது. "ஒருவனாய் உலகத்தை நின்ற நாளோ" என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கும், "ஒருவன் என்னும் ஒருவன் காண்க" என்ற மணிவாசகமும் இக்கருத்துப் பற்றி எழுந்தனவேயாம்.

தன்னிலையில் ஒருவராயிருக்கின்ற கடவுள், ஆன்மாக்கள் பொருட்டாக அநேகராகி, அவைகளெல்லாம் அவருக்கு அடிமையாய் இருக்க, அவர் அவைகளுக்கு ஆண்டவனாகி இறைவனாகிறார். இதனைச் சிவபுராணம் "ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க" என்ற வரியில் வைத்துக் கூறும்.

எல்லாவற்றையும் கடந்து நின்ற கடவுள், உயர்களை நோக்கி அவற்றை உலகத்தோடு தொடர்புபடுத்திக் கருதி, அவ்விரண்டனோடு தானும் கலக்க முற்படும் வேளையில் சிவம் சத்தி என்னும் இரண்டு பொருள்களாக எழுந்தருளி இருப்பார். உயிர்களுக்கு அவ்வவற்றின் நல்வினை, தீவினைகளுக்கேற்ப, உடம்பு, உட்கருவி, உலகம், நுகர்ச்சி ஆகியவற்றை இறைவன் கூட்டுகின்றான். பாசக் சேர்க்கை, சுதந்திரமின்மை முதலியவற்றால் அறிவுடைய பொருளாகிய உயிர், அறிவில்

பொருளைப் போலச் செயலற்றுக்கிடந்த வேளையில், அதன்பால் ஆண்டவன் கருணைகொண்டு உதவி செய்யத் தொடங்கி இடையீடின்றி எக்காலமும் அதனைச் செய்தே வருகின்றான். இந்த இறைவனது பெருங்கருணையே சத்தி என்று சொல்லப்பெறுவது.

"அருளது சக்தி யாகும் அரன்தனக்கு அருளையின்றித்

தெருள்சிவ மில்லை அந்தச் சிவமின்றிச் சக்தி இல்லை"

என்று சிவஞானசித்தியார் இறைவனது ஐந்தொழில்களுள், முதற்றொழிலாகிய படைத்தலைச் செய்ய அவன் முற்படும்பொழுது, அவனும் அவனது அருளும் என இரண்டாகப் பிரிந்து அமையும் நிலை அவனுக்கு உண்டாகின்றது. சிவமும் சக்தியும் நெருப்பும் சூடும் போலக் குண குணித்தன்மையால் இரண்டாக உரைக்கப்பெற்றன, வேனும், பிரிக்கமுடியாத ஒற்றமை பற்றி ஒன்றாகவே கொள்ளவேண்டியனவாகும்.

இத்திருமந்திரத்தில் 'ஒன்றவன் தானே' என்பது சிவபெருமானது சொரூப நிலை. "இரண்டவன் இன்னருள்" என்பது முதலியவை அவனது தடத்த நிலை.

கடவுள் செய்கின்ற ஐந்தொழில்களுள் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றும் உடல் பற்றியன. மறைத்தல், அருளல் ஆகிய இரண்டும் உயிரைப் பற்றியன. காணப்பெறுகின்ற இந்தத் தூல உடலுக்குள்ளே, காணப்பெறாத சூக்கும உடல்கள் நான்கு உள்ளன. அவற்றிற்கு உள்ளே உயிர், உடலை விட்டு உய்தி பெறவேண்டிய உயிர், உடலைவைத்தே உய்திக்குரிய வழியைத் தேடிக் கொள்ள வேண்டும். இதனாலேயே நமது திருமூலதேவ நாயனார்.

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்

திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்"

என்றருளிச் செய்தார். உயிருய்ய உடம்பு சாதனமாயிருப்பது பற்றி, உயிருக்குரிய மறைத்தல், அருளல்களை உடம்புக்குரிய தொழில்களாகிய காத்தல், அழித்தல்களுடன் அடக்கிச் சொல்வதும் உண்டு. முத்தொழில்களுள் அடங்கும் ஐந்தொழில்கள், இறைவன் நேரே செய்வனவும், பிறரைக்கொண்டு செய்விப்பனவுமென இரண்டு முறைகளில் அமைவன. முன்னது உயர்ந்த தகுதியில் உள்ள ஆன்மாக்கள் பொருட்டாக நிகழும், பின்னது தாழ்ந்த தகுதியிலிருப்பவர் பொருட்டாக நடைபெறும். உயர்ந்தோர் சுத்தமாயா புவனவாசிகள் என்றும், தாழ்ந்தோர் அசுத்த மாயா புவனவாசிகள் என்றும் நூல்கள் கூறுகின்றன.

அசுத்த மாயாபுவனவாசிகளுக்குப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் இறைவன் நேரே செய்வதில்லை. எனினும் பிரமன், திருமால் உருத்திரன் ஆகியவர்களுக்கு அவ்விறைவன் வழங்கிய அதிகாரமே அத்தொழில்களை அவர்கள் செய்யும் தகுதியில் அவர்களை வைத்திருக்கிறது. தானே செய்வனவும், தனது அதிகாரம் பெற்றவர்களைக் கொண்டு செய்விப்பனவுமாகிய இவ்விருவகை

முத்தொழில்களிலும் இவன் ஒருவனே நின்று விளங்கி அருள்புரிகின்றான். இதனையே "நின்றனன் மூன்றினுள்" என்று திருமந்திரம் கூறியது. மேலே கூறப்பெற்ற மூன்று பொருள்களும் இந்த வரிசையிலேயே வைத்துத் திருவெழு கூற்றிருக்கையில் "ஒருருவாயினை மானாங்காரத், தீரியல் பாயொரு விண்முதல் பூதலம், ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும், படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை'' என்று திருஞானசம்பந்த சுவாமிகளால் திருவாய் மலர்ந்தருளப் பெற்றுள்ளன.

மேலும் "நின்றனன் மூன்றினுள் என்பதற்கு" அருவம், அருவுருவம், உருவம் ஆகியவற்றில் சிவபெருமான் எழுந்தருளியிருந்து உயிர்களுக்கு அருள்புரிகின்றான் என்றும் கொள்ளலாம்.

சிவபெருமானாகிய முதற்கடவுளை விசுவாதிகன் என்றும், விசுவகாரணன் என்றும், விசுவாந்தரியாமி என்றும் விசுவரூபி என்றும் வேதங்கள் கூறுகின்றன. பொருள்கள் எல்லாவற்றிலும் கலந்தும், அவையனைத்தையும் கடந்தும் விளங்குகின்ற இறைவனது சொரூப, தடத்த நிலைகள் இங்ஙனம் ஈரிரண்டு நிலைகளில் உள்ளன என்பதை

உலகினை இறந்து நின்றது அரனுரு என்ப தோரார்
உலகவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் என்ப தோரார்
உலகினுக்கு உயிரும் ஆகி உலகுமாய் நின்ற தோரார்
உலகினில் ஒருவன் என்பர் உருவினை உணராரெல்லாம்

என்று சிவஞானசித்தியாரும் அறிவிக்கின்றது. இதனையே ஆசிரியர் திருமூல தேவநாயனார் "நான்கு உணர்ந்தான்" என்று அருளினார், உணர்ந்தான் என்னும் தன்வினை முடிவு, உணரப்பெற்றான் என்னும் பிறவினை முடிவுப் பொருளையுடையது. மேலும் "நான்குணர்ந்தான்" என்பதற்கு இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களையும் உணர்ந்தவன் என்று பொருள் கொள்வாரும் உண்டு. சிவபெருமானும் உயிர்களும் அறிவு உடையனவாயினும் சிவபெருமானது அறிவு, யாரும் அறிவிக்காது தானே விளங்குவது; உயிர்களின் அறிவு பிறர் அறிவித்தாலன்றி ஒன்றையும் அறியமுடியாதது. இங்கே சிவபெருமான் யாரும் உணர்த்த உணராது தானே உணர்ந்தவன் என்பதை ஆசிரியர் அறிவுறுத்துகிறார்.

மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறிகளையும் அடக்கி ஆள்பவர் பெரியோர். இவர்களிடத்தும்கூட அப்பொறிகள் தத்தம் சேட்டைகளை இடமறிந்து செய்துகொண்டுதான் இருக்கும். அங்ஙனம் செய்யுங்காலத்து அவற்றிற்கு அடிமைப்பட்டு உள்ளத்தை அவற்றின் வழியே செல்லவிடாது, அவர் தடுத்து நிறுத்துவர். செயற்கையால் பொறி புலன்களை அடக்கி ஆளும் சிவஞானிகளுக்கு மேலாகச் சிவபெருமான், இயற்கையாகவே புலன்களை வென்றவராயிருக்கிறார். பொறிகள் புறப்பொருள்களின்பாற் செல்லக்கண்டு அங்ஙனம் செல்லவிடாது அடக்குதல் இறைவன் தன்மையன்று. பொறிகள் பொருள்களின்பால் செல்லாதிருத்தலே அவன்பாலுள்ளது என்பதை உணர்த்த ''ஐந்து வென்றனன்'' என்று உணர்த்தியருளினார்.

சித்தும் சடமுமாகக் காணப்பெறுகிற எல்லாப் பொருள்களிலும் கலந்திருக்கின்ற இறைவன், எல்லாத் தெய்வங்களுமாயிருந்து உயிர்களுக்குப் போக போக்கியங்களை வழங்கி வருகின்றான். இறைவனது திருவருள் உயிர்களுக்கு ஐந்தொழில்களின் வாயிலாகவே வந்து அமைகின்றது. அவ்வைந் தொழில்களையும் ஆண்டவன் பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய திருவுருவங்களில் இருந்தும், அத்தொழில் நிகழ்ச்சிக்கு மூலமான பிரணவ வடிவ விநாயகப்பெருமான் திருவுருவத்திலிருந்தும் செய்கின்றான் என்பது சாத்திர முடிவு. நமது உடம்பினுள்ளே இவ்வறுவகைத் திருவுருவங்களையும் கொண்டு, ஆண்டவன் எழுந்தருளி இருக்கின்ற இடங்களை ஆறு ஆதாரங்கள் என்று கூறுவர். அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரதம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பன.

சதாசிவத்துக்கு மேற்பட்டுப் பரசிவமாகத் துவாத சாந்தமாகிய ஏழாமிடத்தில் விளங்கிக் கொண்டிருக்கின்ற இவ்விறைவனே, மற்றை ஆறிடங்களிலும் வெவ்வேறு திருவுருவங்களையுடையவனாய் எழுந்தருளியிருந்து அநுக்கிரகம் செய்கிறான் என்னும் உண்மை "ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச் சென்றனன்" என்ற பகுதியில் அறிவிக்கப் பெறுகிறது.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், இயமானன் என்னும் எட்டுப் பொருள்களும் இறைவனது வடிவங்கள் என்று சொல்லப்பெறும் இவற்றை அட்ட மூர்த்தங்கள் என்பர். "மேவ, வரும் அட்டமூர்த்தமாம் வாழ்வே" என்பது கந்தர்கலிவெண்பா. உருவாயும், அருவுருவமாயும், அருவமாயும் அவற்றிற்கு அப்பாற்பட்டும் இருக்கின்ற ஆண்டவன், அந்நிலைகளைத் தன்பாற்கொண்ட அட்ட மூர்த்தங்களின் வடிவமாயிருக்கிறான் என்று உணர்ந்து கூறினர் ஆன்றோர்:

"இருநிலனாயத் தீயாகி நீரும் ஆகி
இயமானாய் எரியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாய் அட்ட மூர்த்தி யாகி"
என்பது அப்பரடிகள் திருவாக்கு.

பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைந்திருக்கின்ற நிலை, உயர்ந்த ஞானிகளுக்கே புலப்படும். அப்பெருஞானிகளே, அட்டமூர்த்தங்களிலும் ஆண்டவனது கலப்புண்மையை நன்குணர்வர். இவ்வட்ட மூர்த்தங்களின் சொரூபமாக அவனை உணரப் பெற்றவர்களுக்கு அவன் உள்ளே இருந்து அருள்புரிவான் என்பதை "தான் எட்டு உணர்ந்திருந்தான்" என்று இறுதியில் அறிவுறுத்தியருளினார் நமது ஞானாசிரியர்.

இங்ஙனம் ஒன்று முதல் எட்டுவரை எண்ணலங்காரம் பொருந்தச் செய்யுளை அமைத்து, இறைவனது சொரூபம், தடத்தம் என்னும் இருபெரும் நிலைகளையும் தமது திருமந்திரமாலை முதற் செய்யுளின் மூலமாக நமக்கு வழங்கிய ஆசிரியர் திருமூலதேவ நாயனாரை வந்தித்து வாழ்த்துதல் கடமையாகும்.

நலம் பெருகுக.

**நன்றி திருக்கோயில் கருத்தரங்கம் பிள்ளையார்பட்டி ஆண்டு ? :**

உ

# ஆன்மீக வெற்றி

தமிழ்க்கடல் வித்வான் **தி.வே. கோபால் ஐயர்,**
பாண்டிச்சேரி.

உலகில் உள்ள உயிரினங்களில் மிகச்சிறந்த உயிரினம் மனிதஇனமே என்பது எல்லோருக்கும் உடன்பாடான செய்தியாகும்.இவனே ஆறறிவு பெற்றவன் என்று போற்றப்படுகிறான். தொடு உணர்ச்சி, நாவால் சுவை அறிதல், மூக்கினால் வாசனை அறிதல், கண்ணால் கண்டல், காதால் கேட்டல் என்பன பொறிகளால் உணரப்படும் ஐவகை அறிவுகள் ஆகும். இந்த ஐவகை அறிவுகளிலும் ஒவ்வொரு வகையில் பல உயிரினங்கள் மனிதனை விட மேம்பட்டிருப்பது கண்கூடு. ஆனால் அவற்றிற்கு இல்லாத மன அறிவின் வளர்ச்சியும் மொழி பேசும் ஆற்றலும் அவ்வாற்றலால் அரிய செய்திகளை வரிவடிவில் எழுதி இனிவரும் தலைமுறைகளுக்கும் உதவும் வகையில் சேமித்து வைத்தலும் மனித இனம் ஒன்றிற்கே உரிய செயலாகும். மன அறிவின் வளர்ச்சியால் வியக்கத்தக்க முன்னேற்றங்களை விஞ்ஞானம் வாயிலாக மனித இனம் படைத்துப் பயன்படுத்தி வருகிறது. விஞ்ஞானம் நிகழ்த்தியுள்ள அரியபெரிய சாதனைகளால் மனிதவாழ்வு பல துறைகளிலும் வளம்பட்டு வருவதைக் காண்கிறோம் . ஆக்கத்திற்கு உதவும் விஞ்ஞானம் பேரவிழிற்கும் நேரிடையாகவும் மறைமுகமாகவும் வழிவகுத்து வருதலைக் கண்டு விஞ்ஞானிகள் பலரும் கவலைப்படுவதனையும் காண்கிறோம்.

அறிவியலின் பெருக்கத்தால் முன்னர் எதிர்பார்த்திராத பல நலன்களையும் மனித இனம் நுகர்கின்றது. எனினும் வாழ்க்கைக்கு இன்றியமையாத மன அமைதி என்னும் நிம்மதி மனித இனத்தில் குறைந்து கொண்டே வருவதனையும் காண்கிறோம். நிம்மதியான வாழ்வே நிறைவாழ்வு. அது எங்கு கிடைக்கும் என்று மனிதன் தேடிக் கொண்டே இருக்கிறான்.

உடம்பு வேறு உயிர் வேறு என்பதும் உடம்பு நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகாயம் என்ற ஐம்பெரும் பூதங்களின் அணுச்சேர்க்கையால் ஆகியது என்பதும், உடம்பு வடிவு உடையது, அறிவு அற்றது, அழியக்கூடியது என்பதும், உயிர் வடிவற்றது, அறிவுமயமானது, என்றும் நிலைத்திருப்பது என்பதும், தனித்து உயிர் செயற்பட

முடியாது உடம்பொடு கலந்தே செயற்பட முடியும் என்பதும் உயிர் உடலில் புகுந்து அதனிடத்து எங்கும் பரவி அதனைத் தாங்கிக் கொண்டிருக்கிறது என்பதும், மேலும் தொடர வேண்டும். இவ்வுயிரும் உடலும் செயலாற்ற ஒரு பேராற்றலே உதவுகிறது என்பதும், நிலைபேறுடைய உயிர் பல வேறு வகைப்பட்ட உடல்களில் பிறக்கிறது என்பதும், உடல்களில் தங்கிய உயிர் தான் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்பப் பல உடல்களை எடுத்து உழல்கிறது என்பதும் பல உடல்களை எடுத்து அலைந்து கொண்டிருக்கும் உயிர் வினைக்கட்டுகளிலிருந்து விடுதலைப்பெறுவதே அதன் முடிந்த குறிக்கோளாக இருக்க வேண்டும் என்பதும் அதற்குத் தியான யோக சமாதி போன்ற வழிகள் உதவும் என்பதும் நம் முன்னோர்கள் தம் அறிவுக்கற்றலால்கண்டு நமக்கு அறிவித்துள்ள தத்துவங்களாகும்.

மனிதப் பிறப்பு ஆண் +பெண் கூட்டுறவால் நிகழ்கிறது. பொதுவகையிலே பிறப்பு ஒரே தன்மைதான் எனினும் அவரவர் பண்டைப்பிறவிகளிலே செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப வடிவு, செயல், பண்பு இவற்றில் வேறுபட்டே செல்வர்களாகவும், வறியவர்களாகவும், சுறுசுறுப்பு உடையர்களாகவும், சோம்பேறிகளாகவும் இருப்பதனைக் காண்கிறோம். மனித இனம் நல்வாழ்வு வாழ நம் முன்னோர்கள் பல அறவழிகளைத் தம் அனுபவத்தில் கண்டு நமக்கு நூல்கள் வாயிலாகத் தெரிவித்துள்ளார்கள் நன்மக்கள் பல அறவழிகளில் தம் வாழ்வை நடத்துவதனையும் காண்கிறோம். எல்லோரும் நம் வாழ்நாள் முழுவதும். இன்பமாகவே கழிக்க வேண்டும் என்றே கருதுகிறோம். ஆனால் வாழ்க்கை இன்பம் துன்பம் இரண்டும் கலந்தே அமைகிறது.

நம் கண் முன்னே மிகக் கீழ் நிலையில் இருந்தவர்கள் அறியாமையில் வாழும் பலரை ஏமாற்றிப் பெருவாழ்வு வாழ்கின்றனர். நேர்மை தவறாமல் நடந்து துன்புறுவோர் துன்பத்தைப் போக்க முயலும் பலர் செல்வ வளம் தேய்ந்து நலிவதனையும் காண்கிறோம் இவற்றிற்கு எல்லாம் காரணம் அவரவர் தத்தம் பண்டைப்பிறவிகளிலே செய்த நல்வினை தீவினைகளே என்று உணர்ந்து கொள்கிறோம்.

பிறர் துன்பம் கண்டு உதவும் பண்பு மனித இனத்திற்கு இன்றியமையாததே. ஆனால் பிறர் செல்வம் கண்டு பொறாமைப்படுவது மனித இனத்தின் அமைதியை அழித்து விடும். அவரவர் செய்த நல்வினை தீவினைகளுக்கேற்ப, இன்ப துன்பங்களை இறைவன் அவரவர்க்கு அருளியுள்ளான். அவன் இன்றி ஓர் அணுவும் அசையாது என்ற

மனப்பக்குவம் ஏற்பட்டால் மனதில் அமைதி நிலவும். ஓரேவழி துன்பங்களை வழங்கும் இறைவனை வேண்டினால் நம் துன்பங்களைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலைப் பெற இயலும் என்ற கருத்து இப்பொழுது மக்கள் உள்ளத்தில் பரவலாக இருப்பது வரவேற்கத்தக்கது. இடைக்காலத்தில் ஒதுக்கப்பட்ட ஆலய வழிபாடு ஆலயங்களுக்குத் திருப்பணி செய்து ஆலயங்களின் சுற்றுச்சூழலைத் தூய்மையாக வைத்திருத்தல் ஆலயங்களின் பூஜை முறைகளை இயன்ற அளவு காலத்தை ஒட்டி முறையாகச் செய்ய ஏற்பாடு செய்தல், இவற்றில் நன்மக்கள் முழுமனதோடு ஈடுபட்டுள்ளனர். இவைகள் யாவும் மனித மனம் நல்வழிப்பட்டு அமைதியுற ஓரளவு உதவுகின்றன.

உடல்வேறு, உயிர்வேறு. அழியக்கூடிய உடலுக்கு மாத்திரம் உறுதிதேடாது என்றும் நிலைபேறு உடைய உயிருக்கும் உறுதி தேட வேண்டும் என்று நம் முன்னோர்கள் கூறியிருப்பினும் நாம் உடலையே உயிராக நினைக்கின்றோம். உடலைப்பற்றியே அதன் நலன் குறித்துக் கவலைப்படுகின்றோம். நம் உடல் தொடர்பான உறவினரும் நண்பருமே நமக்கு உறுதி தேடுபவர் எனக் கருதுகிறோம். உடலைப் பேணுவதற்கு உதவும் கல்வியைப் பயின்று, அதனால் ஊதியம் பெற்று உடலையும் உடல் தொடர்பான உறவினர் நண்பர் என்பவர்களையும் பேணுகிறோம். சுருங்கச் சொல்லின் ஆன்மாவை வெயிலிலிட்டு உடம்பை நிழலிலிட்டுப் பாதுகாக்கின்றோம். இவற்றிற்கு எல்லாம் காரணம் உடல் நிலையற்றது என்ற எண்ணம் நம்மிடம் உறுதியாக இல்லாமையேயாகும் "கோடிக்கணக்காகச் செல்வத்தைத்தேடி வைத்தலும் ஒரு நாள் இறக்கப் போகிறவனே அவன் இறந்தபோது அவன் தேடி வைத்த செல்வம் எதுவும் அவன் உயிரைப் பின்தொடர்ந்து வராது" என்ற நினைப்பு இல்லாமையே நம் வாழ்வின் அவல நிலைக்குக் காரணம்.

வலியவர்கள் எளியவர்களைத் துன்புறுத்தாமலும், பிறர் செல்வத்தைக் கவர விரும்பாமலும் இம்மை மறுமை பற்றிய அறிவோடு அறவழியில் வாழ்ந்தும் நம் உண்மையான துணைவர்களைப் பிரியாது தமக்குக் கிடைக்கும் பொருள்களைப் பிறருக்குப் பகுத்துக் கொடுத்தும், தேவையற்ற பற்றுக்களை விடுத்தும், பல்லாண்டும் காலம் வாழ்ந்து மன அமைதியோடு இறந்து போன நிலை நம் தமிழகத்தில் இருந்ததாக நம் பழைய நூல்கள் குறிப்பிடுகின்றன.

போர்க்களத்தில் பெறும் வெற்றிகள் உண்மையான வெற்றிகள் ஆகா. அவை மீண்டும் போர்கள் தொடரவே வழி வகுக்கும். அமைதியை வழங்குவதற்கு உதவாத போர்களை வெற்றிகளை உண்மை வெற்றிகளாகக் கொள்ளாத தொல்காப்பியனார்

உண்மையான ஆன்மீக வெற்றிகளுக்கு ஒன்பது வகை படி நிலைகளைக் கூறியுள்ளார். அவற்றை முறையே நோக்குவோம்.

**1. பகட்டினானும் ஆவினானும் துகள்தடி சிறப்பின் சான்றோர் பக்கம்:** நாமும் நம் உறவினரும் நண்பர்களும் மகிழ்ச்சியாகக் கூடி வாழ்கிறோம். நம்மையே நம்பி நம் பராமரிப்பிலே வாழ்ந்து நமக்குப் பல வகைகளிலும் உதவும் உயிரினங்களிடம் முழு அன்பைக் காட்டி அவற்றைப் பாதுகாப்பதில் நிறைவான சிரத்தை கொள்வதே முதல் வெற்றி. காளையும், பசுவும் கூறப்பட்டாலும் நம்மை நம்பி வீட்டில் வாழும் நாய், பூனை முதலியவற்றையும் கொள்ள வேண்டும். இவற்றைப் பாதுகாப்பதால் நம் அன்பு விரிவடைகிறது. இரக்க குணம் பெருக்கமடைகிறது.

**2. கட்டில் நீத்த பால்:** பதவி ஆசையை விடவேண்டும் .நம்மைவிட அப்பதவிக்குத் தகுதி உடையவர் இருப்பின் அவரோடு போட்டியிட்டு வீண் பகைமையை வளர்த்துக் கொள்வதை விடுத்து பதவியில் இல்லாமலேயே மனித நேயத்தற்குரிய செயல்களைச் செய்யப் பழகுதல் வேண்டும் இராமபிரான் அரச பதவியில் இல்லாத காலத்திலேயே அருஞ்செயல்கள் பல செய்ததனை தகுதியடையவர்களும் தகுதி இல்லாதவர்களும் பதவிகளுக்குப் போட்டியிட்டு பணபலத்தையும், அடியாட்கள் பலத்தையும் பயன்படுத்தி பதவிகளில் அமர்வதால் நாடு படும் தொல்லைகள் கண்கூடாகும். பதவியில் இருப்பவர்கள் தம்மை விடத் திறம் படைத்தவர்கள் கிட்டின் அவர்களிடம் அப்பதவிகளை ஒப்படைத்து தாம் விலகிக் கொள்வதுமனதுக்கு அமைதி தரும் பெரும் வெற்றியாகும். இச்செயல் மனித இன ஆக்கத்திற்கு நாம் செய்யும் அரிய தொண்டாகும்.

**3.எட்டுவகை நுதலிய அவயம்:** ஒரு நாட்டு மக்கள் நலவாழ்வுக்கு உதவுவன நியாயசபைகளே, சங்ககாலத்தில் உறையூரில் இருந்த நியாயசபை தன் நேர்மையான தீர்ப்பினால் பிரசித்தமாக இருந்ததது. நியாய சபைகளில் நீதிபதிகளாக அமர்பவர்கள் குடிப்பிறப்பு கல்வி ஒழுக்கம் வாய்மை தூய்மை நடுவுநிலைமை அழுக்காறாமை அவாவின்மை என்ற எட்டு பண்புகளிலும் நிரம்பியவர்களாக இருத்தல் வேண்டும். அப்பண்புகளில் குறையுடையவர்கள் நீதிபதி பொறுப்பை ஏற்கக் கூடாது தம்மை வற்புத்தி அப்பதவியிலே அமர்த்தினாலும் தம்மின் மேம்பட்டவர்களை தெரிந்து எடுத்துக் குறிப்பிட்டு தாம் விலகியிருத்தல் மனித சமூகத்திற்கே நலம் தரும் வெற்றியாகும். சோழர்கள் கால கிராம ஆட்சி முறை இவ்வாறு இருந்த செய்தியை உத்தரமேரூர் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

**4. கட்டமை ஒழுக்கத்து கண்ணுமை:** அறநூல்களில் இன்னன்ன செயல்களில் ஈடுபட வேண்டும் இன்னன்ன செயல்களை முற்றிலும் தவிர்த்தல் வேண்டும் என்று தரம் பிரித்துக் கூறப்பட்டுள்ள நெறிமுறைகளில் தவறாது மனிதன் தன் வாழ்க்கையை நடத்துதல் நாட்டுக்கே நலம் தரும் வெற்றியாகும்.

**5. இடையில் வன்புகழ் கொடைமை:** சென்ற பிறப்பில் செய்த நல்வினையாலே சிலருக்கு எதிர்பார்த்ததைவிடச் செல்வவளம் செழித்துக் காணப்படும். பலரிடம் அத்தகைய செல்வவளம் இராது அவர்கள் எப்போதும் தேவையிலேயே மூழ்கியிருப்பர். செல்வம் மிக்கவர் வறியவர்களுக்குத் தேவையறிந்து காலத்தில் உதவி அவர்கள் குறையைப் போக்க முற்படுவது செல்வம் பெற்றதன் பயன், அவ்வாறு உதவுவதனாலேயே மனித இனத்தின் அமைதியைப் பேணலாம். இத்தகைய கொடைத் தொழில் மனித இனத்திற்கு உதவும் அற வெற்றிகளுள் ஒன்றாகும்.

**6. பிழைத்தோர் தாங்கும் காவல்:** மக்களுள் சென்ற பிறப்பில் செய்த நல்வினை உடையவர்கள் சிலரே நல்வினை இல்லாதவர்களே பலர். நல்வினை உடையவர்கள் எல்லாவித செல்வ வளங்களுடனும் வாழ்கிறார்கள். நல்வினை இல்லாதவர்கள் செல்வர்களை அண்டி அவர்கள் இட்ட ஏவல்களைச் செய்து வாழ வேண்டியவர்களாகவே உள்ளனர். அவர்கள் தம் வறுமையால் மனம் திரிந்து சில தவறுகளையும் செய்தல் கூடும். உலகில் செல்வர்களோ, வறியவர்களோ, அறிவாளிகளோ, அறிவிலிகளோ யாவராயிருப்பினும் ஒரு தவறும் செய்யாதவர் ஒருவரும் இரார். செல்வர்கள் தம்மை நாடி வாழ்பவர்களோ தம் நண்பர்களோ ஏதேனும் தவறு செய்யின், அத்தவறு செய்தற்குரிய காரணத்தை ஆராய்ந்து, அத்தகைய தவறுகளை அவர்கள் எதிர்காலத்தில் செய்யாமைக்குரிய வழிவகைகளை வகுத்து, அவர்கள் அப்பொழுது செய்த தவறுகளை மனிதநேயமாகிய இரக்கத்தால் மன்னித்து விடுவது மனித இனம் வாழ்வதற்கு உதவும் அற வெற்றியாகும். வறுமையாலோ அளவுக்கு மீறிய சலுகையாலோ தவறு செய்தவர்களைத் தவற்றுக்காகத் தண்டிப்பின் அவர்கள் வாழ்க்கை அவல நிலையை அடைய அவர்கள் உயிர் வாழ வேறு பல தவறுகளைச் செய்யும் நிலையே ஏற்படும். எனவே தண்டனையை விட மன்னித்தலே மனித இன ஆக்கத்திற்குப் பெரிதும் உதவும்.

**7. பொருளாதார புணர்ந்த அகற்சி:** நேர்மையாளர்கள் அறநிலையங்களுக்கும் அறக்கட்டளைகளுக்கும் அறங்காவலர்களாக அமர்த்தப்படுவர். அத்தகைய சான்றோர்கள் அறநிலையங்களில் நேர்மையான

முன்னேற்றத்திற்காகத் தன்னலமற்ற முறையில் பாடுபட வேண்டும். அறநிலையங்களில் செல்வத்தை நேரிய முறையில் பெருக்குவதற்கு முயல வேண்டும். நேரிய முறையாவது, கோயில் தென்னை மரங்களைக் கள்ளு கட்ட விடுதல், கோயில் திருக்குளங்களை மீன்குத்தகைக்கு விடுதல் போன்ற அறத்திற்குப் புறம்பான செயல்களைத் தவிர்த்து அறத்தோடு பட்ட செயல்களாலேயே செல்வ வளத்தைப் பெருக்குதலாம். அறநிலையங்களில் பணிபுரிபவருடைய தேவைகளை அறிந்து அவர்களுக்கு நேரிய உதவிகள் செய்வதும் இதன்கண் அடங்கும்.

**8. அருளொடு புணர்ந்த அகற்சி:** அன்பாவது தொடர்புடையாரிடமிருந்து நிகழும் மனநெகிழ்ச்சி அன்பு வளரத் தொடங்கின் அது தொடர்பு இல்லாரிடத்தும் கொள்ளும் நேயமாகிய அருளாக வடிவெடுக்கும். இன்னார் இனியார் என்று பாராமல் மனித இனம் நல்வாழ்வு வாழத் தன்னால் இயன்ற செயல்கள் எல்லாவற்றிலும் ஈடுபட்டு உழைத்தல் மனித மனத்திற்கு அமைதி தரும் அற வெற்றியாகும்.

**9. காமம் நீத்த பால்:** பற்றற்று வாழ்தல், ஒருவன் பற்றற்று வாழ்வானானால் அவன் வாழ்க்கையில் பிடிப்பு ஏதும் இராது. பற்றற்றவன் என்பவன் பிறனைப் பற்றிய கவலை ஏதும் இல்லாமல் செயலற்று வீணாகப் பொழுது போக்குபவன் ஆவான். அவனால் பிறருக்கு நன்மையோ தீமையோ ஏற்படாது. அவன் மனித இனத்திலிருந்து தன்னைப்பிரித்துக் கொண்டு தனித்து வாழ்பவன் என்பது கருத்தன்று. மனிதன் தனக்கு அறநூல்களில் வகுக்கப்பட்ட எல்லாச் செயல்களையும் உயிரும் உடம்பில் ஆற்றல் உள்ள வரையிலும் செய்து கொண்டுதான் இருத்தல் வேண்டும். ஆனால் தன் கடமையாகிய செயல் ஆற்றுவதால் தனக்கு என்ன ஆதாயம் கிடைக்கும் என்ற எண்ணமின்றிப் பயன் ஏதும் கருதாமல் தன் கடமைகளைச் செய்வதில் உள்ள மனநிறைவே தனக்குக் கிட்டும் பயனாகக் கருதிச் செயல்பட வேண்டுமென்பது. இதுவே அறவெற்றிக்குத் தலையாயது.

தெய்வ நம்பிக்கை திருக்கோயில் வழிபாடு அடியவர்களிடத்தில் ஈடுபாடு என்பனவனவற்றைத் தம் வாழ்க்கைக் கடமைகளாகக் கொண்டிருக்கும் நன்மக்கள் தொல்காப்பியனார் குறிப்பிடும் இவ்வொன்பது வகை ஆன்மீக அற வெற்றிகளையும் மனம் கொண்டு வாழும் வாழ்க்கை இவ்வுலகெங்கும் பரவுமானால் அக்காலத்து இவ்வுலகம் தெய்வ உலகமாகும்.

நன்றி !

# குடம்பாபிடேகக் கிரியா விளக்கம்

சிவாகம வித்துவான் சித்தூர்
**ஞானசம்பந்த சிவாச்சாரியார்**

**முன் செய்யப்படும் கிரியைகள்**

1. ஆசாரியவரணம், 2. அனுக்ஞை, 3. விக்னேஸ்வர பூஜை, 4. தனபூஜை, 5. பிரவேசபலி, 6. ரட்சோக்ன ஹோமம், 7. வாஸ்துசாந்தி, 8. மிருத்சங்கிரஹணம், 9. அங்குரார்ப்பணம், 10. ரட்சாபந்தனம், 11. யாகாலங்காரம், 12. கலாகர்ஷணம் என்பனவாகும்.

1. அறவொலி ஆகமங்களை அறிந்த ஆதி சைவர்கள் சமய விசேட நிர்வாண ஆசார்யாபிஷேக அஸ்திராபிசேகாதி கிரியைகளால் மல மாயாதி பாச நிவர்த்தி பெற்றவர்களாய் சிவபூசை செய்பவர்களாய் உள்ளனரா என்றறிந்து அவர்கள் இல்லறத்தவராயும் மக்கட்பேறு உள்ளவராயும், மந்திரம் கிரியை பாவனை உணர்ந்தவராயும் உள்ளவர்களை ஆசாரியராய்த் தேர்ந்து எடுப்பதே ஆசாரிய வரணம் எனப்படும்.

2. ஆகமங்களை உணர்ந்த பெரியார்களது இசைவையும் விநாயகர் சிவன் சக்தி முருகன், சண்டிகேசன் நந்தி முதலானவர்களை வழிபட்டு உத்தரவு பெறுதலே அனுக்ஞை எனப்படும்.

3. இடையூறுகள் தோன்றாமல் இருக்க விநாயகரை வழிபடுதலே விக்னேஸ்வர பூஜை எனப்படும். கணபதி ஹோமமும் விநாயகரது பூஜையின் பாற்படும்.

4. தனலட்சுமி, தான்யலட்சுமி, வித்யாலட்சமி, கீர்த்திலட்சுமி, சௌபாக்கியலட்சுமி, சந்தான லட்சுமி, வீரலட்சுமி, ஜெயலட்சுமி ஆகிய அஷ்ட லட்சுமி சகித மஹாலட்சுமியைப் பூஜிப்பதே தன பூஜை எனப்படும். மேலும் நவரத்னங்களை வைத்துப் பூஜிப்பதும் நவதான்யங்களை வைத்துப் பூஜிப்பதும் தனபூஜையின் பாற்படும். நவகிரஹ ஹோமமும் தனபூஜையின் ஒரு பாகம் என்பர்.

5. ஆலயத்தின் நடுவிலும் கிழக்கு முதலான எட்டுத் திக்கிலும் உள்ளவர்களான இலட்சுமி, யட்சன், ராட்சஸன், பூதம், பிசாசு, பிரம்மராட்சசன், மஹாகாளி, பைரவன் முதலானவர்களைப் பூஜித்து யட்சாதிகளை முறையே திருப்தி செய்து, மலை, காடு, பிதுர்லோகம், காடு, நதிக்கரை, நந்தவனம், சமுத்திரக்கரை, சுடுகாடு முதலிய இடத்திற்கு விரட்டுவதற்குப் போடும் பலியே பிரவேசபலி எனப்படும். பிரவேசம் – கிளம்புதல் : பலி அதன் பொருட்டு அளித்தல், யட்சாதி இடத்தில் இந்திராதிகளைப் பூஜித்தல் வேண்டும். இதுவே பிரவேச பலியாகும்.

6. அஸ்திரவேதபூஜை - பின்னர் 5 குடங்களில் சிவாஸ்திரம், பாசுபதாஸ்திரம், அகோராஸ்திரம், பிரத்தியங்கிராஸ்திரம், சூரிகாஸ்திரம் எனும் ஐந்து அஸ்திரங்களை

பூஜை செய்து ஹோமம் செய்து அஸ்திர தேவரிடத்திலாவது தன்னிடத்திலாவது - ஒடுக்கிக் கொள்ளுதல், பின்னர் கும்ப ஜலத்தால் இடங்களை நனைத்தல், இதற்கு ரட்சோக்ன ஹோமம் என்று பெயர்.

நடுவில் ஒரு குடமும் தெற்கே ஒரு தேங்காயும் வடக்கே கத்தியும் வைத்து, குடத்தில் ரட்சோக்னதேவதையும் தேங்காயில் சிவனையும் கத்தியில் சக்தியையும் வழிபட்டு ஹோமம் செய்து தன்னிடத்து ஒடுக்கி கத்தியால் தேங்காயை உடைத்து விக்னத்தை நீக்குதல், பின் குடத்துநீர் தெளித்தல் ஆகிய இதுவும் ரட்சோக்ன ஹோமம் எனப்படும்.

7. ஒருவராலும் அழிக்க முடியாத ஆற்றல் பெற்றவனாகவும் கைகால்களை நீட்ட இடம் இன்மையால் மடக்கிக்கொண்டு முடங்கிக் கிடக்கின்றான் வாஸ்துபுருஷன். இவன் அசைந்தால் பூகம்பாதிகள் தோன்றும். இவன் அசையாமல் இருக்க இவனுக்கு வேண்டிய உணவுகளைத் தந்து மகிழ்வித்து அனந்தன் முதலிய பாம்புகளைக் கொண்டு கட்டிப்போட்டு இவன் மீது ஐம்பத்து மூன்று தேவர்களை அமர்த்தி பூஜிப்பதும் ஹோமம் செய்வதும் கொடும்பாவிபோல் ஒன்றுகட்டி அதை வாஸ்து புருஷனாகப் பாவித்து நெருப்பிட்டு எரித்து இழுத்துச் செல்வதே பரிசுத்தமாகும். இச்செயல் அனைத்தும் வாஸ்து சாந்தி எனப்படும். வசிக்கின்றவர்களைச் சாந்தப்படுத்துவது வாஸ்து சாந்தியாகும்.

8. யாகத்தின் செயலையும் பலனையும் அறிவதற்குப் பயன்படும் தானியங்கள் முளைப்பதற்கு ஏற்ற மண்ணை எடுத்தலே மிருத்ஸங்கிரஹணம் எனப்படும். மிருத்து என்றால் மணல் : கிரஹணம் என்றால் எடுத்தல். எனவே இதற்கு மிருத்சங்கிரஹணம் என்று பெயர்.

9. எள், கடுகு, பயிறு, உளுந்து, துவரை, கொள்ளு, கடலை, மலைநெல், கோதுமை என்னும் ஒன்பது தான்யங்களைப் பாலில் ஊறவைத்து நடுவில் உள்ள குடத்தில் சோமநாதரையும் பாலிகைகளில் முளைப்பதற்காகப் போடுவதே அங்குரார்ப்பணம் என்று பெயர். நன்கு முளைத்திருப்பின் யாகக்கிரியைகள் நன்கு நடைபெற்றன என்றறிதல் வேண்டும். கோணலாகவும் கறுப்பாகவும் முளைப்பினும், தானியங்கள் முளைக்காமலேயே போனாலும் யாகக்கிரியைகளில் குறை உள்ளன என்று அறிந்து பிராயச் சித்தம் செய்தல் வேண்டும். தானியங்களை முளைக்கப் போடுவதே அங்குரார்ப்பணம் என்று பெயர்.

10. சிவ யாகத்தைச் செய்கின்றவர்கள் என்றும் பரிசுத்தமாய் இருப்பதற்கும் பிறப்பு இறப்பினால் ஏற்படும் சூதகம் ஆசௌசம் முதலிய தீட்டும் இவர்களை வந்தடையாமல் இருப்பதற்கும் பாதுகாப்பாய் செய்யப்படுவதே ரட்சாபந்தனம் எனப்படும். காக்கும் சக்தி உடைய கயிறு ரட்சை எனப்படும். பந்தனம் - கட்டுதல், கயிறு சுட்டிக் கொள்வதே ரட்சா பந்தனம் எனப் பெயர்பெறும்.

11. யாகசாலையில் வேதிகையின் நடுவிடத்தில் நெல் முதலிய ஏழு தானியங்களைப் பரப்பி பிரதான கும்பத்திற்காக முக்காலி போடுதல், அதன் வடபாகத்துப் பீடசக்தி

கும்பத்திற்கு இடம் அமைத்தல், கிழக்கு முதல் எட்டு பாகங்களில் அஷ்ட வித்தியேச கும்பங்களுக்கும் இடம் அமைத்தல், யாக சாலையில் கிழக்கு வாசலின் வடபாகத்தில் நான்கு கலசங்களும், தென்பாகத்தில் நான்கு கலசங்களும் தெற்கு வாசலின் கிழக்குப் பக்கத்தில் மூன்று கலசங்களும், மேற்குப்பக்கத்தில் மூன்று கலசங்களும் மேற்கு வாசலின் இரண்டு பக்கங்களிலும் நான்கு நான்கு கலசங்களும் வடக்கு வாசலின் மேற்குப் பாகத்தில் மூன்று கலசங்களும் கிழக்குப் பாகத்தில் மூன்று கலசங்களும் ஆக 27 கலசங்களை வைத்தல் வேண்டும். வட கிழக்கு மூலையில் யாகீஸ்வரர், யாகவர்தனீ ஆகிய இரண்டு கலசங்களைத் தனியாக வைத்தல் வேண்டும். தென்கிழக்கு மூலையில் சமைப்பதற்கு அடுப்பு வைத்தல் வேண்டும். தென் மேற்கில் பஞ்ச கவ்வியத்திற்கு இடம் அமைத்தல் வேண்டும். வடமேற்கில் பாலிகை வைத்தல் வேண்டும். இதுவே யாகாலங்காரம் எனப்படும்.

12. கும்பத்திற்குச் சாற்றும் வஸ்திரம்தோல், கும்பத்தில் சுற்றிய நூல் நரம்பாகவும், கூர்ச்சம் எலும்பாகவும், கும்பத்துள் போடப்படும் பொன் முதலியன சுக்கிலமாகவும். கும்ப நீர் மேதையாகவும், கும்பத்துள் போடப்படும் மண் மாமிசமாகவும், குங்குமப்பூ முதலிய வாசனாதி திரவியங்கள் இரத்தமாகவும் பாவித்து இந்த ஏழு தாதுக்களால் ஆன கும்பத்தைச் சரீரமாகவும் மந்திரத்தை உயிராகவும் பாவித்தலே கலசம் எனப்படும். இறைவனைத் தத்துவங்களாகிய என்புந்தசையும் பெற்றவராகவும் பதங்களை நரம்பாகவும் மந்திரங்களை இரத்தமாகவும், வர்ணங்களைத் தோலாகவும், புவனங்களை உரோமமாகவும், கலைகளைச் சரீரமாகவும் பெற்றவராய் இறைவனைக் கருதி முறைப்படி பஞ்சாசன பஞ்சாவரண பிரகாரம் பூஜித்து முன் கூறிய கலசத்தில் சலாசனம் வரை பூஜை செய்து இறைவனைத் தன் இருப்பிடத்தில் இருந்து கலசத்திற்கு வரும்படி அழைத்தலே கலாகர்ஷணம் எனப்படும். இறைவனது கலைகளைக் கும்பத்திற்கு இழுத்தல் என்றும் பொருள் உண்டு. இறைவன் தான் இருக்கும் வடிவாம் சின்னத்தில் இருந்து கலசமாம் உருவில் வந்ததாகப் பாவித்தலே கலா ஆகர்ஷணம் எனப்படும். கலாகர்ஷணம் ஆன உடனே துணிகொண்டு முன் உள்ள இறைவனது மேனியை மறைத்தல் வேண்டும். உடனே யாத்திரா தானம் என்ற நவகிரஹபிரீதி செய்து கலசத்தில் எழுந்தருளிய இறைவனை யாகாலயத்தில் கொண்டு வந்து வைத்தல் வேண்டும்.

**யாக பூஜை எனும் மண்டப பூஜை**

ஒரு தினத்திற்கு 8 யாமங்கள். இதில் இரண்டு யாமங்கள் - பூத பிரேத பைசாசங்களுக்கப் பகற்பொழுதில் ஒரு யாமத்தை நீக்க வேண்டும். ராட்சா அசுரர்களுக்கு இரவுப் பொழுதில் ஒரு யாமத்தை நீக்க வேண்டும். அஃதாவது 12 மணிக்கு மேல் 3 மணி வரை தேவ காரியங்களைச் செய்தல் கூடாவாம். எனவே இரவிலும் மேற்கூறிய நேரம் உகந்தது அல்லவாம். 8 யாமங்களில் 2 யாமங்கள் நீங்கவே 6 யாமங்கள் தெய்வத்திற்கு ஏற்றனவாக சைவசாத்திரங்கள் கூறுகின்றன.

முதல் கால யாக பூசை அர்த்தஜாமம் எனும் முன்னிரவு பூஜை.

இரண்டாம் நாள் காலை : யாக பூஜை, திருவனந்தல் எனும் உஷத் கால பூஜை. விடியற் கால பூஜை என்றும் கூறலாம்.

இரண்டாம் நாள் மாலை : யாக பூஜை கால சந்தி எனும் பகல் தொடக்க பூஜை.

மூன்றாம் நாள் காலை : யாக பூஜை உச்சி காலம் எனும் பகல் பூசையாகும்.

மூன்றாம் நாள் மாலை : யாக பூஜை பிரதோஷ காலம் எனும் பிற்பகல் பின் பாதி பூஜையாகும். இரவு தொடங்கும் முன் செய்யும் பூஜை என்றம் கூறலாம்.

நான்காம் நாள் காலை : யாக பூஜை சாயரட்சை எனும் இரவு தொடக்க பூஜையாகும். இறைவனைச் சாரச்சார அவன் மக்களைக் காக்கின்றான் என்ற உண்மையை உணர்த்துவதே சாயரட்சையாகும். எனவே யாக பூஜை மாலை தொடங்கி காலையில் முடிக்கப்பெறுகிறது. அன்றே குடமுழுக்காட்டும் நடைபெறும். மண்டபத்தில் விளங்கும் நான்கு வாசல் புறங்களில் வாசல் ஒன்றனுக்கு 32 தெய்வங்கள் வீதம் பூஜை செய்கின்றார்கள். ஐந்தாகிய மண் முதலிய தத்துவங்களை நடு விடத்தில் அமைக்கின்றனர். சூர்யாதி சண்ட பரியந்தம் 27 பரிவாரங்களையும் யாகரட்சகரான சிவசக்திகளையும் பூஜை செய்கின்றனர். பிறகு வேதிகையின் நடுவில் இறைவனையும் இடப்பக்கத்து பீடா சக்தியையும் எட்டுத் திக்கிலும் வித்தியேச கணங்களையும் பூஜை செய்கின்றனர். பின்னர் வேள்வியில் இறைவனையும் அவனுடன் சேர்ந்த பரிவாரங்களையும் வழிபடுகின்றோம். இதுவே யாகபூஜை எனும் மண்டப பூஜையாகும்.

**கும்பாபிஷேகமாம் பெருஞ்சாந்தி விழாவின் உட்பொருள்**

சிவாசாரியார்கள் தன்னுள் விளங்கும் இறைவனை ஆ-பசு எனும் ஜீவாத்துமாக்கள் ; லயம் - ஒடுங்கும் இடம் எனும் கோவிலில் விளங்கும் இறைவனோடு இரண்டறக் கலக்கச் செய்து, பின் அவ்விறைவனைக் கும்பத்துள் கொண்டு வந்து நிறுத்தல். அதன்பின் அவ்விறைவனை வேள்வியாம் யாகத்தில் எழுந்தருளச் செய்தல். அதன்பின் அடியார்கள் உளத்துள் இறைவனை விளங்கச் செய்து தனது மந்திர சக்தியால் எங்கும் விளங்கும் இறைவனை வேள்வியில் கொண்டு வந்து அதிலிருந்து இறைவனைக் கும்பத்தில் சேர்த்துக் கும்பத்திலிருந்து அபிஷேகம் செய்வதின் மூலமாய் ஆலயத்தில் உள்ள இறைவனிடம் தெய்வீக சக்தியைச் சேர்ப்பதே கும்பாபிஷேகம் எனப்படும். அதற்குப் பிறகு சண்டயாகம் செய்து அஸ்திரமந்திரங்களால் ஹோமம் செய்து சாந்தியை உண்டாக்குவதும் திருக்கல்யாணம் செய்து மக்களை மகிழ்விப்பதும் வீதியுலாக் காட்சி தருதலும் மண்டலாபிஷேகம் தொடங்கி நிறைவு பெறுவதும் மண்டலாபிஷேகப் பூர்த்தி நாள் அன்று ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும், சாந்தி உண்டாவதற்காக 1008 கலசங்களை வைத்தோ அல்லது 1008 சங்கங்களை வைத்தோ மஹாஸ்தபனம் எனும் பூஜை செய்து இறைவனை வழிபடுவதே பெருஞ்சாந்தியாகும்.

நன்றி: **தமிழகத்தின் பழமைமிகு சமயங்களும் பண்பாட்டுக் கலைகளும்.**

# அட்ட பந்தனம்

திரு. **கம்பனடிப்பொடி**
கம்பன் கழகம், காரைக்குடி.

திருக்கோயில்களில் கடவுள் மங்கலம் (பிரதிஷ்டை) செய்யப்பெறும் கல்லால் ஆன தெய்வப் படிமங்கள் ஆடிடாமல் நிலைபெற இருப்பிடம் (பீடம்), படிமத்தின் அடிப்பகுதி இரண்டையும் பொருத்திப் படியச் செய்யும் ஒரு கூட்டுக் கட்டுப் பொருளை அட்ட பந்தனம் என்பர். இப்பொருள் ஓர் அருமையான படைப்பு : அற்புதமான கண்டுபிடிப்பு. எட்டுப் பண்டங்களின் கலவையானதாலும், இருப்பிடத்தையும், தெய்வப் படிமத்தையும் இணைத்துப் பிணைப்பதாலும் இது ‘அட்டபந்தனம்’ எனப் பெயர் பெறுவதாயிற்று.

அட்டபந்தன மருந்தில் கலக்கும் பொருள்கள் :

1. கொம்பரக்கு, 2. சுக்கான் தூள், 3. குங்கிலியம், 4. கற்காவி, 5. செம்பஞ்சு, 6. சாதிலிங்கம், 7. தேன்மெழுகு, 8. எருமை வெண்ணெய் ஆகிய எட்டுமே. இவற்றை எல்லாம் கலந்து செய்யும் முறை இருவகையாகும். ஒன்று இடி முறை; மற்றது காய்ச்சுமுறை, காய்ச்சு முறை மிக விரைவாக ஆகிவிடும். ஆனால் காய்ச்சு மருந்து, சார்த்தியதை அகற்ற வேண்டிய நிலை ஏற்பட்டால் அகற்றல் கிட்டத்தட்ட இயலாது. வலிந்து செயற்படும் பொழுது சிலையுருவிற்குச் சேதம் விளையவும்கூடும். ஆனதால் மிகப் பெரும்பாலும் இடிமுறையை மேற்கொள்ளலே நன்று.

மேலே சொன்ன பண்டங்களை நன்கு சோதித்து வாங்கவேண்டும். பின்னர், தூசு, துப்பட்டை முதலியன களைந்து தூய்மைசெய்ய வேண்டும். அதன் பின்னர் அளவுப்படி கலக்க வேண்டும். கலந்த பின் இடிக்க வேண்டும்.

### (1) கொம்பரக்கு

இது அவலரக்கு அல்ல. மரப்பட்டையுடன் ஒட்டிக்கொண்டிருக்கும். இதுதான் தூய்மையானது; இயற்கையானது; கலப்பற்றது. இதை வாங்கிப் பொடித்து மரப்பட்டை முதலியவற்றை நீக்கிச் சுத்தமாக்கி வைத்துக் கொள்ளவேண்டும்.

### (2) சுக்கான் தூள்

சுக்கானில் பல நிறமும் இருவகையும் உண்டு. வெள்ளை நிறம் நன்று; கபில நிறம் கொள்ளலாம்: கருமை நிறம் கூடாது. இதைக்கொண்டு வந்ததும் முதலில் சிறிது சுக்கானைத் தூளாக்கி, அடுப்பில் காயும் இரும்புச் சட்டியிலிட்டு வறுத்துப் பார்க்கவேண்டும். படபட என்று உப்பைப் போல வெடித்தால், அவ்வகைச் சுக்கான் கூடவே கூடாது. ரவை, மணல் போல வெடிக்காமல் இருந்தால் அவ்வகைச் சுக்கான்தான் உகந்தது.

**(3) குங்கிலியம்**

துண்டுத் துகள், தூசி இல்லாமல் பொறுக்கி எடுத்துப் பொடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

**(4) கற்காவி**

இஃது அழுக்குச் சிகப்பு நிறமாகக் கட்டியாய் இருக்கும், பூங்காவி என்பதல்ல இது. கடைகளில் காவித்தூள் என்று பலவகைக் கலப்படங்கள் உண்டு. அவற்றை வாங்கக்கூடாது. கட்டிகட்டியாய் இருக்கும் கற்காவியையே வாங்கி, மேலே படிந்துள்ள தூசிகளைப் புடைத்துப் போக்கிவிட்டு, இடித்துப் பொடியாக்கி வைத்துக்கொள்ள வேண்டும்.

**(5) செம்பஞ்சு**

இஃது இயற்கையாகவே வாதாம்கொட்டை நிறமுடையது. பீகார்ப் பக்கத்திலிருந்து வருவது. 'கோத்தி' என்று பெயர். இதுதான் உகந்தது. சிவப்புச் சாயம் ஏற்றி அடை அடையாய்த் தட்டி வைத்துக் கொண்டு அதுதான் செம்பஞ்சு என்று ஏமாற்றுவோரும் ஏமாறுவோரும் மிக அதிகம். கோத்தி பஞ்சு, கதர்க்கடைகளில் சொல்லி வரவழைக்கச் செய்யலாம். இதையும் சருகு. சொத்தை, காம்பு முதலியன இல்லாமல் பழுது நீக்கி வைத்துக்கொள்ள வேண்டும்.

**(6) சாதிலிங்கம்**

இதில் பலவகை உண்டு உலாந்தாவிலிருந்து வருவதுதான் தரத்தால் உயர்ந்தது. கலவைப் பண்டம் எட்டிலும் விலை மிக்கது சாதிலிங்கமே. அட்டபந்தனத்தின் முக்கியமான பொருள் இது. விலை மிகுதியை எண்ணி அளவைக் குறைப்பதும், தரமற்ற மலிவுச் சரக்கை வாங்குவதும் இன்று மலிந்து காணப்படுகின்றன. அப்படிச் செய்வது முறைகேடாகும். இஃது இரும்பைப் போலக் கனமிக்க பண்டமாகும். இதைப் பொடி செய்தல் எளிது. இதையும் நன்கு பொடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

**(7) தேன்மெழுகு**

இதில் இருவகை உண்டு. ஒன்று மஞ்சள் நிறமுள்ளது. அதை மஞ்சணமெழுகு என்பர். மற்றொன்று வெண்மைநிறமாக இருக்கும். மஞ்சண மெழுகில் தேன் கலந்திருக்கும், வெண் மெழுகில் தேன் இல்லை. இதுதான் உகந்தது. வெண் மெழுகு என்று சில இடங்களில் மெழுகுவர்த்திக் குழம்பை ஆறவைத்து ஏமாற்றுவார்கள். வாயில் சிறிது கிள்ளிப் போட்டுச் சுவைத்துப் பார்த்தால் உண்மை புலப்படும்.

**(8) எருமை வெண்ணெய்**

பசுவின் வெண்ணெயில் கொழுப்புச் சத்துக் குறைவு. ஆகவே, அது கூடாது, எருமை வெண்ணெய்தான் உகந்தது. இதிலும் சிறிது நீர்ச்சத்தின்றி முழுதும் அகற்றப்படவேண்டும். நெருப்பு, வெயில், வேறுவகை வெம்மை, பயன்படுத்தப்பட

முடியாதவை. அவற்றால் வெண்ணெய் உருகிவிடும். ஆனதால் புதிய மண் பானையை எடுத்துப் பானைக்கு ஒரு வீசை வெண்ணையைப் புறத்தில் கால் அங்குலக் கனமாக அப்பி வெம்மை தாக்காத குளிர்ந்த, இருண்ட அறையில் பானையைக் கவித்து வைத்திருக்க வேண்டும். பானை வெண்ணெயில் உள்ள நீர்ச்சத்து முழுவதையும் உறிஞ்சிக்கொள்ள, வெண்ணெய் பக்குவமாய் ஆகிவிடும். தேவைக்கேற்பப் பானைகளின் எண்ணிக்கையைக் கூட்டிக்கொள்ள வேண்டும்.

எல்லாப் பண்டங்களும் ஆயத்தமான பிறகு மர உரலில் இடிக்க வேண்டும். கல்லுரல் கூடாது. ஒவ்வோர் உருண்டைக்கும் குறிப்பிட்ட அளவாக ஏழு பண்டங்களையும் உரலில் இட்டுத் தேவைக்கு ஏற்ப வெண்ணெயைச் சிறிது சிறிதாகச் சேர்த்து ஒவ்வோர் உருண்டையையும் சுமார் அரைமணி நேரம் இடித்துப் பின்னர் உரலிலிருந்து எடுத்து உருட்டித் தலையில் ஆணிக் கொண்டையால் ஒரு குத்துக்குத்தி வைத்துக்கொள்ள வேண்டும். முதல் இடி முடிந்ததும் ஒரு குத்து, இரண்டாம் முறை இடித்தபின் இரண்டு குத்து. இப்படி எட்டு முறை இடிக்கவேண்டும். ஓர் இடிக்கும் அடுத்த இடிக்கும் இடையில் குறைந்தது இரண்டு நாள் இடைவெளி இருக்கவேண்டும்.

இனி அளவைப் பார்ப்போம். ஒவ்வோர் உருண்டைக்கும் :

சுக்கான் தூள் : 25 1/2 தோலா,
குங்குலியம் 9 தோலா,
கற்காவி 7 1/2 தோலா,
சாதிலிங்கம் 7 1/2 தோலா,
அரக்கு 3 3/4 தோலா,
மெழுகு 3 3/4 தோலா,
செம்பஞ்சு 1 தோலா,
எருமை வெண்ணெய் 7 1/2 தோலா,

(இஃது எட்டு இடிக்கும் சேர்த்துள்ள உத்தேச அளவு. சிறிது கூடவும் ஆகலாம்).

இவற்றை எல்லாம் மர உரலில் ஒவ்வோர் சரக்காக இட்டு ஒன்றோடு ஒன்று கலந்து ஒன்று சேரும்படி இடிக்கவேண்டும். முதல் ஆறு பொருள்களும் செமண்டு, சுண்ணாம்பு, மணல் போன்றவை. ஏழாவதாக உள்ள பஞ்சு கம்பிவலை போன்றது. வெண்ணெய்தான் இந்தக் காங்க்ரீட்டிற்கு நீர் போன்றது.

இந்த மருந்து கலந்து இடிப்பதில் பண்டத் தூய்மை, பண்டங்களின் சேர்மான அளவு, இடிக்கும் கால அளவு மூன்றும் மிக முக்கியம், அத்துடன் இடிக்கின்றவர்களின் உடல் தூய்மை மனத் தூய்மை முதலியன மிக மிக முக்கியம். இடிக்கும்பொழுது இடிக்கும் ஆட்கள் ஆலயத்திற்கு ஏற்ப, 'சிவ சிவ' 'நாராயணா' அல்லது 'வேல் வேல் முருகா' என்பன போன்ற இறைவன் திருப்பேர்களை உச்சரித்துக்கொண்டே இடிக்க

வேண்டும். அப்படிச் செய்த அட்டபந்தன மருந்து சார்த்திக் குடநீராட்டுச் செய்த திருக்கோயில்களில் அம்மருந்தால் எவ்விதக் குறைபாடும் நேராது. மிக நீண்ட நாட்களாய் இலங்கி வருதலைக் கண்கூடாகக் காணமுடிகிறது.

எனவே, இடிக்கப் புகுமுன் இடிப்போர்களைக் குளிக்கச் செய்து, திருநீறு முதலானவற்றை அணிந்துகொண்டு, விநாயகர் வணக்கம் செய்துகொண்டபின் ஒவ்வொரு குத்துக்கும் 'சிவ-சிவ' போன்ற நாமங்களைச் சொல்லிக்கொண்டே இடிக்கச் செய்யவேண்டும் என்பது எளியேன் ஏற்பாடு. இவற்றில் பெரும்பாலோர் போதிய அக்கறை காட்டுவதில்லை. வாணவேடிக்கை, பந்தல் அலங்காரம், யாகசாலைச் சோடனை போன்றவற்றில் ஆயிரம் ஆயிரமாகப் பொருள் விரயம் செய்பவர்கள் இன்றியமையாத அட்டபந்தன மருந்தைப்பற்றிக் கவலைப்படுவதே இல்லை. யார் யாரோ செய்யும் செங்கல்தூள் உருண்டைகளை ரூபாய் 3 அல்லது 4 கொடுத்து வாங்கிவந்து எப்படியோ வெண்ணெய்ப் பலத்தால் குழைத்து அப்பிவிட்டுக் 'கும்பாபிஷேகம்' என்ற பெயரில் பல்லாயிரம் ரூபாய்களை விரயம் செய்வதை எண்ணி வருந்தாதிருக்க முடியவில்லை. இதற்குக் காரணம் குடநீராட்டு விழாவின் உண்மைத் தத்துவத்தையும், அதன் இன்றியமையாத துறைகளையும் அறியாமையே என்னலாம்.

என்னைக் கேட்டால் அட்டபந்தன மருந்துதான் அனைத்திலும் தலையானதென்பேன். இதில் சிக்கனம் அல்லது அலட்சியம் காட்டுபவர்களை ஆத்திகர் என எங்ஙனம் கூறமுடியும்? மேலே கூறிய முறை, இருப்பிடத்தையும் படிமத்தையும் இணைத்துப் பிணைப்பதற்குச் செய்வதாகும். இருப்பிடத்தையும், துணையிருப்பிடத்தையும் (பீடத்தையும், உப பீடத்தையும்) இசைப்பதற்குத் திரிபந்தனம் என்னும் முக்கூட்டுப் பொருளே உகந்தது. இதற்கு வேண்டியவை; சுக்கான் தூள், சுத்தம் செய்த சர்க்கரை, முற்றக் கனிந்த பேயன் பழம் ஆகிய மூன்றுமே. சுக்கானைச் சோதித்து வெடி சுக்கான் அல்லாது நற்சுக்கான் கற்களை நன்கு பொடித்துப் பெருஞ்சல்லடையாகச் சலித்து அதில் வேண்டிய அளவை எடுத்து வாயகன்ற மண் அல்லது களிம்பேறத ஒரு பாத்திரத்தில் இட்டுச் சிறிது சிறிதாகச் சர்க்கரையையும், தோல் கறுத்துக் கிட்டதட்ட அழுகியதுபோலத் தோன்றும் பேயன் வாழைக்கனியையும் சேர்த்துப் பிசைந்துகொண்டே வரும்பொழுது கை தாங்காத அளவு சூடு வந்ததும் கையை எடுத்துவிட்டு மத்து முதலிய மரக் கருவியால் நன்கு குழப்பி மத்திக்கவேண்டும். கூழ்போல ஆனதும் எடுத்து இரு கற்களுக்கும் இடையில் அரைக்கால் அங்குல அளவு வைத்துக் கற்களை முறைப்படி ஒன்றின்மேல் ஒன்றாய்ப் படிய வைத்துவிடவேண்டும். கூட்டு முறை செம்மையாக அமைந்துவிட்டால் பிடிமானம் உறுதியாக இருக்கும்.

மெய்யான ஈடுபாடும் தெய்வ பக்தியும் உள்ளவர்களை எல்லாம் தொழுது வேண்டுகிறேன். நல்ல முறையில் மேலே கண்ட வண்ணம் ஆக்கித் தெய்வத் திருப்படிமத்திற்கு மருந்து சார்த்த வேண்டுமென்று. அன்றேல் கண்டவற்றை 'அட்டபந்தனம்' என்ற பெயரால் சார்த்துவதைவிட 'டால்மியா பந்தனம்' செய்துவிடுவது மேலாகும். 'டால்மியா பந்தனம்' என்றால் என்ன என்றா கேட்கிறீர்கள். செமெண்டுக் கலவையைத்தான் இப்படிப் பெயரிட்டுக் கூறுகிறேன். சரிதானே?

"கொம்பரக்குச் சுக்கான் தூள்,
குங்கிலியம், கற்காவி
செம்பஞ்சு, சாதிலிங்கம்
தேன்மெழுகு – தம்பழுது
நீக்கி எருமைவெண்ணெய் கூட்டி
நன்கிடித்து
ஆக்கல் அட்ட பந்தனம் ஆம்"

"சுக்கான்தூள், சர்க்கரை
தொல்பேயன் நற்கனியும்
ஒக்கக் கலந்தமைத்தல்
உற்றதிரி பந்தனம் ஆம்"

**நன்றி : தமிழகத்தின் பழமை மிகு சமயங்களும் பண்பாட்டுக் கலைகளும்.**



# அருள்மிகு விநாயகரும் அருமை மிகு தத்துவமும்

அ.சொ. நமச்சிவாயம்

விநாயகக் கடவுள் பிரணவ சொரூபி. பிரணவத்திலிருந்தே உலகம் உண்டாயிற்று. எக்காரியத்தைத் தொடங்கும்போதும் நாம் விநாயகரை வணங்குகிறோம்.

இவர் பிரணவவடிவினர். ஓங்காரம் ஒலிகளுக்கெல்லாம் மூலம். இதைத்தான் அருணகிரிநாதர் நாதவிந்து கலாதி நமோ நம என்றார். இவருடைய திருவடிகள் ஞான சக்தியும் கிரியா சக்தியும் ஆகும். கணபதி பூஜை கைமேல் பலன் என்பது பழமொழி.

விநாயகர் வழிபாட்டினை எளிதாக யாவரும் செய்யலாம். விநாயகர் வணக்கத்தில் ஒரு சிறந்த பகுதி தலையில் குட்டிக்கொள்வதும் காதுகளைப் பிடித்து தோப்புகரணம் போடுவதும் ஆகும். இவரது முக்கிய விழா விநாயக சதுர்த்தி. இது ஆவணி மாதம் வளர்பிறைச் சதுர்த்தியில் அனுஷ்டிக்கப்படும்.

தலைவி இல்லை. நாயகன்-தலைவன்-தனக்கு மேல் தலைவன் இல்லாதவர் விநாயகர். திருக்கையிலையில் மந்திரச் சித்தர் மண்டபத்திற்குப் பார்வதியுடன் பரமேசுவரர் எழுந்தருளினார். அங்கே ஏழுகோடி மந்திரச் சித்திரங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. அவற்றின் நடுவில் சமஷ்டிப் பிரணவம், வியஷ்டிப் பிரணவம் என்ற இரு பிரணவ மந்திரங்கள் இருந்தன. அந்த இரு பிரணவங்களையும் சிவமும் சக்தியும் திருக்கண் சாத்தியருளினார்கள். அந்த இரு பிரணவாகார யானை முகத்துடன் விநாயகப்பெருமான் அவதரித்தார்.

இவருக்கு ஒரு கொம்பு, இரு செவிகள் மூன்று கண்கள், நான்கு தோள்கள், ஐந்து கரங்கள் இவரை வழிபட்டவர்கள் சம்பத்துடன் வாழ்வார்கள்.

கும்பம் ஏந்திய கை ஆக்கும் தொழிலையும், மோதகம் ஏந்திய கை காத்தல் தொழிலையும், அங்குசம் ஏந்திய கை அழித்தல் தொழிலையும், பாசம் ஏந்திய கை மறைத்தல் தொழிலையும், தந்தம் ஏந்திய கை அருளல் தொழிலையும் புரிகின்றன. எனவே விநாயகர் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் திரௌபவம், அநுக்கிரஹம் என்ற ஐந்து பெரும் தொழிலை ஐந்து கரத்தால் புரிந்து ஆன்மாக்களுக்கு அருள் புரிகிறார்.

விநாயகருக்கு நிவேதனப் பொருள்கள், கரும்பு, அவரை, துவரை, இளநீர், தேன், பயறு, அப்பம், பச்சரிசி, புட்டு, வெள்ளரிப்பழம், கிழங்கு, அன்னம், கடலை முதலியன.

அறுகம் புல்லினால் விநாயகரை அர்ச்சித்தால் மூலாதாரத்தில் விளங்கும் விநாயகர் ஆறு ஆதாரங்களிலும் நம்மைப் பொருந்தச் செய்து அருள் புரிவார். வன்னிபத்திரம் விநாயகருக்கு உகந்தது. துளசியினால் அவரை அர்ச்சனை செய்யக்கூடாது விநாயகர் அடியார்கள் பொருட்டு அநேக ரூபபேதங்களை உடையவர் அவை முக்கியமாக முப்பத்துமூன்று என்று கூறப்படும்.

1.பால கணபதி, 2.தருண கணபதி, 3.பத்திர கணபதி, 4.வீர கணபதி 5.சக்தி கணபதி 6.துவிஜ கணபதி 7.சித்தி கணபதி 8.உச்சிஷ்ட கணபதி 9.விக்ந கணபதி 10.க்ஷிப்ர கணபதி 11. ஹேரம்ப கணபதி 12.லட்சுமி கணபதி 13.மகா கணபதி 14. விஜய கணபதி 15.நிருத்த கணபதி 16.ஊர்த்வ கணபதி 17.ஏகாட்சர கணபதி 18.வர கணபதி 19.திரயாட்சர கணபதி 20.குமார கணபதி 21.ஹரித்திரா கணபதி 22. ஏகதந்த கணபதி 23.சிருஷ்டி கணபதி 24.உத்தண்ட கணபதி 25.ரணமோசன கணபதி 26.துண்டி கணபதி 27.துவிமுக கணபதி 28.மும்முக கணபதி 29.சிம்ஹ கணபதி 30.சிவ கணபதி 31.யோக கணபதி 32. துர்க்கா கணபதி 33. சங்கடஹர கணபதி.

வழிபடும் வகை: கருங்கல், பொன், வெள்ளி, செம்பு, பளிங்கு முதலியவற்றால் அமைந்த திருஉருவத்தை வழிபட வேண்டும். மாக்கல்லால் செய்தது நல்லதன்று.

மஞ்சள், சந்தனம், மலர் முதலியவற்றால் அமைத்த திருஉருவங்கள் வழிபாடு முடிந்தவுடன் விட்டு விடுவதற்குரியன. வெள்ளெருக்கில் செய்த விநாயகர் வடிவம் சிறந்தது. ஓம் ஹாம் அஸ்த் ராயபட் என்ற மந்திரத்தைச் சொல்லி மீண்டும் ஒரு முறை நீரினால் அலம்புக. ஓம் ஹாம் ஹிருத யாயா வௌட் என்ற மந்திரத்தைக் கூறி நீரை நிரப்புக. ஓம் ஹாம் அஸ்த்ராயபட் என்ற மந்திரத்தைக் கூறி சிறிது நீர் தெளிக்க பிறகு தண்ணீர்க்குடம் பூஜைக்குரிய சாதனங்கள் வைக்க.

**விநாயகர் விரதங்கள்**

வெள்ளிக்கிழமை, சதுர்த்தி, மார்கழி மாதம் வளர்பிறைச் சஷ்டி ஆகிய நாட்களில் விநாயகரை உபவாசம் இருந்து வழிபட வேண்டும். ஆவணி வளர்பிறைச் சதுர்த்தி மிகவும் சிறந்தது.

இவர் யானைத்தலை, தேவஉடல், பூதக்கால், ஒற்றைக் கொம்பு உடையவர். .....

இவருடைய நிறம் சிவப்பு, சிவப்பு வஸ்திரம் சிவப்பு மலர்கள் விநாயகருக்கு விருப்பமானவை.

**விநாயகர் திருவிளையாடல்கள்:**

1. மாங்கனி பெற்றது 2. முருகன் வள்ளியை மணக்க உதவியது 3. தேர் அச்சு ஒடித்தது 4. பாரதம் எழுதியது 5. காவிரியை உற்பத்தி செய்தது 6. திருக் கோகரணத்தில் லிங்கத்தை நிலை பொறுத்தியது 7. ஔவையைக் கயிலை சேர்த்தது 8. கணக்குப் பிள்ளையாய்க் கடமை செய்தது. 9. படைத்த உணவை உண்டது. 10. கண் கொடுத்தது.

**விநாயகர் தத்துவம் :**

**யானை முகம் :** விலங்குகளில் பெரியது யானை. எவ்வளவு பெரிய படையாயினும் அஞ்சாது அழித்து, வெற்றி காணும் தன்மையுடையது. அன்புடன் அடிபணிபவரை முடிமேல் வைத்து உயர்த்தும் அபாரமான சிந்தனா சக்தியைக் குறிக்கும்.

**சடைமுடி:** சிவபெருமானுக்கு இருப்பதுபோல் விநாயகருக்கும் சடைமுடி உண்டு. சடைமுடி அத்திநிறம் அல்லது பவள நிறம். மின்னலைப் போன்ற ஒளி வீசும் பிறையைச் சூடியுள்ளார். உடல் தேய்ந்தாலும் பிறை களங்கமற்றது.

**மும்மதம்:** யானையின் காதுகளிலிருந்தும் கன்னங்களிலிருந்தும் மத நீர் வழியும். விநாயகருக்கு வழியும் மதநீர் மெய்ஞ்ஞானம் என்ற மதமே ஞானமதமாகிய வெள்ளத்தால் அன்பர்கள் அறியாமையாகிய மனக்கறையைக் கழுவி அவர்கள் பிறவிக் கடலில் ஆழாமல் துதிக்கையால் காப்பார்.

**முக்கண்:** சிவபிரான் கண்களைப்போலவே இவர் கண்களும் ஞாயிறு, திங்கள், தீ என்பனவாக உள்ளன. முகத்திற்கு ஏற்பக் கண்கள் பெரியவையாய் இல்லை. சிறிது சிவந்த நிறத்துடன் காணப்படுகின்றன. இரு கண்கள் புற உலகைக் காட்டும், நெற்றிக்கண் பரஞானத்தைச் சுட்டும் ஞானக் கண்ணாக உள்ளது.

**தாழ் செவி :** திருச்செவிகள் இரண்டும் உயிர்களுக்கு மலமாதிகள் தாக்காமல் காத்து வினை வெப்பம் போக்கி அருள்வன. காது முறத்தைப் போன்றது.

**கொம்புகள் :** ஒடிந்த கொம்பு துணை உறுப்பினுள் ஒன்றாகவும் இருந்து. ஆயுதமாகவும் பயன்படும். கொம்புகளைப் பதிஞானம், பாசஞானம் என்றும் கூறுவர். கொம்பு பாரதம் எழுத உறுதுணையாக இருந்தது. இடது கொம்பு பதி ஞானம். வலது பாச ஞானம்.

**ஐங்கரம் :** விநாயகருக்கு நான்கு கைகள், துதிக்கையுடன் ஐந்து கைகள் இது விநாயகர் ஐந்தெழுத்துக்குரியவர் என்பதைக் காட்டும்.

**சர்ப்ப ஆபரணம்:** மூலாதாரத்தில் குண்டலியே விநாயகர் விளங்கும் இடம். இச்சக்தி சுருண்ட நிலையிலிருந்து பாம்பு படம் விரித்து எழுந்து நின்றாற் போல மூலாதாரத்தினின்றும் சிரஸ்தானம் வரையில் பரவி, ஆன்மாவிடமாகச் சிவம் பிரகாசிக்கச் செய்யும் என்பதைக் குறிக்கும். உந்தியிலும் மார்பிலும், கழுத்திலும், நெற்றியிலும், பாம்பு படம் விரித்திருப்பது ஆறாதார நிலையில் அங்கங்கே அனுபவிகளுக்குக் கிடைக்கும் குண்டலி தரிசனத்தைக் குறிக்கும்.

**பெரு வயிறு :** அண்டாண்ட சராசரம் அனைத்தையும் அவர் தம்வயிற்றில் அடக்கி வைத்திருப்பதால் வயிறு பெரியதாய்க் காட்சி அளிக்கிறது.

**திருவடி:** ஞானமே இவர் திருவடி. அன்பர்கள் மனத்தில் பொருந்த இன்னல்கள் அகலும்.

**பெருச்சாளி வாஹனம் :** யானை உருவினரான விநாயகர் மூஷிகத்தின்மேல் அமர்ந்துள்ளது வியப்பிற்குரியது. கயாசுரனை அழிக்கத் தம் கொம்மை ஒடித்து எறிந்தார். ஆனால் அவன் அழியவில்லை. அவன் எலி உருவம் எடுத்தான் உடனே அவர் அதைத் தம் வாஹனமாகக் கொண்டார்.

**தோப்புக் கரணம் :** இது அஹங்காரத்தை அடக்கி அவரை வழிபடுவதே சரி என்பதை உணர்த்தும்.

**நன்றி :** ஸ்ரீ சுப்ரமணியசுவாமி திருக்குட நன்னீராட்டு சிறப்பு மலர் 2000, ஏர்ணாகுளம்.



உ

# மஹா மாரியம்மன் அருள் வரலாறு

செந்தமிழ் வாரிதி
டாக்டர். **இரா. செல்வகணபதி,** எம்.ஏ.பி.எச்.டி.
சென்னை.

மாரியம்மன் வழிபாடு பல நூறு ஆண்டுகளாகத் தமிழ் மக்களால் மிகுந்த விருப்பத்தோடு மேற்கொள்ளப்பட்டு வருகிறது. தமிழ்நாட்டின் பெரும்பாலான சிற்றூர்களிலும் நகரங்களிலும் மாரியம்மனுக்கு எனத் தனிக்கோயில்கள் உள்ளன. மழை வளம் வழங்கும் தெய்வம் என்றும் அம்மை முதலிய நோயை நீக்கி அருள் வழங்கும் இறைவி என்றும் சிற்றூர்களில் காவல் தெய்வம் என்றும் மாரியம்மனை வழிபட்டு வருகின்றனர். தமிழ்நாட்டில் மட்டுமின்றி இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், பர்மா, ஜாவா முதலிய கீழை நாடுகளிலும் தமிழ் மக்கள் அதிகமாக வாழும் சில மேலை நாடுகளிலும் மாரியம்மன் வழிபாடு நடைபெற்று வருகின்றது.

மாரியம்மன் அம்சமாகவே இன்று தமிழ்நாட்டில் வெவ்வேறு திருநாமங்களில் இவ்வம்மைக்குக் கோயில்கள் அமைந்துள்ளன. ஊர் எல்லையில் காவல் தெய்வமாக விளங்குதல்பற்றி எல்லையம்மன் என்றும் மழை வழங்கும் மேகத்தை ஏவல் கொள்ளுதல் பற்றி செல்லியம்மன் (செல்-மேகம்) என்றும் வெப்பு நோய்களை நீக்கியருளுதல் பற்றி அங்காளம்மன் என்றும் குளிர்ச்சியைத் தருவது பற்றி சீதளாதேவி என்றும் பல பெயர்கள் வழங்கப்பட்டு வருகின்றன. இவையன்றி ரேணுகா தேவி கருமாரி முதலிய பெயர்களிற் திகழும் அம்மையும் மாரியம்மன் அம்சமே எனக் கூறப்படுகிறது.

மாரியம்மன் வழிபாடு பற்றிய குறிப்புகளைப் பழந்தமிழ் இலக்கியங்களில் காண முடியவில்லை. தஞ்சாவூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த பிற்காலச்சோழ மரபினரே முதல் முதலாக மாரியம்மனுக்குத் தனிக்கோயில் எடுப்பித்துள்ளனர். தஞ்சாவூருக்குக் கிழக்கே ஐந்து கல் தூரத்தில் மாரியம்மன் கோயில் என்ற பெயரில் அமைந்துள்ள சிற்றூரும் அங்குள்ள ஆலயமும் கி.பி. பத்தாம் நூற்றாண்டை ஒட்டிய காலப்பகுதியில் சோழ மன்னர்களால் தோற்றுவிக்கப் பெற்றனவாகத் தெரிகின்றன. மாரியம்மனுக்கு அமைந்த முதல் தனிப்பெரும் கோயில் இதுவே எனக் கூறப்படுகிறது. எனவே கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது மாரியம்மன் வரலாறு என்பது தெளிவாக அறிய வருகிறது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரதியார் சிவசக்தி தோத்திரப்பாடல்களைப் பாடியுள்ளார் இவரே மாரியை முத்துமாரி என்ற பெயரில் சிறப்பித்துப் பாடுகிறார்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரதியார் சிவசக்தி தோத்திரப்பாடல்களைப் பாடியுள்ளார் இவரே மாரியை முத்துமாரி என்ற பெயரில் சிறப்பித்துப் பாடுகிறார். நாட்டுப்புறப் பாடல் அமைப்பில் மாரி மீது மாரியம்மன் தாலாட்டு என்ற நுல் ஒன்று பாடப்பெற்றுள்ளது ஏறத்தாழ 2500 ஆண்டுகளாக வளர்ந்து வரும் சக்தி வழிபாட்டின் ஒரு பிரிவாகவே மாரியம்மன் வழிபாடும் வளர்ந்து வந்துள்ளது.

கி.பி. 1899ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற ஆ. சிங்காரவேலு முதலியாரின் அபிதான சிந்தாமணி மாரியம்மன் வரலாறாகச் சிலசெய்திகளைத் தருகிறது. மாரி என்ற சொல்லால் குறிக்கப்பெறுபவர் ஜமதக்னி மாமுனிவரின் துணைவியாகிய ரேணுகை. இவரை ரேணுகாதேவி என்றும் குறிப்பர். ஒரு முறை கார்த்தவீர்யார்ச்சுனனின் புதல்வர்கள் ஜமதக்னி முனிவரைக் கொன்றனர். ரேணுகை கணவன் சிதைமேல் பாய்ந்து உடன்கட்டை ஏறினாள். இவ்வம்மையின் மரணத்தைத் தடுக்கும் நோக்கத்துடன் இந்திரன் வருணனை ஏவிப் பெருமழை பெய்வித்தான். சிதை அவிந்து ரேணுகை அணிந்திருந்த ஆடைகள் எரிந்து உடலெங்கும் தீக்கொப்புளங்கள் தோன்றின. சிதையிலிருந்து எழுந்த ரேணுகை ஆடை எரிந்து போயினமையால் அங்கிருந்த வேப்பிலையைப் பறித்து உடையாக அணிந்தனள். அங்கிருந்து புலைச்சேரிக்குச் சென்ற ரேணுகை பசி தீர்க்க உணவு தருமாறு அங்குள்ள மக்களை வேண்டினாள்.

அம்மையின் தோற்றத்தைக் கண்டு இவர் வேதியர் குலப் பெண் என்று கருதிய புலைச்சேரி மக்கள் தாங்கள் உண்ணும் உணவை வழங்காது பச்சரிசி, வெல்லம், மா, இளநீர், பானகம் முதலியவற்றை வழங்கினர். அவற்றை விருப்பதோடு உண்டு இளைப்பாறிய ரேணுகை அடுத்து ஒரு வண்ணார் வீதி சென்று அவர் வழங்கிய ஆடையை விரும்பி அணிந்தார். அம்மை மீண்டும் தம் கணவர் சிதை முன் சென்று வருந்தி நின்றார். அக்காலை சிவபெருமான் ரேணுகையை நோக்கி நீ, "நம் சிவசக்தி அம்சமாக வந்தவள், நீ நிலவுலகத்திலேயே கிராம தேவதையாகக் கோயில் கொண்டு வாழ்ந்திடு, கிராமப்புற மக்களுக்கு வரும் துன்பங்களையும் துயரங்களையும் நீக்கி அவர்களுக்கு அருள் செய். நீ மாரி எனப் பெயர் கொண்டு சக்தி அம்சமாக வாழ்ந்திடு" என்று வாழ்த்தியருளினார். அவ்வம்பிகை சிவபெருமான் அருளியவாறு மாரியம்மன் முதலிய பெயர்களோடு உலகில் விளங்கி மக்கள் அறநெறி தவறும் காலங்களில் வெப்பு

நோயையும், வைசூரியையும் கொடுத்து மக்களைத் திருத்தி நல் வழிபடுத்தி வருகின்றாள். மழை வேண்டும் காலங்களில் மழையைப் பொழியச் செய்து வருகின்றாள். வைசூரிக்கு இவ்வம்மையின் அருளைத்தவிர உலகில் மருந்து ஏதும் இல்லை என்பதை அனைவரும் அறிவர். இந்நோய் கண்டவர்கள் மாரியம்மனை வழிபட்டும் வேப்பிலை கொண்டு தடவச் செய்தும் ஆசார நியமங்களை மேற்கொண்டும் உடல்நலம் பெறுவதைக் காணலாம்.

**மாரியம்மனுக்கு உகந்த பொருள்கள் :**

**வேப்பிலை :** இது சக்தி அம்சமாகவும் நோய்களைத் தடுத்துக் குணப்படுத்தும் மூலிகையாகவும் திகழ்வது. வெம்மையைத் தணித்துத் தண்மையைத் தரும் இவ்விலை மாரியம்மனுக்கு உகந்த பச்சிலையாம்.

**மாவிளக்கு:** அரிசி மாவுடன் சர்க்கரை கலந்து பிசைந்து அதில் நெய் விட்டு விளக்கேற்றி அம்பிகைக்கு நிவேதனமாகப் படைத்து அதனைப் பிரசாதமாக உட்கொள்வர்.

**பானகம்:** வெல்லம் கலந்த தண்ணீர், ஏலக்காய் முதலியன இட்டுச் சுவையும் மணமும் உடையதாகத் தயாரித்துப் படைத்து உண்ணலாம்.

காவடி எடுத்து வழிபடுதல் இவ்வமைக்கு மிக உகந்ததாகும்.

**மாரியம்மனின் சிறந்த தலங்கள் :**

மாரியம்மன் எழுந்தருளியுள்ள சிறப்புடைத் தலங்களாக சமயபுரம், ஒலுங்கைமங்கலம், வலங்கைமான், சென்னை திருவேற்காடு, ஈரோடு பெரியமாரியம்மன், சக்தி மங்கலம் பன்னாரி அம்மன், சேலம் கோட்டை மாரியம்மன் அம்மாப்பேட்டை மாரியம்மன் என வழிபட்டு வருகின்றோம். நம் காவல் தெய்வமாக நோய் நீக்கி வாழ்வளிக்கும் மகாசக்தியான மாரித்தாயை என்றென்றும் வழிபட்டு வாழ்வோம்.

அம்மையை வணங்குவோம்! அருளைப் பெறுவோம்!

நன்றி : 4ஆவது சைதன்ய மகா கும்பாபிகே சிறப்புமலர்.

# தட்சிணாமூர்த்தி

சிவன் கோயிலை வலம் வரும்போது தென்புறத்தில் தக்ஷிணாமூர்த்தியின் திருவுருவத்தைக் காண்கிறோம். மகேசுவர வடிவங்கள் இருபத்தைந்தில் ஒன்று தக்ஷிணாமூர்த்தம். இவரைத் தென்முகக் கடவுள் என்பர். இவர் கல்லாலமரத்தின் கீழ் யோகாசனத்தமர்ந்து ஸனகாதி முனிவர் நால்வருக்கும் உபதேசிக்கிறார்.

முயலகனை மிதித்த திருவடியென்றும், வீராசனமாக மற்றொரு திருவடியும் வலப்புறமுள்ள கைகள் சின்முத்திரையும், ருத்திராக்ஷமும், இடதுகைகளில் ஒன்றில் அமுத கும்பமும் வேதச் சுவடியும் கொண்டிருக்கின்றன. இருபக்கங்களிலும் இரண்டிரண்டு பேராக ஸனகாதி முனிவர்கள் நால்வர் குரு உபதேசம் பெறும் முறையில் அமர்ந்திருக்கின்றனர். யோகீசுவரராய் இருந்து சின்முத்திரையை முனிவர்களுக்குக் காட்டி ஐயநீக்கம் செய்கிறார் ஈசன்.

**சின் முத்திரை :** சித்+முத்திரை ஞானத்தைக் காட்டும் அடையாளம் சின்முத்திரை என்பது வலது கையின் பெருவிரலையும், சுட்டு விரலையும், ஒன்றாய்ச் சேர்த்தும், மற்ற மூன்று விரல்களை நீட்டியும் காட்டும் அடையாளம்.

அமுத கும்பம் : இடது திருக்கரத்தில் உள்ள கலசம். சிவஞான பூரணத்தை உணர்த்தும்

ருத்திராக்ஷ மணிவடம் : திரு ஐந்தெழுத்தை உணர்த்தும்

முயலகனை மிதித்த திருவடி: ஆணவ மலம், தலை எடுக்காவண்ணம் செய்ததை உணர்த்தும்.

வீர ஆசனம் : மலம், மாசு நீங்கிச் சிவனடியார்களும் கூடுவதற்காக

வேதச் சுவடி: உண்மைப் பொருளை விளக்கும்.

கல்லால நிழல்: சாந்தத்தைத் தரும் சத்துவ குணம். தென்முகம் அநுக்கிரஹத்தை உணர்த்தும். ஸனகர், ஸனநந்தர், ஸனாதனர், ஸனத்குமாரர் நால்வரும் சீடர்கள். சிவாலயம் வருவோர் இவர் திருமுன் அமர்ந்து, மௌனத் தியானம் செய்து திருஐந்தெழுத்தை ஓதி, வணங்கிச் செல்ல வேண்டும்

இறைவனின் யோகமூர்த்தமே தக்ஷிணாமூர்த்தி. இவர் யோகத்திற்கும் ஞானத்திற்கும் உரிய கடவுள் ஆவார்.

புலித்தோலின் மேல் அமர்ந்திருப்பார். முக்கண்ணும் நாலுதோளும் உடையவர்.

வலக்கை சின்முத்திரையைக் காட்டும். இடக்கை வரதம் அல்லது தண்டம். மற்றொரு வலக்கையில் ருத்திராக்ஷமாலை, இடக்கையில் நெருப்பு, புத்தகம் அல்லது பாம்பு. அமுத கலசத்தினை அவர் ஏந்தி இருப்பார். தியானநிலையினை உணர்த்தும் முகம். தெளிவும், ஒளியும், மகிழ்வும் நிரம்பிய சாந்த நிலை. பார்வை தியான யோக பாவனையில் மூக்குநுனியை நோக்கி இருக்கும்.

**தத்துவம்:**

1. இவரது பளிங்கு போன்ற வெண்ணிறத் திருமேனி, அவர் உலகப் பொருள் ஒன்றிலும் தோயாது தூயவராக விளங்குதலை உணர்த்தும்.
2. எல்லாத் தீமைகளையும் அடக்கியாளும் வலிமையுடையவர் என்பதற்கு அடையாளமாகத் தம் வலக் காலால் முயலகனை மிதித்துக் கொண்டு வீற்றிருக்கிறார்.
3. திருக்கையில் உள்ள சிவஞான போதம், எல்லா ஞானங்களையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு திகழ்கிறது. ஞானத்தாலே வீடு பேறு எய்தல் இயலும் என்பதை இது காட்டுகிறது.
4. ருத்திராக்ஷ மாலை 36 அல்லது 96 தத்துவங்களை உணர்த்துகிறது. திருவைந்தெழுத்தை ருத்ராக்ஷ மாலை கொண்டு ஜபித்தால் ஞானம் அடையலாம்.
5. இடக்கையில் அமிர்த கலசம் ஏந்திக் கொண்டிருந்தால் அனைத்துயிர்க்கும் பேரின்பத்தை அளிக்க வல்லவர் என அறிவிக்கிறது.
6. புலித்தோலில் அமர்ந்திருப்பது தீய சக்திகளை அடக்கி ஆளும் ஆற்றல் மிக்கவர் என்பதைக் காட்டுகிறது.
7. ஆலமரமும் அதன் நிழலும் மாயையையும் அதன் காரியம் ஆகிய உலகையும் சுட்டுகின்றன.
8. வடக்கு முகமாகவேனும் கிழக்கு முகமாகவேனும் தியானம் செய்ய வேண்டும் என்பது விதி.
9. உடல்மீது அணிந்துள்ள பாம்பு, குண்டலி சக்தியின் அறிகுறியாகத் திகழ்கிறது.
10. சின்முத்திரை ஞானப் பொருளின் அடையாளமாகும்.

நன்றி : ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்குட நன்னீராட்டுவிழா மலர், ஏர்ணாகுளம்.



# கந்தனின் கவின்மிகு கோலங்கள்

வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன்
திருவல்லிக்கேணி, சென்னை – 5.

ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம் திருநாமம் பாடிப் பரவுவது வழிபாடு. வழிபாட்டிற்குரிய முதல் அங்கமாகத் திகழ்வது இறைவன் திருவுருவம். இப்படியன் இந்நிறத்தன் என்ற எழுதிக் காட்டொணா இறைவனை நம் முன்னோர் எப்படியெல்லாம் கண்டு மகிழ்ந்து வணங்கி நமக்கும் காட்டிச் சென்றுள்ளனர் என்பதை நினைக்கும் போது வியப்பாகவே உள்ளது. இறைவன் தனது பெருங்கருணையால் வேண்டுவார்க்கு வேண்டும் வடிவங்களில் திருக்காட்சி தந்தருளியதோடு அக்கோலங்களில் தன்னை வழிபடுவோர்க்கும் என்றும் அருளைச் சொரிகின்றான். இதுவே இந்து சமயத்தின் தனிச் சிறப்பும் மாண்பும் ஆகும்.

இவ்வுலகுக்கு எந்நாளும் அருள்புரிவதற்காக வெளிப்படஒரு மின்னல் சக்தியே முருகன். ஸ்கந்த என்ற வடமொழிச் சொல்லுக்கு வெளிப்படுதல் என்று பொருள். மேகத்திலிருந்து மின்னல் வெளிப்படுதல் போன்று சிவஜோதியிலிருந்து வெளிப்பட ஆறு பொறிகள் ஆறுமுக சுவாமியாகி ஸ்கந்தன் எனப் பெயர் கொண்டது. ஆகவே சிவசக்தி ஜோதியில் ஜனித்த பேரொளிப் பிழம்பாக முருகன் திகழ்கின்றான். அவன் பரம்பராக்ரமசாலி பேரருட் சக்தி வடிவினில் ஞான பலமும் முருகனுக்கே அதிகம் என்று காட்டவே சிவபெருமானும் முருகவேளிடம் உபதேசம் பெற்றுக் கொண்டார்.

தீப்பொறியாகத் தோன்றி வானிலிருந்து வாயுவால் சுமந்து வரப்பெற்று கங்கையில் விடப்பெற்று, சரவணப் பொய்கையில் வளர்ந்த முருகன் தீ, வான், வாயு, நீர், பூமி என்னும் ஐம்பூதத் தொடர்புடையவனாகத் திகழ்கிறான். நெருப்பையும் எரிக்கும் ஞானக்கினியாக முருகன் விளங்குகிறது.

தந்தை–நெருப்பு; தாய்–நீர் (கங்கை;) மகனே ஜோதி வடிவினன். தந்தை–ஸ்தாணு (மரம்) தாய் – அபர்ணா (கொடி மகனே – விசாகன் (கீழ்க்கன்று) என்ற நயமும் முருகன் தத்துவத்தில் காணப்படுகிறது.

சிவபெருமானின் ஐந்து முகத்தோடு சக்தியின்முகமும் (சித்சக்தியாகிய ஆறாவதறிவுக்குப் பொருளாவது அதோமுகம்) சேர்ந்து ஆறுமுகமாயிற்று முருகனிடத்தில் மூன்று சக்திகள் உள்ளன. அவை

1. இச்சா சக்தி – (விழைவாற்றல்) வள்ளி – இகம்
2. கிரியா சக்தி – (செயலாற்றல்) தேவயானை – பரம்
3. ஞானசக்தி – (அறிவாற்றல்) வேல் – வீடு

இச்சா சக்தியின் வடிவமே வள்ளியம்மை. இவள் கரிய நிறம் உடையவள் முருகனின் வலப்பக்கத்தில் வீற்றிருப்பார். கையில் தாமரை ஏந்திருப்பார் போகியாய் இருந்து உயிர்க்குப்போகத்தைப் புரிதல் இறைவன் தன்மையாதலின் தன் உலகில் இவ்வாழ்க்கை நடத்தற் பொருட்டு முருகன் வள்ளியம்மையாரொடு தன் ஒரு திருமுகத்தை பேசி, மகிழ்ந்து நகையமர்ந்திருக்கின்றான்.

முருகன் மற்றொரு சக்தி தெய்வானை. இவ்வம்மையை மறுஇல் கற்பின் வாணுதல் என்று நக்கீரர் போற்றுவார். கிரியா சக்தியாகிய தெய்வானையம்மை செந்நிறம் வாய்ந்தவர்.முருகனின் இடப்பால் விளங்குபவர். கருங்குவளை மலரைக் கையிலே ஏந்தியிருப்பவர்.

முருகனிடம் அமைந்த மூன்றாவது சக்தி ஞானசக்தி அதுவே வேலாயுதமாக விளங்குகிறது. வெல்லும் தன்மையுடையது வேல். எல்லாவற்றையும் வெல்வது அறிவாற்றல். அறிவு ஆழமும் அகலமும் கூர்மையும் உடையது. சக்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும் என்பது சிவஞான சித்தியார் வாக்கு. ஞானமே அஞ்ஞானத்தை வெல்ல வல்லது.

முருகன் என்றவுடன் அவனது மயிலும் சேவலும் நம் கண் முன் நிற்கின்றன. முருகனுக்கு மூன்று மயில்கள் உண்டு. சூரபத்மனை அழிக்கும் முன்னரே முருகனுக்கு மயில் வாகனம் இருந்தது. இந்திரனும் மயிலாக முருகனைத் தாங்கினான். சூரன் அழிந்தபின் அவனது ஒரு பாதி மயிலாகியது. மயில் தனது அழகால் யாவரையும் மயக்கவல்லது. எனவே அதனை மாயை என்பர். கோழி ஊர்த்துவ மாயை மயில் அதோ மாயை. கோழி நாத தத்துவம் எனில் மயில் விந்து தத்துவம். நாதம் வடிவினது. விந்து ஒளி வடிவினது. விந்து தத்துவம் ஆகிய மயில் கண் கவரும் ஒளியுடையதாய் பலவகை நிறங்களைக் கொண்டு திகழ்தல் காணலாம். தோகையை விரித்து ஆடும் மயிலின் தோற்றம் ஓங்காரம் போல் ஒளிர்தல் பற்றியே ஓங்காரத்துள்ளே முருகன் உருவங்கண்டு தூங்குதல் வேண்டும் என்று கந்தபுராணம் கூறுகின்றது. சேவலாகிய கோழி ஒளியை விரும்புவது. எனவே அது அறியாமை இருளைப்போக்கி மெய்யறிவாகிய ஒளியைப் பரப்பும் முருகனின் கொடியாக விளங்குவது பொருத்தமே. வைகறையில் கோழி கூவுதல் ஓங்கார மந்திரத்தை ஒலி வடிவால் உலகுக் கு உணர்த்துவதாகும். முருகப் பெருமான் கோழிக் கொடி ஏந்தி நம்ம மயெல்லாம் சிவஞானப் பேரொளியைத் துய்க்கச் செய்தருளுகின்றார்.

முருகனுடைய பல்வேறு வடிவங்கள் பற்றியும் கோயில்கள் பற்றியும் பண்டைய வடமொழிப் புராண நூல்களிலும் ஆகமங்களிலும் விரிவாகக் காட்டப் பெற்றுள்ளன. ஊரின் வடபுறத்தில் தான் முருகனுக்குக் கோயில் கட்டவேண்டும் என்று அக்கினி புராணம் கூறும்.

குப்த காலத்தைச் சேர்ந்த ஸம்ஹிதை என்னும் நூல் (கி.பி. 5ஆம் நூற்றாண்டு) முருகனை இளைஞனாக மயில் மீது அமர்ந்த கோலத்தில் கையில் வேலுடன் விளங்குமாறு அமைக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறது.

விஷ்ணு தருமோத்திரம் என்ற நூலில் முருகவேள் ஆறு முகங்களுடனும் நான்குகைகளுடனும் எழில்மிக்க மயில்மீது அமர்ந்தவனாகவும் தலையில் குடுமியும் வலக்கையில் கோழியும் மணியும் இடக்கையில் வெற்றிக் கொடியும் வேலும் கொண்டவனாகவும் காட்டப்படுகிறது.

சமரங்கன சூத்திரம் என்ற நுலில் முருகன் அழகிய இளம் பிள்ளையாக ஒரு முகம் அல்லது ஆறு முகங்கள் கொண்டவானாகக் காட்டப்படுகின்றது. நகரங்களில் வைக்கப்பெறும் வடிவங்களில் 12 கரங்களும் கிராமங்களில் வைக்கப்பெறும் வடிவங்களில் இரண்டு கரங்களும் ஏனைய இடங்களில் ஆறு கரங்களிலும் இருக்கலாம் எனக் கூறப்படுகிறது.

சிவபுராணத்தில் முருகவேள் நான்கு கரங்கள் கொண்வராகக் காட்டப் பெறுகிறார். அவர் சாத்துவிக வடிவம் ஏற்கும் போது ஒரு முகம் இரு கரங்களும் கொண்டு திகழ்கின்றார். அவரது கரங்களில் சக்தி ஆயுதமும் தாமரையும் திகழ்கின்றன. அவரது இராஜஸ வடிவத்தில் ஒரு முகமும் நான்கு கரங்களும் முறையே வஜ்ரம் சக்தி அபய, வரதம் என்ற நிலையில் கொண்டு காட்சியளிக்கின்றார். சக்தி வஜ்ரம் வாள் திரிசூலம் பாசம் தனுசு சக்கரம் கேடயம் குக்குடம், அங்குசம் ஆகிய ஆயுதங்களுடன் இரு கரங்கள் அபய வரதமாகத் திகழ்கின்றன. சனத்குமார பிரச்ன குமார தந்திரம் என்ற நூலில்,

1.ஞானசக்தித‌ரன் 2. ஸ்கந்தன் 3.அக்னிஜாதா 4.சௌரபேயன் 5.காங்கேயன் 6.சரவணபவன் 7.கார்த்திகேயன் 8.குமாரன் 9.சண்முகம் 10.தாரகாரி 11.சேனாதிபதி 12.குகன் 13.பிரம்மசாரி 14.சிவதேசிகன். 15.கிரௌஞ்சதாரி 16. சிகி வாகனர் என்ற பெயர்கள் முருகனது 16 வடிவங்களாகக் கூறப்பட்டுள்ளன.

பேரறிஞர் டி.ஏ. கோபிநாதராவ் அவர்கள் குமார தந்திரம் எனற நூலில் மற்றொரு வகையான 16 வடிவங்களைக் காட்டுகிறார்.

1.சக்திதரன் 2.ஸ்கந்தன் 3.தேசேனாதிபதி 4.சுப்ரமணியன் 5.கஜவாகனன் 6.சரவணபவன் 7.கார்த்திகேயன் 8.குமாரன் 9. சண்முகன் 10.தாரகாரி 11.சேனானி 12.பிரம்ம சாஸ்தா 13.வள்ளி கல்யாணசுந்தரர் 14.பாலசுவாமி 15.கிரௌஞ்ச பேதனர் 16 சிகிவாகனர்.

மைசூர் கிருஷ்ணராஜா என்பவர் தொகுத்த ஸ்ரீதத்வநிதி என்ற நூலில் 17 வடிவங்கள் கூறப்பட்டுள்ளன. அதில் சனத்குமார ப்ரசன் குமாரதந்திரம் என்ற சிற்ப நூலில் கூறப்பட 16 வடிவங்களுடன் வேலாயுத சுப்ரமண்யர் என்ற வடிவமும் சேர்ந்துள்ளது. (இந்நூலைத்

தஞ்சை சரஸ்வதி மஹால் நூல்நிலையம் பதிப்பித்துள்ளது). அருணகிரி நாத சுவாமிகள் முருகப் பெருமானைப் பாடியுள்ள பாங்கில் காணும் போது முருகவேளின் வடிவங்களைக் கீழ்க்கண்டவாறு பிரித்துக் குறிப்பிடலாம்.

குழந்தை வடிவங்கள் 1.பாலசுப்பிரமணியன் 2.காங்கேயன் 3.கார்த்திகேயன் 4.குழந்தைவேலன் 5.சரவணபவன் 6.ஸ்கந்தன்

பிரம்மசாரி வடிவங்கள்: 1தேசிக சுப்ரமண்யன் 2.குருபரன் 3.ஞானசக்திதரன்

தவ வடிவம் : யோகாசார்ய மூர்த்தி

பராக்ரம வடிவம்: 1.அஜாரூடர் 2.பிரம்மசாஸ்தா 3.வில்லேந்திய வேலன் 4.கஜாருடர் 5.சேனாபதி 6.சிகிவாகனன் 7.தாரகாரி 8. கிரௌஞ்சபேதனர் 9.சகலகலா வல்லப மூர்த்தி 10.வராஹோான்மத்த பங்கமூர்த்தி

தேவியருடன் கூடிய வடிவங்கள்: 1.தேவசேனாபதி 2.வள்ளி கல்யாணமூர்த்தி 3.சண்முகர் 4.குமாரர்

பிற வடிவங்கள்: 1.குகன் 2.ஹ்ருதயகமல மூர்த்தி (இதயத் தாமரையில் விளங்குபவன்) 3.சிவனை வழிபடும் முருகன் 4.சதாசிவ மூர்த்தி 5.யாகரட்சக மூர்த்தி 6.விசுவரூப மூர்த்தி 7. நடனமூர்த்தி 8. அகத்தியருக்கு உபதேசம்.

தலமூர்த்திகள்: 1.சிதம்பரம் வடிவங்கள் 2.காஞ்சி குமர வடிவங்கள் 3.சீர்காழி திருஞானசம்பந்த முருகன் 4.திருச்செந்தூர் வடிவங்கள் (அலைவாயுகந்த பெருமான்) 5.திருத்தணிகை வடிவங்கள் 6.திருப்பழநி வடிவங்கள் 7.திருவருணை வடிவங்கள் என்று இவ்வாறாகத் திருப்புகழில் அருணகிரிநாதர் முருகனது வடிவங்களைப் போற்றுகிறார்.

**1. ஞானசக்திதரன்**

ஞானசக்தியைத் தரித்தவன் என்று பொருள்தரும். இத்திரு பெயருடன் விளங்கும் முருவேள் ஞானசக்தியாகிய வேலினைத் தமது வலக்கையில் ஏந்தி, இடக்கையைக் கட்யவலம்பித (இடுப்பில் வைத்து) முத்திரையுடன் காட்சியளிக்கும் இவ்வடிவம் குமார தந்திரத்தில் ஒரு முகமும் இரு கரங்களும்கொண்ட கோலமாகக் காட்டப்படுகிறது.

திருத்தணிகை மூலவர் ஞானசக்திதரர் வடிவம். திருச்சி மாவட்டம் பழுவூரிலும் தஞ்சை மாவட்டம் திருவையாறு அருகில் உள்ள திருக்கண்டியூரிலும் (அஷ்ட வீரட்தலம்) ஞானசக்திதரர் வடிவம் வலக்கையில் ஜபமாலையும் இடக்கரத்தில் வஜ்ர சக்தியும் கொண்டு திகழ்கிறார். இவரை ஞானஸ்கந்தர் என்று அழைக்கிறார்கள். ஞானசக்திரர் வடிவ அமைப்பை (குமார தந்திரத்தில் உள்ளது போல்) கவிராட்சசக் கச்சியப்பமுனிவர் இயற்றிய தணிகைப் புராணம் கீழ்வருமாறு காட்டுகிறது.

இச்சா ஞானக் கிரியை எனும் இவை மூன்றிலையாய்க் கிளைத்தெழுந்திட்டு
அச்சான் ஆழி யறச்சுவற்றும் அயில்வேல் ஒருகை வலத்தமைத்து
நச்சா தவரைத் தெறும்ஒருகை நளினக் குறங்கின் அமைத்திமையோர்
விச்சா தரர்சூழ் ஞானசக்தி தரனது உருவம் விதிப்போரும்

– அகத்தியன் அருள் பெறு படலம் – 64

வெற்றியைத்தரும் வேலைக் கையிலேந்தியவன் ஆதலின் இம் மூர்த்தியை வழிபட எடுத்த காரியம் யாவிலும் வெற்றிகிட்டும்.

**2.கந்தசுவாமி**

ஸ்கந்தன் என்று வடமொழியிலும் கந்தன் என்று தமிழிலும் போற்றப் பெறுகின்றான் முருகன். ஸ்கந்தன் என்ற சொல்லுக்கு வெளிப்படுவேன் என்று பொருள் கந்து-நடுதறி யாவர்க்கும் பற்றுக் கோடாய்த் திகழ்பவன் ஆன்மாவைக் கட்டும் நடுதறி. கந்து என்ற சொல்லுக்குத் தண்டாயுதம் என்று பொருள் கொண்டால் தண்டாயுதம் கொண்டவன் என்ற பொருளும் வரும். சுவாமிமலையில் சுவாமிநாதப் பெருமான் கந்தசுவாமி வடிவமே.

நின்ற கோலத்தில் ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டவர் கந்தசுவாமி. வலக்கரத்தில் தண்டாயுதம் இடக்கரம் குளங்கத்திலும் (இடுப்பில் ஊன்றியவாறு) உருத்திராக்கம் மணிவடம் அணிந்து கோவணிதாரியாக விளங்குகிறார் என்று குமாரதந்திரம் காட்டுகிறது.

ஸ்ரீதத்வ நிதியில் ஒரு முகமும் நான்கு கரங்களும் முறையே அபயம், வரதம் கோழி, வஜ்ரசக்தி கொண்டு திகழ்கின்றன. தாமரைமீது அமர்ந்து கரண்ட மகுடமுடன் விளங்குகிறார் கந்தன். தணிகைப் புராணத்தில் கூறப்பபடும் கந்தன் திருவுருவம் பழநி தண்டாயுதபாணியையே உறுதிப்படுத்தும்.

வைவாய்க் கணிச்சிப் படையென்ன வதிவித் திடுங்கோ வணத்தண்டு
கைவாய் வலத்தின் அமைத்தருளி கடியில் இடக்கை பதித்தருளி
ஜவாய் வழங்கும் பொறிபுலனை யவித்த வறுவர் இமையவர்கள்
உய்வான் இறைஞ்ச அருள்வழகும் கந்தன் உருவம் உஞற்றுநரும்

– அகத்தியன் அருள்பெறு படலம் 65

கந்தன் எனும் சொல் அரும்பெரும் சொல், கந்தரனுபூதி கந்தரலங்காரம் கந்தரந்தாதி, கந்தர்கலிவெண்பா, கந்தபுராணம், என்பவை இதனை வலியுறுத்தும்.

### 3. தேவசேனாதிபதி

தேவயானையில் கணவன் என்ற பொருள்படும். இப்பெயர் தேசேனையுடன் விளங்கும் முருகனைக் காட்டுகிறது. தேவேந்திரன் மகளாக ஐராவதத்தில் வளர்க்கப் பெற்ற தேவயானையைத் திருப்பரங்குன்றத்தில் முருகவேள் திருமணம் செய்து கொண்டதைக் கந்தபுராணம் விரித்துக் கூறுகிறது.

தேவசேனாபதி வடிவத்தில் முருகவேள் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டவராய்த் தேவயானையம்மையைத் தனது இடப்பாகத்தில் ஒரு கையால் அணைத்த நிலையிலும் மற்றொரு கரம் அஞ்சேல் என்று அடியார்களுக்கு அபயம் அளிக்கவும் ஏனைய 10 கரங்களிலும் முறையே சக்தி, சூலம், அம்பு, வாள், தண்டு, வஜ்ரசக்தி, கோழிக்கொடி, வில், கேடயம், தாமரை மலர் ஆகியவற்றைத் தாங்கி விளங்குகின்றார்.

ஸ்ரீ தத்துவநிதியில் ஒரு முகமும் நான்கு கரங்களையும் கொண்டு சங்கம் சக்ரம் அபயவரதமுத்திரையுடன் விளங்குகிறார் என்று கூறும். இவ்வரிய அமைப்பைச் சென்னிமலையில் கண்டு இன்புறலாம்.

தணிகைப் புராணத்தில் தேவசேனாதிபதி வடிவம். தெய்வ யானையைத் தழுவிய கோலமாகவே காட்டப்பெறுகின்றது.

ஒருகை தனது வலக்குறங்கின் அணங்கைத் தழுவி யுகளமுலை
மருவ அபயம் ஒன்றாக வளர்தோல் வாள்சூ லம்குலிசம்
பொருவேல் வாள்வில் கதைபுள்ளம் புயங்கோல் பத்தும் கரம்பத்தின்
இருவும் ஆறு முகத்தேவ சேனா பதிசீ ரிழைப்போரும் – அகத்தியன் அருள்பெறு படலம்

மங்களமான மணவாழ்வு பெறத் தேவசேனாதிபதி மூர்த்தியை வழிபடவேண்டும்.

### 4. சுப்பிரமணியர்

வேதத்துக்கும் வேதியர்களுக்கும் முதல்வர் என்னும் பொருள் கொண்ட முருகவேள் திருப்பெயரே சுப்பரமணியர் என்பதாகும். பரம்பன் சுவாமிகள் கருத்தின்படி இன்பத்தினையே இயல்பாகவுடைய சிவபரம் பொளுளினின்றும் தோன்றி அதனின் வேறல்லதாய் விளங்குபவன் (சு-பிரமம், ந்யம் (ணியம்) சு-சுகம் ஆனந்தம் பிரம்ம-சிவபரம்பொருள். ந்யம் (ண்யம்) – அதனின்றும் தோன்றி ஒளிர்வது. சிவபிரானும் முருகனும் தம்முள் ஒருவரேயன்றித் தமக்குள் பேதம் இல்லாதவர் என்பதும் பெறப்படும்.

ஒரு முகமும் இருகரங்களும் கொண்ட இவ்வடிவத்தில் முருகனே தனது வலக்கையால் அபயமுத்திரை காட்டி, இடக்கையை இடுப்பில் வைத்தவராய்த் திகழ்கிறார். மற்றொரு குறிப்பில் ஒரு முகமும் நான்கு கைகளும் முறையே கோழி தாமரை அபய

வரத முத்திரையுடன தோள்களில் கேயூரமும் மார்பில் மாலைகளும் கொண்டு திகழ்கிறார். தணிகை புராணம் காட்டும் சுப்ரமணியர் திருவுருவம் ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டு அமைகிறது.

இருள்கால் சீக்கும் மணிக்கடக இடக்கை கடியிற் கொளவிருவி
வெருள்கா லுளத்தோர்க்கு அஞ்சல்என விரவும் பயஞ்சா டபயமெனத்
தெருள்கா லொருகை வலத்தமைத்துத் திகழ்ந்து பணிவோர் தமக்கெல்லாம்
அருள்கால் விழிச்சுப் பிரமணிய அண்ணல் உருவம் அமைப்போரும்

– அகத்தியன் அருள்பெறு படலம் 67

அட்டவீரட்டத் தலங்களில் ஒன்றான திருக்கடவூர் அருகிலுள்ள திருவிடைக்கழி சுப்ரமணியர் இத் திருக்கோலத்திலேயே திகழ்கிறார். அவரது புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயின் அழகொன்றே போதும்! அந்தத் திருக்கை வடிவேலழகிய பெருமானையே பார்த்துக்கொண்டே நிற்காலம் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும்!

ஆனந்தத்தையே சொரூப லட்சணமாக உடைய சுப்பிரமணிய மூர்த்தியை வழிபட, வினைகள் நீங்கி ஆனந்தப் பேறு பெறலாம்.

**5.களிற்றூர்திப் பெருமான் (கஜ வாகனர்)**

முருகவேள் யானையை வாகனமாகக் கொண்டு எழுந்தருளிய கோலம் இது. கஜாரூடர் கஜவாகனர் என்றும் அழக்கப்பெறுவார். மிகப் பழைமையான கோயில்கள் பலவற்றில் முருகன் சந்நிதியின் முன்பாக யானை வாகனமே இருக்கக் காணலாம். (திருத்தணிகை, சுவாமிமலை, உத்தரமேரூர்). ஐராவதம் முருகவேளுக்கு வாகனமாக இருந்ததைக் கந்தபுராணம் காட்டுகிறது.

சங்க இலக்கியங்களில் யானை வாகனத்தில் முருகன் வருவதைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அருள் செய்வதற்கும் போர் புரிவதற்கும் எழுந்தருளும் போது, முருகவேள் பிணிமுகம் என்னும் யானை மேற்செல்வார். அடியாார் துயர்தீர்க்க முருகவேள் யானை வாகனமேறிவருவதைச் சிதம்பரம் திருப்புகழில் அருணகிரியார் குறிப்பிடுவார். யானை மீது முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு எழுந்தருளும் இக்கோலத்தில் குக்குடம் சக்தி ஏந்தியும் அபயவரதமாக இருகரங்களுமாகக் குமார தந்திரம் காட்டுகிறது.மற்றொரு குறிப்பில் வேல், வாள், கோழிக்கொடி வரமுத்திரை கொண்டதாக விளங்குகிறார்.

சிதம்பரம் கீழக்கோபுர வாயிலில் உள்ள கஜாரூடர் திருவுருவத்தை அருணகிரிநாதர் கீழ்க்கோபுர வாயிலில் முருகனை பாடும்போது குறிப்பிடுகிறார். திருமருகல், வள்ளிமலை அருகில் உள்ள மேல்பாடி ஆகிய கோயில்களில் கஜவாகன வடிவங்கள் உள்ளன.

களிற்றூர்திப் பெருமானின் திருவுருவ அமைப்பினைத் தணிகைப் புராணம் குக்குடம் (கோழி, வாள், வேல் ஆகியவற்றுடன் ஒரு கரம் வரமுத்திரையிலும் உள்ளதாகக் காட்டுகிறது.

ஒற்றை முகமும் இணைவிழியும் உம்மைப் பயனும் ஒருங்களிக்கும்
கொற்ற வரத மூன்றலைக்குக் குடமோர் இரண்டும் இடங்கதிர்ப்ப
மற்றை வலப்பான் மணிவேலும் வாளுங் கதிர்ப்பக் கரநான்கும்
பெற்ற மதவெங் களிற்றூர்திப் பெருமான் உருவம் சமைப்போரும்

– அகத்தியன் அருள்பெறுபடலம் 68

கஜவாகனப் பெருமானைப் வழிபடத் துன்பங்கள் நீங்கி மன நிம்மதி உண்டாகும்.

**6. சரவணபவன்**

சிவபெருமான் நெற்றிக் கண்ணிலிருந்து வெளிப்பட்ட ஆறு தீப் பொறிகள் ஆறு குழந்தைகளாகி நாணற்புற் நிறைந்த சரவணப்பொய்கையில் தாமரை மலர்களில் வீற்றிருந்தன. (சரம்-நாணல்) சரவணன் என்பது சிவபிரானையும் திருமாலையும் குறிக்கும் பெயர் என்றும் முருகனுக்குச் சரவணபவன் எனப் பெயர் வழங்குவதால் அவன் அவ்விருவர் தம் இயல்புகளையும் பொருந்தி நிற்பவன் என்றும் திருச்செந்தூர்ப் புராணம் கூறும்.

குமார தந்திரம் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு சக்தி, மணி, கோழிக்கொடி தாமரைமலர், கோழி, பாசம், தண்டம் உளி, அம்பு, வில் ஆகியவற்றுடன் அபய வரதமாகவும் மஞ்சள் வர்ண மேனியாய்த் திகழ்கிறார் என்றுரைக்கும்.

ஸ்ரீதத்வ நிதி, ஒருமுகமும், ஆறு கரங்களும் கொண்ட சரவணபவன் சிங்கத்தின் மீது எழுந்தருளியுள்ளாதகக் குறிப்பிடுகிறது. ஆறு கரங்களில் முறையே மலர் அம்புகள் கரும்பு, வில், கத்தி , கேடயம், வஜ்ரம், கோழி ஆகியவை ஏந்தியுள்ள இவ்வரிய அமைப்பைச் சென்னிமலையில் கண்டுகளிக்கலாம். திருப்போரூரில் சரவணபவன் ஒரு முகம் நான்கு கரங்களுடன் சிம்ம வாககனத்தில் காட்சியளிக்கிறார்.

அறுமுகம் பன்னிரு கரங்கள் கொண்ட சரவணபவன் வடிவைத் தணிகைப்புராண ஆசிரியர் காட்டும் விதம் இதோ,

ஞாங்கர்ப் படைகே டகம்கண்டை நளினம் சேவல் கதை யிடங்கம்
ஓங்கும் பகழி வாள்வரதம் ஒளிரும் அபயம் சிலையவைதாம்
தாங்கும் கரங்கள் ஈராறும் தயங்கும் வதனம் ஓராறும்
ஆங்க விளங்க அருட் சரவ ணபவன் உருவம் ஆக்குநரும்

மங்கலம், ஒளி, கொடை, சத்துவம், வீரம் ஆகிய பேறுகளை இம்மூர்த்தியை வழிபடப் பெற்று இன்புறலாம்.

**7. கார்த்திகேயன்**

கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பெற்றதால் கார்த்திகேயன் என்று போற்றப்பெறும் முருகன் வட இந்தியாவில் பெரும்பாலும் இப்பெயரிலேயே அழைக்கப்பெறுகிறான்.

ஆறு முகங்களும் ஆறு கரங்களும் கொண்ட கார்த்திகேயன் வடிவத்தில் சக்தி , வாள், குலிசம் (வச்சிரம்), கேடயம் ஆகிய ஆயுதங்களுடன் இரு கரங்கள் அபய வரதமாகவும் ஏழு ஞாயிறு வண்ணமுடன் விளங்குவதாகக் குமாரதந்திரம் கூறுகிறது. தணிகைப் புராணம்

சீர்த்த குலிசம் கேடகமே செழித்த வரதம் இடப்பானும்
கூர்த்த மணிவேல் வாள் அபயம் குலாவு வலப்பா லும்கவின
ஏர்த்த ஆறு மலர்க்கரமும் இலங்கும் வதனம் ஓராறும்
சூர்த்த பிணிகள் தபுங்கார்த்தி கேயன் உருவம் தொகுப்போரும் (70)

எனக் கூறுகிறது. கும்பகோணம் ஆதிகும்பேச்வர சுவாமி கோயிலில் விளங்கும் கார்த்திகேயன் ஆறுமுகமும், ஆறு கரங்களும் கொண்டு கரங்களில் முறையே ஜபமாலை, கட்கம், வஜ்ரம், கேடயம் ஆகியவற்றுடன் வலது கரம் அபய முத்திரையுடனும் இடக்கை மடித்துள்ள அமைப்பிலும் உள்ளான்.

தாராசுரம் ஐராவதேவரர் கோயிலில் கார்த்திகேய வடிவம் ஆறு முகத்துடன் ஒரு கரம் அபய முத்திரையும் மற்றவைகளில் ஜபமாலை, கத்தி, வாள், கேடயம், கோழி ஆகியவை ஏந்தியும் மயில் வாகனத்துடன் விளங்குகிறார். மணிமகுடம் தரித்த ஆறுமுகங்கள் மிகவும் அற்புதமாக உள்ளன.

ஸ்ரீதத்வநிதியில் கார்த்திகேயன் வடிவம் ஒரு முகமும் பத்துக்கரங்களும் கொண்டதாகவும் அவைகளில் சூலம், சக்கரம், அங்குசம், சக்தி, தோமரம் (உலக்கை), பாசம், சங்கம், வஜ்ரம் ஆகியவைகளுடன் இரு கரங்கள் அபய வரதமாகவும் உள்ளன. அவரருகே மயில் நிற்கின்றது. அவர் தலையில் விலவ பத்ரம் அல்லது பழம் சூடியுள்ளார் என்று கூறுகிறது. கார்த்திகேயனைக் கார்த்திகை நாளில் பூஜிப்போர் இகபர சௌபாக்யங்களைப் பெறுவர்.

**8. குமாரசுவாமி**

சுவாமி என்ற சொல்லும் குமரன் என்ற சொல்லும் முருகனையே குறிப்பன. சிவபிரான் தமது நெற்றிக் கண்ணினால் மாரனை எரித்தார் அது நிக்கிரகம். அவர் தமது நெற்றிக் கண்ணிலிருந்து குமாரனை அளித்தார். அது அநுக்கிரகம்.

குமாரன் என்ற சொல்லுக்கு மலப்பிணியை அழிப்பவன் என்று பொருள். குமார தந்திரத்தில் குமார வடிவம் ஒரு முகமும் நான்கு கரங்களில் சக்தி, வாள், கோழிக்கொடி, கேடகம் ஆகியவை ஏந்தியும் காட்டப்பெறுகிறார். இவ்வமைப்பைக் கங்கைகொண்ட சோழபுரம் ராஜேந்திர சோழன் கட்டிய பெருங்கோயிலில் பஞ்சலோகப் படிமத்தில் கண்டு மகிழலாம்.

தணிகைப் புராணத்தில் குறிப்பிடப்பெறும் குமாரர் வடிவம் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு அருகே வள்ளி நிற்கக் காட்சியளிக்கிறார்.

வைந்தத சுடர்வேல் வாள்இரண்டும் வலப்பால் இடப்பால் வராணப்புள்
பைத்த மணித்தோள் ஓரிரண்டும் பயில அலர்ந்த நாற்கரமும்
முத்த முறுவற் குறமாது விளங்க முன்வந் தடுத்துமலக்
கொத்து விளியக் கடைக்கணிக்கும் குமாரன் உருவம் குயிற்றுநரும் (71)

குற்றாலத்துக்கருகிலுள்ள குமாரர் கோயிலில் குமாரர் வள்ளியுடன் திகழ்கிறார். இவரது இரண்டு கரங்கள் ஒன்று அபயமாகவும் மற்றொன்று வரதமாகவும் உள்ளது. ஸ்ரீதத்வ நிதியில் குமாரசுவாமி ஒரு முகமும் இரண்டு கரங்களில் கத்தி, கேடயம் ஆகியவைகளுடன் மற்ற கரங்கள் அபய வரமுத்திரைகளுடன் குறிப்பிடப்பெறுகிறது. ஆணவ மலநீக்கம் பெற இப்பெருமானை வணங்குதல் வேண்டும்.

**9. சண்முகர் ஆறுமுகசுவாமி**

முருகவேள் அடியார்களுக்கு அஞ்சுமுகம் (இடுக்கண்) தோன்றும் போதெல்லாம் தமது ஆறுமுகம் கொண்டு ஆறுதல் தந்தருள் புரிகின்றான். இறைமைக் குணங்கள் ஆறு ஞானம், ஐசுவரியம், திரு, வீரியம், வைராக்கியம், புகழ் என்ற ஆறும் அவரது முகங்களாகத் திகழ்கின்றன. ஆறுமுகப் பெருமான் தமது வலப் பக்கத்தில் வள்ளியம்மையாரையும் இடப்பக்கத்தில் தெய்வாயனையம்மையாரையும் மயில்மீது இவர்ந்தோ உடனிருக்கவோ அமைந்த கோலம் இவ்வடிவம். இப்பெருமான் தனது வலக்கைகளில் வேல் (சக்தி). அம்பு, வாள், கோழிக்கொடி, திகரி (கதை) ஆகியவைகளுடன் ஒரு கரம் அபயமாகவும் இடக்கைகள் ஒன்று ஏந்தியும் விளங்குகிறார். ஆறுமுகப்பெருமான் பன்னிரு கரங்களிலும் கொண்ட ஆயுதங்கள் ஆறு வகைகளில் பேறுபடுகின்றன.

திருச்செந்தூரில் ஆறுமுகப் பெருமான் மயிலாப்பூர், குன்றக்குடி, பொரவச்சேரி, திண்ணியம் ஆகிய தலங்களில் அமைந்துள்ள சண்முகப் பெருமான் திருவுருவ அமைப்புகள் சிறப்பானவை. நக்கீரர் திருமுருகாற்றுப்படையிலும் குமரகுருபர சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவிலும் அருணகிரிநாதர் திருப்புகழிலும் ஆறுமுகச் சிறப்பு உள்ளது. அருமையாகக் கூறப்பட்டு உள்ளது.

குமார தந்திரத்திலும், ஸ்ரீதத்வ நிதியிலும் ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் விளங்குவதாகவே கூறப்பட்டுள்ளது. சண்முகனுக்கு இரு மருங்கிலும் ஐயை, விஜயை இருதேவியர் விளங்குகின்றனர் என்று ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது.

"படைவேல் பகழி வாள்திகிரி பாசம் அபயம் வலத்திடத்துச்
சுடர்வார் குலிசம் சிலைதோல்புள் தோட்டி வரதம்இவை பரித்த
தடவான் கரமும் முகம்ஆறும் தனிமா மயிலும் இருமாதர்
உடனாம் எழிலும் தரும்ஆறு முகன் உருவம் உஞற்றுநரும் (72)

என்று தணிகைப் புராணத்தில் ஆறுமுகப் பெருமான் வடிவ அமைப்பு கூறப்படுகிறது. சிறுவாபுரியில் சண்முகர் உற்சவ மூர்த்தி சிறப்பாக உள்ளது. ஆறுமுகனை வழிபடுவோர் சிவனையும் சக்தியையும் ஒருங்கே வழிபட்ட பலனை அடைவார் என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

**10. தாரகாரி (தாரகாந்தகர்)**

சூலபன்மனின் இளையதம்பி தராகாசுரன் மாயையில் வல்லவன். கிரவுஞ்சம் என்னும் தனது மலையுள் புகுமாறு செய்து முருகனின் நவவீரர்களுள் முதன்மையான வீரவாகுதேவர் முதலியோரை மயக்கமுறச் செய்தான். தமது ஞானவேல் முருகவேள் தாரகனை அழித்து, மாயையை வென்று இருள்புரிந்த கோலமே தாரகாரி.

குமார தந்திரம் இவ்வடியை ஆறுமுகம், பன்னிரு கரங்களுடன் காட்டுகிறது. இரு கரங்கள் அபய, வரதமாகவும், ஏனையவைகளில் சக்தி, உலக்கை, வாள், சக்கரம், பாசம், வஜ்ரம் (குலிசம்) வில், கேடயம், கொடி (வல்லி) அங்குசம் ஆகியவை தரித்தும் விளங்குகிறார் என்று கூறும் விராலிமலையில் விளங்கும் பெருமான் தாரகாரி வடிவமே என்பது குறிப்பிடத்தக்கது. தணிகைப் புராணம் காட்டும் தாரகாரி வடிவமும் குமார தந்திரத்தை ஒத்திருக்கின்றது. இவ்வடிவ அமைப்பை உத்தரமேரூர் கந்தப் பெருமான் ஆலயத்தில் கண்டு இன்புறலாம்.

வரதம் கொடிகே டகம்தோட்டி வார்ந்த வெறுழ்ப்பா சங்குலிசம்
பரவும் அபயம் வாள்சூலம் பரிதி முசலம் வேல்முந்நாற்
கரமும் விளங்க அறுமுகமும் அதிர்ப்ப விழிகள் கருணைமழை
தரவென் றருளும் தாரகாந் தகன்சீர் உருவம் சமைப்போரும் (73)

ஸ்ரீதத்வநிதியில் தாரகாந்தகர் வடிவம் ஒரு முகம் ஆறு கரங்களுடன் யானை மீது அமர்ந்த கோலமாகக் காட்டப்படுகிறது. இம்மூர்த்தியை வழிபட்டு உலக மாயையிலிருந்து விடுபடலாம்.

### 11. சேனானி (சேனாபதி)

வீரர்களுள் யான் சேனானியாகத் (முருகனாகத்) திகழ்கிறேன் என்று கண்ணபிரான் கீதையில் கூறுகிறார். வீரர்களுள் பெருவீரன் - மாவீரன் முருகன். வீரம் பெற விரும்புவோர் முருகனை வழிபடுவர். மௌரியப் பேரரசில் கோட்டையில் சேனானியின் வடிவம் அமைத்த செய்தியைச் சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம் பேசுகின்றது.

சூரபதுமனை வெற்றிகொள்ளத் தேவர் படைகளுக்குத் தலைமையேற்ற முருகன், சேனாதிபதியான இக்கோலத்தில் ஆறுமுகமும் பன்னிருகரங்களுடனும் திகழ்கிறார். குமாரதந்திரம் இரு கரங்கள் அபயவரதமாகவும் சக்தி, வாள், சூலம், சக்கரம் அங்குசம், வஜ்ரம், பாசம், தண்டாயுதம் கதை ஆகியவை ஏனைய கரங்களிலும் உள்ளன என்றுரைக்கும் வானவர் தலைவனான சேனானியின் வடிவத்தைத் தேவிகாபுரம் பெரிய நாயகி அம்மன் கோயிலில் தரிசித்து இன்புறலாம். தணிகைப் புராணத்தில் முசலம், அம்பு ஆகியவை இருக்குமென்று குமாரதந்திரத்திலிருந்து மாறுபட்டு உள்ளது,

அபயம் முசலம் வாள்சூலம், அயில்வேல் தோட்டி வலம் வரதம்
தபுநீர் குலிசம் சிலைபதுமம் தண்டம் கதைமாற் றிடமாக
உபய வீராறுக ரதலமும் ஒளிர்வித் தாறு முகந்தோற்றிச்
சுபநன் கருளி யிடர்துமிக்கும் சேனாபதிசீர் தொகுப்போரும் (74)

போரிலும் பந்தயங்களிலும் வெற்றிபெற இம்மூர்த்தியை வழிபடுதல் அவசியம்.

### 12. பிரம்மசாஸ்தா

படைப்புத் தொழில் செய்யும் நான்முகன் (பிரமன்) கொண்ட செருக்கை அடக்கித்தானே பிரமனது படைப்புத் தொழிலை மேற்கொண்ட கோலமே பிரம்மசாஸ்தா (பிரம்மனைத் தண்டித்தவர்) எனப்படும். குமாரதந்திரம் இக்கோலம் ஒரு முகம் நான்கு கரங்கள் கொண்டதாகக் குறிப்பிடுகிறது. முன் இரு கரங்கள் அபயம். குறங்கத்திலும் பின் இருகரங்கள் அட்சமாலை, கமண்டலமுடன் திகழ்கின்றன.

தொண்டை நாட்டில் பெரும்பாலான திருக்கோயில்களில் பிரம்மசாஸ்தா வடிவத்தையே காண்கிறோம். காஞ்சிபுரம் குமரகோட்டம் சிறுவாபுரி பாகசாலை போன்றவை குறிப்பிடலாம். சென்னையில் வலசரவாக்கத்தில் மாபெரும் பிரம்மசாஸ்தா வடிவம் உள்ளது. பூவிந்தவல்லி அருகில் உள்ள வாயிலாநல்லூரிலும் சோழி காலத்துப் பிரம்மசாஸ்தா வடிவம் உள்ளது. தணிகைப் புராணம் குறிப்பிடும் பிரம்மசாத்தான் வடிவம் வருமாறு :

வரத மணிக்குண் டிகைஇரண்டும் வாமத் திருக்கைத் தலமாக்கிப்
புரவு புரியும் அபயமொடு புரைதீர் அக்க வடம்வலப்பால்
இரவை இரிக்கும் வலத்தமைத்திட் டெல்லா உலகும் இனிதளித்துப்
பிரமசாத்னன் எனப் பொலிந்த பெருமான் உருவம் பிறக்குநரும் (75)

செங்கல்பட்டு அருகிலுள்ள ஆனூரில் பிரமசாத்தா முன் வலக்கையில் தாமரை மலர் கொண்டு விளங்குகிறார். இவரைப் பாலசுவாமியும் பிரமசாஸ்தாவும் இணைந்த கோலமான பாலபிரமசாஸ்தத்தா என அழைக்கலாம். பிரமசாஸ்தா வடிவத்தை வழிபாடு செய்வோர் பிரமவித்தைகள் கைவரப்பெற்றுச் சகலகலா வல்லவனாகப் பந்தி நிறை அறிவாளனாகத் திகழலாம்.

**13.வள்ளிகல்யாண சுந்தரர்**

முருகப்பெருமானது திருப்பெயர்களுள் வள்ளிக் கணவன் வள்ளி மணவாளன், வள்ளிக்கந்தன் ஆகியவை மிகச் சிறப்பானவை. உலகில் இல்வாழ்க்கை இனிது நடத்தற் பொருட்டே முருகன் வள்ளியம்மையை மணந்துகொண்டு அவளுடன் இனிதுறப் பேசி நகையமர்ந்தருள்கின்றான் என்று ஞானநூல்கள் கூறும். இவ்வடிவை வள்ளி கல்யாண சுந்தரர், வள்ளிமணாளர் என்று குமாரதந்திரம் குறிப்பிடுகிறது. பிரமசாஸ்தா கோலத்தில் வலப்புறம் வள்ளியுடன் காட்சியளிக்கும் அமைப்பே இவ்வடிவமாகும். அருகில் திருமால் தாரைவார்த்து கொடுப்பார்.

அல்யாப் பவிழ்க்கும் வலக்கரங்கள் அபயம் அக்க வடந்தாங்க
வெல்யாப் புறுத்த மணிக்கடமும் கடியும் இடக்கை தலஞ்சேரச்
சொல்யாழ் அனைய வள்ளிவலம் துன்ன மணிநீர் அரிவாக்கக்
கல்யா ணத்தின் எழில்வாய்ந்த கடவுள் உருவம் காண்போரும் (76)

சிறுவாபுரி முருகன் திருக்கோயிலில் முருகன் வள்ளியின் கரம் பற்றியுள்ள வள்ளி மணவாளன் கோலம் பஞ்சலோகப் படிமத்தில் உலகில் எங்கும் காண இயலாத அற்புதப் படைப்பு திருப்போரூரில் தூண் சிற்பமாக இவ்வடிவம் காணக்கிடைக்கிறது. வள்ளி கல்யாண மூர்த்தியை வழிபடத் திருமணங்கள் உரிய காலத்தில் நடைபெறும் தடைப்பட்ட திருமணங்கள் முதலான தொல்லைகள் நீங்கி இன்ப மயமான இல்வாழ்வுப் பேறு கிட்டும்.

**14. பாலசுவாமி**

அழகும் இளமையும் கொண்ட அற்புதமான வடிவமே பாலசுவாமி. இவ்வடிவில் ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டு, வலக்கையில் தாமரை மலரும் இடக்கை குறங்கத்திலும் (இடுப்பிலும்) உள்ளன. திருவடிகளில் தண்டைகள் அணிந்து காட்சியளிக்கும் இக்கோலத்தைத் தணிகைப்புராணமும், குமாரதந்திரமும் எடுத்துரைக் கின்றன.

"கடியில் இடக்கைத் தவமிருவிக் கமலம் வலக்கைத் தலமேந்தி
அடியின் மணிக்கிண் கிணிகவைஇ யமரும் பால உருத்தோற்றி

முடிகள் உரகு எதிர் வணங்கும் முகுந்தன் முதலோர்க் கருள்சுரக்கும்

படியில் எழிற்சுப் பிரமணிய பகவன் உருவம் பயிற்றுநரும்" (77)

சென்னை அருகே போரூரில் உள்ள பாலமுருகன், வலக்கரத்தில், சக்தி ஆயுதமும் இடக்கரத்தில் நீலோத்பல மலரும் கொண்டு அழகாகக் காட்சியளிக்கிறார். இம்மூர்த்தி ஞானசக்திதரனும் பாலசுாமியும் இணைந்த கோலமாக ஞானசக்தி பாலன் என்றழைக்கலாம். திருவையாறு அருகில் உள்ள திருக்கண்டியூரில் இவ்வடிவை வீரஸ்கந்தர் என்றழைக்கிறார்கள். பொன்னேரி அருகில் உள்ள ஆண்டார்க்குப்பம் கோயிலில் இருகரங்களும் இடுப்பில் வைத்த அபூர்வ அமைப்பாகும். பாலசுவாமியை வழிபட உடற்குறைகள் நீங்கி அழகான உடலமைப்பும் வனப்பும் தேக சௌக்யமும் ஏற்படும்.

15. கிரௌஞ்சபேதனர்

கிரௌஞ்சம் - அன்றிற்பறவை அதன் வடிவாகிய மாய மலையாகத் திகழ்ந்த தாரகாசுரனை அழித்த இது இவ்வடிவைக் குமாரதந்திரம் ஆறுமுகம் எட்டுக்கரங்களும் கொண்டவராகக் காட்டுகின்றது. சக்தி வேல், வாள், அம்பு, வஜ்ரசக்தி, கேடயம், வில் ஆகியவற்றுடன் அபயவரதமாக இருகரங்களும் உள்ளன. இவ்வடிவைத் தணிகைப்புராணம் காட்டுகின்றது.

அழலு நெடுவேல் வாள்பழி அபயம் வலநாற் கரத்தமைத்துத்

தழல் வச்சிரங்கே டகம்வரதம் சாபம் இடநாற் சுரந்தாங்கி

எழில்மிக் கொழுகும் முகம் ,ஆறும் இலங்கத் தோற்றிக் கிரவுஞ்சம்

புழைபட் டழியப் படைவிடுத்த புத்தேள் உருவம் பொறிப்போரும் (78)

ஸ்ரீதத்வநிதி இக்கோலத்தை ஒரு முகமும் நான்கு கரங்குளும் கொண்டதாகக் காட்டுகின்றது. கரங்கள் முறையே அபயவரதமாகவும், மலரம்பு, கரும்பு, வில், தாங்கியும் உள்ளன. அருகே மயில் நிற்கின்றது மற்றொரு வகையில் மயில் வாகனத்தில் அமர்ந்து இருகைகளிலும் வேல் கொண்டு கிரௌஞ்ச மலையைத் துளைக்கும் தோற்றமுடன் விளங்குகிறார். இவ்வமைப்பை நான்குநேரி அடுத்த திருக்குறுங்கடி திருமால் கோயில் மயிலாடுதுறை அருகில் உள்ள புஞ்சை (திருநனிபள்ளி) கோயிலிலும் கண்டு வணங்கலாம். மனத்தில் சங்சலங்கள் துன்பங்கள் நீங்கவும் இடர்களை வெல்லவும் இம்மூர்த்தியை வழிபட வேண்டும்.

### 16. சிகிவாகனர் (மயில் ஊர்த்திப் பெருமான்)

மயில் மீது வந்து நமது மையல் நீக்கி அருளும் மாமுருகன் திருக்கோலமே சிகிவாகனர் வடிவமாகும். ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்து திகழ்கிறார். அபயவரதமாகவும் சக்திவேலும், வஜ்ரமும் கொண்டுள்ள இவ்வடிவைக் குமாரதந்திரம் ஆறுவிதமாகக் காட்டுகின்றது. தமிழ்நாட்டில் பெரும்பாலும் கோயில்களில் உற்சவமூர்த்தி வடிவம் இவ்வமைப்பிலேயே உள்ளது. தணிகைப் புராணமும் இவ்வடிவைப் பாங்குறக் காட்டுகிறது.

புலிங்கங் கதிப்பத் தீத்தும்மும் பொருவேல் அபயம் வலத்திருகைத்
தலங்கொண் டிடப்பால் இருகரத்தும் தக்க வரதம் வச்சிரமும்
இலங்கை அணிந்து திரைக்கடலும் எழுபல் வரையும் உலகனைத்தும்
குலுங்கக் கடவு மயிலூர்திக் கோமான் உருவம் இயற்றுநரும் (79)

மயிலூர்திப் பெருமானை மறவாமல் வணங்குவோர் இச்சையில் உற்ற அனைத்தையும் பெற்று இன்ப வாழ்வு பெறுவர்.

### 17. ஞானசக்தி சுப்ரமண்யர்

ஒரு கரமும் நான்கு கரங்களும் கொண்டு ஒன்று அபய முத்திரையாகவும் ஏனையவை சக்தி, குக்குடம் (கோழி), வஜ்ரம், முதலியன கொண்டு ஜடாமகுடம், கடப்பமாலை அணிந்து இவ்வடிவில் காட்சியளிப்பதாக ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது. திருச்சி மாவட்டம் பழுவூரில் இவ்வடிவத்தைக் காணலாம். இம்மூர்த்தியை வழிபட எடுத்த காரியம் யாவிலும் வெற்றிக்கிட்டும்.

### 18. அக்னி ஞாதா சுப்ரமண்யர்

ஒருமுகம் மந்திரவிதியின் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே என்று திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் போற்றியவாறு தெய்வீக யாகாக்கினியை வளர்ப்பதற்கு அக்னியைப் போன்று இரண்டு முகங்களும் எட்டுக் கரங்களும் கொண்டுள்ள இவ்வடிவமே அக்னிஞாதர் என்றழைக்கப்படுகிறது. வஜ்ரம், குக்குடம் கேடயம், ஆஜ்ய (நெய்) பாத்திரம், கருவம் (யாகத்தில் நெய்யிடப் பயன்படும் கரண்டி). அட்சமாலை, கத்தி, ஸ்வஸ்திகம் ஆகியவை கொண்டு வேள்வி செய்யும் கோலமாக ஸ்ரீதத்வநிதி காட்டுகிறது. இத்தகைய அற்புதமான வடிவமைப்பைச் சென்னிமலை முருகன் கோயிலில் காண இயலும்.

### 19. சௌரபேய சுப்ரமண்யர்

ஸ்ரீதத்வநிதியில் குறிக்கப்பெறும் இவ்வடிவம் நான்கு முகங்களும் எட்டுத் திருக்கரங்களும் கொண்டு கரங்களில் முறையே சக்தி,தாமரை, மலர், மலரம்பு, வஜ்ரம், கரும்பு வில், சூலம் ஆகியவை ஏந்தியும் இரு கரங்கள் அபயவரதமாகவும், வலக்கால் பூமியிலும் இடக்கால் சிறிது வளைந்தும் காணப்படுகிறது. இவ்வரிய அமைப்பைச் சென்னிமலை முருகன் கோயிலில் கண்டு இன்புறலாம்

### .20. காங்கேய சுப்ரமண்யர்

மகர (மீன்) வாகனத்தில் மீது காட்சியளிக்கும் இவ்வரிய அமைப்பில் ஒரு முகமும், நான்கு கரங்களில் முறையே கோழிக்கொடி அரணிக்கட்டை, பரசு (கோடாரி) பூர்ணகும்பம் ஆகியவை ஏந்தியும் கரண்ட மகுடமும், நீலோத்பல மாலையும் அணிந்து திகழ்வதாக ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது. எங்குமே காணஇயலாத அபூர்வ வடிவம். சிவானந்தப்பேறு பெறலாம்.

### 21. குக சுப்ரமணியர்

அடியார்களில் இதயக் குகையில் விளங்கும் முருகன் இவ்வடிவில் ஒரு முகமும் வஜ்ரம், சூலம் இருகரங்களிலும் அபயவரதமாக இரு கரங்களும் இரத்னகீரிடம் அணிந்து இடதுபுறம் தேவியுடன் கல்யாணக் கோலத்தில் வெள்ளையாடை உடுத்திக் காட்சியளிப்பதாக ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது. தகராகாச வித்தைபெற இம்மூர்த்தியை வழிபாடு செய்தல் வேண்டும்.

### 22. பிரமசாரி

இவ்வடிவில் முருகவேள் ஒரு முகமும், வலக்கையில் தண்டாயுதமும் இடக்கையில் வஜ்ரசக்தியும் தலையில் குடுமியும் இடையில் முஞ்சிப்புல்லலாலான அரைஞாணும் கொண்டு தாமரை மலர் மீது எழுந்தருளுவதாக ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது.

### 23. தேசிக சுப்ரமண்யர்

சிவகுருவாகத் திகழும் இவ்வடிவில் ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்டு இரு கரங்களில் சக்தி ஆயுதமும் அட்சமாலை சின் முத்திரை மற்றும் அபய வரதமாகவும் காட்சியளிக்க எதிரில் சிவபிரான் மாணவராக நிற்க அவருக்குப் பிரணவ உபதேசம் செய்வார். மானசாரம் என்னும் நூலில் இவ்வடிவம் முருகவேளுக்கு எதிரே சிவபெருமான் இடக்கையை மார்போடு அனைத்து வலக்கையால் வாயைப்புதைத்து ஏனைய இரு

கரங்களில் உடுக்கையும் மானும் விளங்க தலையில் பிறைச் சந்திரன் பொலிய நிறைமதி போன்ற நிறத்துடன் நின்று இடப்பாகத்தில் பார்வதிதேவி நிற்க உபதேசம் பெற்றுக்கொள்வதாக் காட்டப்படுகிறது. திருப்போரூர் கந்தசாமிக் கோயிலில் தேசிகர் வடிவம் பஞ்சலோக திருமேனியாக அற்புதமாக அமைந்துள்ளது. சிவபிரான் இடது மடியில் முருகன் அமர்ந்து அவருக்கு உபதேசம் செய்யும் அமைப்பில் உள்ளது. இம் மூர்த்தியை வழிபடச் சிவஞானம் பெருகும்.

**24. வில்லேந்திய வேலன்**

இராமபிரானுக்கு கோதண்டம் போல முருகப்பெருமானும் வில்லேந்திய வடிவை "சம்ஹாரமூர்த்தி" என்று சிற்ப நுல்கள் குறிப்பிடுகின்றன. சூரபத்மன் மகன் திருவிடைக்கழி முருகன் கோயிலில் கண்டு தரிசிக்கலாம். சம்ஹாரமூர்த்தி சில தலங்களில் தனித்தும், சில தலங்களில் தேவியருடனும் காணப்படுகின்றது.

இரண்யாசுரனை அழிப்பதற்கு முருகன் கொண்டகோலம் இரண்யாசுர சம்ஹாரமூர்த்தி என்ற இவ்வடிவைத் திருவிடைக்கழி முருகன் கோயிலில் கண்டு தரிசிக்கலாம். சம்ஹாரமூர்த்தி சில தலங்களில் தனித்தும், சில தலங்களில் தேவியருடனும் காணப்படுகின்றது.

பஞ்சலோகப் படிமங்களில் அமைந்துள்ள வில்லேந்திய கோலம், பெரும்பாலும் வலது காலை மயில் மிது வைத்தும் வலது முன்கையில் அம்பும், இடது முன்கையில் வில்லும் கொண்டு பின் இரு கரங்களிலும் சக்தியும், வஜ்ரம் உடையவராகக் காட்டப்படுகிறது. இவ்வடிவங்களைத் திருப்போரூர் திருவேற்காடு, சேயூர், ஸ்ரீமுஷ்ணம், ஆகிய தலங்களில் தரிசிக்கலாம். புகழ்பெற்ற வில்லேந்திய வடிவம் சாயாவனம் கோயிலில் உள்ளது. திருச்செந்தூரிலிருந்து போர்த்துகீசியர்கள் கொள்ளையடித்து வந்தபோது கப்பல் புயலில் சிக்கித் தடுமாறவே அவர்கள் சாயாவனம் கடற்கரையில் போட்டதாக வரலாறு உள்ளது.

மூலஸ்தானத்தில் வில்லேந்திய வடிவத்துடன் வள்ளிதேவசேனை சமேதராக ஒரே கல்லில் அமைந்த அற்புத வடிவத்தை நெய்வேலியில் உள்ள வில்லுடையான் பட்டிக் கோயிலில் காணமுடியும்.

திருவண்ணாமலை பட்டீச்சரம் ஆகிய கோயில்களிலும் அற்புதமான வில்லேந்திய வடிவம் கண்டு இன்புறத்தக்கது.

**25. முருகவேடன்**

சுவாமிமலைத் திருக்கோயிலில் பங்குனி மாதத்தில் நடைபெறும் வேட ரூபக் காட்சி விழாவில் வேடனாகத் தோன்றி வள்ளியை மணக்கும் வேடன் வடிவம் அற்புதமான வடிவமாகும். சேலம் மாவட்டம் பேளுக்குறிச்சி பழநியாண்டவர் கோயில் மூலவடிவம் வேட

வடிவமே. தலையில் கொண்டையுடன் வலக்கையில் வேலும் கொண்டு இடக்கையில் கோழியும் கொண்ட அழகான வடிவம் இது.

**26. ஆட்டுவாகனர்**

அஜாருடர் என்றழைக்கப்படும் இவ்வடிவில் முருகன் ஆட்டு வாகனத்தில் காட்சியளிப்பார். கந்தபுராணத்தில் கூறப்படும் செய்தியின்படி இவ்வடிவைத் திருப்போரூர் கந்தசாமிக் கோயிலில் அபூர்வமாகக் காணலாம். திருச்செந்தூர்த் திருக்கோயில் கந்தசஷ்டிப் பெருவிழாவில் ஆட்டு வாகனத்தில் முருகவேள் பவனி வருவதைக் கண்டு இன்புறலாம்.

**27. அமிர்தகர சுப்ரமணயர்**

தன்னை நாடி வரும் அடியார்களுக்கு அருளமுதை வழங்கக் கையில் அமுத கலசத்தை ஏந்தியிருக்கும் அற்புதக் கோலம் கோடிக்கரை குழகர்கோயிலில் காணக்கிடைக்கிறது. ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்ட இவ்வரிய அமைப்பை மயில்மீது அமர்ந்து இரு புறமும் தேவியர் புடைசூழக் காட்சி தருகிறார். வலக்கரம் ஒன்று அபயமாகவும் ஒரு இடக்கரம் அமுதகலசம் ஏந்தியிருக்கவும் ஏனைய கரங்களில்

சக்திவேல், நிலோத்பலம், வஜ்ரம், தாமரை மலர் ஆகியவை ஏந்தியிருக்கும் எழில் வடிவம். நீலோத்பல மலர், தாமரை மலர், அமுதகலசம் இம்மூன்றையும் கரங்களில் கொண்ட வடிவம் வேறெங்கும் காண இயலாது.

**கந்தனின் கவின் மிகு கோலங்கள்**

கோவை மாவட்டம் அவிநாசியிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் வழியில் இரும்பறை என்ற ஊரின் அருகில் நெடிதுயர்ந்த மலையின் மேல் முருகன் ஐந்து முகம் எட்டுக்கரங்கள் கொண்டு அற்புதமாகக் காட்சியளிக்கிறார். இம்மலைக் கோயில் ஓதிமலை என்ற பெயரில் 1800 படிகளுக்கு மேல் உள்ளது இவ்வடிவைக் கிரௌஞ்சபேதனர் என்ற வடிவமாகக் கொள்ளலாம்.

சிதம்பரம் சபாநாயகர் கோயில் மேலக் கோபுரவாயிலில் உள்ள வெற்றிவேற் பெருமாள் ஆறுமுகங்களும் பத்துக்கரங்களும் கொண்டு ஓர் காத்தால் வேலினை ஏவிய நிலையில் காண்போரைப் பிரமிக்கச் செய்யும் கோலம். சூர்மாதடிந்த சுடர் வேலோனாகிய அவ்வடிவம் அற்புதமான வடிவமைப்பாகும்.

திருப்பரங்குன்றத்தில் தூண் சிற்பமாக அமைந்துள்ள தேவசேனைத் திருமேனிக் கோலம் கண்டு இன்புறத்தக்கது. முருகன் தேவயானையின் வலக்கரம் பற்றியிருக்க அருகில் தேவேந்திரன் பெருமையுடன் தாரைவார்க்க இன்பத்தை அளிக்கும் இனிய காட்சியில் தெய்வானையம்மை தலையைச் சற்றுச் சாய்த்து ஓரக்கண்ணால் கந்தனைக் கண்டு களிப்பதை நாமும் கண்டு இன்புற முடியும்.

ஆலப்பூர்த் காட்சிசாலையில் தேவசேனையைச் அணைத்த நிலையில் காணப்படும். அரிய கலைப்படைப்பை அவசியம் கண்டு இன்புறவேண்டும்.

வழுவூரில் கவுரி, கந்தனைக் கையில் ஏந்தி மகிழும் அழகு, குஹாம்பிகை என்றழைக்கப்படும் அபூர்வமான கலைப்படைப்பு இது.

திருக்கடவூரில் பரிவுடன் கவுரி கொஞ்சும் கடம்பனைக் கண்டு அதிசயிக்கலாம். பல்லவனீச்சரம் கோயிலில் தாயின் அருகில் அமர்ந்து தண் கழல் சிலம்புடன் கொஞ்சவே வரும் முருகன் அழகைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம். திருவாரூரில் நீலோத்பலாம்பிகை திருக்கோயிலில் அம்பிகைக்கு அருகில் சேடி, முருகனை அழைத்துவர அவன் நடந்து வரும் அழகைச் சிற்பி கண்முன் கொண்டு நிறுத்திவிட்டார்.

கழுகுமலையில் ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்ட மயிலில் காட்சியளிக்கும் மாட்சியை எழுத்துகளில் எழுத இயலாது.

குன்றக்குடி, திண்ணியம் கோயில்களில் முருகன், வள்ளி, தேவயானை தனித்தனியே மயில் வாகனத்தில் காட்சியளிப்பதும் அரிய கலைப்படைப்பாகும்.

சென்னையில் திருமயிலையில் மிக மிக அதிசயமான வடிவத்தைக் கண்டு இன்புறலாம். முருகன் மயில் வாகனத்திலும் வள்ளி, தேவயானை இருவரும் தனித்தனியே யானை வாகனத்திலும் அமர்ந்துள்ள அதிசயமான கோலத்தை இதுவரை நாம் கண்டுகளித்த கவின்மிகு கோலங்களில் ஒப்பற்றதாகச் சொன்னால் மிகையாகாது. ஆகமத்திலோ சிற்ப நுல்களிலோ காணப்பெறாத இவ்வதிசயக் கோலம் மயிலைச் சிற்பியின் கற்பனையில் எல்லை என்று சொல்லலாம் அல்லவா?

முழுதும் அழகிய குமரனைப் பலவித கவின்மிகு கோலங்களில் கண்டு வழிபட்டு இன்புறுவோமாக!

**நன்றி :** திருக்கோயில் கருத்தரங்கம் ஆய்வுக் கோவை பிள்ளையார்பட்டி 1997

திருக்கோயில் கருத்தரங்கம்
ஆய்வுக் கோவை பிள்ளையார்பட்டி 1997



உணர்ந்தேன் உலகினில் ஒண்பொரு ளானைக்
கொணர்ந்தேன் வேலயம் கோயில் என்நெஞ்சம்
புணர்ந்தேன், புனிதனம் பொய் அல்ல மெய்யே
பணிந்தேன் பகலவன் பாட்டும் ஒலியே.

- திருமந்திரம்



**ஓம் தத்புருஷாய வித்மஹே!**
**மஹாசேனாய தீமஹே!**
**தந்தோ ஷண்முக பிரட்சோதயா!**

பதின்மூன்றாண்டுகளாக திருக்கல்யாண வைபவம்
செய்ய ஊன்றுகோலாக அருள்பாலிக்கும்

**ஸ்ரீலஸ்ரீ வள்ளி தேவசேனா சமேத ஸ்ரீ சுப்ரமணிய சுவாமிகள்**

மேலும் திருப்பணிகளைத் தொடர
எங்களை ஆசீர்வதிக்க வேண்டிக் கொள்ளும்

**M.V. சீனிவாசன்,** B.A., B.L.,
வழக்குரைஞர்
இலக்கம் 10, கந்தகோட்டம்,
இஞ்ஜீனியர்ஸ் காலனி,
வேல்ராம்பட்டு, புதுச்சேரி - 605 004.



உ

# திருப்புகழில் நீதிக் கூறுகள்

பெரும்புலவர் பேராசிரியர் **பா. நமசிவாயம்,** எம்.ஏ,
திருப்புத்தூர், சிவகங்கை மாவட்டம்.

## முன்னுரை

அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் மிகச் சிறந்த பக்தி நூல், திருப்புகழை ஆழ்ந்து நோக்கினால் மனிதன் இறையன்பு உடையவனாக வாழ்வதோடு நீதி, நேர்மை, நல்லொழுக்கம், நல்லோர் இணக்கம், உயிர்க்கருணை முதலிய நற்பண்புகளோடும் ஒரு மனிதன் வாழவேண்டும் என்று வலியுறுத்துவதை உணரலாம், திருப்புகழில் காணப்படும் நீதிக் கூறுகள் சிலவற்றைத் தொகுத்துக் காணலாம்.

கருவூர்த் திருப்புகழில் அருணகிரியார் மூன்று உண்மைகளை வலியுறுத்துகிறார் 1. அறிவுடைமை 2. ஒழுக்கமுடைமை 3.பக்தியுடைமை. பக்தி நூலில் நீதிக் கருத்துக்கள் என்னும் முத்துக்களைக் கோர்த்து நமக்கு வழங்குகிறார் அருணை முனிவர்.

### 1. இறையன்பு நெறியில் நீதிக் கூறுகள்

எளிவந்த பிரானாக விளங்கும் இறைவனை உணராமல் சித்துக்களைச் செய்வோரையும், வாதிட்டுத்திரியும் சமயவாதிகளையும், பலப்பலவான உருவ வழிபாட்டிலும் ஆடம்பரமான ஆராதனைகளிலும் ஈடுபட்டுப் புறச் சடங்குகள் புரிவோரையும் கருவில் புகும் வழியில் உழல்வோர் எனக் கடிந்து பேசுகிறார். பாதை மாறிச் செல்கின்றவர்களை நரகில் உழல்வோர் என்கிறார். நரகில் உழல்வோர் யார் யார்? இதோ அருணகிரியார் பட்டியல் தருகிறார்.

அரகரா எனா மூடர், திருவென்று ஆடா மூடர்
அடிகள் பூசியா மூடர் – கரையேற
அறிவுநூல் கல்லா மூடர், நெறியிலே நில்லா
அறம் விசாரியா மூடர், நரகேழில் – மூடர்
புரள வீழ்வர்...

### 2. கலைக் கடலூடும் உழலாதே :

மனிதன் கல்வியால் பக்குவமும் பணிவும் பெறவேண்டும். மாறாகப் படிப்பால் சூதம் வாதும் புரிவதைக் காண்கிறோம். கல்வியறிவால் பிழை செய்கிறான். ஆணவம்

தலைக்கேறிப் பிறரை அவமதிக்கிறான். இது பற்றியே மணிவாசகர் “கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்” என்றார். காரைக்கால் அம்மையார் “நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக” என்கிறார் அருணகிரியாரும் கந்தரனுபூதியில்

யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும்
தாமே பெறவேலவர் தந்ததனால்
பூமேல் மயல்போய் அறமெய்ப் புணர்வீர்
நாமேல் நடவீர் நடவீர் இனியே

என்று பாடியுள்ளதும் சிந்திக்கத் தக்கதே! கல்வியால் அறிவு விளக்கம் பெற்று உள்ளொளியைக் காண வேண்டிய மனிதன் செருக்குற்று வீணில் அலைகிறான். இதுபற்றி அருணகிரியார் பாடுவதைக் கேட்போமே!

வங்சக லோப மூடர்களைத் தேடி அலைது அவர்களை அணுகி மஞ்சரி கோவை, தூது உலா என்ற பலவகைப் பாவாலும் பாடி அவர்களைப் பாரி என்றும், காரி என்றும் வீணில் புகழ்ந்து அழியலாமா? என்று கேட்கிறார் கல்வியின் பயன்பற்றியும், அறிஞர் கடமை குறித்தும் அருணகிரியார் கருத்தென்ன?

நூல் அனந்த கோடி தேடி மால்மிகுந்து பாருளோரே
நூறு செஞ்சோல் கூறி மாறி விளை தீமை
நோய் கலந்த வாழ்வுறாமல் நீ கலந்துளாகு ஞான
நூலடங்க ஓத வாழ்வு தருவாயே!
அருணதள பாதபத்மம் அநுதினமே துதிக்க
அரிய தமிழ் தானளித்த மயில் வீரர்!

### 3. நல்லோரிணக்கம்

வித்தகனாகவும் உத்தமனாகவும் வாழவும் இறைவனை அடையவும் நல்லோரிணக்கமே அடிப்படையாகும். பட்டினத்தாரும்,

“நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமம் ஞானமுமே அல்லாது வேறு நிலையுளதோ” என்று கூறுவதை எண்ணிப்பார்க்கவும்.

நல்லவரின் தொடர்பால் தீயவரும் திருந்தி நல்லொழுக்கம் உடையராதல் இயலும். அந்த நல்லொழுக்கமே அவர்களை இறைநெறியில் இட்டுச் செல்லும். பலவகையில் தீமையே புரிபவன் என்றாலும் அறிவிலியேயாயினும் அடியார் கூட்டத்தில் சேர்தல்

வேண்டும். பண்புடையார் தொடர்பு இத்தகையவரைப் பண்பாளர் ஆக்குகிறது. மனிதர் தங்கள் உரை, அறிவு, உயிர், உணவு அனைத்தையும் இறைவனின் திருவடித் தாமரையில் ஒப்படைக்க வேண்டும். அதற்குரிய ஒரே வழி அடியாரிணக்கமே.

"பண்புடைய சிந்தை அன்பர் தங்களினுடன் கலந்து
பண்பு பெற அஞ்சலஞ்சல் என ஆள்வாய்"

**4. ஈதலறம்**

அருணகிரியார் ஈதலறத்தை வலியுறுத்துகிறார். இவ்வறம் இறைவனுக்குச் செய்யும் தொண்டு என்கிறார். தமது உடைமை என்ற பற்றின்றிக் குன்றிமணி அளவேனும் அல்லது தினை அளவேனும் பங்கிட்டு உண் என்கிறார். கந்தர் அலங்காரத்தில் "நொய்யிற் பிளவளவேனும் இடுமின் என்றும் "தானம் என்றும் இடுங்கோள்" என்றும் கூறுவதைக் காணலாம்.

**5. விலைமாதர் உறவைப் பழித்தல்**

வேறு எந்த நூலிலும் இல்லாத அளவுக்குப் பொது மகளிரைச் சாடும் பாடல்கள் திருப்புகழில் அதிகமாக உள்ளன. விலைமாதர் குறித்து அருணகிரியார் வயலூர் திருப்புகழில்

இலகு முலைவிலை அசடிகள் கசடிகள்
கலைகள் பலவறி தெருளிகள் மருளிகள்
எயிறு கடிபடு முதடிகள் பதடிகள் – எவரோடும்
இனிய நயமொழி பழகிகள் அழகிகள்
மடையர் பொருள் பெற மருவிகள் சருவிகள்
யமனும் மிகையென அழிதரும் உழிதரும் விழிவாளால்
உலகம் இடர் செயும் நடலிகள் மடலிகள்

என்றெல்லாம் திட்டித் தீர்க்கிறார்.

அசடிகள் கசடிகள், தெருளிகள் மருளிகள், உதடிகள் பதடிகள், மருவிகள் சருவிகள், நடலிகள் மடலிகள் பழகிகள் அழகிகள் இப்படியெல்லாம் விலைமாதர்களை வைது "வயலூர் மேவிய வரதரே விலை மாதரின் உறவு அகல அருள்புரிவீர்" என்று வேண்டுகிறார் அருணகிரிநாதர்.

பொதுப் பெண்டிர் புன்மை முயக்கம் இறையருளுக்கு எவ்வளவு பெரிய தடை என்பதை அருணகிரிநாதரைப் போல விரிவாக வேறுயாரும் சொல்லவில்லை. ஆன்மீகப் பயணம் செய்யும் மனிதனை ஆபாசக் குழியில் விழுந்து காப்பாற்றிக் கரை சேர்க்க அருணகிரிநாதர் துடியாய்த் துடிக்கிறார். இன்னும் பல பாட்டுக்களைக் காட்டலாம். விரிக்கிற் பெருகும்.

**6. நிலையானதும் - நிலையாததும் :**

நிலையாமை உலகின் பெருமை என்றார் வள்ளுவர் சமயநூல்கள் யாவும் நிலையாமை சொல்லி நிலைத்த பேரின்பத்தை எய்த விரையுமாறு வற்புறுத்துகின்றன. இதையொட்டியே அருணகிரியாரும் பாடுகிறார்.

வாழ்க்கை என்பது "உறங்கி விழிப்பாய பிறந்த பிறப்பு என்றும் நிலையாய பொருளை உடலாகக் கருதி நெடுநாட் பொழுதும் அவமே போய்" என்றும் அருணகிரியார் பாடுவது வள்ளுவத்தின் எதிரொலி. ஒரு பாடலில் தசமாதம் சமைந்தனர். பிறந்தனர், கிடந்தனர், இருந்தனர், தவழ்ந்தனர், நடந்தனர், முயங்கினர், மயங்கினர் சுமந்தனர், அமைந்தனர், குறைந்தனர், இறந்தனர். இதுதான் மனித வாழ்க்கை என்று சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார்.

நீர்க்குழிபோல் நிலைத்திராத பொய்க்குடில் இவ்வுடல். இதனுடன் குலவுகின்ற மனைவியும் மக்களும் வீடும் நண்பரும் ஆகிய இச்சூழலில் அறிவு மயங்கி விடக் கூடாது இவை ஒரு மாயக் கனவு. இவை யாவும் என்னுடையதே என்று இறுமாப்பில் தலைகால் தெரியாமல் அட்டூழியம் செய்ய அடுத்தடுத்து இழி பிறவி புகும் வழியில் நுழைகிறார் எனக் கொள்க என்கிறார் அருணகிரிநாதர்.

**7. நமன் வருத்தும் குழி விழுவோர்**

நட்புக்கொண்டு பின்னர் வஞ்சகம் செய்வோர், நன்றி மறந்தவர்கள், விரதங்களைப் புறக்கணித்தவர்கள், பெரியோரைப் பழித்தவர்கள், ஈவது விலக்குவோர், சத்தியம் தவறியவர்கள், தொலையாத செல்வத்தோடு வாழ ஆசைப்பட்டு முடியாது வருந்துவோர், அறங்கொன்றவர்கள் தெய்வத்தின் சொத்துக்களைத் திருடுபவர்கள், பிறர் மனை நயந்தவர்கள் இவர்களையெல்லாம் "குண்டர்கள் என்று கடிவதோடு நமனின் வாதைக் குழிப்பட்டு வருந்துவார்கள் என்றும் கூறுகிறார்.

8. ஏழ் நரகில் உழல்வோர் யார்?

கற்றுக் கொடுத்தவர்க்குரிய ஊதியத்தைக் கொடுக்காதவர்கள். தவசிகளுக்குப் பாதகம் செய்வோர், கழிகாமுகர்கள், சான்றோர்களுக்குத் துன்பம் செய்பவர்கள், எவரையும் மதியாமல் உதாசீனப்படுத்துவோர், உத்தமரின் பொருளைக் கவர்வோர், இரப்பவர்க்குச் சிறிதேனும் தர்மம் செய்யாதவர்கள், நடு நிலை தவறியவர்கள், சிவனுக்கு, திருமாலுக்கும், அன்னை பராசக்திக்கும் சேவை செய்வோரை இகழ்பவர்கள், ஒரு முகப்பட்ட உள்ளத்தோடு தியானம் செய்யாதவர்கள் மோகம் மிகுந்து போகத்தில் மூழ்கிக் கிடப்பவர்கள் இவர்கள் அனைவரும் ஈனர்கள் என்றும் ஏழ் நரகில் உழல்வார்கள் என்றும் அருணகிரிநாதர் எச்சரிக்கின்றார்.

9. எப்படி வாழ்வது?

"நாதவிந்து" என்னும் பழனித் திருப்புகழில் சோழ மண்டலத்தில் வாழ்வோரைப் பற்றிச் சொல்லும் போது

ஈதலும் பலகோலால பூசையும் ஓதலும் குண ஆசார நீதியும்
ஈரமும் குருசீர் பாத சேவையும் மறவாத
ஏழ்தலம் புகழ் காவேரி யால்விளை சோழ மண்டலம்

என்பார் அருணகிரியார். சோழநாட்டாரின் பண்புகளாக இவற்றை அருணகிரிநாதர் பாடினாலும் இவை நம் அனைவருக்கும் இருக்க வேண்டிய பண்புகளாகக் கொள்ளலாம். முருகன் புகழ் பேசிப் பரவித் திருநீறு பூசும் அடியவர்களின் பாதமலரைச் சூடும் திருத்தொண்டர்களின் பாதம் துணை எனக் கொள்க என்கிறார் அருணகிரிநாதர். மேலும் அவர் சொல்கிறார் "நான்" என்னும் அகந்தை ஞானங்கொள்ள பொறிகளினால் வான், சந்திரன் சூரியன் என்னும் மண்டலங்களைக் கடந்து நமசிவாய மலையேறி இன்புறும்போதும் கூட மெல்லத் தலைதூக்கும். அத்தகைய அகந்தை தவிர்த்து வாழ வேண்டும் என்பது அருணகிரியாரின் அன்புக் கட்டளை.

வயலி நகரியில் அருள்பெற மயில் மிசை
உதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலும் நனவிலும் மறவேனே!

நன்றி !

# ஆறுமுகனின் அறுபடை வீடுகள்

சொ. சொ. மீ. சுந்தரம்
மதுரை.

விசாக நக்ஷத்திரத்தில் ஒளி உருவாகத் தோன்றியவன் முருகப்பெருமான். இவனது வாஹனம் மயில், கொடி-சேவல். இவனது ஆயுதம் வேல். வேல்-ஞானம் அல்லது அறிவு, வேல்-சக்தி அல்லது வல்லமையே உருவானது.

சிவன், உமை, முருகன் என்ற மூன்றும் ஒரே பரம்பொருளின் மூன்று வெளிப்பாடுகள். இதனால் முருகன் ஆனந்தப் பொருள். இகம், பரம், வீடு ஆகிய மூன்று பேறுகளையும் ஆன்மாக்களுக்கு முருகன் வழங்குகிறான். மண்ணுலகில் அவதரித்த வள்ளி இகலோக நலன்களை அருளுவாள். தேவயானை பரலோக நலன்களை வழங்குவாள்.

வள்ளி இச்சா சக்தி, தேவயானை கிரியா சக்தி. வேல் ஞான சக்தி. இந்த மூன்று சக்திகளையும் உடையவன் முருகன்.

நாதம்-சேவல்; விந்து-மயில்; கலை-ஞானவேல். இந்த மூன்றுக்கும் தலைவன் முருகன் அதனால் அருணகிரிநாதர் "நாதவிந்து கலாதி நமோ நம" என்று பாடினார்.

மயில், யானை, ஆடு என்ற மூன்று வாஹனங்கள் முருகனுக்கு உண்டு. ஆணவ மலமாகிய மயிலையும், கன்ம மலமாகிய யானையையும், மாயா மலமாகிய ஆட்டையும் அடக்கி அதன் மீது ஆரோஹணிக்கிறான் முருகன்.

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாதகம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களே ஆறு படைவீடுகளாம்.

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருஆவினன்குடி, திருஏரகம், திருத்தணி, பழமுதிர்சோலை என்ற திருத்தலங்கள் அவை.

வாக்கு, மனம் முதலியவற்றுக்கு எட்டாத பரம்பொருளை நினைப்பதற்கும் வாழ்த்துவதற்கும் நம்முடைய கோயில்களே துணைக் கருவிகளாக இருந்து வருகின்றன.

முருகு என்பது பல பொருள்களைக் கொண்ட அரிய சொல். இளமை, அழகு, மணம் கடவுள்தன்மை, தேன் இவற்றைக் குறிப்பது.

முருகன் மாறாத இளமையும், அழியாத அழகும், குறையாத நறுமணமும், நிறைந்த தெய்வத் தன்மையும், தெவிட்டாத இனிமையும் உடையவன். சிவத்துக்குரிய தத்புரும், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம், ஈசானம் என்ற ஐந்து முகங்களோடு ஆறாவதாகச் சிவசக்தியின் அதோ முகத்துடன் முருகன் சிவசொரூபமாகவும் சக்தி சொரூபமாகவும் விளங்கு கிறான். நான்கு திசைகளையும் மேல், கீழ் இடங்களையும் ஆறுமுகங்களின் அருள் நோக்கால் பரிபாலனம் செய்கிறான். ஆறுமுகம்– ஆறு சமயங்கள் என்றும் கூறுவர்.

அவதாரம்: சிவபெருமான் உமாதேவி யாரைத் திருமணம் செய்து கொண்ட பிறகும் குமாரக் கடவுள் தோன்றவில்லையே என்று தேவர்கள் திருக்கயிலை சென்றனர். அங்கு அவர்கள் அழுது தொழுது ஐயனே சூரனால் நாங்கள் மிகவும் துன்பப் படுகிறோம் என்றனர்.

அரனார் தமது ஐந்து முகத்தோடு ஆறாம் முகம் சேர அமரர்களும் ஆறுதல் அளிக்கும் பொருட்டு ஆறுதலையுடன் காட்சியளித்தார். நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு ஜோதிகள் தோன்றின. அந்த அனலின் வெப்பத்தைத் தாங்காமல் தேவர்கள் அஞ்சினார்கள்.

இறைவன் இவர்களுக்கு அபயம் அளித்து ஒரு திருமுகத்துடன் எழுந்தருளி அந்த ஆறு அருட்சுடர்களையும் சுருக்கி அவற்றை வாயுதேவனிடம் வழங்கினார் அவன் அவற்றைத் தாங்கமுடியாமல் அக்னி தேவனிடம் அளித்தான். கங்கை தான் வறண்டதும் இமயமலைச் சாரலில் உள்ள சரவணப் பொய்கையில் அவற்றைச் சேர்த்தாள். பிரம்மாதி தேவர்கள் அங்கே சூழ்ந்து நின்றார்கள்.

அந்த அருட்சுடர்கள் ஒன்றுபட்டு கருணைபொழிகின்ற ஆறு திருமுகங்கள் பன்னிரு திருத்தோள்கள், பதினெட்டுத் திருக்கண்களுடன் உலகம் உய்ய முருகவேள் திரு அவதாரம் செய்தருளினார்.

திருமாலின் கட்டளையால் கார்த்திகை மாதர் அறுவரும் எடுக்க, அறுவருக்கும் ஒவ்வொரு குழந்தையாய் ஆனார்முருகன்.

நெருப்புப் பொறிகளின் வெம்மையைக் கண்டு ஓடிய உமையின் பாதச்சிலம்பிலிருந்து ஒன்பது சக்திகள் தோன்றினார்கள் அரனாருடைய அருட்பார்வையால் நவவீரர்கள் தோன்றினார்கள். வீரபாகுத் தேவர், வீரகேசரி, வீர மகேந்திரர், வீரமசேகர், வீரபுரந்தரர், வீராக்கதர் வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர் மற்றும் வியர்வையில் லட்சம் வீரர்களும் தோன்றினார்கள்

முருகனுக்கு விசாகன் என்பது ஒரு பெயர். விசாக நக்ஷத்திரத்தில் உதித்தவர். விசாகம் ஞானத்திற்குரிய சிறப்பான நக்ஷத்திரம். மந்திரஉபதேசத்திற்குச் சிறப்புடைய நல்ல நக்ஷத்திரம்.

வள்ளியம்மை: முருகனின் வலப்பக்கத்தில் கையில்தாமரை ஏந்தி வீற்றிருப்பவள். இச்சாசக்தியே வள்ளியம்மை என வழங்கப்படும். தினைப்புனம் ஞானப்பயிர் விளையும் இடம். வள்ளி என்பது பரிபக்குவம் அடைந்த நல்லுயிர். இவள் கொங்கைகள் பரஞானம், அபர ஞானம் என்பர். குறவர் குலமகளாகிய வள்ளியை முருகன் நயந்து வலிந்துவந்து மணந்து கொண்டார். வள்ளியம்மையின் திருமணம் களவுத் திருமணம் ஆகும். இவள் கரிய நிறம் உடையவள்.

தேவயானை: முருகனுக்குக் கிரியா சக்தியாவாள். புகழ் விரும்பாது பெரிதும் அடக்கமாக இருப்பாள். தேவயானையம்மை செந்நிறம் வாய்ந்தவள். முருகனின் இடப்பால் விளங்கி கருங்குவளை மலரைக் கையில் ஏந்தியிருப்பாள்.

வேல் : இது முருகனுக்குத் தனிச் சிறப்புமிக்க படை. வெல் என்னும் பகுதியினின்று தோன்றியது வேல். வெல்ல வல்லது எதுவோ அதற்கே வேல் என்று பெயர். வெற்றி தருவது வேல்.

கோழிக்கொடி: முருகனுக்குத் கொடியாக விளங்குவது கோழி. சேவலாகிய கோழி ஒளியை விரும்பும். கோழியை நாத தத்துவம் என்பர்.

மயில்: விந்து தத்துவம். மயிலைப் பிரணவ மந்திரமாகக் கொள்ளலாம். தோகையை விரித்து ஆடும் மயில் தோற்றம் ஓங்காரம் போல் காட்சி அளிக்கும். மயிலின் வடிவம் மந்திரரூபமாகும்.

### ஆறு படைவீடுகள்

திருப்பரங்குன்றம் : இத்திருத்தலம் முருகனுடைய ஆறுபடை வீடுகளில் முதற்படைவீடு மலையிலேயே குடையப் பட்ட கோயில் முருகன் திருமால் கணபதி சிவபெருமான் துர்க்கை முதலிய உருவங்கள் மலைப்பாறையிலேயே செதுக்கப்பட்டவை. சூரபத்மனை அழித்து. தேவர்களைச் சிறை மீட்டு முருகன் திருப்பரங்குன்றம் அடைந்தான் இந்திரன் புதல்வியாகிய தேவயானையைத் திருமணம் செய்துகொண்டு புதுமணக்கோலத்தில் காட்சியளிக்கிறான்.

கோயிலின் கோபுர வாயிலுக்கு முன்னர் ஆஸ்தான மண்டபம் அமைந்துள்ளது. இது அறுப்பத்தாறு தூண்களைக் கொண்டது. மண்டபத்தின் நடுவில் அமைந்த தூண்களில் நர்த்தன விநாயகர் துர்க்கை தேவசேனா தேவி வீரபாகுத் தேவர் முதலிய சிற்பங்கள் காட்சி அளிக்கின்றன. தேவசேனா தேவியின் திருமணக்கோலச் சிற்பம் மிகவும் அற்புதமானது.

இதை அடுத்து ஏழுநிலை கொண்ட ராஜ கோபுரமும் கல்யாண மண்டபமும், அமைந்துள்ளன கிழக்குப் பாகத்தில் லக்ஷ்மி தீர்த்தமும் மேற்குப் பாகத்தில் சந்நியாசிக் கிணறும் அமைந்துள்ளன. இத்தீர்த்தத்தில் மூழ்கியவருக்கு வெண்குஷ்டம் நீரிழிவு முதலிய நோய்கள் விலகும்.

கர்ப்பக் கிருஹத்தில் ஒரு பெரிய பாறை உள்ளது. பாறையில் மத்தியில் மகி-ாசுரமர்த்தனியின் உருவமும். முருகப்பெருமானின் திருமணக் கோலமும் கற்பக விநாயகர் உருவமும் அதி அற்புதமாகக் குடைந்து வடிக்கப்பெற்றுள்ளன. முருகப்பெருமானின் திருவடியின் கீழ் அப்பெருமானது வாஹனங்களாகிய யானை, ஆடு உருவங்களும் கல்லில் வடிக்கப்பட்டுள்ளன. யானை இந்திரனுடைய ஐராவதம் தேவயானையைப் பிரிய மனமில்லாது தொண்டு புரிய வந்துநிற்கிறது பக்கத்தில் மஹாவிஷ்ணுவும் மஹா லெக்ஷ்மியும் மதங்க முனிவரும் காட்சி அளிக்கின்றனர்.

கற்பக விநாயகருக்கு அருகிலுள்ள குடைவரைக் கோயிலில் சிவலிங்க வடிவில் ஈசன் காட்சியளிக்கிறார் அர்த்த மண்டபத்தின் கீழ்ப்புறம் உள்ள குகைகோயிலில் அன்ன பூரணி தேவி தன் பரிவாரங்களுடன் காட்சி அளிக்கிறாள்.

திருமணகோலம் கொண்ட முருகப் பெருமான் உயர்ந்த இடத்தில் காட்சி அளிக்கிறார் திருமணச் சடங்கிற்கு அனைத்துத் தெய்வங்களும் வந்து சூழ்ந்துள்ளனர்.

குன்றின் அடிவாரத்தின் கீழ்த் திசையில் சரவணப் பொய்கை அமைந்துள்ளது. இது முருகன் திருக்கை வேலினால் உண்டாக்கப்பட்டது இப்பொய்கை நீரைக் கையினால் தீண்டினாலும் கருதும் காரியங்கள் கைகூடும்.

திருச்செந்தூர்: திருச்செந்தூர் பெருமை பெற்ற ஒரு முருகன் ஸ்தலம். இந்த ஸ்தலம் முருகனது இரண்டாம் படை வீடு. இக்கோயிலை முருகனே அமைத்தார் என்று புராணங்கள் கூறுகின்றன. நக்கீரர் முருகனின் ஆறுமுகங்களின் செயல்களையும் பன்னிரு திருக்கரங்களின் செயல்களையும் அழகாகக் கூறுகிறார். குமரகுருபரரும் இங்கு வந்து ஊமைத்தன்மை நீங்கி கந்தர்கலி வெண்பாப் பாடி முடித்தார்.

அருணகிரிநாதரின் பாடல் பெற்ற ஸ்தலம் இக்கோயிலில் கோவிந்தப் பெருமான் சயனத் திருக்கோலத்துடன் சேவை தருகிறார். கோயிலில் நுழையும்போதே தூண்டுகை விநாயகர் கோயில் உள்ளது. கடல் ஓரத்தில் ஒரு குகைக் கோயில் இருக்கிறது. இதில் வள்ளியம்மையின் உருவம் அமைந்துள்ளது. தெற்கே 200 கஜ தூரத்தில் நாழிக்கிணறு இருக்கிறது. நல்ல தண்ணீர் எடுக்க எடுக்க நீர் ஊறி நிறைந்துவிடும்.

இக்கோயிலில் பன்னீர் இலையில் விபூதி அளிக்கும் வழக்கம் தனிச் சிறப்புடையது.

கி.பி 1648-ஆம் ஆண்டில் டச்சு வணிகர்கள் ஆறுமுகநாயனாரின் திருஉருவத்தைப் பொன் என்று எண்ணித் திருடிக்கொண்டு கப்பலில் போனர்கள். கடல் கொந்தளிப்பு ஏற்பட பயந்துபோய் விக்கிரஹத்தைக் கடலில் எறிந்துவிட்டார்கள் இதையறிந்த வடமலைப் பிள்ளையான் முதலிய பேரன்பர்கள் மரக்கலங்களுடன்

கடலில் சென்று அத்திரு உருவத்தை எடுத்து வந்தார்கள் கி.பி. 1653-ல் மறுபடியும் பிரதிஷ்டை செய்தார்கள்.

பாஞ்சாலக்குறிச்சி வீரபாண்டியன் கட்டபொம்மன் திருச்செந்தூர் முருகனிடம் பேரன்பு பூண்டவன். உச்சிப்போதில் பூசை முடிந்த பின்னரேதான் உணவு உண்பான். திருச்செந்தூரிலிருந்து பாஞ்சாலங்குறிச்சி வரை 40 கல் தொலைவிற்கு இடை இடையே மண்டபங்கள் நிறுவி அவற்றிலிருந்து முரசொலி கேட்ட பிறகே உணவு உண்பான்.

முருகப்பெருமானின் அருள் மணம் கமழும் திருச்செந்தூர் கடற்கரைமீது அமைந்துள்ளது. முருகப்பெருமான் சூரபத்மனுடன் நிகழ்த்திய போர் இங்கிருந்தே தொடங்கிப் பின் வெற்றியுடன் முடிவுற்றது. ஆலயத்திற்குத் தெற்கே கடல் ஓரத்தில் நாழிக்கிணறு என்று அழைக்கப்படும் புண்ணிய தீர்த்தம் ஒன்று உள்ளது. குமாரக்கடவுள் தம் கைவேலினால் உண்டாக்கியது இந்தத் தீர்த்தம் இது நீராடுபவர்களின் நோய்களைத் தீர்க்கும் தெய்வத்தன்மை பெற்றுள்ளது. ஆதிசங்கரர் இங்கு ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கம் பாடியருளித் தம்மைப் பீடித்திருந்த நோய் நீங்கப்பெற்றார்.

குமரகுருபரர் ஐந்து வயது வரை வாய் பேசாது ஊமையாக இருந்தார். இங்கு முருகன் திருமுன்பு பேசும் ஆற்றல் பெற்றுக் கந்தர் கலிவெண்பாவைப் பாடியருளினார். பகழிக்கூத்தர் இங்குள்ள பெருமான் மீது பிள்ளைத்தமிழ் பிரபந்தம் பாட அவரை வாட்டிய வயிற்றுவலி நீங்கியது.

பழநி: தமிழ்க் கடவுளான திருமுருகன் கோயில் கொண்டிருக்கும் பல ஸ்தலங்களில் தலைசிறந்தது பழநி. மூன்றாவது படைவீடு. பழநி என்ற பேர் வந்ததற்குப் புராணக் கதை உண்டு. நாரதர் திருக்கயிலையில் சிவபெருமானைக் காணச் சென்றவர் ஒரு மாங்கனியை அவர்முன் வைத்தார். பக்கத்தில் இருந்த விநாயகரையும் முருகனையும் நோக்கி யார் உலகை முதலில் சுற்றி வருகிறாரோ அவருக்கு இக்கனியைக் கொடுப்போம் என்று சிவனார் மொழிந்தார். முருகன் உடனே மயில் வாஹனத்தில் புறப்பட்டார் விநாயகர் பெற்றோர்களை வலமாகச் சுற்றிவந்து மாம்பழத்தைப் பெற்றார். இதைக்கண்டு முருகன் சினம் கொண்டார். பார்வதி பரமேசுவரர் முருகனைப் பழம் நீயிருக்க உனக்கு வேறு பழம் வேண்டுமா? என்று கேட்டனர். முருகன் ஆறுதல் அடையாமல் திருவாவினன் குடிவந்து சிலகாலம் தங்கி பிறகு பழநியங்கிரிமீது தங்கி அடியார்களுக்கு அருள் வழங்கி வருகிறார். பழம் நீ பழநி என்று பேர் வழங்கலாயிற்று.

பழநி ஆண்டவன் சந்நிதி மேற்கு நோக்கி உள்ளது. இத்திரு உருவம் போகர் என்னும் சித்தரால் நவபாாணத்தில் செய்யப்பட்டது அந்தத் திருமேனி மேல் அபிகேம் செய்யப்பெற்ற பால் தேன் சந்தனம் இவைகளை உண்போர் தமக்குள்ள நோய் நீங்கப்பெறுகின்றனர். அபிகேமும் அலங்காரங்களும் எந்நேரமும் நடந்து கொண்டே இருக்கும். அன்பர்கள் கோரிக்கைகள் நிறைவேற முடி இறக்குதல் காவடிகளில் தேன் பால் சர்க்கரை இளநீர் பன்னீர் திருநீறு இவைகளைக்கொண்டு வருதல் பஞ்சாமிர்த அபிகேம் செய்தல் போன்றவை இங்கே நிகழ்ந்த வண்ணம் இருக்கும்.வைகாசி விசாகம் சஷ்டி கார்த்திகை தைப்பூசம் பங்குனி உத்திரம் இந்த நாட்களில் சிறப்பாகத் திருவிழாக்கள் நடைபெறுகின்றன.

திருவாவினன் குடி பழையகோயில். இது மலை அடிவாரத்திற்குப் போகும் வழியில் உள்ளது. வடகிழக்கே சரவணப் பொய்கை என்ற தீர்த்தம் அமைந்துள்ளது.

பழநி முருகன் முகமும் இரண்டு கைகளும் உடையவராய் வலக்கையில் தண்டாயுதம் ஏந்தி இடக்கையை இடுப்பில் வைத்து கோவணம் உடுத்திய நிலையில் செந்தாமரை போன்ற நிறத்துடன் நின்ற கோலத்தில் காட்சி அருளுகின்றார்.

துறவு நெறிச் சிறப்பு தவ வாழ்க்கையின் மேன்மை ஆகியவற்றைக் குன்றின் மேல் இட்ட விளக்கென உலகுக்கெல்லாம் உணர்த்தி நிற்கும் சிறப்புடையதே ஸ்ரீ பழநி ஆண்டவர் திருஉருவம்.

பழநி ஆண்டவர் காட்சிக்கு எளியவர். கருணைக்கு இனியவர். குணம் என்னும் குன்றில் ஏறி நிற்பவர் குழந்தை உள்ளம் படைத்தவர். எளிதாகவும் விரைவாகவும் அருளை வழங்கும் இயல்பினர். கலியுகத்தின் கண்கண்ட தெய்வம்.

தங்கரத்தில் ஒவ்வொரு மாதமும் கார்த்திகை தினத்தன்று முருகப்பெருமான் மலை மீது பவனி வருவார். இந்த ஸ்தலத்தில் இறைவனை மஹாலஷ்மி காமதேனு சூரியன் ஆகியோர் பூசித்துப் பேறு பெற்றதாகப் புராணம் கூறும்.

சுவாமி மலை: சுவாமி மலை ஆறுபடை வீடுகளில் நான்காவது. கோயில் சந்நிதி கிழக்கு நோக்கியுள்ளது. முதல் பிரகாரத்தில் சுந்தரரேஸ்வரர் மீனாட்சியம்மை கோயில்கள் தனித்தனியே உள்ளன. முருகனைத் தரிசிக்க அறுபது படிகள் ஏறிச் செல்ல வேண்டும் அறுபது படிகள் அறுபது ஆண்டுகளைக் குறிக்கும் மேலே சென்றதும் கண் கொடுத்த விநாயகர் காட்சி அளிக்கிறார். சுவாமிநாதர் திருமுன் மயிலுக்குப் பதிலாக இங்கு யானை இருப்பது ஒரு தனிச்சிறப்பு.

சிவபெருமானுக்கு இந்த ஸ்தலத்தில் தான் முருகன் பிரணவ மந்திர உபதேசம் செய்தார். ஆகையால் குருநாதர் என அழைக்கப்படுகிறார். வஜ்ர தீர்த்தம் சரவண தீர்த்தம் இவை கோயிலுக்குள் இருக்கின்றன. ஸ்தல விருக்ஷம் நெல்லி மரம். தைப் பூசம் பங்குளி உத்திரம் மற்றும் கார்த்திகை சித்திரை மாதங்களில் பெருவிழா நடக்கும்.

கயிலையில் ஒருநாள் பாலமுருகன் நவவீரர்களோடு விளையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது அங்கு வந்த இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும் முருகப் பெருமானை வணங்கிச் சென்றனர். ஆனால் படைப்புக் தலைவனான பிரம்மன் மட்டும் தான் என்ற அகந்தையுடன் வணங்காமல் அப்பால் சென்றான்.

இதனை உணர்ந்த முருகன் ஒரு திருவிளையாடல் புரியலானார். முருகப்பெருமான் கட்டளைப்படி வீரபாகுத் தேவர் சென்று பிரம்மனை அழைத்து வந்தார். பிரம்மனைப் பார்த்து வேதத்தை ஓதுமாறு முருகன் பணித்தார். ஓம் என்று வேதத்தைக் கூறத் தொடங்கினார் பிரம்மன். உடனே அந்தப் பிரவணவத்துக்குப் பொருள் கூறுமாறு கேட்டார் முருகன்.

பிரணவ மந்திர உருவினரான முருகப் பெருமானே பிரணவப் பொருளைக் கேட்டபடியால் பிரம்மன் பொருள் கூற இயலாது வெட்கித் திகைத்தான். உடனே முருகப் பெருமான் பிரணவத்தின் பொருள் அறியாது படைப்புத் தொழிலைப் பிரம்மன் புரிவது மிகவும் தவறு என்று கூறி அவனுடைய நான்கு தலைகளிலும் குட்டி அவனைச் சிறைப்படுத்தினார்.

பிரம்மனைச் சிறையிட்ட பின்னர் முருகப் பெருமான் தாமே படைத்தல் தொழிலைச் செய்யலானார் திருமாலும் தேவர்களும் சிவபெருமானிடம் சென்று முறையிட்டுக் கொண்டனர். பிரம்மனைச் சிறையினின்றும் விடுவித்துப் படைத்தல் தொழிலைச் செய்யப் பணித்தல் வேண்டும் என்று சிவபெருமான் வேண்டினார். முருகப்பெருமான் சிவபெருமானின் வேண்டுகோளுக்கு இணங்கி பிரம்மனைச் சிறையிலிருந்தும் விடுவித்தார்.

பிரம்மனால் கூறமுடியாத பிரணவப் பொருளை முருகன் அறிந்திருந்ததால் அதைத் தமக்கு அவர் உபதேசிக்க வேண்டும் என்று சிவபெருமான் கேட்டார். முருகன் தம் தந்தையின் மடிமீது அமர்ந்து குருவாகப் பிரணவ பொருளைத் தந்தைக்குத் திருச்செவியில் உபதேசித்தார். ஆகையால் முருகன் குருநாதன் என்றும் சுவாமிநாதன் என்றும் திருப்பெயர்கள் பெற்று விளங்குகிறார். தம் தந்தைக்கு உபதேசித்த காரணத்தால் தகப்பன் சுவாமி என்றும் புகழோடு விளங்குகிறார்.

சிவபெருமான் சீடராகவும் முருகன் குருவாகவும் இருந்ததை விளக்கும் வண்ணம் சிவபெருமான் சந்நிதி மலையின்கீழ் பாகத்திலும் அமைந்துள்ளன.

பிரம்மன் தன்னை வணங்காததற்காக முருகன் அவரைச் சிறையிடவில்லை.

கல்விக்குத் தலைவி கலைமகள். கலைமகளின் கணவர் பிரம்மா. கல்விச் செருக்கினால் இறைவனைக் காணமுடியாது. அன்பினால் அணுகினால் இறைவனைக் காண முடியும் என்ற உண்மையை உலகுக்கு உணர்த்தவே இத் திருவிளையாடலைப் புரிந்தருளினார்.

கர்ப்பக் கிருஹத்தில் சுவாமிநாதப் பெருமான் சுமார் 6 அடி உயரத்தில் வலத்திருக்கை தண்டம் பற்றியும் இடத்திருக்கை தொடையில் வைத்தும், கருணை பொழியும் திருமுகத்துடன் யோக குருவாகக் காட்சி அளித்து அன்பர் துயர் களைந்து இன்புறுத்தித் திகழ்ந்தார்.

திருத்தணி: இந்தத் தலம் முருகனுடைய ஐந்தாவது படை வீடாகும்..சூரனுடன் போர் புரிந்து சினம் தணிந்து அமர்ந்த இடமாதலால் தணிகை என்னும் பெயர் பெற்றது.

குமரக் கடவுள் மலைமீது கோயில் கொண்டுள்ளார். சந்நிதி கிழக்கு நோக்கியுள்ளது. மலை அடிவாரத்தில் படிகள் தொடங்கும் இடத்தில் திருக்குளம் உள்ளது. இதைச் சரவணப் பொய்கை என்றும் குமார தீர்த்தம் என்றும் சொல்வது உண்டு.

அடிவாரத்திலிருந்து கோயிலை அடைய 365 படிகள் ஏறிச் செல்ல வேண்டும். உச்சியை அடைந்ததும் தேர்வீதி தென்படுகிறது. மேற்கு வெளிப்பிரகாரத்தில் செங்கழுநீர் விநாயகர் ஆலயம் அமைந்துள்ளது. மேலே உமாமகேசுவரர் கோயில் உச்சிப் பிள்ளையார் கோயிலோடு ஐராவதமும் காணலாம். ஐராவதம் கிழக்கு நோக்கியிருக்கிறது.

இரண்டாவது உட்பிரகாரத்தில் காமாட்சி ஏகாம்பரநாதர் ஆறுமுக சுவாமி குமாரலிங்கம் சந்நிதிகளைத் தரிசிக்கலாம். மூன்றாவது உட்பிரகாரம் செல்லப் பஞ்சாட்சரப் படிகள் என்ற ஐந்து படிகள் ஏறிப் போக வேண்டும். உள்ளே நுழைந்ததும் முருகப் பெருமான் திருக்கோலக் காட்சியைக் காணலாம். குமரக் கடவுளுக்குரிய பதினாறு வகை உருவங்களில் ஞான சந்திரர் என்னும் உருவமே திருத்தணியில் இருப்பது. வலது திருக்கரம் வேலோடும் இடது திருக்கரம் தொடையிலுமாக அமைந்துள்ளன. விஷ்ணு ஆலயங்களில் சடகோபம் சாதிப்பது போல் இந்தச் சந்நிதியிலும் முருகன் திருவடி நிலை வணங்குவோர் தலையில் வைக்கப்படுகிறது. தீர்த்தம் திருநீறு சந்தனம் இவைகளும் வழங்கப்படுகின்றன. இக்கோயிலில் உள்ள சந்தனக் கல் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாகப் பயன்பட்டும் தேய்வுபடாமல் ஜோதி வீசுகிற அணுக்களுடன் காணப்படுகிறது. இதில் அரைக்கப் பட்ட சந்தனத்தை உட்கொண்டால் சகல நோய்களும் தீரும் என்பர். தணிகைப் பெருமானை வணங்கிய பின்னர் வடக்கே தெய்வானை சந்நிதியும் தெற்கே வள்ளியம்மை சந்நிதியும் தரிசிக்க வேண்டும்.

மாதக் கிருத்திகை முருகனுக்கு உகந்த நாள். சிறந்த திருநாட்கள் கார்த்திகைக் கிருத்திகையும் மாசிக் கிருத்திகையும். ஆடிக் கிருத்திகையன்று இங்கே திருவிழா. பூக்காவடிகள் எண்ணில்லாமல். வரும் அப்போது சரவணப் பொய்கையில் தெப்பம் நடைபெறும் மகா சிவராத்திரியன்று 1008 சங்காபிகேம் நடைபெறும்.

சிவபெருமான் திருமால் பிரம்மா இராமர் இந்திரன் நந்நிதேவர் ஆதிசேன் நாரதர் அகஸ்தியர் சப்த ரிஷிகள் அகோரன் முதலியோர் இங்கு ஆண்டவனை வழிப்பட்டதாகப் புராணம் கூறுகிறது.

இத்தலமே முருகன் வள்ளியம்மையை மணம் புரிந்த இடம். இங்கு வீரட்டானே சுவரர் அறுமுக சுவாமி விஜயராகவப் பெருமாள் ஏழு கன்னியர் இவர்களுடைய கோயில்கள் பார்க்க வேண்டியவை.

பழமுதிர்சோலை: இந்தத் தெய்வத்தலம் முருகனது ஆறாவது படை வீடாகும். திருமாலிருஞ் சோலைமலை என்றும் அழகர் கோயில் என்றும் வழங்கும் இடமே முருகனும் இனிது உறையும் இத்திருத்தலம் என்று தெரிய வருகிறது. பழங்காலத்தில் இங்கு முருகனுக்குப் கோயில் இருந்திருக்க வேண்டும். அழகர்மலை என்று வழங்குவதனால் இங்கே உறையும் தெய்வத்துக்கு அழகர் என்னும் பெயர் இருப்பதை அறியலாம். சௌந்தர்ராஜப் பெருமாள் என்ற திருநாமத்தோடு விஷ்ணு இங்கே எழுந்தருளியிருக்கிறார். முருகன் என்ற சொல்லுக்கு அழகன் என்ற பொருளுடையது ஆதலின் அவனையும் அழகன் என்ற பெயரால் அழைக்கலாம். அவன் எழுந்தருளியிருந்தமையாலும் அழகர் மலை என்று வழங்கவுதாகக் கொள்ளலாம்.

இங்கே சரவணப் பொய்கை என்ற பெயரோடு ஒரு குளம் இருந்ததாகவும் அதைப் புண்ணிய சரவணம் என்று வழங்கினர் என்றும் தெரியவருகிறது.

திருமுருகாற்றுப் படை இங்கே விழும் அருவியின் அழகை வர்ணிக்கிறது. இப்போது அழகர் மலைமேல் ஓரிடத்தில் முருகனுடைய திருக்கோயிலை எழுப்பி இருக்கின்றனர். ஆறு ஆதாரங்களிலும் வெவ்வேறு கோலத்தில் எழுந்தருளியிருப்பவன் முருகன். ஆறு திசைகளிலும் தன் அருள் முகப் பார்வையைச் செல்ல விடுபவன் அவன். ஆறு கோண சக்கரத்தில் அருட்சக்தி பொலிய வீற்றிருப்பவன் முருகன். ஆறு சமயங்களிலும் அவ்வச் சமய முர்த்தியாக விளங்குபவன் அத்தகைய ஆறுமுகன் தமிழ்நாட்டில் ஆறுபடை வீடுகளில் எழுந்தருளியிருந்து அன்பர் களுக்குத் திருவருள் பாலித்து வருகிறான்.

நன்றி : ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்குட முழுக்கு நன்னீராட்டு விழா மலர் 2000. ஏர்ணாகுளம்.

# ஒன்றனுக்கு இரண்டு

முனைவர். **பழ.முத்தப்பன்,** எம்.ஏ., பிஎச்.டி
முதல்வர் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி
மேலைச்சிவபுரி, புதுக்கோட்டை மாவட்டம்

"வார்கொண்ட வனமுலையாளுமை பங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்"

என்பது திருத்தொண்டத் தொகையில் சாக்கிய நாயனார் வரலாற்றைப் பற்றிச் சுந்தரர் குறிப்பிடும் பகுதியாகும். உமைபங்கரை மறவாது கல்லெறிந்து வழிபட்டுத் திருவடிப்பேறு பெற்ற சாக்கியநாயனாரைப் போற்றுகிறேன் என்பது அப்பகுதிக்குரிய பொருளாகும். சாக்கியர் கல்லெறிந்து வழிபட்ட இந்நிகழ்ச்சியைத் தம்நூலில் விரித்துரைக்கும் சேக்கிழார் அவ்வழிபாட்டை ஏற்றுக் கொண்ட சிவபெருமானின் அருட்கருணையைப் பற்றிக் குறிப்பிடும் பங்கினைச் சிந்திப்பது இக்கட்டுரையின் உட்கருத்தாகும்.

திருச்சங்க மங்கையில் வேளாளர் குலத்தில் உதித்த சாக்கியர் காஞ்சிப்பதி சென்று ஞானம் அடைவதற்குப் புத்த மதம் சார்ந்து, துவராடை புனைந்து புத்த சமயநூல்கள் பல கற்றார் ஆயினும் "மெய் வகையால் செய்வானும், அதன் பயனும் சேர்பபானும் மெய் வகையால் நான்காகும் என்ற விதித்த பொருளைத் தருவது சைவ சமயமே என்பதைக் காலப்போக்கில் உணர்ந்தார் என்றாலும் சாக்கியவேடத்தை நீக்காது, காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமான சிவலிங்க வடிவத்தை வழிபட்டுப் பின் உண்ணுவது என்ற கொள்கையை ஏற்படுத்திக் கொண்டு வாழத் தலைப்பட்டார்.

அவ்வாறு வாழ்கின்ற நாளில் ஒருநாள் காஞ்சிமா நகரத்தில் வெட்டவெளியில் வீற்றிருந்த சிவலிங்கத்தைக் கண்டு பேருவகை கொண்டு செய்வது இன்னது என்ன தெரியாது பக்கத்தில் கிடந்த கல் ஒன்றினைக் கண்டு அதனை மலராக அன்பொடு எடுத்து அச்சிவலிங்கத்தின் மேல் எறிந்தார்.முக்கட் பெருமான் சாக்கியர் கல் எறிந்த செயலுக்கு மகிழ்ந்தார். இதனைக் குறிப்பிடும் பொழுது சேக்கிழார்.

அக நிறைந்த பேருவகைக் கடங்காத ஆதரவால்
மகவு மகிழ்ந்து உவப்பார்கள் வன்மைபுரி செயலினால்
இகழ் வனவே செய்தாலும் இளம் புதல்வர்க்கு இன்பமே
நிகழுமது போலதற்கு நீள் சடையோர் தாம் மகிழ்வார்

(பெரியபுராணம் சாக்கியர் பாடல் 10)

என்ற பாடலை நூலில் அமைத்துள்ளார். இப்பாட்டில் உவமை ஒன்று மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. தம் குழந்தையால் பேரன்பு கொண்ட பெற்றோர்கள் தம் மகிழ்ச்சியினால் சில நேரங்களில் தம் குழந்தையைச் சிறிதே அடித்தல், கிள்ளுதல்,

அழுத்திக் கட்டிப்பிடித்தல் முதலிய வன்மையான செயல்களைச் செய்வர். இச்செயல்கள் குழந்தைக்கு வலியைத் (துன்பத்தை) தந்தாலும் அக்குழந்தை அதனைத் துன்பமாகக் கருதாது இன்பமாக ஏற்றுச் சிரித்து மகிழும், இஃது உலகியல் நிலையில் கண்கூடாகக் காணப்பெறும் செயலாகும். இச்செயலை உவமையாக்கி இறைவனின் பெருமையை அறியச் செய்கிறார் சேக்கிழார். அதாவது பெற்றோரின் வன்செயலைக் குழந்தை எவ்வாறு மகிழ்வாக ஏற்கிறதோ அதுபோலச் சாக்கியரின் கல்லெறிந்த வன்செயலைச் சடையனாராம் சிவபெருமான் மகிழ்ந்து ஏற்றார் என்கிறார். இங்கு பெற்றோர் சாக்கியர்க்கும் மகவு இறைவனுக்கும் உவமைகளாகப் பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

சாக்கிய நாயனார் கல்லெறிந்து வழிபட்ட செயல் சிவநெறி வழிபாட்டில் விதியடிப்படையில் விலக்கப்படும் செயல் என்பதனால் பாட்டில் “இகழ்வனவே”செய்தாலும் என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். இகழ்ச்சிக்குரிய செயல் போல் கல்லெறிதல் காணப்பட்டாலும். அது களிஉவகை மிகப்பட பதைபதைப்போடு இன்னது செய்கிறோம் என்று அறியாது செய் செயலாகும் என்பதனால் “அகம் நிறைந்த பேருவகை” என்றும் பாட்டில் குறிப்பிடுகிறார். எனவே அகம் நிறைந்த அன்போடு மனம் நிறைந்த மகிழ்வோடு செய்யும் செயல் குற்றமாகாது என்றே பெறப்படுகிறது. இவ்வாறு உவமையின் மூலமாகச் சாக்கிய நாயனாரின் கல் எறிந்த செயலை உவகைச் செயலாகக் காட்டிய சேக்கிழார் இதோடு நின்று விடாது.

“கல்லாலே எறிந்ததுவும் அன்பான படி காலில்
வில்வேடர் செருப்படியும் திருமுடியில் மேவிற்றால்
நல்லார் மற்தவர்செய்கை அன்பாலே நயந் தனை
அல்லாதார் கல்லென்பார் அரனார்க்கு அது அலராமால்

(சாக்கிய நாயானார் பாடல் 14)

என்று ஓர் ஒப்புமையும் காட்டுகிறார். அதாவது எப்படி சாக்கியநாயனார் எறிந்த கல் சிவபெருமானின் மேனியில் பட்டதோ. அதுபோல வில்வேடராம் கண்ணப்பரின் காற்செருப்பும் இறைவன் திருமேனியில் பட்டது என்கிறார் சேக்கிழார். கண்ணப்பர் இறைவன் திருமேனியில் வாய்நீரை உமிழ்ந்தார். தன்தலையில் சூடிய மலரை அர்ச்சித்தார் என்றாலும் அவரின் செருப்படி திருமேனியில் பட்டதை மட்டும் சேக்கிழார் இங்கு ஒப்புமைக்கு எடுத்துக் கொண்டிருப்பது சிந்தனைக்குரிய தாகும். நீரையும், பூவையும் இங்குக் குறிப்பிடாது செருப்பை மட்டும் எடுத்துக் கொண்டிருப்பது கல் எவ்வாறு கீழே கிடப்பதோ அதுபோலக் கால் செருப்பும் கீழே கிடக்க வேண்டியது. கீழே கிடக்க வேண்டிய கல்லைச் சாக்கிய நாயனாரும் கீழே கழற்றிவிட வேண்டிய செருப்பைக் கண்ணப்ப நாயானாரும் இறைவன் திருமேனியில் படவைத்தர்கள் என்ற ஒப்புமைநிலை இங்கு பெறப்படுகிறது. இவ்விருவரின் இத்தகைய செயல்கள்

"துன்னிய மெய் யன்புடனே எழுந்த வினை" (பாடல்12)
என்று சேக்கிழாரால் குறிக்கப் பெறுகிறது. அதாவதுபொருந்திய உண்மையான அன்பினாலே செய்யப் பெறும் செயல்களாகும் என்கிறார் சேக்கிழார். இத்தகைய உண்மை அன்பினால் செய்யப்படுகிற செயல்கள் வழிபாட்டு விதிக்கு மாறாக அமைந்தாலும் அவை மகிழ்வுக்குரிய செயல்களாகவே இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பெறும் என்பது இங்கு வலியுறுத்தப் பெறுகிறது. இவ்வாறு சாக்கிய நாயனாரின் விதிக்கு அப்பாற்பட்ட செயலுக்குச் சேக்கிழார் உவமையாக ஒரு செயலையும் ஒப்புமையாக ஒரு செயலையும் கூறி ஒன்றனுக்கு இரண்டினை அமைத்த பாங்கு மிகவும் போற்றி மகிழத் தக்கதாகும்.

விதிக்கு அப்பாற்பட்ட செயல்கள் மகிழ்வுடையதாகும் என்பதைச் சேக்கிழாரை அடியொற்றிப் பின்னால் வந்த சித்தாந்த ஆசிரியர் அருணந்தி சிவாச்சாரியாரும்

அரன் அடிக்கு அன்பர் செய்யும்
பாவமும் அறமது ஆகும்
பரன் அடிக்கு அன்பு இலாதார்
புண்ணியம் பாவம் ஆகும்
வரம் உடைத் தக்கன் செய்த
மாவேள்வி தீமை ஆகி
நரரினில் பாலன் செய்த
பாதகம் நன்மை ஆய்த்தே (119)

என்று சிவஞானசித்தியாரில் குறிப்பிடுகிறார். பாவச் செயல்கூட நன்மையாகும் என்று அருணந்தியார் குறிப்பிட்டு அதற்கு எடுத்துக் காட்டாகச் சண்டேசுவர நாயனாரின் செயலை எடுத்துக்காட்டுகிறார். இத்தோடு நின்றுவிடாது எதிர்மறைப் பொருளையும் அருணந்தியார் அப்பாடலில் வைக்கிறார். அதாவது தவத்தை உடைய ஒருவன் விதிப்படி வழிபாட்டைச் செய்தாலும் அதில் அன்பில்லை என்றால் அது பாவச் செயலாகும் என்பதைச் சுட்டி அதற்கு எடுத்துகாட்டாகத் தக்கன் செய்த வேள்வியைச் சுட்டுகிறார். எனவே அருளாளர்களாக விளங்கும் சைவசமய ஆசிரியர்கள் ஒன்றினை விளக்கப் பல கோணங்களில் செய்திகளைத் தருவார்கள் என்பது புலனாகிறது.

சாக்கிய நாயனாரின் கல்லடியும் (கல்லெறிந்து) கண்ணப்பரின் செருப்படியும் இறைவனுக்கு மலர்களாக அமைந்தன என்பதனை "அரனுக்கு அலராமல்" என்ற தொடரால் சேக்கிழார் குறிப்பிடுவதும் (பா.14) சிறப்புடையதாகும் எனவே எறிகின்ற பொருள்கள் கவனிக்கத் தக்கன அல்ல. அவற்றை எறிகின்றவர் தம் உள்ளப் பாங்கே நினைக்கத் தக்கது. கல்லும், செருப்பும் இங்கு காணத் தக்கன அல்ல, அவற்றைக் கையாண்ட சாக்கிய நாயனார், கண்ணப்ப நாயனார் இருவரின் தூய மெய்யன்பே நினைக்கத் தக்கதாகும் என்பதைச் சேக்கிழார் வழி உணர்கின்றபோது சைவ சமய உயர்வு வெளிப்படுகிறது.

நன்றி: மாத்தூர் சிறப்பு மலர் 2002

# திருக்கோயில் வழிபாடு

ஆறுமுக நாவலர்

1. சிவபெருமானை வழிபடுவதற்கு உரிய முக்கிய ஸ்தானம் யாது?
   திருக்கோயில்

2. திருக்கோயிலுக்கு எப்படிப் போதல் வேண்டும்?
   ஸ்நானஞ்செய்து, தோய்த்துலர்ந்த வஸ்திரந் தரித்து, விபூதி இட்டுக் கொண்டு போதல் வேண்டும்.

3. திருக்கோயிலுக்குச் சமீபித்தவுடனே யாது செய்தல் வேண்டும்?
   தூல லிங்கமாகிய திருக்கோபுரத்தைத் தரிசித்து இரண்டு கைகளையும் சிரசிலே குவித்து சிவநாமங்களை உச்சரித்து கொண்டு உள்ளே போதல் வேண்டும்.

4. திருக்கோயிலினுள்ளே போனவுடன் யாது செய்தல் வேண்டும்?
   பலிபீடத்துக்கு இப்பால் நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

5. கிழக்கு நோக்கிய சந்நிதானத்திலும், மேற்கு நோக்கிய சந்நிதானத்திலும் எந்தத் திக்கிலே தலைவைத்து நமஸ்காரம் பண்ணல் வேண்டும்?
   வடக்கே தலைவைத்து நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

6. தெற்கு நோக்கிய சந்நிதானத்திலும் வடக்கு நோக்கிய சந்நிதானத்திலும் எந்தத் திக்கிலே தலைவைத்து நமஸ்காரம் பண்ணல் வேண்டும்?
   கிழக்கே தலைவைத்து நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

7. எந்தத் திக்குகளிலே நமஸ்காரம் பண்ணலாகாது?
   கிழக்கிலும் வடக்கிலும் கால் நீட்டி நமஸ்காரம் பண்ணலாகாது.

8. ஆடவர்கள் என்ன நமஸ்காரம் பண்ணல் வேண்டும்?
   அட்டாங்க நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.

9. அட்டாங்க நமஸ்காரமாவது யாது?
   தலை, கையிரண்டு, செவியிரண்டு மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டு அங்கங்களும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குதல் (அட்டாங்கம் – எட்டு உறுப்பு)

10. பெண்கள் என்ன நமஸ்காரம் பண்ணல் வேண்டும்?
    பஞ்சாங்க நமஸ்காரம் பண்ணல் வேண்டும்.
    (பஞ்சாங்க –ஐந்து உறுப்பு)

11. பஞ்சாங்க நமஸ்காரமாவது யாது?
தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்து அவயமும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குதல்.

12. நமஸ்காரம் எத்தனை தரம் பண்ணல் வேண்டும்?
மூன்று தரமாயினும், ஐந்து தரமாயினும் ஏழு தரமாயினும், ஒன்பது தரமாயினும் பண்ணல் வேண்டும். ஒருதரம், இருதரம் பண்ணுதல் குற்றம்.

13. நமஸ்காரம் பண்ணியபின் யாது செய்தல் வேண்டும்?
பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்.

14. எப்படிப் பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்?
இரண்டு கைகளையும் சிரசிலேனும் மார்பிலேனுங் குவித்து சிவநாமங்களை உச்சரித்துக் கொண்டு கால்களை மெல்ல வைத்துப் பிரதக்ஷிணம் பண்ணல் வேண்டும்.

15. பிரதக்ஷிணம் எத்தனை தரம் பண்ணல்வேண்டும்?
மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், ஏழுதரமாயினும், ஒன்பது தரமாயினும் பண்ணல் வேண்டும்.

16. சுவாமி சந்நிதானங்களை எந்த முறையாகத் தரிசனஞ் செய்தல் வேண்டும்?
முன் விக்கினேசுரரைத் தரிசனஞ் செய்து பின் சிவலிங்கப் பெருமானையும் உமா தேவியாரையுந் தரிசனச் செய்து, விபூதி வாங்கித் தரித்துக் கொண்டு அதன் பின் சபாபதி, தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகளைத் தரிசனஞ் செய்தல் வேண்டும்.

17. விக்கினேசுரரைத் தரிசுக்கும் பொழுது யாது செய்தல் வேண்டும்?
முட்டியாகப் பிடித்த இரண்டு கைகளினாலும் நெற்றியிலே மூன்று குட்டி வலக்காதை இடக்கையினாலும், இடக்காதை வலக்கையினாலும் பிடித்துக் கொண்டு மூன்று முறை தாழ்ந்தெழுந்து கும்பிடல் வேண்டும்.

18. சந்நிதானங்களிலே தரிசனம் பண்ணும் பொழுதெல்லாம் யாது செய்தல் வேண்டும்?
இரண்டு கைகளையுஞ் சிரசிலாயினும், மார்பிலாயினும் குவித்துக் கொண்டு மனங்கசிந்துருகத் தோத்திரஞ் செய்தல் வேண்டும்.

19. எந்தத் காலத்தில் சுவாமி தரிசனஞ் செய்யலாகாது?
அபிகேம் நிவேதனம் முதலியவை நடக்கும் பொழுது செய்யலாகாது.

20. அபிகே காலத்தில் பிரதக்ஷிண நமஸ்காரங்களும் பண்ணலாகாதா?
அப்பொழுது உட்பிரகாரத்திலே பண்ணலாகாது.

21. தரிசனம் முடிந்தவுடன் யாது செய்தல் வேண்டும்?
சண்டேசுரர் சந்நிதியை அடைந்து கும்பிட்டு மூன்று முறை கைகொட்டி சிவதரிசன பலத்தைத் தரும்பொருட்டுப் பிரார்த்தித்தல் வேண்டும்.

22. சண்டேசுர தரிசன்னத்தின் பின் யாது செய்தல் வேண்டும்?
சிவசந்நிதானத்தை அடைந்து நமஸ்காரம் பண்ணி இருந்து ஸ்ரீபஞ்சாட்சரத்தில் இயன்ற உருச்செபித்துக் கொண்டு எழுந்து வீட்டுக்குப் போதல் வேண்டும்.

23. நித்தியமும் நியமமாக ஆலய தரிசனஞ் செய்ய இயலாதவர் யாது செய்தல் வேண்டும்?
சோமவாரம், மங்கலவாரம், சுக்கிரவாரம், பிரதோம், பௌர்ணமி, அமாவாசை, திருவாதிரை, கார்த்திகை, மாசப்பிறப்பு, சூரியகிரகணம், சந்திரகிரகணம், சிவராத்திரி, நவராத்திரி முதலிய புண்ணிய காலங்களிலாயினும் தரிசனஞ் செய்தல் வேண்டும்.

24. திருக்கோயிலிலே செய்யத்தகாத குற்றங்கள் யாவை?
ஆசாரமில்லாது போதல், கால் கழுவாது போதல், எச்சலுமிழ்தல், மலசலங் கழித்தல், மூக்குநீர் சிந்துதல், ஆசனத்திருத்தல், சயனித்தல், காலை நீட்டிக் கொண்டிருத்தல், மயிர் கோதி முடித்தல், சூதாடல், பாக்கு வெற்றிலையுண்ணல், சிரசிலே வஸ்திரந் தரித்துக்கொள்ளுதல், தோளிலே உத்தரீயம் இட்டுக்கொள்ளுதல், சட்டையிட்டுக் கொள்ளுதல், பாதரக்ஷையிட்டுக் கொள்ளுதல், விக்கிரகத்தைத் தொடுதல், திருமாலியத்தைக் கடத்தல் நிருமாலியத்தை மிதித்தல், தூபி, துவஜஸ்தம்பம், பலிவீடம், விக்கிரகம் என்னும் இவைகளின் நிழலை மிதித்தல், வீண் வார்த்தை பேசல், சிரித்தல், சண்டையிடுதல், விளையாடுதல், சுவாமிக்கும் பலிவீடத்துக்குங் குறுக்கே போதல் முதலியவைகளாம்.

நன்றி : ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்குட முழுக்கு
நன்னீராட்டு விழா மலர் 2000. ஏர்ணாகுளம்.



# வழிபாட்டுப் பொருள்களின் தத்துவம்

அ. சுவாமிநாதன்

சிவனுக்குரிய அருச்சனைப் பொருள்களிலே தேங்காயை அடுத்து முக்கிய இடம்பெறுவது வெற்றிலைப் பாக்கு ஆகும். மங்கலப் பெருள்களான இவை அனைத்து நிகழ்ச்சிகளிலும் இடம்பெறும் தன்மையதாகும்.

வெற்றிலைப் பாக்கினைப் பச்சைக் கற்புரம் சாதிக்காய், வால்மிளகு, கிராம்பு, கத்தக் காம்பு சுண்ணாம்புஆகியவற்றுடன் சேர்த்துப் போடுவதைத் தாம்பூலம் போடுவது என்று கூறுவது மரபு.

இவ்வகைத் தாம்பூலம் வாய்க்கு நறுமணத்தையும் முகத்திற்கு ஒளியையும் அழகையும் உண்டாக்கும். தாடை, பால், குரல்வளை, நாக்கு ஆகியவற்றின் அசுத்தத்தைப் போக்கும். இதயத்திற்கு நலம் செய்யும். தொண்டை நோய்களைப் போக்கும். துவர்ப்பு, கசப்பு, உவர்ப்பு, கார்ப்பு ஆகிய சுவைகளை உடைய தாம்பூலம் எளிதில் ஜீர்ணமாகும். மலச்சிக்கலை நீக்கும். வாய்துர்நாற்றத்தை நீக்கும், நோயற்ற வாழ்வு, நினைவாற்றல், அறிவாற்றல் பசித்தீ ஆகியவற்றை வளர்க்கும்.

கார்ப்பு துவர்ப்பு சுவைகளையுடைய வெற்றிலை கபம், சீதளம், காணாக்கடியின் நோய்க்குணம் திரிதோங்கள் ஆகியவற்றைப் போக்கவல்லது. கருநிற வெற்றிலையை விட வெண்மை நிற வெற்றிலை சிறந்ததாகும்.

பாக்கு எளிதில் ஜீரணமாகாது. குளுமையானது, துவர்ப்பானது. கபம், பித்தம் இவற்றைக் கண்டிக்கும். பசியைத் தூண்டும். சுண்ணாம்பு, வெற்றிலை ஆகியன இல்லாமல் எவன் ஒருவன் பாக்கை மட்டும்உட்கொள்கிறானோ அவன் பத்து பிறவிகளில் பொருளற்றவனாய் இறக்கும்போதும் இறைவனை நினையாதவனாய் ஆகின்றான். அதாவது நோயுற்றவன் ஆகின்றான் என்று ஆயுர்வேத உபதேசம் கூறுகின்றது.

தூங்கி எழுந்தவுடனும் உணவு உட்கொண்ட பின்னரும், நீராடிய பின்னரும், தாம்பூலம் தரித்தல் நலம். காலையில் பாக்கின் அளவைக் கூடுதலாகவும், மதியத்தில்

கத்தைக் காம்பு அளவு கூடுதலாகவும், இரவில் சுண்ணாம்பு அளவு கூடுதலாகவும் சேர்த்துத் தாம்பூலம் தரித்தல் பல நலன்களையும் தரும்.

வெற்றிலையின் சில பகுதிகளை மட்டும் தனியே மெல்லுவதால் ஆயுள் குறைவு வரும். காம்புப் பகுதியை மட்டும் மெல்லுவதால் நோயும், நுனிப்பகுதியை மட்டும் உண்டால் பாவமும், நடுப்பகுதியை மட்டும் உண்டால் ஆயுள் பங்கமும், நரம்பினை மட்டும் உண்டால் அறிவாற்றல் அழிவும் ஏற்படும். அதுபோலச் சுண்ணாம்பு வைக்கப்பட்ட வெற்றிலை மனிதன் ஆயுளைக் குறைத்து விடுகின்றது.

தாம்பூலத்தின் முதற்கசிவு நீர் கொடுமையான வித்திற்கொப்பானது. அதற்கடுத்த உமிழ்நீர் எளிதில் ஜீரணமாகாதது ஆதலின் அவற்றை உட்கொள்ளக்கூடாது. தொடர்ந்து உண்டாகும் கசிவு நீர்கள் அமுதத்துக்கு ஒப்பானவை. அவற்றை உட்கொள்வதன் வாயிலாக நலன் பல உண்டாகும்.

கசிவு நீரை உட்கொண்டபின் தாம்பூலச் சக்கையை வெளியே துப்பி விடல் வேண்டும் மாறாக அவற்றை உட்கொண்டால் மாறுபட்ட பயன்கள் உண்டாவதோடு ஆண்மைக் குறைவு, ஜலதோஷம், சுவாசநோய், சோகை, நீர்ச்சுருக்கு, நீரழிவு ஆகியன ஏற்படலாம்.

பாலை அருந்திய உடன் தாம்பூலம் தரித்தலைத் தவிர்த்து, சிறிது நேரம் கழித்த பின்னரே தாம்பூலம் தரிக்க வேண்டும்.

அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு எனும் பழமொழி தாம்பூலத் திற்குரியதாகும். தாம்பூலம் மிகுதியாகப் போடுவதால் உடல்வலிமை, கண், கூந்தல், பல், பசித்தீ, ஆகியன வலிமைகுன்ற உடம்பின் ஒளிகுன்றும். பித்தம், சயம், வாயு ஆகிய நோய்களும் முகப் பொலிவு குன்றுதலும் ஏற்படுகிறது.

நன்றி : ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்குட முழுக்கு நன்னீராட்டு விழா மலர் 2000. ஏர்ணாகுளம்.



# சிவன் அபிடேகப் பொருள்களின் மருத்துவ குணங்கள் 'இளநீர்'

பழ. சிவனடியான்

---

சிவன் அபிடேகப் பொருள்களில் இளநீரும் ஒன்றாகும். "நெய்யினொடு பால் இளநீர் ஆடினான் காணி" என்பது தேவாரம். மருத்துவ குணங்கள் மிகுதியும் கொண்ட இளநீர், அடுக்கிளநீர், ஆயிரம் கச்சி இளநீர், கருவிள நீர், குண்டற்கச்சி இளநீர், கெவுளி பாத்திரை இளநீர், கேளி இளநீர், செவ்விள நீர், சோரி இளநீர், பச்சை இளநீர், மஞ்சள் கச்சி இளநீர் எனப் பலவகைப்படும். ஒவ்வொன்றும் தனித்தனி மருத்துவ நற்குணங்கள் உடையனவாகும்.

பொதுவாக இளநீர் உடல் சூட்டினைத் தணித்துத் தாகத்தை உண்டாக்காமல் செய்யும் மருந்துவகையான சீதளகாரியாகவும் Refrigerant சிறுநீரை அதிகரிக்கச் செய்யும் மூத்திரவர்த்தன காரியாகவும் Diuretic கபத்தை வெளிப்படுத்தி இருமலைத் தணிக்கும் இனிய மருந்தான கப ஹரஹாரி Expectorent யாகவும் செயலாற்றும் திறன் உடையதென்பர்.

இளநீரின் குணத்தினைப் பதார்த்த குண விளக்க நூல் ஆசிரியர்

இளநீரால் வாதபித்தம் ஏகும் மனதும்
தெளிவாய்த் துலங்கும் இருதிஷ்டிக் கொளியும்
குளிர்ச்சியும் உண்டாகும் கொடிய அனல் நீங்கும்
தளிர்த்தகன நொய்தாகும் சாற்று
என்றும் இளநீர் நீர் இறங்கும் கபம் அறுக்கும்
துன்றலாம் சீதமெனச் சொல்லுவர் காண் - நின்றெழும்பும்
பித்தமொடு வாந்தியும் போம் பேதிகட்டி ரண்டுமுண்டாம்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு.

என்று வரையறுத்துக் கூறியுள்ளார்.

இளநீரை முறையாகப் பருகினால் வாதம். கோபம், பித்ததோம், வெப்பம், கப ஆதிக்கம், வைத்தியகோபம் ஆகியன நீங்கும். மேலும் மனத்தெளிவு, பார்வைத்தெளிவு, சிறுநீர்ப் பெருக்கம் மலப்போக்கு ஆகியன உண்டாம்.

இளநீரிகளில் வழுக்கையை உடைய புதிய இளநீர் பல நலன்களைத் தரும். அதே வேளையில் பழைய இளநீராக இருப்பின் ஜலதோத்தையும் சீதளத் தொடர்பான பல ரோகங்களையும் உண்டாக்கும்.

பொதுவாக இளநீரை உணவு உண்ட பின்னர் உட்கொள்ளுவதால் வாதபித்தம் நீங்குவதோடன்றி, உடல் பொலிவும் பசி தீபனமும் உண்டாகும். மலச்சிக்கல் நீங்கும். நீர்க்கடுப்பு நோய் உடையோர் இளநீரை அருந்த அந்நோய் அகலும். ஆறாத புண்களை ஆறவைக்க இளநீர் வைத்தியம் சிறந்தது என்பர். புண் மீது இளநீரைத் தடவிப் வரப் புண் ஆறிவிடும். மஞ்சள் காமாலை நோயுடையோர்க்கு இளநீர் கை கண்ட மருந்து.

ஆறு ரூபாய், ஏழு ரூபாய் என்று பணம் கொடுத்து காப்பியைக் குடித்து உடல் நலத்தைக் கெடுத்துக் கொள்வதைவிட ஐந்து ரூபாய் கொடுத்து இளநீர் வாங்கி அருந்தி நலம் பெறலாம்.

இளநீர் கலந்த அபிடேக நீரைத் தீர்த்தமாகப்பெற்று அருந்துவதன் மூலம் இவ்அனைத்து வகை நலன்களையும் எளிதாய்ப் பெறலாமே!

**நன்றி :** ஸ்ரீ சுப்பிரமண்ய சுவாமி நன்னீராட்டு விழா சிறப்பு மலர் 2000, ஏர்ணாகுளம்.



# இறை நேயம்

**S. பழனியப்பன்,** கணக்காய்வாளர்

அழியும் இந்த வாழ்வில் அழியாப் பெருமை தரும் அருளால் உயர்ந்தவர்களே உண்மையில் உயர்ந்தவர்கள். அந்த அருட் செல்வத்தை நினைத்த மாத்திரத்தில் அனைவரும் பெற்றுவிட முடியாது. அதனைப்பெற அவன் அருள் கட்டாயம் வேண்டும் அதனால் தான். "அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்று ஆன்றோர்கள் அற்புதமாக நமக்குப் படம்பிடித்துக் காட்டியுள்ளார்கள். ஒப்பற்ற இறைவனை, தலைவனை, மாசற்ற சோதியை, விருப்பு வெறுப்பில்லாப் பரம் பொருளை வணங்கிட அருள் வேண்டும்.

அருள் இல்லையெனில், தலைகீழ் நின்றாலும் அவனை வணங்கிடமுடியுமா என்ன? இந்த அருளை எப்படிப் பெறுவது? இன்று காசு கொடுத்தால் எதை வேண்டுமானாலும் வாங்கலாம் என்ற நிலை சமுதாய வாழ்வில் அன்றாட நிகழ்ச்சி ஆகிவிட்டது. ஆனால் ஒன்றை மட்டும் அப்படி வாங்க முடியாது. அது தான் அருள்.

அந்த அருளைப் பெற ஒரே வழி "இறைகாதல்" எனும் பக்தி வழியே. பக்தி எனும் பாதை மட்டுமே படிப்படியாக நம்மை ஞான நிலைக்கு அழைத்துச் செல்லும் மற்ற எல்லாப் பாதைகளும் நிலையற்ற பாதைகள்.

நம்மை முழு மனிதனாகப் படைத்து காத்தருளும் கடவுளை இறைவனை இடையறாது பூரண நம்பிக்கையுடன் நினைத்து நினைத்து காதலாகிக் கண்ணீர் மல்க வழிபட வேண்டும்.

அரை மனதோடு வழிபட்டால் நம் ஆன்மா முக்தி பெறாது. கைமாறு அனைத்து உயிர்களையும் அன்போடு அரவணைத்து வாழ்பவர்களின் உள்ளங்களில் மட்டுமே இறைவன் வாழ்கிறான்.

ஒரே பரம்பொருளை பல்வேறு வடிவங்களிலே மக்கள் வழிபடுகிறார்கள் அது ஒன்றும் தவறில்லையே.

யார் எப்படி அழைத்தாலும் அன்போடு அழைத்தால் அந்த இறைவன் கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வருவான். கோடி கோடியாக நலம் தருவான்.

பாரதியார் எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா! என்று ஒப்பிலாத் தலைவனின் தனிப்பெருமையைஅனுபவித்து உணர்ந்து பாடியுள்ளாரே.

இதைவிட இறையன்புக்கு வேறு என்ன வேண்டும். கடவுள் கருணை வடிவானவன். அந்தக் கருணைக்குக் களங்கமேற்படுத்துவதே சமய பேதங்கள்.

மனித வாழ்வினை நெறிப்படுத்த வந்த சமயங்கள் சற்றுத் தடுமாறின. ஆனால் நமது இறைநேசர்களும் மகான்களும், அவைகளைத் தடுத்து நிறுத்தித் தக்க, வழிகாட்டி நமது பயணத்திற்குத் துணைபுரியத் தொடங்கி விட்டார்கள்.

மனித நேயத்தின் மறுவடிவமாகத் திகழ்கின்ற ஏசுபிரான் மக்களின் மீது வைத்திருந்த அன்பின் காரணமாகவே சிலுவை சுமந்தார். "அன்பின் வழியது உயிர் நிலை" என்ற வள்ளுவத்திற்கு இதைவிட வேறு சான்று உலகில் காணமுடியாது. ஆண்டவனின் வடிவமாக அனைத்து மக்களையும் பார்த்து அன்பு செலுத்தியதன் விளையே இத்தகைய தியாகம்.

கடவுள்மீது உள்ள அன்பின் காரணமாக வேடன் கண்ணப்பர் தன் கண்களையே காணிக்கையாக்கி மகிழ்ந்தான். இதுமிகப் பெரிய தியாகமல்லவா?

சாதி, சமய பேதங்களைக் கடந்த இறைநேயமாம் மனித நேயத்தின் அடிப்படையில் 63 நாயன்மார்களும் மிகச் சாதாரணக் குடியில் பிறந்து இறைவனுக்குத் தொண்டு செய்வதே தங்கள் வாழ்வின் நெறி என்று வாழ்ந்த வரலாறு உலகில் எங்குமே காணமுடியாத இறைகாதல் வரலாறல்லவா? இவர்களின் தொண்டால் அன்பு நெறியால் கவரப்பட்டுப் பெரியபுராணத்தைத் தந்த சேக்கிழாரின் அன்புக்குத் தான் ஈடு இணை ஏது?

ஆகவே இவ்வுலக வாழ்வில் நாம் உய்வடைய நமக்கு அருள் வேண்டும். அந்த அருள் அன்பின் வழியினில் ஆண்டவனால் மட்டுமே கிட்டும்.

பகைவர்களுக்கும் அருள்தரும் பரம் பொருளை வேண்டி உளமுருகி ஒரு நிமிடம் வழிபட்டாலும் பயன் கட்டாயம் கிடைக்கும்.

நாம் செய்த புண்ணியம் இன்று இந்த நிலை. நாளை நாம் எப்படியோ யாரறிவார்? ஆகவே ஒன்றே செய்தாலும் நன்றாகச் செய்வோம்; வாழ்வோம்; மற்றவரையும் வாழ வைப்போம்.

பொறாமை இல்லாமல் பெருமை சேர்த்து அன்பாக வாழ்வோம். ஆருயிர்க்கெல்லாம் அன்பு செய்வோம். அருள் வெள்ளம் நமக்காகக் காத்திருக்கும். அதிலே நீந்தி வருவோம். பவனி வருவோம். பயன் அடைவோம்.

மனிதன் இன்று எண்ணிலடங்காச் சாதனைகளை அனுதினமும் குவித்து வெற்றி உலா வருகிறான். வீர உலா வருகிறான். மனிதனின் அன்றாட வாழ்வின் அனைத்துச் தேவைகளையும் பெற, அனுபவிக்க அறிவியல் மிகப்பெரிய துணையாக நின்று கை கொடுத்து வருகிறது.

ஒரு காலத்தில் ஆடம்பரமாகக் கருதப்பட்டவையெல்லாம் இன்று மனிதனுக்கு அடிப்படைத் தேவையாகவே மாறிவிட்டன. ஆனால் ஒன்றை மட்டும் மனித குலம் இன்றளவும் சிந்திக்கவில்லை.

இத்தனை வசதிகள் பெருகியும் மனநிம்மதி கிடைத்துள்ளதா. மன உளச்சல் (டென்சன்) மாறியுள்ளதா? இந்தக் கேள்விக்குப் பதில் விஞ்ஞானத்தில் இல்லை. அது மெய்ஞானத்தில் தான் உள்ளது. இந்த நிலையைத்தான் பட்டினத்து அடிகள் "காக்கவும் மாட்டீர் கைவிடவும் மாட்டீர் ஆப்பசைத்த குரங்கினைப் போல் வந்துழல அகப்பட்டீர் மானிடரே" என்று மனிதகுலத்தின் இரண்டும் கெட்டான் நிலையை அற்புதமாகப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

"தீதும் நன்றும் பிறர் தர வாரா" என்பது நம் பொன்மொழி. ஆம் தீமையும், நன்மையும் நாமே நமக்குப் போட்டுக் கொள்ளும் வலைகள்.

இதற்கு அடிப்படைக் காரணமென்ன? சற்று சிந்தித்தால் மிக எளிதாக விளங்கும். இவையனைத்துக்கும் காரணம் நமது மனநிலையல்லவா.

அந்த இறைவனை அதனால் தான் மனத்துக்கண் மாசில்லாதவன் என அழைக்கிறோம். அந்த ஒருவனைத் தவிர மற்ற எல்லோரும் மனத்தால் மாசு உள்ளவர்களே. இந்த மாசு நீங்கினால் ஞானம்.

இல்லாவிட்டால் பெரும்பாடு. மிகப் பெரிய சுமை. மனம் என்பது நம்மை சிந்திக்க வைக்கின்ற ஒரு மாபெரும் சக்தி. நன்மை தீமைகளைப் பிரித்து நம்மை நெறியோடு வாழ வைக்கும் ஓர் ஒப்புயர்வற்ற சக்தி.

"மனத்தை அடக்க நினைத்தால் அலையும், மனத்தை அறிய நினைத்தால் அடங்கும்" இது வேதாத்திரி மகரிஷி அவர்களின் தத்துவம்.

உயிரின் படர்க்கை நிலையே மனம். இந்த மனம் தூக்க நேரம் நீங்கலாக மற்ற எல்லா நேரங்களிலும் இயங்கிக் கொண்டேயிருக்கிறது. அப்படி இயங்காவிட்டால் அந்த மனிதனுக்கு உலகில் வேறு பெயர்.

இந்த மனத்தை அறிந்தால் மனப்பக்குவம் ஏற்படும். மனம் பண்படும். தூய எண்ணங்கள் உருவாகும். தீய செயல்கள் விலகும். இந்த மனப்பயிற்சிக்கு, நமது முன்னோர்கள் நான்குவிதமான பயிற்சிகளை நமக்குச் செல்வமாக விட்டுச் சென்றிருக்கிறார்கள்.

1.ஓடிக் கொண்டிருக்கும் மனத்தை அதன் வழியே ஓட விடாமல் திருப்பிவிடுவது. ஓட்டத்திலிருந்து மாற்றியமைப்பது இதற்கான பயிற்சியைப் பிரத்தியாகாரா என்று அழைப்பார்கள்.

2. இரண்டாவது தர்ணா எனும் பயிற்சி. இதன் மூலம் ஒரு குறிப்பிட்ட பொருள் மீது செயல்மீது நினைவின் மீது மனத்தை நிறுத்தி வைக்கப் பழகலாம்.

3. மூன்றாவதாக மனம் எங்கிருந்து புறப்படுகின்றதோ அந்தப் புறப்படுகின்ற இடத்திலேயே மனத்தைக் கொண்டு வந்து நிலைநிறுத்திப் பழகும் தியானப் பயிற்சி.

4.இறுதியாகச் சமாதி நிலை. இது மிக உயர்ந்த நிலை. மெய்ப்பொருளோடு மனத்தை ஒன்றவைத்து தானும் அதுவாக மாறுகின்ற பயிற்சி.

இந்தப் பயிற்சிகளைக் கற்றவர்களே உண்மையான ஞானிகள், யோகிகள். இந்த மனம் பண்பட்டால் மட்டுமே இறையுணர்வைப் பெறலாம்.

வாழ்வின் நோக்கம் புரிந்தால் நிச்சயம் எந்த மனிதனும் தவறு செய்யமாட்டான். வாழ்வு நிலையற்றது. எப்பொழுது பூமியிலே மனிதன் பிறக்கப்போகிறான். எப்பொழுது போய் சேருவான் யாருக்குத் தெரியும்? இது இறைவன் நமக்குப் போட்ட கேள்விக்குறி? இந்தக் கேள்விக்குறிக்கு விடையே வாழ்வின் நோக்கம்.

ஆம். இறைவனிடமிருந்து பிரிந்து பிறந்து வந்துள்ள இந்த உயிர், ஆன்மா மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்து இயற்கையான முடிவோடு அந்த இறைவனோடு இரண்டறக் கலக்க வேண்டும். அதுதான் வாழ்வின் நெறி, நியதி. அப்படிப்பட்ட வாழ்வு வாழ நாம் என்ன செய்ய வேண்டும். இந்த வினாவின் விடையே நம்மை என்றும் உய்விக்கவல்லது.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" என்றார் திருமூலர். ஆம் உண்மை எனும் மனம் புனிதமானால் மட்டுமே உலகின் அறம் செழிந்தோங்கும். அந்த வாழ்வில் மட்டுமே அருள் எதிரொலிக்கும்.

உள்ளத்தில் ஓராயிரம் தீய எண்ணங்களுக்கு இடம் கொடுத்தால் உலகம் என்ன ஆகும்? இன்றையஉலகியனுக்கு இதுவே அடிப்படைக் காரணம். நமது முன்னோர்கள் தீர்க்கதரிசிகள். எதிர்காலத்தில் மனிதகுலம் செய்யக் கூடாததையும் செய்துவிட்டால் என்ன செய்வது என்பதைக் கண்டறிந்து வாழும் நெறியை வகுத்துச் சென்றார்கள்

திருமூலரைப் போல உள்ளத்தை யாரால் படம் பிடித்துக் காட்ட முடியும்? மெய்ப்பொருள் உணர்ந்த அந்த வித்தகர் காட்டிய வழியே உலகினில் நிலையான சமாதானத்தையும் சகோதரத் தத்துவத்தையும் சமத்துவத்தையும் ஒரு சேரக் காட்டவல்லதாகும்.

இறைவன் நமது உள்ளத்தைக் கேட்கிறான். மாசு உள்ள உள்ளத்தை மாசில்லா மாமணிக்குத் தருவது பாவமல்லவா? அதனால் உள்ளத்தைப் பண்படுத்தி அந்த வள்ளலிடம் ஒப்படைப்போம்.

அரிது, அரிது மானிடப் பிறவி. அதிலும் கண், செவிடு, ஊமை போன்ற ஊனமின்றி பிறப்பது மிக அரிது என்பது மூத்தோர் வார்த்தை. அத்தகைய பிறவியை நமக்கு அளித்துள்ளாரே அந்த இறைவன்.

அவனுக்கு நன்றி சொல்ல நமக்குத் தனியாக ஒரு பிறவியே தேவை என்று தோன்றுகிறதல்லவா? மானிடப் பிறவியாக நான் உலா வர காரணமான அலகிலா விளையாட்டுடைய தலைவன் எங்கேயிருக்கிறான்? எப்படியிருக்கிறான்? எங்கும் இருக்கிறான். அவன் இல்லாத இடமேயில்லை. இல்லாத உயிரில்லை. எல்லா உயிர்களிலும் ஒளிந்து கொண்டிருக்கிறான். தெய்வம், சொரூபம் என்று சொல்வார்கள். ஆம் தெய்வம் மனித வடிவிலேயே உள்ளது. மனிதனுடைய தெய்வீகச் செயல்கள் எங்கிருந்து வந்தன? எப்படி வந்தன? எல்லாம் அந்த இறைவனின் விளையாட்டு. அந்த விளையாட்டைப் புரிந்து கொண்டால் எல்லாமே விளங்கும். ஏற்றமுடன் துலங்கும்.

“இறைவனைத் தேடுங்கள்” என்று இறைநேசர்கள் சொல்கிறார்கள். நாம் தேடுவதற்குத் தயார். தேடினால் கிடைப்பானா? அது சாதாரண மனிதனுக்கு ஏற்படும் ஐயம். கட்டாயம் கிடைப்பான். கருணை பொழிவான் இது விடை!

விறகினுள்ளே நெருப்பு இருக்கிறது. அது கண்ணுக்குத் தெரிவதில்லை பாலுக்குள்ளே தயிர் இருக்கிறது. அதைக் கடைந்தால் அதற்குள்ளே நெய்யும் இருக்கிறது. கண்ணுக்குத் தெரியாத காரணத்தால் இல்லை என்று சொல்வது அறிவீனம். அறிவிற்குப் புறம்பானது.

வாழ்க்கையில் சோதனை வரும்போது மட்டும் இறைவனிடம் ஓடுகிறார்கள் பலர். அந்த ஒரு நாள் ஓட்டம் பலன் தராது. உள்ளன்போடு வாய்விட்டு ஒரு நொடி நாள்தோறும் இறைவனை வணங்கினால் கட்டாயம் உய்வு உண்டு.

எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செலுத்துவதே இறைவனுக்குச் செய்யும் உண்மையான தொண்டு. அதைத்தான் ஆண்டவன் நம்மிடம் எதிர்பார்க்கிறான். இதனால் தான் காக்கைக்கு அன்னமிடும் பழக்கம் நமது சமுதாயத்தில் இன்றளவும் உள்ளது.

அதனால் தான் வள்ளுவரும் வறியவர்க்கு ஒன்று ஈவதே ஈகை என்று இல்லாதவர்களுக்குக் கொடுப்பதையே ஈகை என்று கூறியுள்ளார்.

மனிதகுலம் வறுமையிலிருந்து வளமையோடு வாழத்தானே இறைவன் படைத்துள்ளார். ஏற்றத்தாழ்வுகள் நாம் இடையிலே வகுத்துக் கொண்டதுதானே? இது இறைவனுக்குப் பிடிக்காது. இறைவனைப் பொறுத்தவரை அனைத்து உயிரும் அவனது வடிவம். இந்த உண்மையை மறக்கும்போது தொல்லைகள் நமக்குத் தொடர் கதைகளாகின்றன.

எல்லாச் சமயங்களும், இறை நேசர்களும், மகான்களும் இறைவனைப் பெற கடும் தவத்தை வலியுறுத்தவில்லை. கருணையுள்ள உள்ளத்தைத் தான் கேட்கிறார்கள். பெருங்கோயிலான உள்ளம் பண்படவில்லையென்றால் அது வெறும்கோயில் தானே; அது ஓடாத தேர் தானே; ஒளியில்லாத கண் தானே. ஆகவே எல்லோரையும் அன்பால் அரவணைப்போம்.

'அன்பு' செய்யத்தடை உள்ளதா. ஆம் கட்டாயம் தடைகள் நமக்குள்ளேயே உள்ளன. நாம் செய்யும் செயல்களே நல்வினை தீவினையாக உருவெடுக்கின்றன. இந்த நம்பிக்கை மட்டுமே மனித மனத்தைப் பண்பாக்கி அவனை இறைவனிடம் சேர்ப்பிக்கும்.

மிக வசதி படைத்தவர்கள் வாழ்வின் நோக்கம் தெரியாத காரணத்தால் செல்வவளம் இருந்தும் அமைதியின்றி திண்டாடித் தடுமாறிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் சிலர் காரணம் தெரியாத நோயால் கட்டுண்டு கலங்கி அன்றாடம் செத்துக் கொண்டிருக்கிறார்கள்.

தூங்குவது போலும் சாக்காடு என்பது பலரைப் பொறுத்தமட்டும் ஏன் பொய்யாகிப் போனது? சற்றுச் சிந்தியுங்கள். அவர்களது கணக்கில் பாவம் பெருகிக் கொண்டே போவதால் தானே!ஒருவனுக்கு உணவளிப்பதை அன்னதானம் என்று நமது முன்னோர்கள் சொல்லவில்லை. அவனுக்குச் சோறு போடுகின்ற பேறு கிடைத்ததை எண்ணி நாராயண சேவை என்றல்லவா சொல்லியுள்ளார்கள். ஆம் நாராயண மூர்த்திக்கு அன்னமளித்த உணர்வு நமக்கு ஏற்படுகிறதல்லவா? ஏழையின் நெஞ்சில் இறைவன் அல்லவா இருக்கிறான்.

சினம் என்னும் கோபம் ஓர் தடை. அழுக்காறு என்னும் பொறாமை மற்றொரு தடை. சினம் என்றும் சேர்த்தாரைக் கொல்லி என்று சாடுகிறார் வள்ளுவர். சினம் தன்னையும் வாழவிடாது மற்றவர்களையும் வாழவிடாது. அந்தச் சினம் ஏற்பட அழுக்காறு எனும் பொறாமையே காரணம் அடுத்தவர் வாழப் பொறுக்காத மனம் எப்படி இறையன்பைப் பெறும்?

பொறாமை வலுவான எதிரி. நம்மையே வீழ்த்திவிடும். நம்முடன் இருந்துகொண்டே நம்மையும் அறியாமல் இந்தத் தடைகளைக் கடந்தால் மட்டுமே மனித நேயம் மலரும். இறையன்பு பெருகும். இறைவன் நம்மிடம் அன்பினை மட்டுமே எதிர்பார்க்கிறான். ஆணவத்தை வேரறுக்கும் அன்பே உண்மையான அருட்செல்வம். அருட்செல்வம் பெற்று வாழ்வின் பயனை உணர்ந்து இறைவனை இனிமையுடன் அடைவோம்.

நன்றி: ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்குட நன்னீராட்டு விழா மலர் 2000. ஏர்ணாகுளம்.

உ

# முருகனும் முக்தியும்

கரு. சமத்துவம், எம்.ஏ., எம்ஃபில்,
ஆய்வாளர் தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி – 2.

**அலங்காரம் பிறந்த வகை**

முருகப் பெருமானின் திருவடி திருமுகம் வரையுள்ள உடலுறுப்புகளின் சிறப்பையும் அவன் ஊர்தி, படை, கொடி ஆகியவற்றின் உயர்வையும் திறம்பட உரைக்கும் நூலே கந்தரலங்காரம். முருகனின் அலங்காரத்தை எடுத்தோதுமாறு இந்நூல் தமிழில் புதுவகையாகத் தோன்றியது. இந்நூலின் காப்புச் செய்யுள் ''அருணைத் திருக்கோபுரத்தே வடவருகிற் சென்று கண்டு கொண்டேன்'' என்றுரைப்பதால் இது திருவண்ணாமலையிலியற்றப் பெற்றது என்பது புலனாகும். இலைகுலாம் வேற்கரத்தண்ணல் அருணகிரிநாதரை ஆட்கொண்ட பின்னரே இக்கந்தரலங்காரத்தைப் பாடினார். இதனை "வள்ளி கோனன்றெனக்குபதேசித்த தொன்றுண்டு" (9) என்றும் "அடியேன் செவி நீ யன்று கேட்கச் சொன்ன குன்னங்குறிச்சி வெளியாக்கிவிட்டது" (24) என்றும் வருவன இக்கருத்தை மெய்ப்பிக்கும்.

முருகனே – முதற்பொருள்

அருணகிரிநாதர் தான் பாடிய கந்தரலங்காரம் நூறு பாடல்களிலும் முருகன் பெருமையையும் கருணையையும் வேண்டுகிறார். தன் குறை சுட்டித் தனக்கு முருகனை விட்டால் வேறு கதியில்லை என்று உரைப்பார்.

ஆராதன ராடம் பரத்து மாறாதுச வாலம் பனத்து
மாவாகன மாமந் திரத்து மடலாலும்
ஆரார்தெக மாமண் டபத்தும் வேதாகம போதும் தலத்து
மாமாறெரி தாமிந் தனத்து மருளாதே
நீராளக நீர்மஞ் சனத்த நீடாரக வேதண்ட மத்த
நீநானற வேறின்றி நிற்க நியமாக
நீவாவென நீயிங் கழைத்து பாராவர வாநந்த சித்தி
நேரேபர மாநந்த முத்தி தரவேணும் (1010:12)

என்று திருப்புகழில் அருணகிரிநாதர் முருகப் பெருமானிடம் முத்திதருமாறு வேண்டுகிறார். இதைப் போல விராலிமலைத் திருப்புகழில் "உனது அருள் கை வரவுயர்

பத்திவழியும் பரமுத்தி நெறியுந் தெரிவது ஒரு நாளே" (353 2) என்று பரமமுத்தி பற்றிக் குறிப்பர். முத்தி வேண்டும் என்று விண்ணப்பிக்கும் அருணகிரிநாதர், கந்தரலங்காரத்திலும் முத்தியைப் பற்றிய குறிப்பினைச் சுட்டியுள்ளார்.

**வீடும் முத்தியும் :**

கந்தனின் இருதாள்கள் அன்றித் தனக்கு வேறு இல்லை என்று கருதிய அருணகிரிநதர் "ஒரு பூதரும் அறியாத தனி வீட்டில் உரை உணர்வற்றிரு" (45:1-2) என்பர். முத்தி நிலையை வீடு என்றே இவருரைத்தார். கந்தரலங்காரத்தில் "சிவபெருமான் சேயருள் வேண்டும்; அவிழ்ந்த அன்பாற் குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டும். கொடிய ஐவர் பராக்கறல் வேண்டும் மனமும் பதைப் பறல் வேண்டுமென்றால் இராப்பகலற்ற இடத்தே யிருக்கை எளிதல்லவே" (74) என்பர். கேவலசகலங்களற்ற அருள்நிலையே இராப்பகலற்ற இடமாகும். இதனைத் திருவகுப்பில் "இரவு பகலற்றவிட மெனதற விருக்கைபுரி யோகப் புராதனனும்" (12) என்றுரைப்பர். யோகஞ் செய்து உடம்பை வருத்தினால் எப்பயனும் கிட்டாது. "சிவயோகம் என்னும் குருத்தை யறித்து முகம் ஆறு டைக்கு நாதன் சொன்ன கருத்தை மனத்திலிருந்து கண்டீர் முத்திகை கண்டதே" (71) என்று குறிக்கின்றார். முருகன் 'பேசாதிரு' என்று சொன்னதை நெஞ்சத்தில் நிலைநாட்டின் வீடுபேறு கிட்டும் என்பது இதன் கருத்து.

**செல்லும் நெறி:**

எப்பொருளை அடைய வேண்டுமாயினும் அதற்கென்று ஒரு வழியுண்டு அவ்வழியில் செல்ல வேண்டியநெறியில் சென்றால்தான் உரியபொருள் அடையமுடியும். முத்தியை அடைய முயல்வோன் செயத்தக்கவற்றைச் செய்யாதுவிடின் முத்தி கிட்டாது. தன் நெஞ்சை நோக்கியே அருணகிரியார் விளித்துப் பேசுகிறார்.

'சுழித்தோடும் ஆற்றிற் பெருக்கா னதுசெல்வம் துன்பம் இன்பம்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ் சேகரிக் கோட்டு முத்தைக்
கொழித்தோடு காவிரிச் செங்கோடன் என்கிலை குன்றம் எட்டும்
கிழித்தோடு வேல்என் கிலையெங்ங னேமுத்தி கிட்டுவதே' (36)

இப்பாடலினால் அருணகிரியார் முருகன் திருநாமத்தையும் அவன் கருவியான வேலையும் சொல்லின் முத்தி கிட்டும் என்பர். இறைவன் திருநாமதைச் சொல்லுவதே பல்வகைப் பாவங்களையும் போக்குவதாகும். அதனாலேதான் நாயன்மார்களும் ஆழ்வார்களும் இறைவன். திருநாமத்தை ஓதி உய்யுங்கள் என்றார். திருநாவுக்கரசர் "நாக்கைக் கொண்டரன் நாம நவில்கிலார்" என்பர். அருணகிரியார் அநுபூதியில் யாமோதிய கல்வியும் எம்மறியும் தாமே பெற வேலவர் தந்ததனால் நாமேல் நடவீர் (17)

என்றுரைத்தார். இதனையே இன்னொரு பாடலிலும்

"........ செந்தி லோன் திருக்கை

வேலென் கிலைகொற் றமயூர மென்கிலை வெட்சித் தண்டைக்

காலென் கிலைமனமே யெங்ஙனே முத்தி காண்பதுவே (30)

என்று இயம்புவர். வேல் என்றும் மயில் என்றும் வேலும் மயிலும் என்றும் திருமுருகனுடையமைகளைச் சொல்லுதல் வேண்டும். சொன்னால் முத்தியைக் காண இயலும்.

கந்தப்பொருமான் திருநாமத்தை உரைத்தால் மரணபயமில்லை அதாவது மரணமே இல்லை. "குமரா சரணம் சரணம் என்று திருமுருகன் முகம் ஆறும் தரிசனம் தமராகி வைகும் தனியான ஞானதபோதனர்க்கு யமன் விடுத்த ஓலை வந்து என்ன செய்யும்" (87) என்பர். "மரண ஓலை கந்தனடியாரிடம் செல்லாது என்பது கருத்து. தன்பால் உள்ள ஐம்பொறிகளும் கந்தனைத் தொழுவதில் ஈடுபடவில்லையே என்று அவற்றைப் படைத்த நான்முகனை அருணகிரியார் சுட்டுகிறார். தணிகைக் குமரன் தண்டையந்தாள்

"சூடாத சென்னியு நாடாத கண்ணும் தொழாத கையும்
பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே" (76)
என்று வருந்துகின்றார்.

**திருவடி வேண்டல்**

வீடுபேறு அல்லது முத்தி என்பது மக்களை மீண்டும் பிறவி வலைக்குள் சிக்க வைக்காது பிறவியை அடைத்து இறைவனை அடைவதே வீடு. இந்தவீடு என்பது முருகனுடைய திருவடிப் பேறு என்பதே அருணகிரியார் கருத்து. அப்பெருமான் திருவடி "புண்டரீகத்தினும் செக்கச் செவந்த சுழல் வீடு" (31) என்று கந்தரலங்காரம் கூறும். கந்தன் திருவடி எல்லாம் செய்யும் வல்லமை மிக்கது. அதனால்தான் அருணகிரியார் "மாமயிலோன் வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்புமவன் கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே" (4) என்று படைத்தவன் எழுதிய எழுத்தையும் கந்தன் காலால் அழித்தான். பிறக்கும்போது எழுதிய தலை எழுத்தை மாற்ற முடியாது; ஆனால் அதனைக் கந்தன் காலடியால் அழித்து மாற்றி அடியார்க்கு முத்திதரவல்லவன். இதனாலேயே அருணகிரிப் பெருமான் "மலர்த்தாள் தருவாய்" (41) என்று பற்றுக்கோடு கேட்கிறார். பிறவிப் பெருங்கடல் நீந்த முருகனடி சேர அலங்காரம் வலியுறுத்துகிறது. இதனை

தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக்கும் சுத்த ஞானம்எனும்
தண்டையம் புண்டரிகந் தரு வாய் ...................... (92:1-2)

என்ற பாடல் உணர்த்துகிறது.

அருணகிரிநாதர் உலக வாழ்க்கையில் சிக்கித் துயருழந்தவர். இவர் பாலே அனைய மொழியார் தம் இன்பத்தைப் பற்றி என்றும் மாலே கொண்டு உய்யும் வகையறியாதவர் அதனால் தன் மனத்தை அறிவை அடக்கி அரன்மைந்தன் பால் செலுத்த முடியவில்லை என்று வருந்துவர் தன் அவல நிலையை

"புத்தியை வாங்கிநின் பாதாம்பயத்திற் புகட்டி யன்பாய்
முத்தியை வாங்க அறிகின் றிலன்" (48)

என்று வெளிப்படுத்துவர். கந்தன் காலடிகள் முத்தி தருவன என்பது இவர் கருத்து. யோகு செய்து இறைவனை அடையலாம் என்று தவம் முயலவாரை நோக்கி அருணகிரியார் மிக எளிய வழிகாட்டுகிறார். காட்டிற்குறத்தி பிரான்பதத்தே கருத்தைப்புகட்டின் வீட்டிற் புகுதன் மிக வெளிதே (85) என்பது அவர் காட்டும் வழி.

முன்பாட்டில் அறியேன் என்றுரைத்தவர் பின்பாட்டில் அயலார்க்கு வழி கூறுகின்றார். இன்னொரு பாடலில் கந்தனையே தனக்கு அருள் செய்ய வேண்டுகிறார். மாணிக்கவாசகர் "அவனருளாலே அவன்தாள் வணங்கி" என்றது போலக் கந்தனருளால் வணங்க வேண்டுகிறார்.

"தகட்டிற் சிவந்த கடம்பையும் நெஞ்சையும் தாளிணைக்கே
புகட்டிப் பணிய பணித்தருள்வாய் (82)

என்பதில் பணியும்படி பணித்தருள்க என்று வேண்டுகிறார்.

**இயமபயம் - மரணபயம் :**

உயிரும் உடலுமாய் இருக்கும் மக்களைஉயிர்வேறு உடல்வேறாய்க் கூறுசெய்பவனே கூற்றுவன்; உடலும் உயிருமிருக்கத் தேவசேனாதிபதியை வணங்கிட வேண்டும். உடலினின்று உயிரைப் பிரிக்கும் கூற்றுவன் செய்கையால் மாந்தர் கந்தனைக் காண முடிவதில்லை. அப்பர் பெருமானைப் போலத் தொண்டர்கள் "மனித்தப் பிறவியும் வேண்டுவர்" அதனை உணர்ந்த அருணகிரியார்

"படிக்கும் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினாற்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்பெரும் பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு கா ........................" (50:1-3)

இவ்வாறு கூற்றுவன் பிடிக்கும்போது தன்னை வந்து காப்பாற்ற வேண்டும் என்பது இவர் விழைவு.

நன்றி : மாத்தூர் சிறப்பு மலர் - 2002

# விதியும் மதியும்



கேள்வி : எல்லாம் விதிப்படியே தான் நடக்கும் என்றால் நாம் ஏன் பிரயத்னம் செய்ய வேண்டும் ?

பதில் : ஒரு தனவந்தர் இருபதினாயிரம் ரூபாய் அளவில் உயர்ந்த மோட்டார் வண்டி ஒன்று வாங்குகிறார். அதற்கு ஏற்ற சாரதியை அமர்த்தாவிடில் அது காரணத்தால் அவ்வண்டி நாசமடையலாம். விதி, விதி என்று நாம் இருந்துவிட்டால், புத்தி என்ற சாரதியால் தக்க பயனை அடையாமல் வாழ்க்கை வண்டி சரியான மார்க்கத்தில் செல்லாமல், நம் ஜென்மம் நாசமடையக் காரணம் ஏற்படும். ஆகையால் நம் புத்தியை உபயோகித்து விதியைச் சீராக அமைத்துக் கொள்வது ஏற்ற முறையாகும்.

கேள்வி : 'புத்தி: கர்மானுஸாரிணீ' – புத்தி கர்மத்தை அதாவது விதியை அனுசரித்தே செல்லும் என்கிறார்களே புத்தியினால் விதியை எவ்வாறு மாற்ற முடியும் ?

பதில் : ஒருவன் ஆற்று வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு அடித்துக் செல்லப்படுகிறான். அவன் தன்னை அப்படியே ஆற்று வெள்ளம் அடித்துச் செல்லும்படி விட்டு விடாமல் தானே முடியுமானால் நீந்திக் கரை சேரலாம்; நீந்தத் தெரிந்த ஒருவனுடைய உதவியைக் கூவி அழைத்துப் பெறலாம்; அங்கே கரையிலுள்ள ஓடக்காரன் சகாயத்தை நாடலாம்; அக்கம் பக்கத்திலுள்ள செடி, கொடி, மரங்களைப் பற்றிக் கொண்டு உயிர் தப்பலாம். இது போலவே பூர்வ ஜென்ம வினை காரணமாகப் புத்தியின் போக்கு எப்படிநேரினும் ஸத்சங்கபலத்தால் ஏற்படக் கூடிய விவேகம், புத்தி அனர்த்த வழியில் செல்வதைத் தடுத்து சிரவணம், நாம சங்கீர்த்தனம் முதலிய நவவித பக்தியில் ஈடுபடுத்தி. பிறவிக் கடல் கடக்கச் செய்து பேரின்ப நிலையைக் கைகூடச் செய்துவிடும்.

## சாந்தமே தெய்வீக காந்தம்

கேள்வி : மனச்சாந்திக்கு மார்க்கம் யாது ?

விடை : "போதுமென்ற மனமே பொன் காய்க்கும் மரம்"

"தமது உடைமை அம்மா பெரிதென்று அகமகிழ்க" என்பதற்கேற்ப ஆசையை அகற்ற வேண்டும். "ஈசனோடாயினும் ஆசையறுமின்" என்ற திருமந்திரத்தை எப்பொழுதும் நினைப்பது நல்லது. ஆகார நியமங்களும், உண்ணாவிரதங்களும், நோன்புகளும் ஒரு காலவரையறைக்காவது ஆசைகளை அடக்கி வைக்கப் பழக்கந்தரும் சந்தர்ப்பங்களாகும். இவைகளை அடிக்கடி அனுஷ்டிப்பதால் உடல் நலனுடன் உளநலனும் உண்டாகி ஆசை அறும். ஆசையற்ற நிலையில் ஜீவபேதம், தெய்வ பேதம் நீங்கி அனைத்திடத்தும் அன்பு கொண்டு துன்பந் தவிர்த்து, இன்பந் தரும் உபகாரங்களைச் செய்து தன்னிலும் ஈசன், பார்க்கும் ஜட ஜீவப் பொருள்களனைத்திலும், ஈசன், என்ற அகக்கண் மலர்ந்திட, அதனின்று சாந்த மணங்கமழும்.

# கார்த்திகை தீபம்



ஆண்டுதோறும் ஆலயங்களில் கார்த்திகை மாதத்தில் கார்த்திகை தீப தரிசனத்தைத் திருவிழாவாகக் கொண்டாடுகிறார்கள். திருவண்ணாமலையில் இதுவே பிருமோத்ஸவம். வீடுகளிலும் அன்று தீப அலங்காரம் செய்து களிக்கின்றனர். மக்கள் தீபம் ஏற்றுவதால் இருள் நீங்குகிறது. இது அனைவரும் அறிந்த விஷயம். இருள் எங்கிருந்து வந்தது ? இருள் எப்பொழுதும் உள்ளதே. சூரிய ஒளி மறைந்ததும் இருள் தெரிகிறது.

இதன் தத்துவம் என்ன? பிறக்கும் போதே அஞ்ஞானம் என்னும் இருளுடன் மானிடர் பிறக்கின்றனர். பழைய காலத்தில் மக்கள் அஞ்ஞானத்தை நீக்கிக் கொள்ள காட்டிற்குச் சென்று தவமிருந்து ஞானம் பெற்றனர். கலியுகத்தில் நாம உச்சாணம் ஒன்றே ஞானத்தைத் தரும். இருளை நீக்கும் என்றெடுத்துக் காட்டவே 'அண்ணா மலைக்கரோஹரா' என்ற கோஷத்தில் மலையுச்சியில் ஒளி காட்டப்படுகிறது. ஈசுவர நாம பஜனையே இருளைப் போக்கும் என்பது தாத்பர்யம். பழைய காலத்தில் கட்டையைக் கடைந்து தீ உண்டாக்கினார்கள். சிரமமான வேலை. தவமும் அப்படியே. இப்பொழுது தீக்குச்சியை உராய்வதால் தீ உண்டாக்கப்படுகிறது. இவ்விரண்டின் உட்பொருள் யாது? பழைய கால முறைப்படி அக்னியும் ஒளியும் கீழே இருக்கிறது. மூலாதாரத்திலிருக்கிற தென்றாயிற்று. தீக்குச்சி முறைப்படி அக்னியும் ஒளியும், மனிதர்களின் தலையில் இருக்கிறதாக ஆகிறது. இரண்டும் சரியே. மூலாதாரத்தில் உள்ள அனல் பல்வேறு சாதனைகளால் மூண்டெழுந்து தலைக்குச் செல்கிறது என்ற தத்வார்த்தமே இவ்விரண்டும் சேர்த்து காண்பிக்கும் படிப்பினை. இவ்விரண்டையும் சேர்த்து ஒன்றாய்க் காண்பிப்பதே திருவண்ணாமலை தீப உற்சவம். அது மட்டுமல்ல. தேவாலய உத்ஸவமும் நராலய உத்ஸவமும் ஒன்றாய் இங்கு நடத்தப்படுகிறது.

யோக சாதனங்களில் ஏதோ ஒன்றைக் கொண்டே குண்டலினி சக்தியை எழுப்ப முடியும். ஸாதகன் மேலும் மேலும் குறிப்பிட்ட யோகத்தைத் தொடரவே குண்டலினி மனித தேகத்தின் மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களைத் தாண்டி ஸகஸ்ரதளமென்னும் நிலைக்குச் சென்று ஒளி வீசுகிறது. இவ்வொளியே ஸாதகனுடைய அஞ்ஞானமெனும் மாய இருளை நீக்குகிறது.

தேவாலய கர்பக்ரஹமெனும் மூலஸ்தானத்திலிருந்து விளக்கு ஏற்றப்பட்டு, ஸ்வாதிஷ்டானமெனும் முதல் நந்திக்குக் கொண்டுவரப்பட்டு, மணிபூரகம் எனும் இரண்டாம் நந்திக்கும் எடுத்தேகப்பட்டு, அனாஹதம் எனும் பிராகாரத்தைச் சுற்றிக்

கொண்டு விசுத்தி எனும் வெளிப்ராகாரத்தில் ஆக்ஞை எனும் மெய், வாய், கண், மூக்கு, செவி இவற்றின் பஞ்சபூத கூட்டு நிலையைக் காண்பிக்கப் பஞ்ச மூர்த்திகளுக்கும் ஒரே காலத்தில் தீப ஒளி காட்டப்பட்டு, அது ஸஹஸ்ர தளமெனும் மலை (தலை) உச்சியில் தீப ஒளியாய்க் காட்டப்படுகிறது. ஆகவே இதன் படிப்பினையாதெனில் மானிடர் குண்டலினி சக்தியைக் கிளப்பிப் பெருக்கி முக்தி நிலையை அடைந்து மேலான பதவியில் இருக்க வேண்டுமென்பதேயாம். மனிதர்களின் தேகத்தில் இருக்கிறது ஒளி. அதை எழுப்புங்கள்; ஏற்றுங்கள்; போற்றுங்கள்; ஆற்றுங்கள் சாதனை; சாற்றுங்கள் ஆண்டவனிடம் அன்பு; வீற்றிருங்கள் "வீடு" என்னும் மோட்ச இன்பத்தில்.

## ஸத்சங்கத்தின் பயன்



புளிய மரக்காற்றிற்கு மாற்று வேப்பமரக்காற்று. புளியந்தோப்பில் சஞ்சரிப்பவனுடைய தேக ஆரோக்கியம் நாளடைவில் கெட்டுப் பலவித ரோகங்கள் உண்டாகும். அம்மனிதனை வேப்ப மரங்களின் சமீபத்தில் சில காலம் குடியிருக்கச் செய்தால், காலக்கிரமத்தில் ரோகங்கள் நீங்கும். ஆண்டவனை மறந்து வாழ்க்கை நடத்தும் மக்களுடன் காலம் கழித்தவர்கள், ஆண்டவனை மறவா நிலையிலுள்ள பெரியோர்களுடன் சில காலம் நிலைத்துப் பழகினால் ரஜஸ், தமோ குணங்களாகின்ற ரோகங்கள் நீங்கி ஸத்வ குணமென்னும் ஆரோக்கியத்தை அடைவார்கள். ஸத்வ குணம் மனதை லக்ஷியத்தில் லயிக்கச் செய்யும். மனமே ஸத்வ ஸ்வரூபம். மற்றிரண்டும் அயல் குணங்கள்.



# செய்யக் கூடாதவை

கருடனை இருகைகளையும் கன்னத்தில் பொத்தி தரிசிக்க வேண்டும். கை கூப்பித் தரிசிக்கக் கூடாது.

திருக்கோயில் மூடியிருக்கும் போதும், திருவிழாவில் உலாவரும் போதும், திருமஞ்சனம் கொண்டும், பூஜை செய்யும் காலத்து திரை இட்டிருக்கும் போதும், திருக்கோயிலினுள் தரிசனம் செய்யக் கூடாது.

துளசி மாடத்தில் உள்ள துளசியைப் பூஜிக்க வேறு துளசிச் செடியிலிருந்து தளங்கள் பறிக்க வேண்டும். செவ்வாய், வெள்ளி, மாதப் பிறப்பு, அமாவாசை, பௌர்ணமி, அஷ்டமி, துவாதசி, இரவு மாலை, நேரங்களில் துளசியைப் பறிக்கக்கூடாது.

மாதப் பிறப்பு, சோமாவரம், அமாவாசை, பௌர்ணமி, சதுர்த்தி, அஷ்டமி, நவமி நாட்களில் வில்வம் பறிக்கக் கூடாது.

கோலமிடும் போது சுபகாரியங்களுக்கு ஒருகோடு கோலம் போடக் கூடாது. அசுப காரியங்களுக்கு இரட்டைக் கோடு கூடாது. வேலையாட்களைக் கொண்டு வீட்டுவாசல், பூசை அறை, துளசி மாடம் இவற்றில் கோலம் போடச் சொல்லக் கூடாது. தெற்குப் பார்த்து நின்று கோலம் போடக் கூடாது போடும் கோடு தெற்கில் முடியக்கூடாது. அமாவாசை, திவசம் ஆகிய தினங்களில் வாசலில் கோலம் போடக் கூடாது.

ஜலத்தில் காயத்ரி ஜபம் செய்யக் கூடாது.

திருமாலுக்கு அட்சதையும், பார்வதிக்குப் பாதிரியும் சிவனுக்குத் தாழை மலரும், விநாயகருக்குத் துளசியும், சூரியனுக்குத் தும்பையும், வைரவருக்கு அலரியும், துர்க்கைக்கு நந்தியா வர்த்தமும் கூடாது.

திருவிளக்கிற்கும் ஒருவருக்கும் ஊடே செல்லக் கூடாது. கன்றின் தலைக்கயிற்றைத் தாண்டக் கூடாது. ஆகாயத்தில் வானவில்லைக் கண்டால் பிறரை அழைத்துக் காட்டக் கூடாது.

துவாதசியில் புடலங்காய், பகல் தூக்கம், இருவேளை புசித்தல், உடலுறவு கூடாது.

திருமால் முன்தோப்புக் கரணம் கன்னத்தில் அடித்துக் கொள்ளுதல், தன்னையே தான் சுற்றிக் கொள்ளுதல் ஆகியவற்றைச் செய்யக்கூடாது.

சங்காபிகே வேளையில் சங்கிற்குத் தண்ணீரை உத்தரிணியினால் எடுத்துவிட வேண்டுமே தவிர நீருக்குள் விட்டு நீர் நிரம்பச் செய்தல் கூடாது.

துளசியை நீரால் கழுவி எடுத்துக் கொண்டுதான் பூஜிக்க வேண்டும்.

திருமாலுக்குச் செம்பருத்தி பூவையிட்டு பூஜிக்கக் கூடாது.

தெய்வ பவழிபாடு ஈர ஆடையுடனும் ஓராடையுடனும் செய்யக் கூடாது.

சூரியோதயநேரம், அஸ்த்தமன நேரம், உச்சி நேரம் ,கிரகணம் பிடிக்கும் நேரம், நீரில் தெரியும் நேரம் ஆகிய ஐந்து நேரங்களில் சூரியனைப் பார்க்கக் கூடாது.

திருக்கோயிலில் பலிபீடம், கொடிமரம் ஆகியவற்றுக்கு அருகே மட்டும் விழுந்து வணங்க வேண்டும். மற்ற இடங்களில் விழுந்து வணங்குதல் கூடாது.

ஈர ஆடையுடன் பித்ரு கர்மா தவிர வேறு ஒரு கர்மாவும் செய்யக் கூடாது.

மயானத்திற்குச் சென்று வந்தவனும் தலை முடி வெட்டிக் கொண்டவனும் தலையில் என்ணெய் வைத்துக் கொண்டு ஒரு போதும் குளிக்க கூடாது.

விளக்கு வைக்கும் நேரத்தில் பூபாள ராகம் பாடக் கூடாது

திருமண வீட்டில் தாலிகட்டும் போது முகாரி வாசிக்கக் கூடாது.

திருமால் கோயிலுக்குச் சென்று ஸ்ரீஉபாத தீர்த்தம், துளசி, சடாரி இவைகளை ஏற்றுக்கொள்ளாமல் வரக்கூடாது.

திருக்கோயில்களில் வலம் வரும் போது பலி பீடத்தைச் சுற்றியே வரவேண்டும். பலி பீடத்திற்கும் சந்நிதிக்கும் இடையே செல்லக் கூடாது.

பூஜை வேளைகளில் எக்காரணம் கொண்டும் தர்ப்பையை நகத்தால் கிள்ளக் கூடாது.

நன்றி : ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கும்பாபிகே சிறப்பு மலர் 2000. ஏர்ணாகுளம்.



# நவக்கிரகத் தலங்கள்

| | கிரகங்கள் | சுவாமியின் பெயர் | அம்பாள் | இரத்தினம் | மலர் | சமித்து | ஆடை நிறம் | தலம் | ராசி | ராசியில் சஞ்சரிக்கும் காலம் | தானியம் | பிரசாதம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | சூரியன் | சிவசூரிய நாராயண மூர்த்தி | உஷா ப்ரத்யுஷ | மாணிக்கம் | செந்தா மரை | எருக்கு | இளஞ் சிவப்பு | சூரியனார் கோவில் | சிம்மம் | 1 மாதம் | கோதுமை | கோதுமை ரவை பாயசம் |
| 2. | சந்திரன் | வேங்கடா ஜலபதி | ரோகிணி கார்த்திகை | முத்து | வெள்ளை அல்லி | மா | சந்தனம் | திருப்பதி | கடகம் | 2 1/4 நாள் | நெல் | அவல் பாயசம் |
| 3. | அங்காரகன் செவ்வாய் | முத்துக் குமாரசாமி | சக்திதேவி | பவழம் | செண்பகம் | கரு வளை | சிவப்பு | வைத்தீ ஸ்வரன் கோவில் | மேஷம் விருச்சிகம் | 1 1/2 மாதம் | துவரை | துவரம் பருப்பு சாதம் |
| 4 | புதன் | ஆதி சொக்க நாதர் | ஞான சக்தி தேவி | மரகதம் | மருகு | நாயுருவி | பச்சை | மதுரை | மிதுனம் கன்னி | 1 மாதம் | பாசிப் பயறு | தேங்காய் சாதம் |
| 5 | குரு | தக்ஷிணா மூர்த்தி | தாரா தேவி | புஷ்ப ராகம் | முல்லை | அரசு | மஞ்சள் | ஆலங்குடி திருச் செந்தூர் | தனுசு மீனம் | 1 ஆண்டு | கடலை | தயிர் சாதம் |
| 6 | சுக்கிரன் | அரங்க நாதர் | சுகீர்த்தி தேவி | வைரம் | வெண் தாமரை | அத்தி | வெள்ளை | திரு வரங்கம் | ரிஷபம் துலாம் | 1 மாதம் | மொச்சை | சர்க்கரை பொங்கல் |
| 7 | சனீஸ்வரன் | தர்பானே ஸ்வரர் சனீசுவரர் | நீலா தேவி | நீலம் | நீலசங்கு புஷ்பம் | வன்னி | கறுப்பு | திரு நள்ளாறு | மகரம் கும்பம் | 2 1/2 ஆண்டு | எள் | எள்ளோ தரை |
| 8 | ராகு | நாகேஸ் வரர் | சிம்ஹி தேவி | கோமே தகம் | மந்தாரை | அருகு | நீலம் | திரு நாகே சுவரம் | | 1 ஆண்டு | உளுந்து | எலும் மிச்சம் சாதம் |
| 9 | கேது | காளத்தி நாதர் | சித்திர லேகா | வைடு ரியம் | சிவப்பு அல்லி | தர்ப்பை | பல நிறம் அரக்கு | காளஸ் திரி | | 1 1/2 ஆண்டு | கொள்ளு | மிளகு சம்பார் சாதம் |

உ
சிவமயம்

# பிரதோஷ நந்தி வரலாறு

பிரதோம் என்ற சொல்லுக்கு முதன்மையான குற்றம் என்பது பொருள். பிரதம தோ–ம் என்பதே பிரதோம் ஆனது.

பிரதமர்– முதல்வர் பிரதானம் பிரதமை–முதன்மை. முதல்நாள் என்றெல்லாம் கூறுகிறோம். தோம்–குற்றம் இந்தச் சொற்பொருள் அடிப்படையில் ஆன்மாக்களின் தலையாய குற்றம் எது என்றால் ஒருவர் செய்த உதவியின் பயனைப் பெற்றதும் மறந்து விடுவதுதான். இதைத்தான் நன்றிமறப்பது நன்றன்று என்றார் திருவள்ளுவர்.

இந்த உணர்வு ஆன்மாவுக்குச் செம்பில் களிம்புபோல் படிந்த ஒன்று. இக்குற்றம் உணர்த்தப்படும்போதுதான் ஆன்மா உணரும். இந்நடைமுறை வாழ்வியலைப் புராணத்தின் மூலம் உணர்த்துவதே பிரதோ வழிபாடு ஆகும்.

நீண்ட நாள் வாழ அமிர்தம் உண்ணும் ஆசையால் திருப்பாற் கடலைக் கடைய அசுரரும் தேவரும் முனைந்தனர். முதலில் விடம் எழுந்தது. அதுகண்டு அனைவரும் அஞ்சி ஓடினர். சிவன் அவர்களின் அச்சத்தைப் போக்கி அந்நஞ்சைத்தானுண்டு எல்லோரையும் காத்தார்.

பிறகும் பாற்கடலைக் கடைய அமிர்தம் வந்தது. அமிர்தம் கிடைத்த பேரானந்தத்தில் சிவனை மறந்து ஆடிப்பாடிக்களித்தனர். இதனால் சிவபெருமானது காட்சி மறைந்து எங்கும் இருள்சூழ்ந்தது வானுலக இயக்கமே நின்றுவிட்டது. இதற்கான காரணம் சிவனை மறந்ததுதான் எனத் தங்கள் குறையுணர்ந்தவர்கள், பிரமனிடம் போய் முறையிட்டு சிவனிடம் மன்னிப்பைப் பெற்றுத்தர வேண்டினர். பிரமனும் பரமனிடம் முறையிட மனமிரங்கி மன்னித்த சிவபெருமான் நந்திதேவரின் கொம்புகளுக்கிடையே அதிசய நடனமாடிக் காட்சி தந்தார். இக்காட்சியைப் பலரும் கண்டு களித்தனர்.

இப்புராணப் பிரதோ நிகழ்ச்சி வளர்பிறை திரயோதசி திதி சனிக்கிழமையன்று நடந்தது. மாதம் இருமுறை திரயோதசி வருவதால் தேய்பிறைபோதும் பிரதோம் கொண்டாடும் முறை ஏற்பட்டது.

சிலாத முனிவர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிறந்த தவசிரேட்டர். சித்ரவதியார் என்ற கற்பரசியை மணந்து இல்லறம் நடத்தி வந்தார். புத்திரப்பேறு இல்லாமையால் மனம் வருந்தினார். தம்பதியர் இருவரும் விரதம் இருந்து சிவபெருமானை வேண்டினர்.

விரதத்தின் பலனால், சிவபெருமான் தோற்றம் தந்து உனக்கு வயதாகிவிட்டதால் மனைவி வழி புத்திரப்பேறு இல்லை என்றும், அதனால் மனம் உடையாமல் யாகம் ஒன்று செய் என்றும் அப்போது பூமியின் வழி புதல்வன் கிடைப்பான்; அவனுக்கு ஆயுள் பதினாறாக இருக்கும் என்றும் வரமளித்தார்.

அவ்வாறே, யாகம் நடத்த நிலத்தைச் செப்பனிட்டபோது, புதையலாகக் கிடைத்த மாணிக்கப் பெட்டியில் ஆண் குழந்தை ஒன்றிருப்பது கண்டு, மகனாக மகிழ்ந்து வளர்த்துவந்தார் சிலாத முனிவர்.

ஜெனித்த காலத்தில் பிரம்மலோகம் உள்ளிட்ட தேவலோகத்தில் சகலர்க்கும் ஆனந்தம் வளர்ந்ததால் நந்தீசன் எனப் பெயரிடுமாறு பிரமன் அசரீரியாகிச் சொல்ல அப்பெயர் குழந்தைக்கு இடப்பட்டது.

தம் ஏழாவது வயதில் பெற்றோரை இழந்த குழந்தை தனக்குப் பதினாறு வயது எனத் தாய் தந்தையரால் கேள்விப்பட்ட நிலையில் அடுத்தடுத்து மூன்று முறை கடுந்தவம் புரிந்து சிவனிடம் சில வரங்களைப் பெற்றது.

பாலகன் நந்தி முதல் முறை தவத்தால் சிவனிடம் எப்போதும் நீங்கா அன்பிருக்க வேண்டும் என வேண்டிக் கொண்டார். இரண்டாம் முறையில் சிவனை சிவ அடியாரை; சிவச் சின்னங்களைச் சிவநிந்தை செய்பவர்களைத் தண்டிக்கும் ஆணை பெற்றார். மூன்றாம் முறையில் சிவனைப்போல் நித்திய சிவசொரூபப் பேற்றால் சிவகணத் தலைவராகவும் சிவாலயங்கள்தோறும் பலி பீடத்தருகில் அதிகாரியாகவும் இருக்கும் திருவருளைப் பெற்றார்.

இவற்றுடன் சிவபெருமானின் திருக்கரத்தீட்சை பெற்றதோடு சிவனைத் தாங்கும் அழியாத் தேகமும் பெற்றார். இப்படியாகத் திரு நந்திதேவர் என்ற அபிகேப் பெயரும். அதிகார நந்தி என்ற அதிகாரப் பெயரும் பெற்ற நந்தியை வணங்குவதன் மூலம் சிவனருள் கிட்டும் என்பது பிரதோ காலப் பலனாகும் .

நன்றி : புலவர் இராம வள்ளியப்பன் மணிவிழா மலர், அமராவதிபுதூர், காரைக்குடி.



உ

# பிரதோஷ மகிமை

கூட்டு வழிபாடுகளிலும், பூஜைகளிலும் கலந்து கொண்டு இறைவனை உள்ளன்புடன் வேண்டினால் வேண்டுதல் நிச்சயம் பலிக்கும் என்பது சான்றோர் வாக்கு. அவ்விதம் கலந்து கொள்ளும் பக்தர்களின் துன்பம், வறுமை, பாவம், யாவற்றையும் நீக்கவே சிவன் நர்த்தன தாண்டவமாடினார். இப்புண்ணிய காலமே பிரதோ காலம் எனப்படும்.

தேவர்களின் துன்பம் போக்க, நஞ்சை உண்ட சிவபெருமான் உலகில் எல்லா உயிர்களும் துன்பம் நீங்கி இன்புற்று வாழ கைலாய மலையில் ஆடிய திருநடனத்தையும் பிரதோ காலத்தில் தான் செய்தருளினார்.

ஆகையால் தான் பிரதோ காலத்தில் தவறாமல் சிவாலயத்திற்குச் சென்று கூட்டு வழிபாட்டிலும் பூஜையிலும் கலந்து கொண்டு சிவன் அருள் பெற வேண்டும்.

"பிரதோ வழிபாடு சகல சௌபாக்கியங்களையும் தரவல்லது" என்று பல நூல்கள் சொல்கின்றன. குறிப்பாக குழந்தை இல்லாதவர்களுக்குப் புத்திர பாக்கியம் உண்டாகும். திருமணமாகாத கன்னிப் பெண்களுக்குச் சீக்கிரம் திருமணம் நடைபெறும். வறுமை நீங்கிச் செல்வம் பெருகும். எக்காரியத்திலும் வெற்றி உண்டாகும். நோய்கள் அகலும். எந்தக் குறையிருந்தாலும் சீக்கிரம் நீங்கி வெற்றி உண்டாகும்.

### பிரதோ காலம்

வளர்பிறையில் ஒரு பிரதோமும், தேய் பிறையில் ஒரு பிரதோமும் ஆக மாதத்தில் இரண்டு தடவைகள் பிரதோ காலம் வருகிறது.

பிரதோ காலம் என்பது சரியாக ஏழரை நாழிகை மட்டும்தான். திரயோதசி நாளில் சூரியன் மறையும் காலமான மாலையில் சூரியன் மறைவுக்கு முன்புள்ள மூன்றே முக்கால் நாழிகையும் மறைந்த பின்பு உள்ள மூன்றே முக்கால் நாழிகையும் ஆக ஏழரை நாழிகை காலம் தான் பிரதோ காலம் எனப்படும்.

மாலையில் 4.30 மணி முதல் 7.00 மணி உள்ள காலமே பிரதோ காலம். மாதம் சரியாக இருமுறை மேற்படி பிரதோம் திரயோதசி நாளில் வந்த போதிலும் சனிக்கிழமை நாளில் வரும் பிரதோம் மிகவும் சிறந்தது. சித்திரை மாதத்தில் வரும் பிரதோம் மகாபிரதோம் எனப்படும்.

### பலன்

பிரதோக் காலத்தில் எல்லா தேவர்களும் அனைத்து தெய்வங்களும் சிவாலயத்தில் இறைவனை வழிபடுகிறார்கள். அவ்வளவு சிறப்புடைய பிரதோத் தினத்தன்று பிரதோ வேளையில் சிவாலயத்தில் வழிபாடு செய்தால்ஒரு வருடம் ஆலயம் சென்று இறை வழிபாடு செய்த பலனும், சனிக்கிழமை வரும் சனிப் பிரதோ காலத்தில் சிவாலயத்தில் இறைவழிபாடு செய்தால் ஐந்து வருடம் தினம் தவறாமல் ஆலய வழிபாடு செய்த பலனும் கிடைக்கும். பிரதோ வழிபாடு செய்தால் வறுமை, பயம்,பாவம், மரண வேதனை இவை யாவும் ஒழிந்து நலம் பல விளையும்.

நன்றி : மாத்தூர் சிறப்பு மலர் 2002.

# கோவில்கள் சில செய்திகள்

S. வெங்கடேச நடராஜன்

கோவிலில் உள்ளிருக்கும் கோபுரங்களையெல்லாம்விட தலைவாசலிலே இது உயர்ந்ததாக இருக்கும். இந்தக் கோபுரத்தைத் தான் ஸ்தூல லிங்கம் என்பார்கள். தூரத்திலுள்ளவர்களுக்கும் கடவுளைப் பற்றி ஞாபக மூட்டுவதற்காக இது அமைக்கப்பட்டிருக்கிறது. கோபுரத்தைத் தரிசித்து வணங்கினால் பாவம் நீங்கும்.

இராஜகோபுரத்தில் அநேக வடிவங்கள் காணப்படும். மானிட வடிவங்கள் தேவர் வடிவங்கள் மற்றும் ஏனைய சிற்றுயிர்களும் இருப்பதைக் காணலாம். இவை ஆகம விதிப்படி அமைந்துள்ளன.

கோபுரத்தின் வாயில்கள் (நிலைகள்) ஒற்றைப்படை எண்ணில்தான் அமைந்திருக்கும் மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது என அமைந்துள்ள வாயில்களின் தத்துவ விளக்கம்.

மூன்று வாயில்: ஜாக்கிரத, ஸொப்பன, சுஷுபதி என்ற மூன்று அவஸ்தைகளைக்

ஐந்துவாயில்: ஐம்பொறிகளைக் குறிக்கும்

ஏழு வாயில்: மனம், புத்தி, ஐம்பொறிகள்

ஒன்பது வாயில்: சித்தம், அகங்காரம் மனம் புத்தி, ஐம்பொறிகள்.

சிவ ஆகம விதிப்படி இறைவன் கோபுரத்திலும், சிகரத்திலும், வாயிற்படியிலும், ஆலய மண்டபங்களிலும், பலி பீடத்திலும், மூல லிங்கத்திலும் எப்போதும் பிரசன்னமுள்ளவராக இருக்கிறார். விமானத்தை வணங்கி உட்சென்று ஈசனை வணங்க வேண்டும்.

ஸ்தூல லிங்கமான கோபுர வாசலில் புகுந்தவுடன் சிவ கணங்கள் நம்மிடம் வந்து சூழ்ந்து கொள்கின்றன. சிவனுக்கு விரைவில் கோபமும் உண்டாகும். ஆதலால் அனாச்சாரங்களை விட்டு ஆசாரத்துடன், சிவ அபராதங்கள் நேராமல் தரிசனம் செய்து திரும்பவேண்டும்.

துவஜஸ்தம்பம் கொடிமரம்: துவஜம்-தர்மம். ஸ்தம்பத்தைப் போல் சரீரம் நேராக இருந்து பிரகாசிக்கும் இடைக்கலை, பிங்கலை என்னும் நாடிகளின் வழியே போய்த் திரும்பும் பிராண வாயுவை நடுநாடியில் நிறுத்த-சிறிதும் அசையாமல் தியானிக்க –

பிராணவாயு நிற்கும். அது நிற்க மனமும் நிற்கும். ஐம்பொறிகளும் அடங்கும். அதன் மேல் பிரம்ம மந்திரம் தோன்றும். துசஜஸ்தம்பம் தேவ ஆலயங்களில் மூல ஸ்தானத்திற்கு நேராக நிறுத்தப்பட்டுள்ளது.

துவஜஸ்தம்பம் அருகே பலிபீடம் என்ற பத்ரலிங்கமும், நந்தியும் அமைக்கப்படும். பலிபீடம் பரிவார தேவதைகளுக்குப் பலி பூஜை போடும் இடம். இங்கே தான் நாம் தண்டம்போல் விழுந்து நமஸ்கரிக்க வேண்டும். இங்கே நான் என்கிற அஹங்காரத்தைப் பலிகொடுத்து தன்னை மறந்து சிவத் தியானம் செய்ய வேண்டும். இப்படிச் செய்யும்போது வீடு, மனைவி, மக்கள் ஞாபகம் விட வேண்டும்.

துவஜஸ்தம்பத்தைத் தாண்டி உள்ளே சென்ற பின் எந்த இடத்திலும் நமஸ்காரம் செய்யக்கூடாது.

வஸ்திரத்தினால் சரீரத்தை மூடிக்கொண்டு ஆலயப் பிரதக்ஷிணம், நமஸ்காரம் செய்பவன் மூன்று ஜன்மங்கள்தரித்திரன் ஆகிறான்.

நமஸ்காரம் 3 தரமாயினும், 5 தரமாயினும், 7 தரமாயினும், 9 தரமாயினும் 12 தரமாயினும் பண்ணல் வேண்டும். ஒரு தரம் இரு தரம் பண்ணுதல் குற்றம்.

நமஸ்காரம் செய்கையில் மேற்கேயாயினும் தெற்கேயாயினும் கால் நீட்டல் வேண்டும்.

விழுந்து பணியும்போது, எவ்வளவு தூசிகள் நம்மீது படிகின்றனவோ, அவ்வளவு வருகாலம் நாம் கையிலையில் வசிப்போம்.

சிவ சந்நிதியை நோக்கி இருக்கும் நந்தியிடம் உத்தரவு பெற்றுதான் நாம் சிவனை தரிசித்தல் வேண்டும்.

முதலில் நந்தியை தரிசித்து. இடதுபுறமாகச் சென்று சண்டிகேசுவரரைத் தரிசித்து. அங்கிருந்து வந்த வழியே வந்து நந்தியைத் தரிசிக்க வேண்டும். நந்தியின் இரு கொம்பு வழியாகச் சிவலிங்கத்தை க்ஷண நேரம் "ஹர ஹர" என்று தரிசனம் செய்து திரும்ப வேண்டும்.

**பிரத க்ஷிணத்தின் பலன்**

1 பிரதக்ஷிணம் – பாவம் விலகும்

2 பிரதக்ஷிணம் – சுவர்க்கம் அடையலாம்

3 பிரதக்ஷிணம் – செல்வம் அடையலாம்.

4 பிரதக்ஷிணம் – பிரம்மலோகம்

5 பிரதக்ஷிணம் – எல்லா உலகங்களையும் அடையலாம்.

6 பிரதக்ஷிணம் – அஷ்ட ஐசுவரியங்களையும் அடையலாம்.

7 பிரதக்ஷிணம் – காரியசித்தி

8 பிரதக்ஷிணம் – ஸ்லோகக்கியப்பிராப்தி

9 பிரதக்ஷிணம் – ஸாமீபப் பிராப்தி

10 பிரதக்ஷிணம் – ஸாரூபப் பிராப்தி

11 பிரதக்ஷிணம் – பகவான் ஸங்கம்

12 பிரதக்ஷிணம் – பகவானோடு ஸாயுஜ்யம்

கர்ப்பக் கிரஹமூர்த்தியைத் தரிசிக்கும் முன் துவாரபால விக்ரஹங்களில் முன் சென்று "அடியேன் உட்சென்று இறைவனை வணங்குவதற்காக அநுமதி தந்தருளும்" என்று வேண்டிக் கொண்டு போக வேண்டும். கர்ப்பக் கிருஹத்திலுள்ள கடவுளைத் துதி செய்யலாம். கர்ப்பக் கிரஹத்தில் நமஸ்காரம் செய்யக்கூடாது.

பூஜா பாத்திரங்களில் ஒன்றான மணிக்குச் செய்யப்படும் பூஜை சங்கல்பம் செய்தவுடன் நடக்கும் மணிச்சத்தம் ஓங்காரத்தைக் குறிக்கும். இது ஓங்கார உபாசனை வேண்டும் என்பதைக் குறிக்கிறது.

ஆலய வாத்தியங்கள் : வாத்தியங்கள் பிருதிவி வாத்தியம், அப்பு வாத்தியம், ஆக்கினேய வாத்தியம், வாயவ்விய வாத்தியம், ஆகாச வாத்தியம் என ஐந்து வகைப்படும். பிருதிவி வாத்தியம் மண் அல்லது மரத்தினால் செய்யப்படுவது. சங்கு-அப்பு, உலோகங்களினால் செய்யப்பட்டவை. துளை உள்ளவை வாயவ்விய வாத்தியம்-ராக பேதங்கள் ஆகாசம் சம்பந்தப்பட்டவை. மத்தளம் அடிப்பது சுகத்தையும், பேரிகை அடிப்பது புஷ்டி விருத்தியையும், தாளம் கிலேச நாசமும், கரதாளம் அபயமும் தரும். துளை வாத்தியத்தால் புத்திர பௌத்திர விருத்தியும், தோல் வாத்தியத்தால் ஜயமும் சங்கத்தொனியால் சத்துரு நாசமும், நிருத்தத்தால் வியாதி நாசமும் உண்டாகும்.

**அபிடேகப் பலன்**

- தண்ணீர் – சாந்தி தரும்
- சந்தனம் – ஸம்பத்து, சுகம் உண்டாக்கும்
- பால் – ஆயுள் விருத்தி
- தயிர் – பிரஜா விருத்தி
- நெய் – மோக்ஷம்
- தேன் – சங்கீத வன்மை
- கரும்புச்சாறு – நித்திய சுகம்
- சர்க்கரை – சத்ருநாசம்

- வாழைப்பழம் – பயிர்விருத்தி
- பலாப்பழம் – லோகவசியம்
- மாம்பழம் – சகல விஜயம்
- தமரத்தம்பழம் – பூமிலாபம்
- மாதுளம்பழம் – பகைநீக்கும்
- நார்த்தம் பழம், இளநீர் – சத்புத்திரன்
- எலும்மிச்சம்பழம் – மிருத்து நிவாரணம்
- தேங்காய்த்துருவல் – அரசுரிமை
- கோரோஜனை – தீர்க்காயுசு
- பச்சைக்கற்பூரம் – பயநீக்கம்
- கஸ்தூரி – வெற்றி
- பன்னீர் – சாலோக்கியம்
- சந்தனக்குழம்பு – சாயுஜ்யம்

அன்னாபிகேம் – அபமிருத்துவை விலக்கும். ஆயுள் ஆரோக்கியம் அரசு தேசம் ஆகியவற்றை விருத்தி செய்யும்

மஞ்சள் காப்பு – ராஜவசியம்

பஞ்சாமிருதம் – செல்வம்

விபூதி அபிகேம் சிவனுக்கும், பழனி ஆண்டவனுக்கும் மட்டுமே செய்ய வேண்டும்.

வஸ்திரம் : சிவனுக்கு வெண்மை நிறமுடைய பட்டு வஸ்திரமும், அம்பாளுக்கு காலையில் சிவந்த நிறப் பட்டு புடவையும் சாத்த வேண்டும். சாயங்காலம் நீலம், பச்சை முதலிய இளம் வர்ண வஸ்திரமும் அர்த்த ஜாமத்தில் வெண்ணிறமுள்ள பட்டில் சிவப்பு அல்லது பச்சைக்கரைப் பட்டுப்புடவை சாத்தியவர்கள் மோக்ஷம் அடைவார்கள்.

**புஷ்பங்களின் விசேடம் :**

- கோங்கம் பூவில் – சரஸ்வதி
- அலரிப் பூவில் – பிரம்மா
- வன்னி – அக்கினி
- நந்நியாவட்டை – நந்நி
- புன்னை – வாயு
- சண்பகப்பூ – சுப்பிரமணியர்
- வில்வம் – லஷ்மி

- சாதிப்பூ - சிவன்
- கொக்கிறகு - விஷ்ணு
- செங்கழுநீர்ப்பூ - சூரியன்
- குமுதப்பூவில் - சந்திரன்
- மந்தாரைப்பூவில் - இந்திரன்
- மாவிலங்கப்பூவில் - வருணன்
- மதுமத்தையில் - குபேரன்
- நாயுருவிப்பூவில் - யமன்
- தாமரைப்பூவில் - சிவன்
- அறுகம்புல் - விநாயகர்
- ஏனையவாசனைப்பூ - உமாதேவியார்
- பத்திரங்களில் - விசேம்
- வில்வம் - மோக்ஷம்
- துளசி - மோக்ஷம்
- மருக்கொழுந்து - மோக்ஷம்
- மாசிப்பச்சை - மோக்ஷம்
- திருநீற்றுப்பச்சை - மோக்ஷம்

திருவாசி இல்லாமல் அலங்கரிக்ககூடாது. அப்படிச் செய்தால் ஆயுள்குன்றும் அங்கஹீனம் உண்டாகும். திருவாசி அழகுக்காகச் சாத்தப்படுவது அல்ல. அது ஓம் என்ற நாதப் பிரம்மத்தைக் குறிக்கும்.

**தேங்காய் உடைப்பதன் தத்துவம்:**

தேங்காய் ஒடு கடினம் - உள்ளே வெண்மையான பருப்பு - அதனுள்ளே இளநீர். ஓடு-பிரபஞ்சம், உலகமாயை. வெண்பருப்பு - உள்ளே - பரமாத்மாவைக் குறிக்கும். இளநீர் அமிர்த்தத்தைக் குறிக்கும்.

வாழைப்பழம் முதலியன வேண்டுகோளின் சபலத்தன்மையையும், தாம்பூலம் லஷ்மி கடாஷ்யத்தையும் காட்டுகின்றன.

கர்ப்பூர ஆரத்தி ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்கள் கரையப் பெற்று சகல பற்றுகளும் நீங்கி பரமாத்மாவுடன் கலந்து பேரின்பப் பெருவாழ்வு வாழவேண்டும் என்பதைக் குறிக்கும்.

**பஞ்சபூத ஸ்தலங்கள் :**

காஞ்சிபுரம் - பிருதிவி திருவானைக்கா - அப்பு திருவண்ணாமலை - தேயு திருக்காளத்தி – வாயு சிதம்பரம் – ஆகாசம்.

நன்றி : ஸ்ரீ சுப்ரமணியர், எர்ணாகுளம், திருக்குட நன்னீராட்டு விழா மலர் 2000.